உ
சிவமயம்.

# இரத்தினத்திரயம்.
# போககாரிகை.
# நாதகாரிகை.
# மோக்ஷகாரிகை.
# பரமோக்ஷநிராசகாரிகை.

இவற்றின் மூலமும் விரிவுரையும்
(தமிழ் மொழிபெயர்ப்பு)

இவை

சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்துச் சமஸ்கிருத பண்டிதர்
நா. கிருஷ்ணசாஸ்திரிகளாலும்,

வியாகரணசிரோமணி
மு. சுப்பிரமணிய சாஸ்திரிகளாலும்
மொழிபெயர்க்கப்பெற்று

ஷை சங்கத்துச் சித்தாந்த சாத்திரபோதகர்
பொ. முத்தைய பிள்ளையவர்களால்
பரிசோதிக்கப்பெற்று

---

தேவகோட்டை
சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தாரால்

காரைக்குடி
ஊழியன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றன.

விலை] பிரபவ௵ (1927) [ரூ. 2-0-0

உ

சிவமயம்.

# முகவுரை.

---

உலகத்திலுள்ள பல சமயங்களையும் அங்கமாகக்கொண்டு தான் அங்கியாய் ராஜாங்கத்தமர்ந்து விளங்குவது வைதிக சைவ சமயமேயாம். இது அங்கமாயுள்ள ஏனைய சமயங்களுள் ஒன்றையேனும் தாழ்ந்ததென்று நிந்திக்கிறதில்லை. ஏனைய சமயப் பொருளையே மேலான பொருளாகக்கொள்ளுதல் கூடாதென்று அறிவிக்கும். ஏனைய சமயங்களிலுள்ள பொருள்களனைத்தும் சைவசமயத்தில் அங்கங்களாகக் காணப்பட்டு ஏனைய சமயங்களாலறியப்படாத பொருள்களுங் காணப்படும். ஏனைய சமயங்களிலுள்ள பொருள்கள் அனைத்தையும் சைவசமயங்கொள்வதுபோல் சைவ சமயத்திலுள்ள பொருள்களனைத்தையும் ஏனைய சமயங்கள் ஒன்றுங்கொள்வதில்லை. ஆகையால் ஏனைய சமயங்களால் சைவ சமயம் தோல்வியடையப்படுகிறதில்லை.

இத்தனைப் பெருமை வாய்ந்த சைவசமயப் பொருள்களை இனிது விளக்கும் நூல்கள் சிவாகமங்களேயாகும். இச்சிவாகமங்கள் முடிந்த முடிபாயிருப்பதுபற்றிச் சித்தாந்தமெனப்படும். "சிவாகமங்கள் சித்தாந்தமாகும்" என்றருளிச் செய்தனர் ஸ்ரீ அருணந்தி சிவாசாரியரும். (சிவஞான சித்தியார் அ-ப்கு-ம். செ. கரு.)

இச்சிவாகமங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு பாதங்களையுடையன. அவற்றுள் பதி, பசு, பாசமென்னும் பொருள்களின் உண்மையினையும், அவற்றின் இலக்கணங்களையும், பசுவானது பாசத்தில் நின்றும் நீங்கிப் பதியையடைதற்குச் செய்பத்தகும் சாதனங்களையும், சாதனம் முற்றப் பெற்ற பின்னர் நிகழும் முத்தி நிலையினையும் தருக்க முறையில் செவ்வனே விளக்குவது ஞானபாதம். இந்த ஞானபாதம் மிக விரிவாயிருக்கின்றமையால் அவ்விரிவனைத்தையுந் தொகுத்துப் பெரியார் பலர் எட்டுப் பிரகரணங்கள் செய்துவைத்தனர். இப்

பிரகரணங்களை ஆக்கியோர் பலராயிருப்பினும் ஞானபாதப் பொருளின் சம்பந்தம்பற்றித் தொன்றுதொட்டு இவை, அஷ்டப்பிரகரணமெனத் தொகுத்துக் கூறப்படுகின்றன. இவற்றுள் ஆறு பிரகரணங்களுக்கு ஸ்ரீ அகோர சிவாசாரியரும், இரண்டு பிரகரணங்களுக்கு ஸ்ரீ பட்டாரமகண்டரும் உரை செய்துள்ளார்.

சித்தாந்த சாத்திரப்பொருள்களனைத்தும் இப்பிரகரணங்களில் செவ்வனே விளங்கும். இவ்வெட்டுப் பிரகரணங்களையும் இரண்டு தொகுதியாக நாகரத்திலும், முதன் மூன்று பிரகரணங்களைத் தமிழில் மொழிபெயர்த்தும் இச்சங்கத்திலிருந்து முன்னர் அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றோம். இப்பொழுது மற்றைய ஐந்து பிரகரணங்களையுந் தமிழில் மொழிபெயர்த்து அச்சிட்டிருக்கின்றோம்.

இப்பிரகரணங்களின் பெயர் வருமாறு :—

க. தத்துவப் பிரகாசிகை.
உ. தத்துவ சங்கிரகம்.
௩. தத்துவத்திரய நிர்ணயம்.
௪. இரத்தினத் திரயம்.
௫. போககாரிகை.
௬. நாதகாரிகை.
௭. மோக்ஷகாரிகை.
௮. பரமோக்ஷ நிராசகாரிகை.

இவற்றுள், முதல் மூன்று பிரகரணங்களிற் கூறப்படும் விஷயங்களிவையென அந்தப் பிரகரணங்களின் முகவுரையில் கூறப்பட்டுள்ளன. பின் ஐந்து பிரகரணங்களுள்,

### இரத்தினத்திரயம்.

விந்து, சிற்சத்தி, சிவம் என்னும் மூன்று பொருள்களை இரத்தினமாக உருவகஞ் செய்து, விந்துவை சிவனுடைய கிரியா சத்தியென்பாரை மறுத்து பரிக்கிரக சத்தியாகிய சடசத்தியெனத் தாபித்தும், சிற்சத்திக்குப் பரிணாமங் கூறுவாரை மறுத்தும், சிற்சத்தியைக் கரணமாகக் கொண்டு சிவன் எல்லாவற்றையுஞ் செய்கின்றானென்றுங் கூறுவது.

## போககாரிகை.

ஆன்மாவிற்குப் போகமாவது சுகம் முதலியவற்றின் அறிவு எனவும், அதற்குச் சாதனம் நிலம் முதலிய தத்துவங்களெனவும், அவற்றின் தோற்றம் இவ்வாறெனவும் இனிது விளக்குவது.

## நாதகாரிகை.

பொருள்களினறிவு அக்கரங்களாலும், பதங்களாலும், ஸ்போடத்தாலுமுண்டாகுமென்பாரை மறுத்து நாதத்தினாலுண்டாகுமென்று பகர்வது.

## மோக்ஷகாரிகை.

போக சாதனமான கருவிகளை மாயையில் நின்று இறைவன் தோற்றுவித்து அவற்றை உயிர்களுடன் கூட்டுதலாலும், போகாநுபவத்தின் முடிவில் இருவினையொப்பும் மலபரிபாகமும் நிகழப்பெற்றவுயிர்கட்குக் கருவிகளை நீக்கி மோக்ஷத்தைத் தருதலாலும், போக மோக்ஷங்களைத்தரும் கருத்தா பரமசிவனேயென்றும், பாச நீக்கமும் சருவஞ்ஞத் தன்மை முதலியவற்றின் விளக்கமும் மோக்ஷமென்றும், இந்த மோக்ஷத்தை நிர்ணயிக்கும் முறையில் பிற மதத்தர் கூறும் மோக்ஷம் மோக்ஷமாகாதென்றும் செவ்வனே செப்புவது.

## பரமோக்ஷ நிராசகாரிகை.

கேவலத்தன்மையே முத்தியென்னும் சாங்கியர் கொள்கையும், சத்துவமான பிரதானத்தை அநுபவிப்பதே முத்தியென்னும் சத்துவ புத்திவாதிகளின் கொள்கையும், பரமான்மாவினிடத்து ஒடுக்கமே முத்தியென்னும் வேதாந்திகளுள் சிலர் கொள்கையும், அவ்வியாகிருதம் முதலியவற்றில் ஒடுக்கமே முத்தியென்னும் பாஞ்சராத்திரிகளின் கொள்கையும், பரமசிவனுடைய பிரமத கணங்களுள் முதன்மையாயிருப்பதே முத்தியென்னும் சிலர் கொள்கையும், முத்திக்காலத்தில் ஆன்மா கருத்திருத் தன்மையின்றிச் சருவஞ்ஞத் தன்மை மாத்திரம் உடையனாயிருக்கின்றானென்னும் சிலர் கொள்கையும், முத்திக்காலத்தில் ஆன்மாவிற்குக் கருத்திருத்தன்மை யிருப்பினும் பரமசிவனால் ஏவப்படுபவனாகவேயிருக்கின்றானென்னுஞ் சிலர்

கொள்கையும், சூரியன் அக்கினியென்னும் இவர்களுடைய சாமியமே முத்தியென்னும் சிலர் கொள்கையும், பரமசிவனிலுஞ் சிறந்த தன்மையுடையனாயிருத்தலே முத்தியென்னும் சிலர் கொள்கையும், மலநாசம் மாத்திரமே முத்தியென்னும் சிலர் கொள்கையும், முத்தனே உலக கருத்தாவாயிருக்கின்றான் பரமசிவன் உதாசினனாயிருக்கின்றானென்னும் சிலர் கொள்கையும், சிறந்த சரீர இந்திரியங்களுடன் கூடி நக்ஷத்திர புவனத்தில் வசிப்பதே முத்தியென்னும் சிலர் கொள்கையும், ஞானம் கருத்திருத்தன்மை யென்னுமிவற்றின் நாசமே முத்தியென்னும் சிலர் கொள்கையும், அனைத்தும் நாசமாதலே முத்தியென்னும் சிலர் கொள்கையும், சர்வஞ்ஞத் தன்மை முதலிய குணங்களின் உற்பத்தி முத்தியென்பார் கொள்கையும், அக்குணங்களின் சங்கிராந்தி முத்தியென்பார் கொள்கையும், அக்குணங்களின் ஆவேசம் முத்தியென்பார் கொள்கையும் பொருத்தமற்றவையென விளக்கிக் காட்டுவது.

இம்மதங்களுள் சில மோக்ஷகாரிகையிலுங் கூறப்பட்டு மறுக்கப்பட்டுள்ளன. மோக்ஷகாரிகையில் சித்தாந்த முத்தியை நிர்ணயஞ் செய்யும் முறையில், பிறர் கூறும் முத்திகளை அநுவதித்து அவை முத்தியாகாவெனக் காரணங்காட்டி மறுக்கப்பட்டன. இவ்வளவேயன்றிப் பிறர் கூறும் பக்கமனைத்துங் கூறப்பட்டு மறுக்கப்படவில்லை. இந்தப் பரமோக்ஷ நிராசகாரிகையில் பிறர்கூறும் பக்கமனைத்துங் கூறப்பட்டு, அவை தருக்க முறையில் மறுக்கப்பட்டுச் சித்தாந்த முத்தியே பொருத்தமுடையதெனக் கூறப்படுகின்றது. எனவே, சித்தாந்தத்தை நாட்டும் முறையில் பிறர் பக்கத்தை மறுத்தலும், பிறர் பக்கத்தை மறுக்குமுறையில் சித்தாந்தத்தை நாட்டுதலும், மோக்ஷகாரிகைக்கும் பரமோக்ஷ நிராச காரிகைக்கும் வேற்றுமையாகுமென்க.

தன் பக்கத்தை நாட்டுதற்பொருட்டுச் சங்கிராந்திவாதி கூறும் யுத்திகள் மிகப்பல. மிக்க சிரமத்தோடு நுணுகி நுணுகிப் பல யுத்திகளை யெடுத்துக்கூறும் சாமர்த்தியம் உடைமைபற்றி இவர்கள் அறிஞர்களுள் பண்டிதர்களாக எண்ணுகின்றவர்களாயிருக்கின்றனரெனக் கூறப்படுகின்றனர்.

இந்தப் பிரகாணங்களை ஆக்கியோர் பெயரும், இவற்றின் உரையாசிரியர் பெயரும் அந்தந்தப் பிரகாண ஆரம்பத்தில் கூறப் பட்டுள்ளன. தமிழிலே உள்ள சித்தாந்த சாத்திரங்களில் கூறப் படாத பல அரிய பெரிய விஷயங்கள் இப்பிரகாணங்களில் காணப் படும். சித்தாந்த நிர்ணயந் தெரிய விரும்புவோர்க்கு இப்பிரகா ணங்களின் ஆராய்ச்சி இன்றியமையாதது.

இம்மொழிபெயர்ப்புப்போலவே வடமொழியிலுள்ள ஏனைய நூல்களையும் தமிழில் மொழிபெயர்த்துத் தமிழ் மக்களுக்கு உதவிசெய்யவேண்டுமென்னுங் கொள்கையை மேற்கொண்டிருக் கும் இச்சங்கத்தின் நோக்கம் இனிது முற்றுப்பெறும் வண்ணம் எல்லாம் வல்ல சிவபெருமான்றிருவருளைப் பிரார்த்திக்கின்றோம்.

இங்ஙனம்,

சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தார்.

---

# விஷய அட்டவணை.



உ

சிவமயம்

ஸ்ரீகண்டாசாரியராலியற்றப்பெற்ற

# இரத்தினத்திரயம் மூலமும்,

இதற்கு

ஸ்ரீ அகோர சிவாசாரியராலியற்றப்பெற்ற

# விருத்தியுரையும்.



(தமிழ் மொழிபெயர்ப்பு)

## உரைமங்கலம்.

(க). மங்களத்தைச் செய்பவனும் சித்தாந்தப் பொருள்களை விளக்கஞ் செய்பவனுமுள்ள பரமசிவனை நமஸ்கரித்து இரத்தினத்திரயத்தின் பொருளைச் சுருக்கமாக விளக்கஞ் செய்கின்றேன் என்பதாம். (க)

(உ) மூன்று இரத்தினமானது வேதத்தை அனுசரித்துச் சிலர்களாலும், சாத்தவாமதந்திரங்களை அனுசரித்துச் சிலர்களாலும், நியாய சாத்திரத்தை அனுசரித்துச் சிலர்களாலும், அவரவர் அறிவுக்கு எட்டியவாறு மோகத்தால் அழுக்குடையதாகச் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகையால் அந்த மூன்று இரத்தினமான இரத்தினத்திரயத்தை வித்வான்கள் காதில் அலகரித்துக் கொள்ளுதற் பொருட்டு மீண்டும் நல்ல வியாக்கியானமென்னும் உரைகல்லில் உரைத்துச் சுத்தஞ்செய்து பிரகாசமுடையதாகச் செய்கின்றேன் என்பதாம். (உ)

## நூல் மங்கலம்.

### மூலம்.

(க) நித்தியப்பொருளான பரமசிவன் பொருட்டும், சிற்சத்தியின் பொருட்டும், மகாமாயையின் பொருட்டும், சற்குருவின் பொருட்டும், கணபதியின் பொருட்டும், புத்திமானன சுப்பிரமணியரின் பொருட்டும் நமஸ்காரஞ்செய்கின்றேன் என்பதாம்.

### உரை.

இந்தச் சுலோகத்தின் முற்பகுதியால் இந்தப்பிரகரணத்தில் சிவன், சிற்சத்தி, மகாமாயை என்னும் மூன்று இரத்தினங்களே விடயங்களாக கூறப்படுகின்றனவென்று அறிவிப்பாராய் அம்மூன்று பொருள்களையும் நமஸ்கரிக்கின்றார். பிற்பகுதியால் ஆகம சம்ஹிதைகள் அனைத்திற்கும் தோற்றுவிப்பவராயிருத்தலால் குருவாயிருக்கும் பகவானன ஸ்ரீகண்டநாதரையும், சகலவிக்கினங்களையும் போக்குங் கணபதியையும், சித்தாந்த சாத்திரங்களை எப்பொழுதும் கேட்டு விசேஷ ஞானமடைந்த கார்த்திகேயரான சுப்பிரமணியரையும், இப்பிரகரணம் விக்கினமின்றி நிறைவேறுதற்பொருட்டு நமஸ்கரிக்கின்றார் என்க. (க)

## நூல்.

(அவதாரிகை) அந்த மூன்று இரத்தினமான மூன்று பொருள்களையே விரிவாய்க் கூறுவதாகக் கூறுகின்றார்.

மூலம் (உ—ங) சித்தாந்தமென்னுங் கடலிலிருந்து, மார்பிலும் கழுத்திலும் காதிலும் பெரியோர்களணிந்து கொள்ளுதற்பொருட்டு, விந்து சத்தி சிவன் என்னும் மூன்று இரத்தினங்களை எடுத்து, வாக்குக்களென்னும் நூல்களால் அவற்றை நான் தொடுத்துக்கட்டுகிறேன். ஆகையால் பெரியோர்கள் என்னை மன்னிக்கவேண்டும். தொண்டனுகிய என்னிடத்தில் அருமை கொள்ளக்கூடாது என்பதாம்.

(உரை) விந்து சத்தி சிவனென்னும் இரத்தினங்களைக் கேட்பது என்னும் பொருள் தோன்ற, காதில் தரிப்பது என்றும், கழுத்து என்னுஞ் சொல்லால் * இலக்கணா விருத்தியால் அறியப் பட்ட வாக்கிந்திரியத்தால் படிப்பது என்னும் பொருள்தோன்ற, கழுத்தில் தரிப்பது என்றும், இருதயத்தில் நிச்சயித்தல்என்னும் பொருள் தோன்ற மார்பில் தரிப்பது என்றும் கூறப்பட்டன. இவ்வாறு பெரியோர்கள் தரிப்பதற்காக விந்து முதலிய மூன்று இரத்தினங்களைச் சித்தாந்த சமுத்திரத்திலிருந்து எடுத்து வாக்கு ரூபங்களான நூல்களால் அவை என்னால் கோக்கப்படுகின்றன. உலகத்திலும் காது முதலிய அவயவங்களில் தரிப்பதற்காக இரத்தினங்கள் நூல்களாற் கோக்கப்படுகின்றன. ஆகையால் பெரியோர்களை ஆராதிக்கும் விஷயத்தில் முயற்சித்த என்னிடத் தில் அருளை கொள்ளக்கூடாது என்க. (உ-ரு)

(அ—கை) இந்த விந்து முதலிய மூன்று பொருள்களும் இரத்தினத்தோடு ஒப்புமை உடைமை பற்றி இரத்தினமென்னுஞ் சொல்லால் கூறப்பட்டனவென்று கூறுகின்றார்.

(ச—ம்) தத்துவங்களனைத்தினுள்ளும் பிரகாசமாயிருத்த லானும், அனந்தர் முதலிய ஈசுவரர்களுக்கும் சதாசிவர் முதலி யோருக்கும் அதிகாரங்களில் விந்து முதலிய மூன்றால் ஆசை யுண்டாவதனாலும், புருடர்களுடைய அறிவால் தரிக்கத்தகுந்த தாயிருத்தலானும், தடையற்ற அதிகப் பிரகாசத்துடன் கூடி யிருத்தலானும், பிரியத்தை உண்டுபண்ணுவதாயிருத்தலானும், விந்து சத்தி சிவன் என்னும் மூன்று பொருள்கள் சிவ சாத்திரத் தில் இரத்தினங்களாகக் கூறப்படுகின்றன என்பதாம்.

(உரை) உலகத்தில் இரத்தினங்கள் எவ்வாறு விலைமதிக்க முடியாமல் மிகப்பிரகாசமுடையனவாயும், அருகிலுள்ளவருக்கு ஆசையை யுண்டுபண்ணுகின்றனவாயும், புருடர்களால் சரீரத்தில்

* கழுத்து என்பது ஆகு பெயரால் கண்டத்தில் நிகழுந் தொனியை யுணர்த்தி வாக்கிந்திரியத்தைக் குறித்தது.

தரிக்கப்படுகின்றனவாயும், அழகுடையனவாயும், இஷ்டத்தைத் தருவனவாயும் இருக்கின்றனவோ, அவ்வாறே, விந்து முதலிய மூன்று பொருள்களும், சத்தி முதலிய தத்துவங்களனைத்திற்கும் முதற்காரணமாயும் அதிட்டாதாவாயும் இருத்தலால் பிரகாசிக்கின்றனவாயும், அனந்தர் முதலிய ஈசுவரர்களுக்கும் சதாசிவர் முதலிய பதங்களையடைந்த அணு சதாசிவன் முதலியோருக்கும் அனுக்கிரகஞ் செய்தல் அனுக்கிரகஞ் செய்யத்தகும் தன்மை முதலிய அதிகாரங்களில் ஆசையை யுண்டுபண்ணுகின்றனவாயும், புருடர்கள் புத்தியால் தியானஞ் செய்யத்தகுந்தனவாயிருத்தலால் தரிக்கத்தகுந்தனவாயும், கெடுக்கப்படாத அதிகமான காந்தியையுடையனவாயும், போக மோக்ஷரூபமான இஷ்டத்தைத் தருவனவாயுமிருத்தலால், சிவசாத்திரத்தில் இரத்தினங்களாகக் கூறப்படுகின்றன. இந்த இரத்தினங்கள் கெடுக்கப்படாத விசேஷ காந்தியை யுடையனவென்று கூறினமையால் உலகத்திலுள்ள இரத்தினங்களினின்றும் இவற்றிற்கு அதிக விசேஷம் காட்டப்பட்டது என்க. (அ-ரு)

(கு) தத்துவக்கூட்டமானது மூன்று இரத்தினங்களைப் பற்றி இருக்கின்றது. இந்த மூன்று இரத்தினங்களை அடைவதின் பொருட்டுப் பரமசிவனால் சாத்திரங்களில் ஆறுவிதமாக வழி கூறப்படுகின்றது என்பதாம்.

(உ—ரை) தத்துவக்கூட்டங்களுள் சுத்தமான தத்துவக் கூட்டமானது விந்துவை முதற்காரணமாகவும், சிவனைக்கருத்தாவாகவும், சத்தியைக் கரணமாகவும் உடையதாயிருக்கின்றது. எதனாலெனில், உலகத்தில் முதற்காரணம் கருத்தா காரணம் என்னும் இவைகளையின்றிக் காரியந் தோன்றுகிறதில்லையாகையாலென்க. அசுத்தமான தத்துவக் கூட்டத்திற்கும் சிவனும் சத்தியுமே பரம்பரையாய் (அஃதாவது அனந்தர்வாயிலாய்) கருத்தாவாயும் காரணமாயுமிருக்கின்றனர். விந்துவோவெனில், நிவிருத்தி முதலிய கலைகளின் வழியாகப் பற்றுக்கோடாயிருப்பதென்று பின்னர்க் கூறப்போகிறோம். போகத்தில் ஆசையுள்ளவர்களாயிருத்தல்பற்றி பௌதிக தீக்ஷை பெற்றவர்களா

யுள்ள சாதகர்களுக்கு அநேக புவன போகரூபமாகப் பரிணாம மடையும் விந்துவானது அடையத்தகுந்த பதமாகும். மோக்ஷத்தில் ஆசையுடையவர்களாய் நைட்டிக தீக்ஷைபெற்ற சாதகர்களுக்குச் சத்தியுடன் விட்டுப்பிரியாத பரமசிவன் அடையத்தகுந்த பதமாவன். ஆகையால் விந்துவையுஞ் சிவனையும் அடைவதன்பொருட்டுக் கலைமுதலிய ஆறுவிதமான அத்துவாக்களென்னும் வழிகள் பரமசிவனால் சாத்திரங்களிற் கூறப்படுகின்றன என்க. (சு)

(அ—கை) இந்த மூன்று இரத்தினங்களுக்கும் அத்துவத்தன்மையைப் பின்னர் நிச்சயஞ் செய்யப்போகின்றார். இப்பொழுது இந்த இரத்தினங்களுக்குத் தீக்ஷைமுதலிய கிரியைகளில் உபயோகத்தைக் காட்டுகின்றார்.

(சு௫) இந்த மூன்று இரத்தினங்களே தீக்ஷை பிரதிஷ்டை என்னுமிவற்றில் காரணங்களாக வித்துவான்களாற் கொள்ளப்பட்டிருக்கின்றன என்பதாம்.

(உ—ரை) இம்மூன்று இரத்தினங்களை அறியவில்லையானால் தீக்ஷை பிரதிஷ்டை முதலிய கிரியைகளை அனுட்டிக்கமுடியாதாகையால் அவற்றிற்கு இம்மூன்றுமே காரணமென்றறிகவென்க. (சு௫)

(அ—கை) மேற்கூறியவிஷயத்தையே வெளிப்படையாய்க் கூறுகின்றார்.

(எ—அ) பலவாறான யோகங்களும், பலவாறான நித்தியம் நைமித்திகமென்னும் கிரியைகளும், ஞானங்களும், சித்திகளும், முத்திகளும், இந்த இரத்தினங்களையறிதலால் நிகழ்கின்றன. அன்றியும், இந்த இரத்தின ஆராய்ச்சியே அணுவான ஆன்மாவிற்கு முத்தி என்னும் மேலான எல்லையாகுமென்பதாம்.

(உ—ரை) யோகமாவது, சாலம்பம் நிராலம்பம் முதலியன. நித்தியகன்மமாவது சிவபூஜை முதலியன. நைமித்திக கன்ம

மாவது, தீக்ஷை முதலியன. ஞானங்களாவன, இந்த நித்திய நைமித்திக கன்மங்களை அறியும் அறிவும் பதிபசுபாசங்களை அறியும் அறிவுமாம். சித்திகளாவன, அணிமா லகிமா முதலியன. முத்திகளாவன சிவசாமியமும் சதாசிவ முதலிய பதங்களையடைதலுமாம். இவ்வாறே முத்தி எழுவிதமென்று மதங்கத்திலுங் கூறப்பட்டுள்ளது. இவையனைத்தும் இம்மூன்று இரத்தினங்களை அறிதலால் சித்திக்கின்றன. அன்றியும், இந்த இரத்தினங்களையடைதலே ஆன்மாவிற்குப் பரமோக்ஷமாகுமென்க. (எ—அ)

(கூ) (ஆகையால்) சத்திநி பாதத்தால் விளக்கமுற்ற ஆன்மசொரூபமுடையவர்களால் இம்மூன்று இரத்தினங்களும் ஆப்தவாக்கியத்தால் கேட்கத்தக்கன. யுக்திகளால் ஆராயத்தகுந்தன. யோகநெறியால் தியானஞ்செய்யத் தகுந்தனவென்பதாம்.

(உ—ரை) மலபரிபாகத்துடன் விட்டு நீங்காத சத்திநிபாதத்தால் உயர்வான பதத்தையடைவதில் தாற்பரியமுள்ள சித்தத்தையுடைய பெரியோர்களால், ஆப்தவாக்கியத்தால் கேட்கத்தக்கன என்பது முதலாக முறையே கண்டுகொள்க. இதனால் இந்த மூன்று இரத்தினங்களுக்கும், ஆப்த வாக்கியமென்றதனால் ஆகமங்களாலும், யுத்தி என்றதனால் அநுமானத்தாலும், யோகமென்றதனால் யோகிப்பிரத்தியக்ஷத்தாலும் அறியப்படுந்தன்மை உண்டென்பது காட்டப்பட்டது என்க. (கூ)

(அ—கை) ஆப்தவாக்கியமென்பது எது என்னும் கேள்விக்கு விடை கூறுகின்றார்.

(கO) இவ்விடத்தில் ஆப்தவாக்கியமென்பது சித்தாந்தமேயாகும். யாதொரு காரணத்தால் சிவன் ஒருவனே * ஆப்தனாயிருக்கிறானோ, அந்தக் காரணத்தால் (அவன் வாக்கு சித்தாந்தமெனப்படும்). அந்தச் சித்தாந்தம் ஆப்தனாகிய அந்தப் பரமசிவன் என்னும் இருபொருள்களோடு சமானமாக வேறொரு பொருள் மேம்பாட்டை யுண்டுபண்ணுகிறதில்லை என்பதாம்.

---

* ஆப்தன்-உண்மையுரைப்போன். உள்ளனஅனைத்தும் உணர்பவன் சிவனே யாதலின், அவனுக்கே உண்மை யுரைத்தல் கூடும்.

(உரை) சித்தாந்தமென்னுஞ் சொல்லானது, பங்கஜம் முதலிய சொற்களைப்போல் * காரண இடுகுறியாய் பரமசிவனால் அருளப்பெற்ற காமிக முதலிய இருபத்தெட்டு ஆகமங்களுக்குப் பிரசித்தமான உரிமையுடையது. ஆகையால் அந்தச் சிவாகமங்கள் தான் வேறு பிரமாணங்களால் பூர்வபக்ஷம் பண்ணப்படாமலிருப்பது பற்றிப் பிரமாணங்களாகுமென்பது கருத்து. இக் கருத்தினை, யாதொரு காரணத்தால் சிவனொருவனே ஆப்தனாயிருக்கின்றானோ என்பதனால் தெரிவிக்கின்றார். கணாதர் பதஞ்சலி முதலியோரும் ஆப்தர்கள்தானே யெனில், அது பொருந்தாதென்று சித்தாந்தம் பரமசிவன் என்னுந் தொடர்பினையுடைய பிற்பகுதியால் கூறுகின்றார். இதன் கருத்தாவது, கணாதர் பதஞ்சலி முதலியோரும் ஆப்தர்களென்பது உண்மைதான். ஆயினும் அவர்களறிவிற்கு விடயமான பொருள்மாத்திரத்திற்றான் அவர்களாப்தராவர். அன்றியும், அவர்கள் எல்லாவற்றையும் அறியுந்தன்மை இல்லாதவர்களாகையால் அவர்களாலியற்றப்பட்ட சாத்திரங்களும் அவர்களறிவிற்கு விடயமாகாத விந்து முதலிய பொருள்கள் விஷயத்தில் பிரமாணங்களாக ஆவதில்லை. சிவனோ எனில், எல்லாப் பொருள்களையும் விடயமாகக்கொண்ட தனக்கு மேற்பட்டதொன்று இல்லாத ஞானக்கிரியையினை உடையவராதலால் மேலான ஆப்தராவர். அவராலருளப்பட்ட சாத்திரங்களோ வெனில், பிறமத நூல்களால் அடையத்தகுந்த பதங்களை யறிவிப்பதுடன் அந்த நூல்களால் அறியமுடியாத பொருள்களை அறிவிப்பதனாலும், அந்த நூல்களால் பூர்வபக்கம் பண்ணப்படாமையினாலும் பிரமாணங்களேயாகும். இவ்வாறே வேறு பிரமாணங்களால் அறியப்படாததாயும், அவற்றால் பூர்வபக்கம் பண்ணப்படாததாயுமுள்ள விடயங்களையுடையதுபிரமாணமென்று பெரியோர்களுங் கூறியிருக்கின்றனர். ஆகையால் அந்தப் பரமசிவனோடும் அவனாலருளப்பட்ட சிவாகமங்களோடும்

---

* சிவாகமங்கள், முடிந்த முடிபாயிருத்தல் பற்றியும், சித்தாந்தமென இடுகுறியாய் வழங்கப்படுதல் பற்றியும், காரண இடுகுறியாகச் சித்தாந்தமெனப்பட்டன.

சமானமாக வேறொரு பொருளும் நன்மையைத் தருவதாகக் காணப்படவில்லை.

ஆகமங்கள் நித்தியமாயிருத்தல் பற்றிப் பிரமாணங்களே யன்றி ஆப்தனான பரமசிவனால் அருளப்பட்டமை பற்றிப் பிரமாணமில்லையென்று மீமாம்சகர் கூறுகின்றனர். அதுபொருந்தாது. செய்கை என்பது செய்பவனையின்றி நிகழாது. கடம் முதலியன போலும் என்னும் விஷயம் நம்மால் மிருகேந்திர விருத்தி தீபிகையில் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றமையால் அவ்விடத்துக் கண்டுகொள்க என்க. (௧௦)

(அ—கை) அவ்வாறாயின், சைவம் என்றே பிரசித்தமாயுள்ள வாமம் முதலிய ஆகமங்களும் பரமசிவனால் செய்யப்பட்டனவாகையால் அவையும் பிரமாணந்தானோ வெனில், பிரமாணமில்லை. எதனாலெனின், பரமசிவன் அந்தவாமம் முதலிய ஆகமங்களை அதிகாரிகளை அனுசரித்து ஒன்றுக்கொன்று மாறுபாடுடையதாகவே செய்திருக்கின்றாராகையாலென்க. அவ்வாறே பெரியோர்களும், சுகதர்சர்வக்ஞரென்றால் கபிலர் சர்வக்ஞரில்லையென்பதில் பிரமாணமென்னை? இரண்டுபேர்களும் சர்வக்ஞரானால் அவர்களுக்குள் அபிப்பிராய வேறுபாடு நிகழ்தற்குக் காரணமென்னை என்று கூறியிருக்கின்றனர். அன்றியும், வாமம் முதலியன சிவனால் நேரே கூறப்படவில்லை. எதனாலெனில், சிவனால் அதிட்டிக்கப்பட்ட ஆன்மாக்களால் செய்யப்பட்டன எனப்பிரசித்தியிருக்கிறபடியாலென்க. இந்த விஷயத்தையே கூறுகின்றார்.

(௧௧) சித்தாந்தம் ஒன்றுதான் சித்தாந்தமாகும். அஃதாவது முடிந்த முடிபாகும். மற்றவை எல்லாம் பூர்வ பக்கங்களேயாம். சிவன் ஒருவன்தான் ஆப்தன். ஏனையோர் சிவத்தன்மை இல்லாதவர்களென்று கொள்ளப்பட்டிருக்கின்றனர் என்பதாம்.

(உரை.) இவ்விடத்தில் சிவத்தன்மையாவது எல்லாவற்றையும் அறியுந்தன்மையும் எல்லாவற்றையுஞ் செய்யும் தன்மையுமாகும் என்க. (௧௧)

(கஉ) சித்தாந்த சாத்திரமானது சத்திநிபாதத்தால் பரிசுத்தஞ் செய்யப்பட்ட சத்துக்களால் பூசிக்கப்படுகிறது. இஷ்டப்படி செய்கின்ற மற்றவர்களால், பசுக்களாற் செய்யப் பட்ட சாத்திரங்கள் போல நிந்திக்கப்படுகின்றது என்பதாம்.

(உரை.) பின்னர்க் கூறப்படும் அடையாளமே சத்தி நிபாதத்திற்குரிய அடையாளமெனக் கூறப்பட்டிருக்கின்றது. எந்த ஆன்மாக்களுக்கு மறுபிறப்பு இல்லாமை காரணமாகச் சத்திநிபாதம் நிகழ்கின்றதோ அவர்களுக்குச் சத்திநிபாத அடையாளமாவது, முத்தியில் விருப்பமும், சம்சாரத்தில் வெறுப் பும், சிவபத்தரிடத்துப் பத்தியும் சிவ சாத்திரங்களில் சிரத்தை யும் ஆகுமென்று மிருகேந்திரத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது. இவ்வித சத்திநிபாதத்திற்குப் பின் செய்யப்பட்ட தீக்ஷையால் சுத்தஞ் செய்யப்பட்ட புருடர்களால் சித்தாந்த சாத்திரமானது பூசிக்கப்படுகிறது. இவ்வாறே கிரமைகமத்திலும் தீவிரமான சத்தி நிபாதம் நிகழ்ந்து குருவால் தீக்ஷை செய்யப்பட்டிருப்பானே யாயின், அவன் சருவஞ்ஞனை சிவனாகின்றான் என்று கூறப்பட் டிருத்தல் காண்க என்க. (கஉ)

(அ—கை.) இந்தச் சித்தாந்த சாத்திரத்தை அறிவில்லாத வர்கள் நிந்திப்பதனால் அந்தச் சாத்திரத்துக்கு ஒருவிதமான பிராமாணியக் குறைவுங் இல்லை என்பதைத் திருட்டாந்த மூல மாகக் கூறுகின்றார்.

(கங) கஸ்தூரியின் வாசனையானது புருடர்களால் வெறுக் கப்படுகிறதில்லை. அன்றியும் சாதனங்களால் சாதிக்கப்பட்டுத் தனவான்களால் எக்காலத்தும் முகரப்படுகிறது என்பதாம்.

(உரை) சிவ தீக்ஷைக்கு உபயோகமாகச் சிவன் முதலிய பொருள்களின் அறிவை போக மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர் கள் செய்யத்தகுந்தது. அவ்வறிவோ எனில், சித்தாந்தசாத்திர ஆராய்ச்சியால் நிகழ்கின்றது. அவ்வாராய்ச்சியோ வெனில், சத்திநிபாதத்துடன் நிகழ்ந்த தீக்ஷையால் சித்திக்கின்றது என்று மேலைச்சுலோகத்தில் கூறப்பட்டிருக்கின்றதுகாண்க. (கங)

(அ—கை) பொய்ப் பொருள்களான சிவன் முதலிய பொருள்களைக் கூறுவதனாலும், பொய்ப்பொருள்களை அறிவதற்குச் சாதனங்கூறுவதனாலும் பயனில்லை. கண்களுக்குப் புலப்படும் பொருள்களனைத்தும் பிரமசொரூபமே. அது எல்லாவுயிர்களுக்கும் அந்தரான்மாவாய் ஒன்றாயிருக்கின்றது என்னுஞ் சுருதிகளால் பரமாத்மா ஒருவனே சச்சிதானந்த ரூபனுய் சிவன் முதலிய சொற்களால் கூறப்படுகின்றான். அவனைத்தவிர வேறு பொருள் கிடையாது. பரமானந்த ரூபனான அவனையறியும் அறிவே முத்திக்குக் காரணமாகுமெனச் சிலர் கூறுகின்றனர். அவர்களை நோக்கிக் கூறுகின்றார்.

(கச) வேதாந்தங்களாலும் சாத்தமான கௌளதந்திரங்களாலும் இவைபோன்ற ஏனைய சாத்திரங்களாலும் ஆனந்த உபசிதமான (சொரூபமான) சைதன்னியமே மோக்ஷத்திற்குக் காரணமென்று கூறப்படுகின்றது. அந்தக்கூற்று ஆனந்தமென்னும் சொல்லின் பொருள் விஷயத்தில் ஏமாந்தவர்களுக்குத்தான் அழகாயிருக்கின்றது என்பதாம்.

(உரை.) வேதாந்தம் முதலிய சாத்திரங்களாலும் வேறுவிதமான சாத்த முதலிய தந்திரங்களாலும் சைதன்னிய ரூபமான பொருளொன்றே உண்மையாகும்; பரமானந்த ரூபமான அந்தச் சைதன்னியத்தை அறியும் அறிவே மோக்ஷசாதனமாகுமென்று கூறப்படுகின்றன. அந்தக் கூற்றானது ஆனந்தம் பிரமம் என்னும் சுருதியிலுள்ள ஆனந்தமென்னும் சொல்லிற்குப் பரிபூர்த்தி என்னும் பொருளைக்கொள்ளாது சுகம் என்னும் பொருளைக்கொண்டு ஏமாந்த மலபரிபாகமில்லாதவர்களுக்குத்தான் அழகாயிருக்கின்றதேயன்றிப் பரமசிவனால் அனுக்கிரகிக்கப்பட்ட நம்போன்றவர்கட்கு அழகாயில்லை என்பது கருத்து. எவ்வாறெனில், ஆன்மாவை அநேகமென்று கூறும் சுருதிகள் பல காணப்படுகின்றமையால் ஆன்மா ஒன்றென்று சாதிப்பது முடியாத காரியமாகும். ஆயின் ஆன்மா ஒன்றென்று கூறுஞ்சுருதிகளும் பல காணப்படுகின்றமையால் ஒன்றென்றே கொள்வோமெனில், அது கூடாது.

ஆன்மாக்களுக்கு அநேகமாயிருக்குந்தன்மையை அறிவிக்கின்ற பிறப்பு இறப்பு முதலிய நியமத்தை மறுக்கமுடியாதாகையால் ஒன்றென்று கூறும் சுருதிகள்* வேறு கருத்துடையன என்க. இத்தகைய ஆன்மாக்களுக்குச் சுதந்திரமின்மை காணப்படுதலால், ஒவ்வொரு ஆன்மாக்களுக்கும் போகமோக்ஷத்தைக் கொடுக்கும் சிவனும் முதற்காரண முதலியவையும் ஆகமானுமானங்களால் சித்தித்திருக்கின்றமை நம்மால் மிருகேந்திரவிருத்தி தீபிகையில் விரிவாய்க் காட்டப்பட்டிருக்கிறது. மதங்கவிருத்தி முதலிய கிரந்தங்களிலும் ராமகண்டர் முதலியோர் விரிவாய்ச் சாதித்திருக்கின்றனர். விரிவை அந்த நூல்களிற் கண்டுகொள்க. விரியுமென்றஞ்சி இவ்விடத்தில் விரிக்கவில்லை என்க. (கச)

(அ—கை.) ஆதலினாற்றான் ஆன்ம சொரூபத்தை விஷயமாகவுடைய ஆன்ம ஞானமும் அந்தச் சாத்திரத்தில் பற்றுடையவர்களுக்கு உண்மையாக நிகழ்கிறதில்லையென்று கூறுகின்றார்.

(கரு) பரமானந்தப் பிராந்தியாகிற அலையானது அவர்களைத் தூக்கி எறியாமலிருக்குமாயின் அப்பொழுது ஆன்மவர்க்கமாகிய சமுத்திரத்தினுடைய கம்பீரத்தன்மையானது வித்துவான்களால் கிரகிக்கப்பெற்று நிச்சயிக்கப்படும் என்பதாம்.

(உரை.) மேலைச் சுலோகத்தில் கூறப்பட்டவாறுபோல் ஆனந்தமென்னுஞ் சொல்லுக்கு சுகமென்று பொருள்கொண்ட பிராந்தி என்னும் அலையானது அவர்களைத்தூக்கி எறியாமலிருக்குமாயின் அப்பொழுது ஆன்மவர்க்கமாகிய சமுத்திரத்தினுடைய கம்பீரமானது, அஃதாவது சருவஞ்ஞத்தன்மை சருவகர்த்துருத்தன்மை, நித்தியத்தன்மை, வியாபகத்தன்மை, அநேகத்தன்மை முதலியவை வித்துவான்களால் பிரமாணங்கள் வாயிலாய்க் கிரகிக்கப்பட்டு நிச்சயிக்கப்படும். அந்த அலையானது தூக்கி

---

* ஒன்றென்று கூறும் சுருதிகளுக்குப் பரமான்மாவாகிய சிவம் ஒன்றென்பது கருத்து. இதனை, ஒன்றென்ற தொன்றேகா ணொன்றேபதி, என்னும் சிவஞானபோதத்தாலும் தெளிக.

எறியுமாயின் நிச்சயிக்கப்படமாட்டாது. அந்தச் சாத்திரத்தை இயற்றியவர்கள் சருவஞ்ஞத்தன்மை யற்றவர்களாகையால் அவர்களுடைய வார்த்தையால் உண்மையான ஞானம் நிகழ்கிறதில்லை என்க. (௧௫)

(அ—கை.) ஆன்ம சொரூபமானது எந்த நூலின் வழியாக அறியப்படுமென்னுங் கேள்விக்கு விடை கூறுகின்றார்.

(௧௬) அத்தகைய ஆன்ம சொரூபமானது பல வகையான சாத்திரப்பிரவாகங்களுள் உத்தமமான சித்தாந்தத்தில் மேல் நோக்கிய கண்களையுடைய பரமசிவனது மேல்முகத்தால் கூறப்பட்டது. ஆகையால் அந்த சித்தாந்த சாத்திரத்தின் வழியாக அறிந்துகொள்ளத்தக்கது என்பதாம்.

(உரை.) அந்த ஆன்ம சொரூபமானது வாமம் முதலிய எல்லாச் சாத்திரப்பிரவாகங்களின் மத்தியில் மேலான சித்தாந்தமென்னும் பிரவாகத்தில் கூறப்பட்டுள்ளது. ஆகையால் அந்தச் சித்தாந்தத்தின் வாயிலாகவே ஆன்ம சொரூபத்தை அறிந்துகொள்க. சித்தாந்தசாத்திரம் பரமசிவனால் கூறப்பட்டதாகையால் அது ஏனைய சாத்திரங்களெல்லாவற்றினும் சிறந்ததென்று பிற்பகுதியால் சாதிக்கின்றார். எவ்வாறெனின், மேல்முகம் என்றவிடத்தில் முகமென்னுஞ் சொல்லால் வாக்கைக்காக்கும் பரமசிவனது சத்தி கூறப்படுகிறது. எதனாலெனில், உண்மையில் பரமசிவனுக்கு முகமுதலிய தேகமின்மையாலென்க. ஆகையால் அநுக்கிரகத் தொழில்புரிவதாயும் மேலேயுள்ளதாயும் இருக்கும் சத்திரூபமான பரமசிவனது முகத்தால் விந்து சத்தியிலிருந்து நாத முதலியவற்றின் வழியாய் முறையாய் ஆக்கப்பட்டுள்ள சாத்திரத்தில் விளக்கஞ்செய்யப்பட்டுள்ளதென்பது கருத்து. அவ்வாறாயின், சரீரமில்லாத பரமசிவன் சாத்திரங்களை எவ்வாறு உபதேசித்தல் கூடுமெனில், இந்தக்கேள்வி பொருந்தாது. எதனாலெனில், உலகத்தின் சிருட்டி முதலியவை சங்கற்பமாத்திரத்தால் நிகழ்வதுபோல் வித்தியேசுவரர் முதலியோருக்கும் சங்கற்பமாத்திரத்தால் உபதேசஞ் செய்கின்றாரதலினென்க. (௧௬)

(கஎ) அந்த ஆன்மசொரூபத்தின் ஆராய்ச்சியின்பொருட்டு ஏதுக்களை அந்தச் சித்தாந்த சாத்திரங்களிலிருந்தே அறிந்து கொள்க. மனுடர்களுடைய அறிவு, விரிவாயும் பரிசுத்தமாயும் இருப்பினும், இந்த விஷயத்தில் சாமர்த்தியம் உடையதாகிற தில்லை என்பதாம்.

(உரை.) அந்த ஆன்ம சொரூபத்தின் ஆராய்ச்சியும் சித்தாந்த சாத்திரங்களில் கூறப்பட்ட ஏதுக்களைக்கொண்டே செய்யத்தகுந்ததென்பது கருத்தென்க. (கஎ)

(அ—கை.) இவ்வாறு காரணம்பற்றி ஆன்மசொரூபத்தைச் சித்தாந்தம் ஒன்றால் மாத்திரந்தான் அறிதல்கூடுமென்று சாதித்து விட்டு, தொடர்ச்சியான சிவன் முதலிய இரத்தினங்களைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னுமிவையும் சித்தாந்த சாத்திரத்தின் வழியாகவே செய்யத்தகுந்தன என்று மேலே கூறியதை விரித்துக் கூறுகின்றார்.

(கஅ-கக) உலக சம்பந்தம் அற்றனவாயும், சூக்குமங்களாயும், பரமசிவனாலேயே ரகசியமாய்க் காக்கப்பட்டனவாயுமுள்ள சிவன் முதலிய மூன்று இரத்தினங்களைச் சித்தாந்த சாத்திரமின்றி எவன் தானாகவே அறிகின்றான்? அதுபோல இகழத்தக்க தர்க்கங்களாகிய பெரிய இருளுக்கு எதிரிகளான குற்றமில்லாத துக்களையும், சபீஜம், நிர்ப்பீஜமென்னும் யோகத்தையும் தனது அறிவால் சித்தாந்தமன்றி எவனறிகின்றான்? என்பதாம்.

(உரை.) இவ்விடத்தில் சபீஜயோகமாவது, சதாசிவம் முதலிய சகளமூர்த்தியை விடயமாகக்கொண்டது. நிர்ப்பீஜயோகமாவது, சதாசிவத்திற்கு மேற்பட்ட நிட்களமூர்த்தியை விடயமாகக்கொண்டது. இதனால் இந்த மூன்று இரத்தினங்களும், ஆகமம் அனுமானம் யோகிப்பிரத்தியக்ஷம் என்னும் இம்மூன்றால் அறியத்தகுந்ததென்பது அறிவிக்கப்பட்டதென்க. (கஅ-கக)

(௨௦) (அன்றியும்) சித்தாந்தமானது பெரியோர்களால் பூசிக்கப்பட்டதாய்ச் சாதகன் விருப்பத்துடனெண்ணிய பொருள்களனைத்தையும் சிந்தாமணியாகிய இரத்தினம்போல் கொடுக்கின்றது என்பதாம்.

(உரை.) சித்தாந்தத்தினலேயே, சாதகர்களுக்குச் சாதன ஞானமும், அந்தச் சாதனத்தை அனுட்டித்தலால் பயனும் உண்டாகின்றனவென்பது கருத்து என்க. (௨௧)

(அ—கை.) இவ்வாறு சித்தாந்த ஞானரூபமான பயனை அறிவித்துச் சித்தாந்தத்தால் கூறப்படும் பொருள்களை அறிவிப்பதால், இந்தப் பிரகரணத்திற்கும் அதுவே பயனென்று அறிவிப்பாராய்ப், பிரகரணத்தில் கூறப்படும் பொருள்களின் ஆராய்ச்சியை மேற்கொள்ளுகின்றார்.

(௨௧) அந்தச் சித்தாந்தத்தை அனுசரித்து, என்னுலும், விந்து, சத்தி, சிவம் என்னும் இவற்றை விடயமாகக்கொண்ட ஆராய்ச்சியானது செய்யப்படுகின்றது. அம்மூன்றனுள், முதலாவது விந்துவானது நிருபணஞ் செய்யப்படுகின்றது என்பதாம். (௨௧)

(அ—கை.) விந்து உண்டென்று சித்திப்பதைப்பற்றிக் கூறுகின்றார்.

(௨௨) சுத்தாத்துவாவானது எதனிடத்திலிருந்துண்டாகின்றதோ, எதனிடத்தில் நிலைத்திருக்கின்றதோ, எதனிடத்தில் ஒடுங்குகின்றதோ, அது, பரநாதமென்னும் பெயருடைய விந்துவாகும். அந்த விந்துவே, நாதம், விந்து, வர்ணம் என்னுமிவற்றிற்குக் காரணமாகின்றது என்பதாம்.

(உரை.) பின்னர்க் கூறப்படுமாறுபோல், சுத்தாத்துவாவானது அநேக விதமான புவன முதலிய ரூபமாயிருத்தலால்,

அது காரியப்பொருளெனப்படுகின்றது. ஆகவே, அதற்கு முதற் காரணமாக விந்துவுண்டென்பது சித்தித்தது. அன்றியும், சத்தத்திற்கு முதற்காரணமாயிருத்தல் பற்றியும் விந்து சித்திக்கிறதென்று, நாதம் விந்து வர்ணமென்னும் இவற்றிற்குக் காரணம் என்னும் பிற்பகுதியால் கூறுகின்றார். அவற்றுள், நாதமென்பது சொல்லுக்கு விடயமான பொருள்களை அறியும் அறிவிற்குக் காரணமானதாயும் விந்துவின் முதலாவதான பரிணாமமாயும் உள்ள சூக்கும நாதமாகும். இந்த சூக்குமநாதம் ஸ்ரீ காலோத்தரம் முதலிய ஆகமங்களில் சிந்தையற்றதெனக் கூறப்பட்டுள்ளது. விந்துவோவெனில், அந்தச் சூக்குமநாதத்தின் காரியமாய் மயில் முட்டையினுள்ளிருக்கும் கருவினுள்ள நீர்த்துளிபோல் பிரித்தறியப்படாததாயும், ஆராய்ச்சி அறிவு ரூபமாயும் உள்ள அக்கர விந்துவாகும். அதுவும் சூக்குமமென்றே அந்தக் காலோத்தர ஆகமத்தில் கூறப்பட்டுள்ளது. வர்ணமென்பது ஆகாயம், வாயு வென்னு மிவற்றாற்றோன்றிக் காதுகளாலறியக்கூடிய தூலநாதமாகும். இவ்வாறே, தூலம் சத்தமென்றும், சூக்குமம் சிந்தனை ரூபமாயிருக்கிறதென்றும், பரம் சிந்தையற்றதென்றும் அந்தக் காலோத்தர ஆகமத்தில் கூறப்பட்டுள்ளது என்க.

(அ—கை) * சுத்தாத்துவாவிற்குப் புவனங்களுக்குப் பற்றுக் கோடாயிருக்குந் தன்மை உண்டென்று கூறத் தொடங்குகின்றார்.

(உரு) மாயை என்னும் சமுத்திரத்தைத் தாண்டினவர்களாயும், கன்மமென்னும் பெருந்தாழ்ப்பாளை நாசஞ்செய்தவர்களாயும், சிவபதத்தை அடையாதவர்களாயுமுள்ள விஞ்ஞான கேவலர்கள் மூன்றுவிதமாகின்றன ரென்பதாம்.

(உரை) பசுரூபமான ஆன்மாக்கள், மலம் கன்மம் மாயைகளுடன் கூடின சகலர்களென்றும், பிரளயத்தில் கலையாதிகள்

---

* சுத்தாத்துவா வென்பது இவ்விடத்துச் சுத்த தத்துவங்களைக் குறித்தது.

நீங்கினமையால் மலம் கன்மம் என்னு மிரண்டுடன் கூடின பிரளயாகலரென்றும், ஞானத்தால் கன்மம் நசித்து மலமாத்திரத்துடன் கூடின விஞ்ஞான கேவலரென்றும், மூன்று பிரிவினராயிருக்கின்றனர். அம்மூவருள், மலபரிபாகத்தின் வேறுபாட்டால் கன்ம மலம் மாயாமல மென்னும் இரண்டும் சிவானுக்கிரகத்தால் நாசம் அடையப்பெற்றவர்களாயும், சிறிது மிகுதியான அதிகார மல மிருத்தலால் சிவசாமிய மடையாதவர்களாயுமுள்ள விஞ்ஞான கேவலர்கள் மூன்றுவிதமாகின்றனர் என்க. (உங)

(அ—கை) அந்த விஞ்ஞான கேவலர்கள் இவரென்று கூறுகின்றார்.

(உச) வித்தைகளென்றும், வித்தியேசுவரர்களென்றும், அணுசதாசிவர்களென்றும், விஞ்ஞானகேவலர் மூன்று பிரிவினராவர். அவர்களுள், முதலாவதான வித்தைகள், வித்தியாதத்துவத்தைப் பற்றுக் கோடாக வுடையவர்கள். அவர்கள் மந்திரேசுவரர்களென்றும் வித்தைகளென்றும் பெயரையுடையவராகின்றனர் என்பதாம். (உச)

(உ௫) அந்த மந்திரேசுவரர்கள், வித்தியேசுவரர்களால் ஏவத்தகுந்தவர்கள். ஏழுகோடி எண்ணிக்கை யுள்ளவர்கள். அவர்களுக்கு வித்தியாதத்துவத்தில்,வாமை, சுயேஷ்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதினீ, சர்வபூததமனீ, மநோன்மனீ என்னும் ஒன்பது புவனங்கள், தனுகாணுதிகளால் ஒன்றுக்கொன்று மேன்மை வாய்ந்தனவாய் விளங்குகின்றன என்பதாம்.

(உரை.) இந்த மந்திரேசுவரர்கள், வித்தியேசுவரர்கள் செய்யும் அநுக்கிரக மென்னுந் தொழிலுக்குச் சாதனமாயிருப்பது பற்றி ஏவத்தகுந்தவர்களாகின்றனர். எதனாலெனில், வித்தியேசுவரர்கள் ஐவகைத் தொழிலுக்கும் அதிகாரிகளாகையா

லென்க. வாமை முதலிய ஒன்பது புவனங்களும், ஒன்றினின்றும் மற்றொன்று மேன்மையான போகத்தைக் கொடுக்கக் கூடியனவென்பது கருத்து. (உ௫)

(அ—கை) பின்னர் வித்தைகளாகிய மந்திரேசுவரர்களினின்றும் வித்தியேசுவரர்கள் சிறந்தவர்களென்று கூறுகின்றார்.

(உ௬—உஎ) விஞ்ஞானகலர் மூவருள், நடுவிலுள்ள வித்தியேசுவரர்கள், மல மொழிந்தவர்களாயும், சிருட்டி முதலிய ஐந்தொழிலுடையவர்களாயும், அதிகாரமலமாத்திர முடையவர்களாயும், சிவசூரியனுடைய கிரணச்சேர்க்கையால் மலர்ந்த ஆன்மசக்தியையுடையவர்களாயும், ஈசுவரதத்துவத்தை இருப்பிடமாகக் கொண்டவர்களாயுமிருக்கின்றன ரென்பதாம்.

(உரை) மலமொழிந்தமையும், அதிகாரமல முடைமையும், சிவானுக்கிரக முடைமையும் ஆகிய இம்மூன்றும் மந்திரேசுவரர்களுக்கும் உண்டு. ஐந்தொழில் புரியும் விஷயத்தில், படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அனுக்கிரகித்தல் என்னும் ஐந்தொழில் புரிகின்றவர்கள் வித்தியேசுவரர்களென்னும் ரௌரவாகமவாக்கியம் பிரமாணமென்க. (உ௬-உஎ)

(உஅ) வித்தியேசுவரர்கள், அனந்தர் முதலாக எண்மராவர். ஒருவருக்கொருவர் குணத்தால் சிறந்தவர்கள். இந்த எண்மர்களுக்கும் மேலேச்சுலோகத்தில் கூறப்பட்ட ஈசுவரதத்துவத்திலேயே எட்டுப் புவனங்களுள்ளன. அவர்களுக்குள் அனந்தர் நாயகராவரென்பதாம்.

(உரை) அனந்தர் முதலிய எண்மர் எவரெனின், அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகவுருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீ கண்டர், சிகண்டி என்னும் பெயருடையவர்களென்க. இவர்களுக்கு ஈசுவர தத்துவத்தில் அனந்த சூக்கும சிவோத்தம என்பது முதலிய பெயர்களைக்கொண்ட எட்டுப் புவனங்களிருக்கின்றன. இவர்களுக்குள் அனந்தரே பரமேசுவரன் என்க. (உஅ)

(உகூ) அந்த ஈசுவரதத்துவ புவனங்களில் வித்தியேசுவரர்களுடைய மகிமைபோன்ற மகிமையினையுடைய வேறு சில ஆன்மாக்களும் இருக்கின்றனர். மூன்றுவது விஞ்ஞான கேவலர்களான அணுசதாசிவர்கள், பதிகிருத்தியத்திற்கு அதிகாரிகளாயிருக்கின்றனரென்பதாம்.

(உரை) அந்தந்தப் புவனபதிகளை வழிபாடு செய்தலினாலாவது, தீக்ஷையினாலாவது, சில ஆன்மாக்கள் அந்தந்தப் புவனங்களில் வாசஞ்செய்கின்றனர். இந்த நியாயத்தையே வித்தியாதத்துவபுவனங்களிலும் சதாசிவதத்துவ புவனங்களிலும் அமைத்துக்கொள்க. அவ்வாறே சூக்கும சுவாயம்புவம் என்னும் ஆகமத்திலும், எவன் எந்தப் புவனத்தின் போகங்களை விரும்புகின்றானோ, அவன் அந்தப் புவனங்களிலேயே மந்திரசாமர்த்தியத்தால் ஏவப்பட்டவனாகிச் சித்தியடைந்தவனாயிருக்கின்றான் எனக் கூறப்பட்டுள்ளது. சுலோகத்தின் பிற்பகுதியால் அணுசதாசிவர்களைப்பற்றிக் கூறுகின்றாரென்க. (உகூ)

(உகூஇ) அந்த அணுசதாசிவர்கள் பரமசிவனுடைய அனுக்கிரகங் கிடைக்குங்காலத்தில் அத்துவாவைக் கடந்து முத்தியடைகின்றனரென்பதாம்.

(உரை) இவ்விடத்தில் சதாசிவராவார், அதிகாராவத்தையிலுள்ள சிவனேயாவர். அவருக்கு அதிகாரமுதலிய அவத்தைகள் உபசாரமாய் நிகழ்ந்தன. பரமசிவன் ஒருவனே, உபசாரத்தால் அதிகாரியென்றும், இலயி என்றும், போகி என்றும் கூறப்படுகின்றானென்று சாத்திரங்களில் கூறப்பட்டிருக்கின்றது. சமஸ்காரம் செய்யப்படுதற்குரிய அணுசதாசிவருக்கு அதிகாரமுதலிய வேற்றுமை உபசாரமன்று, உண்மையேயாகுமென்க. (உகூஇ)

(அ—கை) இந்த அணுசதாசிவர்கள் சதாசிவதத்துவத்திலிருக்கும் புவனத்தில் வசிப்பவரெனக் கூறுகின்றார்.

(௩௦இ) விந்துவானது அநேக போகங்கள் நிரம்பிய சதாசிவமென்னும் பட்டணத்தை உண்டுபண்ணுகின்றது. அந்தப்

பட்டணத்திற்கு அதிட்டாதாவான சதாசிவனது பெயரை அனு சரித்து அதையடைந்த அணுக்களும் சதாசிவரென்றே கூறப்படு கின்றனரெனபதாம்.

(உரை) ஆனதுபற்றியே இந்த அணுசதாசிவர்களுக்குத் தேகம் முதலியன உண்மையேயாகும். அதிட்டாதாவான பரம சிவனுக்குத் தேகம் உண்மையன்று. சாதகனுடைய லக்ஷியத் திற்காகப் பரமசிவனுக்கு வடிவங்கொள்ளப் பட்டிருக்கிறதென்று பௌட்கரத்தில் கூறப்பட்டிருக்கிறது என்க. (௩௦இ)

(அ—கை) சுத்தாத்துவா விஷயமாக இதுவரை கூறியதை முடித்துக் காட்டுகின்றார்.

(௩௧இ) சிவனைக் கருத்தாவாகவுடைய சுத்தாத்துவா வானது, பதினெட்டுப் புவனங்களோடும், போக்தாக்களோடும், மூன்று தத்துவங்களோடும் கூறப்பட்டுள்ளது என்பதாம்.

(உரை) இந்தச் சுத்தாத்துவாவானது காரியப்பொருளா கையால் சிவனைக் கருத்தாவாக வுடையதென்பது கருத்து. நிவி ருத்தி முதலிய கலைகளிலுள்ள புவனங்களுக்கும், சத்தி தத்துவம் சிவதத்துவங்களுக்கும், சதாசிவ தத்துவத்திலேயே அடக்கமென் றறியத்தகுந்தது என்க. (௩௧இ)

(அ—கை) சுத்தாத்துவாவானது காரியப் பொருளாகை யால் இதற்கு நித்தியமான ஒரு காரணமிருக்கவேண்டும். அந் தக் காரணமே விந்து வென்னும் பெயர்பெற்றதெனக் கூறு கின்றார்.

(௩௨இ) சதாசிவம் முதலிய தத்துவக் கூட்டமானது விகா ரத்துடன் கூடியிருத்தலால் நித்தியமான முதற்காரணத்தையுடை யது. எதுஎது விகாரமுடையதோ, அது நித்தியமான முதற் காரணமுடையது; கடம்போலும். இதுவும் அதுபோல. ஆகை யால் நித்தியமான முதற்காரணமுடையதே என்பதாம்.

(உரை) இந்தச் சதாசிவம் முதலிய அத்துவாவும் விகாரப் பொருளாகையால் நித்தியமான முதற்காரணமுடையதென்பது கருத்து என்க. (௯௨இ)

(அ—கை) கடத்திற்கு முதற்காரணமான மண்ணானது அநித்தியமாயிருப்பதால் சுத்தாத்துவாவிற்கு முதற்காரணமான இந்த விந்துவும் அநித்தியமாகவே யிருக்கவேண்டும். வேண்டவே, விகாரமுடைமையாலென்னும் ஏதுவானது தருமியான விந்துவின் நித்தியத்தன்மைக்கு விபரீதமான அநித்தியத்தன்மையைச் சாதித்துக் கொடுத்தலால் விரோதமென்னுங்குற்றமுடைய * விருத்தனென்னும் ஏதுப்போலியாகுமென்று ஆசங்கை நிகழ அதனைப் பரிகரிக்கின்றார்.

(௯௯) கடமானது மண்ணைச் சார்ந்ததாயிருந்தபோதிலும் மாயையை முதற்காரணமாக உடையதாக இருக்கின்றது என்பதாம்.

(உரை.) கடத்திற்கு நேரே மண் முதற்காரணமாக இருந்தபோதிலும் பரம்பரையாய் மாயையே முதற்காரணமென்பது கருத்தென்க. (௯௯)

(அ—கை.) மண் முதற்காரணமா யிருந்தபோதிலும் பரம்பரையாய் மாயை முதற்காரண மென்பது எதனாலென்னும் ஆசங்கைக்குவிடை கூறுகின்றார்.

(௯௯இ) அழிதல் தோன்றுதல் என்னும் இவற்றுடன் கூடிப் பரிணாமமுடையதாயிருத்தலால் மாயையை முதற்காரணமாகவுடையது என்பதாம்.

---

* விருத்தமென்னும் ஏதுப்போலியாவது:—துணிபொருள் இல்லாவிடத்து வியாபித்திருக்கும் ஏதுவாகும். உதாரணம்—சத்தம் நித்தியம், காரியப்பாட்டால் என்பது. காரியப்பாடு, நித்தியமல்லா அழிபொருளில் வியாபித்திருத்தல் காண்க.

(உரை.) இதன் கருத்தாவது, கடம் கபாலம் முதலிய அழிதலும் தோன்றுதலுமுடைய பொருள்களுக்கு * அவாந்தர பரிணமமிருப்பது பற்றி அவாந்தர காரிய காரணத் தன்மையிருப்பினும், பிருதிவி முதலிய தத்துவங்களுக்குப் பரம்பரையாய் மாயையென்னும் நித்தியமான முதற்காரணம் கொள்ளத்தக்கது. அவ்வாறு கொள்ளவில்லையாயின் வரம்பின்றி ஓடலென்னும் குற்றம் நிகழும். இவ்வாறே சுவாயம்புவ ஆகமத்திலும், நாசமற்றதான மாயையானது உலகத்திற்கு முதற்காரணமா யிருக்கின்றதெனக் கூறப்பட்டிருக்கிறது என்க. (௩௩இ)

(அ—கை.) இதனையே விரித்துக் கூறுகின்றார்.

(௩௪இ) எந்த எந்தப் பொருள் தோன்றுகின்றதோ அது மாயையை முதற்காரணமாகவுடையது. கலைபோலும் தோற்ற நாசங்களை மாயையைச் சார்ந்த தருமங்களாக மகேசுவரன் கூறியிருக்கின்றானென்பதாம்.

(உரை) ஆப்தனான பரமசிவனுடைய வாக்கியத்தாலும் மாயை முதற்காரணமென்று சித்தித்த தென்பது கருத்து என்க. (௩௪இ)

(அ—கை) இப்பொழுது சற்காரிய வாதம் பற்றிக்கலை முதலிய நிலைவேறுபாட்டால் தோற்றம் நாசம் என்னும் தொழிலையடைந்த மாயையே கலைமுதலிய காரியத்தின் வழியாய்ப் பரிணமிக்கின்றதெனக்காட்டுதற்குப் பரிணாமமென்னும் சொல்லிற்குப் பொருள் கூறுகின்றார்.

(௩௫—௩௬) பொருள்களுக்குப் பரிணாமமோ வெனில், முன் நிலையினின்று நழுவி வேறு நிலையையடைதலாகும். பாலுக்

---

* அவாந்தரம்—இடைப்பட்டது. கடத்திற்குக்கபாலம் இடைப்பட்டகாரணம். கபாலத்திற்கு மண் இடைப்பட்டகாரணம். மண்ணுக்குத் தன்மாத்திரை இடைப்பட்ட காரணம். இவ்வாறே மேலுஞ்சென்று மாயையே காரியத்தன்மை யில்லாத காரணமாய் நிலைபெறும்.

குத் தயிர்த்தன்மை போலும், தயிருக்கு மோர்த் தன்மைபோலுமாம். அவற்றுள், தயிர்த்தன்மை ரூபமான நிலை நிருபணஞ் செய்யப் படுகின்றது என்பதாம்.

(உரை) அவற்றுள் என்பதனால் திருட்டாந்தத்தின் சொரூபத்தை நிரூபணம் செய்வதற்குத் தொடங்குகின்றாரென்க. (௩௫—௩௬)

(௩௬இ) பால் நிலையும் தயிர் நிலையும் மோர் நிலைக்கு முந்தினநிலைகளாய்க்கொள்ளப் பட்டிருத்தலால், மோர் நிலையானது பால் நிலையிலும் தயிர் நிலையிலும் இல்லை என்பதாம்.

(உரை) தயிர் நிலையிலாவது பால் நிலையிலாவது மோர் நிலை இல்லை என்பது கருத்து. பாலே தயிர் முதலிய ரூபமாய்ப் பரிணமிக்கின்றது. பால் நசித்துத் தயிர் தோன்றிற்று என்னும் வழக்கும் காணப்படுகின்றது என்க. (௩௬இ)

(அ—கை) இன்னும் இதனையே கூறுகின்றார்.

(௩௭) சத்துரூபமான நிலையையுடைய ஒரு பொருளே முன்னர்ப்பால் ரூபமாயிருந்து பின்னர்த்தயிர் ரூபமாயிருக்கின்றது. அதன்பின்னர் மோர் ரூபமாயிருக்கின்றது என்பதாம்.

(உரை) அசத்துப் பொருளுக்குத் தோற்றம் கூடாது ஆதலின் சத்தானதயிரே பாலிலிருந்து தோன்றுகிறது; சத்தான மோரே தயிரிலிருந்து தோன்றுகிறதென்பது கருத்து. இந்தச் சற்காரியவாதமானது நம்மால் மிருகேந்திர விருத்தி தீபிகையில் விரிவாய்க் கூறப்பட்டுள்ளது என்க. (௩௭)

(அ—கை) தயிர் வெண்ணெய் முதலிய நிலைரூபமான பரிணமவேறுபாட்டால் வேறான பொருளையும் கிரியையினையுமுடைய காரியங்களுக்கு எவ்வாறு பாலே முதற்காரணமாயிருக்கின்றதோ? அவ்வாறே தத்துவம் புவனம் முதலிய வேறுபாட்டால் வேறு வேறான பரிணமமுடையனவாயும், வேறு வேறான பொருளும் தொழிலுமுடையனவாயும் உள்ள கலைமுதலிய காரி

யங்களுக்கும், கோரகவும் ஒன்றன்பின் ஒன்ருகவும் மாயையே முதற்காரணமென்று கூறுகின்ருர்.

(௩அ) அவ்வாறே மாயையும் நானுவிதமான பரிணமத்துடன் கூடியிருத்தலால் தத்துவங்கள் தாத்துவிகங்களென்னும் இவற்றிற்கு நித்தியமான முதற்காரணமாகின்றது என்பதாம்.

(உரை) அவ்வாருயின் பால்போல முற்றும் பரிணமிக்கின்றமையால் மாயை அநித்தியமாகுமென்னில், ஆகாது. திருட்டாந்தமெல்லாம் அனைத்திற்குங் கூறமுடியாது. (அஃதாவது பொருள் நிறம் குணம் தொழிலென்னும் நான்கனுள் யாதானுமொன்று பற்றித் திருட்டாந்தம் கூறப்படுவதன்றி அனைத்திற்கும் ஒரு திருட்டாந்தம் கூறப்படுவதில்லை. படுமாயின் அது பொருளெனப்படுமேயன்றித் திருட்டாந்தமெனப்படாது என்பதாம்.) ஆதலால் பரிணம விடயத்தில் மாத்திரம் பால் திருட்டாந்தமாகக் கூறப்பட்டது. நெய் ஒருபாகத்தில் புழுவாகப் பரிணமிப்பது போல் மாயையும் ஒரு பாகத்தில் பரிணமிக்கின்றது. ஆகையால் குற்றமின்மை காண்க என்க. (௩அ)

(அ—கை.) இவ்வாறு கடத்திற்கும் ஒன்றன்பின்னென்ருய் நித்தியப் பொருளை முதற்காரணமாக உடையதாயிருக்குந்தன்மையைச் சாதித்துவிட்டு விடயத்தைக் கூட்டி முடிக்கின்ருர்.

(௩அஇ) ஆகையால் பிரசித்தமாய் விளங்கும்படி கூறப்பட்ட நித்தியமான முதற்காரணத்தையுடையது என்னும் விசேடணத்தையுடைய கடம் என்னும் திருட்டாந்தம் பொருத்தமுடையதேயாகும் என்பதாம். (௩அஇ)

(அ—கை.) * பாரிசேட அனுமானத்தினலும் விந்துவின் சித்தியைக் கூறுகின்ருர்.

(௩கூஇ) சுத்தாத்துவாவிற்கு அசுத்தமாயையும் முதற்காரணமாதலில்லை. ஈசுவரனும் முதற்காரணமாதலில்லை. பரமா

* பாரிசேடம்—மூவரில் இருவர் கள்வரல்லரெனின், மற்றவன் கள்வனென்பது.

னுவும் முதற்காரணமாதலில்லை. சிவசத்தியும் முதற்காரணமாத லில்லை. எனவே பாரிசேடத்தால் விந்துவே (சுத்தமாயையே) முதற்காரணமென்பது சித்தித்தது என்பதாம். (ஙகூஇ)

(அ—கை.) அவற்றுள் அசுத்தமாயை முதற்காரணமாத லில்லை என்பதைச் சாதிக்கின்றார்.

(ச0இ) முன்னர்க் கூறிய நான்கு பொருள்களுள் அசுத்த மாயை யென்று யாதொன்று கூறப்பட்டதோ அது அனந்தேச ருடைய சத்தியால் கலக்கப்பட்டுக் கலை முதல் பிருதிவி ஈறான தத்துவக் கூட்டத்தைத் தோற்றுவிக்கின்றது என்பதாம்.

(உரை.) அவற்றுள், அசுத்தமாயை யென்று யாதொன்று கூறப்பட்டதோ அது அனந்ததேவருடைய சாமர்த்தியத்தால் கலக்கஞ்செய்யப்பட்டுத் தனது காரியத்தைத் தோற்றுவிக்கின் றது. அவ்வாறே சுத்தாத்துவாவில் சிவன் கருத்தா; அசுத் தாத்துவாவில் அனந்தேசுவரர் கருத்தாவென்று கிரணாகமத்தி லும் கூறப்பட்டிருக்கின்றது என்க. (ச0இ)

(அ—கை.) மேற் கூறப்பட்ட விஷயத்திற்கு ஏதுக்களைக் கூறுகின்றார்.

(சக—சஉ) அசுத்தமாயும் ஜடமாயும் இருத்தலாலும், அவ்வாறே மோகத்திற்குக் காரணமாயிருத்தலாலும், துக்கத்தின் சேர்க்கையாலும், மாயாசம்பந்தமானமலம் கன்மமலம் ஆணவ மலம் என்னுமிவற்றின் சேர்க்கையாலும், எல்லா ஆன்மாக் களுக்கும் போக்கியமாயிருத்தலாலும், பரிணாமத்தின் கூட்டமா யிருத்தலாலும், அசுத்தமாயையானது அனந்தேசுவரரால் கலக் கஞ்செய்யப்பட்டு அசுத்தாத்துவாவைத் தோற்றுவிக்கின்றது என்பதாம்.

(உரை.) யாதொரு காரணத்தால் இந்த அசுத்தாத்துவா விற்கு அசுத்தத்தன்மையும் சடத்தன்மையுமிருக்கின்றதோ அத னாலும், மோகத்தை யுண்டுபண்ணுதலாலும், துக்கத்தை யுண்டு பண்ணுதலாலும், மும்மலமுடைய உயிர்களுக்கே தேகம்

இந்திரிய முதலியவற்றைத் தோற்றுவித்தலால், ஆன்மாவல்லாத பொருளை ஆன்மாவென எண்ணும்படி செய்வதான மாயேய மலம், சுகம் துக்கம் மோகமென்னும் இவற்றிற்குக் காரணமான மயக்கம் ஆசை முதலிய பாவப்பிரத்திய ரூபமான கன்மமலம்; அநாதியே ஆன்மாவை மறைத்துக்கொண்டிருக்கும் பசுத்தன்மையெனப்படும் ஆணவமலமென்னும் இம்மூன்று மலங்களின் சம்பந்தமிருத்தலாலும், மும்மலங்களின் சம்பந்தம் பற்றிப் புவன முதலியவற்றின் வாயிலாக எல்லா ஆன்மாக்களுக்கும் போக்கியப் பொருளாயிருத்தலாலும், பலவிதமான கன்ம பலன்களின் அநுபவத்திற்குச் சாதனங்களான பலவிதங்களான பரிணமக் கூட்டத்தாலும், இவ்வாறு பல காரணங்களால் அசுத்தமாயையானது அனந்த தேவரால் கலக்கப்பட்டு அவ்விதமான காரியங்களைத் தோற்றுவிக்கின்றது. சுத்தனுன சிவனுக்கு அசுத்தமான அத்துவாவிஷயத்தில் கருத்திருத்தன்மை கூடாதாகையாலென்க. அவ்வாறாயின், சிவன் எல்லாவற்றிற்குங் கருத்தாவென்பது எவ்வாறு கூடுமெனில், இந்தக் கேள்வி பொருந்தாது. சிவன் அசுத்தாத்துவாவை நேரே தோற்றுவிக்கவில்லை என்று இவ்விடத்தில் விலக்கப்பட்டதேயன்றி அனந்தர் வாயிலாகக் கருத்தாவாயிருக்கும் ஏவுதல்செய்யுங் கருத்திருத்தன்மை விலக்கப்படவில்லை. ஏதனுலெனின், அனந்ததேவருக்கும் சிவனுடைய அதிட்டானமின்றிக் கருத்திருத் தன்மையில்லை யாகையாலென்க. (சக—சஉ)

அ—கை இவ்விடயத்தையே விரிவாய்க் கூறுகின்றுர்.

சரு—சச. அசுத்த மாயையானது யாதொரு காரணத்தால் வேறு சடப்பொருளால் வியாபிக்கப்பட்டும், பரிணமத்துடன் கூடியும் இருக்கின்றதோ, அந்தக் காரணத்தால் கலை முதலியவற்றைத் தோற்றுவிப்பதில் தேகம் முதலியவற்ரோடு கூடினவனும், பிறனொருவனுக்கு அடங்கினவனுமுள்ள புருடனை நிச்சயமாய் விரும்புகின்றது. எதுபோலுமெனின், பொன்னனது கிரீடத்தைத் தோற்றுவிப்பதில் தட்டானை விரும்புவது போலுமென்க என்பதாம்.

(உரை.) அவ்வாறாயின் சுத்தாத்துவாவைத் தோற்றுவிப்பதில் சிவன் கருத்தாவாகையால் சிவனுக்கும் சரீரம் இந்திரிய முதலியவற்றின் சேர்க்கைவேண்டுமேயெனில், வேண்டுவதில்லை. எதனாலெனில்,சிவன் நித்தியமாயும், நின்மலமாயும், அதிசயமற்றதாயுமுள்ள, எல்லாப்பொருள்களையும் விடயமாகக்கொண்ட ஞானகிரியைகளுடன் கூடியிருத்தலாலென்க. அன்றியும் சரீரமில்லாத ஆன்மாவிற்குத் தனது சரீரத்தைத் தொழிற்படுத்தும் விஷயத்தில் கருத்திருத்தன்மை காணப்படுவதாலும், சரீரமில்லாமலே சிவனுக்குக் கருத்திருத்தன்மை கூடுமென்க. அனந்ததேவருக்கோவெனில், அதிகார மலச்சேர்க்கை இருப்பதுபற்றி அவருடைய கருத்திருத்தன்மை சரீரத்தோடு கூடியே நிகழுமென்க. (சங-சச)

(சரு) (ஆகையால்) அத்தகைய இந்த மாயையானது யாதொரு காரணத்தால் விகற்ப ஞானத்திற்கு விடயமாயிருக்கின்றதோ, அந்தக்காரணத்தால் குயவனால் மண்போல அனந்ததேவரால் கலக்கப்படுகின்றது என்பதாம்.

(உரை.) சவிகற்ப அறிவிற்கு விடயமான பொருளிற்றான் சரீரமுடையவர்களுக்குக் கருத்திருத்தன்மை காணப்பட்டிருக்கிறதென்பது கருத்து என்க. (சரு)

(அ—கை.) இவ்வாறு கூறியதனால் பயன் என்னை என்பார்க்கு விடை கூறுகின்றார்.

(சருஇ) ஆன்மாவிற்குச் சவிகற்க அறிவானது சொற்களை அனுசரித்தே உண்டாகிறது என்பதாம்.

(உரை.) சவிகற்ப அறிவானது இது கடமென்னும் ஆராய்ச்சி ரூபமான சொல்லின் தோற்றத்தினாற்றான் ஆன்மாவினிடத்தில் நிகழ்கின்றது என்க. (சருஇ)

(அ—கை.) இவ்வாறு கூறியதனால் என்னை பயனென்பார்க்கு விடைகூறுகின்றார்.

(௪௬இ) வாக்குரூபமான சொல்லானது அனந்த தேவருக்குப் பொருளினறிவு உண்டாவதன்பொருட்டு வைகரிமுதலிய வேறுபாட்டால் நான்கு வகையாக விந்துவின் கலக்கத்தாலுண்டாகின்றது என்பதாம்.

(உரை) அனந்ததேவருக்குச் சவிகற்ப அறிவு உண்டாவதின்பொருட்டுச் சத்தம் அவசியம் வேண்டப்படுகின்றது. அப்பொழுது அசுத்தாத்துவா தோன்றுமையால் தூலாகாசத்தி லிருந்து சத்தம் தோன்றிற் றென்பது கூடாது. ஆகையால் சிவனால் கலக்கப்பட்ட விந்துவிலிருந்தே சத்தந்தோன்றுகின்றது. இந்தச சத்தத்திற்கு வைகரி முதலிய நான்கு வேறுபாடுகளைப் பின்னர் கூறப்போகின்றார். ஆகையால் சத்தத்திற்கு முதற்காரணமாகவும் விந்து சித்தித்தது என்க. (௪௬இ)

(௪௭இ) (அன்றியும்) சுத்தவித்தியா சரீரம் உடையவராயும் பகவானுயுமுள்ள அனந்த தேவர் அசுத்தமாயையைக் கலக்கஞ் செய்கிறவராகக் கொள்ளப்பட்டிருக்கின்றார். சுத்தவித்தையானது விந்துவைச்சார்ந்த தத்துவமென வித்துவான்களாற் கூறப்பட்டிருக்கின்றது என்பதாம்.

(உரை.) அனந்ததேவருக்கு விந்துவின் சம்பந்தமான வடிவச்சேர்க்கை உண்டென்பது சாத்திரங்களில் கேட்கப்படுகிறது. ஆகையால், அனந்ததேவருடைய வடிவத்திற்கு முதற்காரணமாகவும் விந்துவென்பது சித்தித்ததென்க. (௪௭இ)

(அ—கை.) இவ்விஷயத்தைக் கூட்டிமுடிக்கின்றார்.

(௪அ) ஆகையால் அசுத்த மாயையானது முதற்காரணமாக ஆகிறதில்லை. அவ்வாறே பரமசிவனும் முதற்காரணமாதலில்லை என்பதாம்.

(உரை.) சுத்தாத்துவாவில் விந்துவே முதற்காரணமென்பது கருத்து. பிரசித்தமற்றதாய்ச் சொல்லப்பட்ட முதற்காரணமான விந்துவால் பயன் என்னை? பரமசிவனாவது ஆன்மாவாவது சிவசத்தியாவது முதற்காரணமாயிருக்கட்டும் என்பார்க்கு அது

பொருந்தாதெனை "அவ்வாறே பரமசிவனும்" என்ற பிற்பகுதியால் கூறுகின்றார் என்க. (சஅ)

(சகூ) அறிவுடைப் பொருள்களாயிருத்தலாலும், விருத்தி பரிணமமென்னும் இரண்டுமில்லாமையாலும், ஆன்மாவும் சிவசத்தியும் முதற்காரணமாதலில்லை என்று அறியத்தக்கது. இவ்விஷயத்தின் விரிவு பின்னர்க் கூறப்படப்போகின்றது என்பதாம்.

(உரை.) மண்முதலிய முதற் காரணங்களுக்குச் சடத்தன்மை காணப்பட்டிருக்கின்றது. சிவன் ஆன்மா சத்தி என்னும் இம்மூன்றும் சேதனப்பொருளாகையால் அவைமுதற்காரணமாதற்கு உரிமையுடையனவல்ல. அன்றியும், முதற்காரணமோவெனில், பால் தயிராய்ப்பரிணமிப்பதுபோல் பரிணமத்தாலாவது, அல்லது ஆடைவீடாவதுபோல் விருத்தியினாலாவது காரியத்தைத் தோற்றுவிக்கவேண்டும். சிவன் ஆன்மாசத்தி என்னும் இம்மூன்றும் விகாரமில்லாப் பொருள்களாகையால் இவற்றிற்கு விருத்தியும் பரிணமமும் நிகழ்கிறதில்லை. இம்மூன்று பொருள்களையும் விகாரமுடையதெனக்கொண்டால் சடத்தன்மை அநித்தியத்தன்மை முதலிய குற்றங்கள் நிகழும். இவ்விஷயத்தின் விரிவு இப்பிரகரணத்திலேயே பின்னர்க் கூறப்படப்போகின்றது. தத்துவப் பிரகாச வியாக்கியானத்திலும் நம்மால் கூறப்பட்டிருக்கின்றது என்க. (சகூ)

(அ—கை.) வேறுவழியாலும் விந்துவுண்டென்று சித்திப்பதைக் கூறுகின்றார்.

(சகூஇ) ஆன்மாக்களுக்கு அறிவில் ஏற்றத்தாழ்வு காணப்படுகின்றது. இந்தக்காரணத்தாலும் விந்துவுண்டென்பது அறியப்படுகின்றது என்பதாம். (சகூஇ)

(அ—கை) வற்றத்தாழ்வைப்பற்றிக் கூறுகின்றார்.

(நிoஇ) சில ஆன்மாக்கள் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையராய்க் காணப்படுகின்றன. சிலர் மிகுதியான அறிவும் தொழிலுமுடையராய்க் காணப்படுகின்றனர். வேறு சிலர் எல்

லாப் பொருளையு மறிந்தவராயும் எல்லாத்தொழிலையுஞ் செய்பவ ராயும் காணப்படுகின்றன ரென்பதாம். (நி0இ)

(அ—கை.) இவ்விதமான ஏற்றத்தாழ்வுகள் அவர்களுக் குத் தானுகவே நிகழாதெனக் கூறுகின்றார்.

(நிக) ஆன்மாவானவன் சேதனனுகவும் நித்தியனுகவும் விகாரமற்றவனுகவும் கொள்ளப்பட்டிருக்கின்றானென்பதாம்.

(உரை). எக்காலத்தும் அளவற்ற கடம் படம் முதலிய வற்றை விடயமாகக்கொண்ட அறிவை அறிபவனுயிருத்தலால், ஆன்மா * சுவப்பிரகாசனுய்ச் சித்தித்திருக்கின்றமையாலும், மறு பிறப்பில் பயன்றரும் கன்மபலன்களை அனுபவிப்பவனுயிருக்கின்ற மையாலும், ஆன்மாவிற்குச் சேதனத் தன்மையும் நித்தியத் தன் மையும் சித்தித்தனவென்பது சிவாகமங்களிற் கேட்கப்படுகின் றது. அவ்விரண்டும் சித்தித்தமையினுலேயே அவனுக்கு விகார மும் நிகழ்கிறதில்லையென்க. (நிக)

(அ—கை) இவ்வாறன்றி ஆன்மாவை விகாரமுடையவ னென்று கொள்ளில் குற்றமெனக் கூறுகின்றார்.

(நிகஇ) ஆன்மா விகாரமுடைய பொருளாயிருக்குமாயின் விகாரமுடைய கடம் சுவர் முதலியனபோல் சடத்தன்மையும் அநித்தியத் தன்மையும் உடையதெனப்படும் என்பதாம். (நிகஇ)

(அ—கை.) இந்த நியாயம் சிற்சக்தியிலும் ஏற்றிக்கொள் ளத் தகுந்தது. தரும தருமிகளுக்கு வேறுபாடின்மையாலெனக் கூறுகின்றார்.

(நிஉஇ) சித்து ரூபியான சத்தியும் அவ்வாறே நித்தியமா யும் விகாரமற்றதாயும் உள்ளது. விகாரமில்லாத ஆன்மாவிற்கும் சக்திக்கும் அநேகவிதமாயிருக்குந் தன்மை உபாதியினுலுண்டா கின்றது என்பதாம்.

---

* சுவப்பிரகாசம்—தானே பிரகாசிப்பது.

(உரை.) இவ்விஷயம் நம்மால் முன்னரே சகூ-வது சுலோகத்தில் காட்டப்பட்டிருக்கின்றது. அவ்வாறே நாதகாரிகையிலும் ஆன்மாவும் சத்தியும் விகாரமற்றவையாகையால் அவை அநேகவிதமாக ஆவதற்கு உரியனவல்ல; விகாரமுடையனவாயின், சேதனத்தன்மை இல்லாதனவாகுமென்று கூறப்பட்டிருக்கிறதென்க. (௫௨இ)

(௫௩) ஆன்மாவினுடைய சிற்சத்தியானது எதனோடு கூடி மாயா சம்பந்தமான பொருள்களை யறிவதில் முயற்சிக்கின்றதோ, எந்த உபாதியால் வேறாயுமிருக்கின்றதோ, அதுவே, அநேகம் விருத்தியையுடைய விந்துவாகுமென்பதாம்.

(உரை.) ஆன்மாக்களின் சிற்சத்தியானது, நாதரூபமாய்ப் பரிணமித்ததாயும் பெயரிட்டு வழங்கக்கூடிய பொருள்களை விடயமாகக்கொண்ட அறிவிற்குச் சாதனமாயுமுள்ள எந்தப் பொருளோடு சேர்ந்து மாயா காரியமான சவிகற்பப் பொருள்களையறிவதில் தொழிற்படுகின்றதோ, எதனுடைய ஒவ்வொரு ஆன்மாக்கள் தோறும் இன்றியமையாதனவாயும், வேறுவேறாயும், நாதமென்னும் பெயருடையனவாயும் உள்ள தொழில் வேறுபாடுகளோடு கூடி வேறுவேறாகவே விளங்குகின்றதோ, அதுவே விந்துவெனப்படும். இவ்விடயத்தைப் போற்றத் தருந்த இராமகண்டர் நாதகாரிகையில் விரிவாய்க் கூறியுள்ளார். ஸ்ரீ காலோத்தரத்திலும் நாதமென்னும் சிறந்த காரணமானது எல்லா வுயிர்களிடத்திலும் இருக்கின்றதெனக் கூறப்பட்டிருக்கிறதென்க. (௫௩)

(அ—கை.) அவ்வாறாயின் ஒவ்வொரு ஆன்மாக்கள்தோறும் இன்றியமையாத கன்மத்தினால் போகானுபவத்தில் ஏற்றத்தாழ்வுகள் நிகழ்கின்றவாறுபோலக் கன்மத்தினாலேயே ஆன்மாக்களுடைய அறிவில் ஏற்றத்தாழ்வுகளும் நிகழ்கின்றனவெனக் கொள்வோமென்பார்க்கு அது பொருந்தாதெனக் கூறுகின்றார்.

(௫௪) யாதொரு காரணத்தால் போகத்தினுடைய ஏற்றத்தாழ்வுகளும் பிறிதொன்றின் துணையோடு கூடிய கன்மத்தினா

லேயே உண்டாகின்றனவோ, அந்தக் காரணத்தினால் அணுவான ஆன்மாவினுடைய அறிவு விஷயத்தில் ஏற்றத்தாழ்வுகளும் துணையை விரும்பாத கன்மத்தால் நிகழுமாறில்லை என்பதாம்.

(உரை.) கன்மமோவெனில், கலை முதலிய தத்துவ புவனங்களோடு கூடியே போகத்தில் ஏற்றத்தாழ்வுகளைச் செய்கின்றது. அவ்வாறு கொள்ளாவிடில் பிருதிவி முதலிய தத்துவங்கள் பயனற்றனவாகும். இவ்வாறு ஆன்மாக்களின் அறிவிலுண்டான ஏற்றத்தாழ்வுகளையும் நாதத்தைத் துணையாகக்கொண்டுதான் கன்மம் நிகழ்த்துகின்றது. தானே நிகழ்த்துகிறதில்லை என்க. (௧௪)

(அ—கை.) கன்மம் துணையைக்கொண்டு ஏற்றத்தாழ்வுகளை நிகழ்த்துமென்பதைப்பற்றியே இன்னுங் கூறுகின்றார்.

(௧௫) கன்மம் போகத்தைச் செய்கின்றது. சந்தனம் முதலியன அந்தப்போகத்தில் ஏற்றத்தாழ்வுகளைச் செய்கின்றன. கன்மமே ஏற்றத்தாழ்வுகளைச் செய்யுமாயின் சந்தனம் முதலியன பயனற்றனவாய் ஆகும் என்பதாம்.

(உரை.) கன்மமானது போக ரூபமான பயனைமாத்திரம் தருமன்றிப் போகத்திலுண்டான ஏற்றத்தாழ்வுகளைத் தருவதில்லை. ஏற்றத்தாழ்வுகள் துணைக்கருவிகளின் ஏற்றத்தாழ்வுகளினாற்றான் நிகழ்கின்றனவென்பது கருத்து. அவ்வாறாயின் ஆன்மாக்களுக்கு ஏற்றத்தாழ்வான சரீரங்கள் கன்மத்தினாலுண்டாகின்றனவென்று கூறும் சுவாயம்புவ ஆகம வாக்கியத்தால் கன்மமே ஏற்றத்தாழ்வுகளையும் செய்கின்றனவென்று கொள்ளக்கிடக்கிறதே எனில், அஃதுண்மையே. கன்மம் சாதனத்தில் ஏற்றத்தாழ்வையுண்டுபண்ணி அந்தச் சாதனத்தின் வழியாய் பயனில் ஏற்றத்தாழ்வுகளைச் செய்கின்றது. சாதனத்தையின்றித் தானே ஏற்றத்தாழ்வுகளைச் செய்வதில்லை * என்க. (௧௫)

* போகத்தின் ஏற்றத்தாழ்வுகளுக்குச் சந்தன முதலியன போலச் சாதனமாகச் சரீரம் நிற்பதன்றிச் சரீரம் போகமன்று. சரீரத்தின் தோற்றத்தில் வேற்றுமையைச் செய்து போகத்தில் வேற்றுமையைச் செய்கின்றதென்பது கருத்து.

(அ—கை.) இவ்விஷயத்தையே நிச்சயஞ்செய்கின்றார்.

(௫௫இ) எல்லாப் பிராணிகளுக்கும் விலக்குதல் கூட்டுதல் என்னுமிவை காரணமாக முயற்சி நிகழ்கின்றது என்பதாம்.

(உரை.) விரும்பத்தகுந்த பொருளிருக்குமாயின் விலக்கத் தகுந்தவற்றை விலக்குதற்கும், கூட்டத்தகுந்தவற்றைக் கூட்டுதற்கும் ஆன்மாக்களுக்கு முயற்சி நிகழ்கின்றது. விரும்பத்தகுந்த பொருளில்லையாயின் முயற்சி நிகழ்கிறதில்லை எனக (இதனால் பொருள்களே ஏற்றத் தாழ்வுகளைச் செய்கின்றனவென்பது கருத்து.) (௫௫இ)

(அ—கை.) வேறுவழியாகவும் விந்துவுண்டென்று சித்திப்பதைக் கூறுகின்றார்.

(௫௬—நி.) ஐந்து பூதங்களுள் முதன்மையாயிருக்கின்ற ஆகாயமானது சூரியன்முதலிய சோதிக்கூட்டங்களுக்கு எவ்வாறு காரணமாயிருக்கின்றதோ, அவ்வாறே நிகரற்ற ஐசுவரியத்தையடைந்த சிவத்தன்மையுடைய வித்தியேசுவரர்களின் போகாதிகாரங்களுக்குக் காரணமான இந்த விந்துவை அழிவற்ற பரமாகாசமாகக் கூறுகின்றனர் என்பதாம்.

(உரை.) எவ்வாறு ஐந்து பூதங்களுள் முதன்மையான ஆகாயமானது இடங்கொடுப்பதனாலும், தூலமான சொற்களை விளக்கஞ்செய்வதினாலும், சூரியன் முதலிய சோதிக் கூட்டங்களினுடைய போகாதிகாரங்களில் காரணமாயிருக்கின்றதோ, அவ்வாறே சுத்தாத்துவாவில் வசிக்கின்றவர்களாயும் சருவஞ்ஞத்தன்மை சருவகருத்திருத்தன்மை என்னும் சிவத்தன்மையுடையவர்களாயுமிருக்கும் வித்தியேசுவரர் முதலியோருக்கு, இடங்கொடுப்பதனாலும், சத்தத்துக்கு இடமாயிருத்தலாலும், இவர்களுடைய போகாதிகாரங்களுக்குக் காரணமாய் விந்துவென்னும் மகாமாயை உண்டென்பது சித்தித்தது. இந்தவிந்துவையே அழிவில்லாமைபற்றி மேன்மையுடைய பரமாகாசமென்று ஆகம அறிவுடையோர் கூறுகின்றனர். அபராகாசத்திற்குச் சுத்தாத்துவாவில் சம்பந்தமில்லாமையால் என்க. (௫௬—நி)

(அ—கை.) விந்துவிற்கு முன்னர்க்கூறப்பட்ட சவிகற்ப அறிவிற்கு உபயோகமாயிருக்குந் தன்மையை இப்பொழுது முடித்துக்காட்டுகின்றார்.

(௫அ) விந்துவே, சவிகற்ப அறிவுகளில் தனது தொழில் வேறுபாடுகளுடைய சேர்க்கையால் அறிவைத் தோற்றுவித்து விகற்பமென்னும் பெயரை அடைகின்றது என்பதாம்.

(உரை.) விந்துவே சத்தத்திற்கு முதற்காரணமாயிருத்தலால், சூக்குமை முதல் வைகரி ஈறான சொல்ரூபமான தனது தொழில்களின் சேர்க்கையால் இந்தக்கடம் செம்மையாயிருக்கின்றது வட்டமாயிருக்கின்றதென்னும் ஆராய்ச்சி ரூபமான விகற்பத் தோற்றத்தால் ஆன்மாவிற்கு விகற்பத்துடன் கூடிய அறிவையுண்டு பண்ணுகிறது. அவ்வாறே ஒரு பொருளைப் பார்த்தமாத்திரத்தில் நிருவிகற்ப அறிவு முதலிலுண்டாகின்றது. அந்த நிருவிகற்ப அறிவு பாலன் ஊமை முதலியோருடைய அறிவிற்குச் சமானமாய்ப் பொருள் மாத்திரத்தை விடயமாகக் கொண்டிருக்கிறது. அதன்பின்னர்ப் பொருளின் தருமங்களான சாதி உருவ முதலியவற்றுடன் கூடி அப்பொருள் புத்தியாலறியப்படுகின்றது. அதுவும் பிரத்தியக்ஷமென்றே கொள்ளப்பட்டிருக்கின்றதெனப் பெரியோர்களுங்கூறுகின்றனர் என்க. (௫அ)

(௫௯) இந்தச் சவிகற்ப அறிவானது பிரத்தியக்ஷமாயிருத்தலால் இதனைப் பாவனை என்னும் பெயர்பூண்ட சமஸ்காரமாகக் கொள்ளக்கூடாது. சமஸ்காரங்களோ வெனில் நினைவிற்கு ஏதுவாக இருக்கின்றன, நம்முடைய பிரத்தியக்ஷத்திற்கு விடயங்களல்ல என்பதாம்.

(உரை) இந்தச் சவிகற்ப அறிவானது முன்னனுபவிக்கப்பட்ட பொருளின் வாசனா ரூபமான சமஸ்காரமாகக் கொள்ளத் தகுந்ததன்று. எதனாலெனின், சமஸ்காரம் அனுமானத்திற்கு விடயமாயிருத்தலால் என்க. இதுவோ பிரத்தியக்ஷ அறிவாயிருக்கிறது. சமஸ்காரமின்றி நினைவு நிகழ்கிறதில்லை ஆதலால்

நினைவு நிகழ்தற்குச் சமஸ்காரம் உண்டென்பது கொள்ளப்படு கின்றது என்க. (௫௯)

(அ—கை.) அவ்வாறாயின் நிச்சயமானது புத்தியின் காரிய மாகையால் புத்தியின் பரிணாம பேதமே சவிகற்ப அறிவாகும் என்பார்க்குக் கூறுகின்றார்.

(௫௯இ) இந்தச் சவிகற்ப அறிவானது மாயைக்கு மேலும் உண்டாகின்றமையால் புத்தியின் பரிணாமமாவதில்லை என்பதாம்.

(உரை) புத்தியானது நிச்சய அறிவிற்கு ஏதுவாயிருந்தும் விந்துவின் காரியமான சொல்லின் துணையினாலேயே சவிகற்ப அறிவானது உண்டாகிறதென்று கூறப்பட்டுள்ளது. ஆதலால் சுத்தாத்துவாவில் புத்தியில்லாவிடினும் வாக்குச் சத்தியின் வழி யாக வித்தியேசுவரர் முதலியோருக்குச் சவிகற்ப அறிவு நிகழ் கின்றதென்க. (௫௯இ)

(௬௦—௬௧) (ஆகையால்) அவ்வாறே வித்தியேசுவரான அனந்தர் அணுவாயிருந்து கருத்தாவாயிருத்தலால், நம்போன்ற வர்களாலேவத் தருந்த சேவகர்போல் சவிகற்ப அறிவோடு கூடி னவராய் மாயையைக் கலக்கஞ் செய்து தனது சாமர்த்தியத்தால் படைத்தலைச் செய்கின்றாரென்பதாம்.

(உரை.) அனந்தர் அணுபக்கமாகையால் அதிகார மலத் தின் சேடத்தால் ஏவத்தகுந்தவரா யிருத்தலால், சவிகற்ப அறி வினுடைய சேர்க்கையினாலேயே அவருக்கு அசுத்த மாயை யைக் கலக்குந் தன்மை நிகழ்கின்றது. நிருவிகற்ப மாத்திரத் தால் சிவன் விந்துவைக் கலக்குவதுபோல் அனந்தர் கலக்கஞ் செய்கிறாரில்லை யென்பது கருத்தென்க. (௬௦—௬௧)

(அ—கை.) இவ்வாறு அனந்த தேவருக்குச் சவிகற்ப அறிவினுடைய சேர்க்கையினாலேயே கருத்திருத்தன்மை யிருத் தலால், வித்தியேசுவரர் முதலியோருக்கு விந்துவானது சொல் லின் வழியாகச் சவிகற்ப அறிவிற்குக் காரணமாயிருத்தல்பற்றி

விந்துவுண்டென்பது சித்தித்ததென்று கூறிவிட்டு, இனி இந்த விந்துவின் விஷயத்தில் பிறருடைய கொள்கையைக் கூறு கின்றார்.

(கூஉ) விருத்தி பரிணாமமென்னு மிவற்றின் வேறுபாட்டால் வாதஞ் செய்கின்ற வேறு சில ஆசிரியர்களும் மேலே கூறப்பட்ட விசேடணங்களையுடைய இந்த விஷயத்தை வேறுவிதமாகக் கூறுகின்றனர் என்பதாம்.

(உரை) மேலே கூறப்பட்டவாறு சவிகற்ப அறிவின் சேர்க்கையால் அனந்தருக்குக் கருத்திருத்தன்மை உண்டென்பதைப் பற்றிச் சிலர் வேறுவிதமாகச் சாதிக்கின்றனரென்க. (கூஉ)

(கூஉஇ) யாதொரு காரணத்தால் இந்த அனந்தர் பரிணாமத்திற்குக் கருத்தாவாயிருக்கின்றாரோ, விருத்திக்குக் கருத்தாவாயில்லையோ, அந்தக் காரணத்தால் அவ்வித சவிகற்ப அறிவோடு கூடினவராவர் என்பதாம். (கூஉஇ)

(அ—கை.) இதனையே சாதிக்கின்றார்.

(கூஙஇ) இந்தப் பொருள் இவ்வாறு நம்மால் கலக்கஞ் செய்யப்பட்டு நம்முடைய விருப்பத்தை நிச்சயமாய் நிறைவேற்றுமென எவனறிகின்றானோ, அந்தச் சத்திவாய்ந்த புருடனே பரிணாமமடைதற்குரிய பொருள்களுக்குக் கருத்தாவாயிருக்கின்றா னென்பதாம். (கூஙஇ)

(அ—கை.) விருத்தி கருத்தாவுக்கு இவ்வாறு சவிகற்ப அறிவின் சேர்க்கை கிடையாதெனக் கூறுகின்றார்.

(கூச) பரிணாமமுடைய பொருள்களினுடைய இந்தத் தருமமானது, விருத்தியுடன் கூடிய பொருள்களில் வேறுவிதமாக நிகழ்கின்றது என்பதாம். (கூச)

(அ—கை.) இவ்விஷயத்தை விரிவாய்க்கூறத் தொடங்கிச் சவிகற்ப அறிவிற்குமுன் நிருவிகற்ப அறிவு இன்றியமையாது உண்டாகவேண்டுமெனக் கூறுகின்றார்.

(௬௫) அவ்வாறே அனைவரும் நிருவிகற்பத்தை யுடையதா யிருக்கும் வண்ணம் ஒரு பொருளை அறிந்து சவிகற்பமாயறிகின் றனர். இவ்வாறு கூறவில்லையாயின் வரம்பின்றி யோடுதலென் னும் குற்ற நிகழுமென்பதாம்.

(உரை.) நிருவிகற்ப அறிவின் நிகழ்ச்சிக்குப் பின் சவிகற்ப அறிவு நிகழ்கின்றதெனை முன்னரே கூறப்பட்டுள்ளது. இவ்வாறு சவிகற்ப ஞானத்திற்கு முன் நிருவிகற்ப ஞானத்தைக் கொள்ள வில்லையாயின், ஞானத்திற்கு வரம்பின்றி யோடுதலென்னும் குற் றம் நிகழ்கின்றது. எவ்வாறெனில், நிருவிகற்ப அறிவானது பொருளை மாத்திரம் அறிகின்றமையாலும், இத்தன்மையுடைய பொருளென்று விசேடத்தை அறியாமையாலும், அத்தகைய அறிவு எல்லாப் பொருள்களிடத்தும் சமமாக நிகழுமாகையால், ஒரு பொருளினிடத்து நிலைபெறுமைபற்றி ஞானத்திற்கு வரம் பின்றி யோடுதலென்னும் குற்றம் நிகழுமாறு காண்க. ஆகவே கட அறிவு பட அறிவென்னும் முறைமை பொருத்தமற்றதாகும் என்க. (௬௫)

(௬௬—௬௭) சவிகற்ப அறிவானது அறிகிறேனென்னும் அறிவு ரூபமா யிருத்தலால், அனந்தராலும் சொல்லால் வியா பிக்கப்பட்ட அறிவான சவிகற்ப அறிவால் எல்லாப் பொருள் களும் அறியப்பட்டு இச்சிக்கப்படுகிறது. செய்யவும்படுகிறது என்பதாம்.

(உரை.) யாதொரு காரணத்தால் சவிகற்ப அறிவானது அறிகிறேனென்னும் அறிவுரூபமாயிருத்தலால் ஆராய்ச்சி ரூப மாயும் உள்ளே சொல் ரூபமாயும் உள்ள சொல்லால் வியாபிக்கப் பட்டுத் தோன்றுகின்றதோ, அந்தக் காரணத்தால் சொல்லால் வியாபிக்கப்பட்ட சவிகற்ப அறிவு உண்டானபின்னரே, அனந் தர் அசுத்த மாயையை அறிந்து கலக்கஞ் செய்கின்றூர். அறி யாததொன்றைச் செய்யமுடியாதாகையா லென்க.

(௬௬—௬௭)

(அ—கை.) விருத்தி கருத்தாவான பரமசிவனுக்கு விந்துவைக் கலக்கஞ் செய்யும் விஷயத்தில் சவிகற்ப அறிவின் துணை கிடையாதெனக் கூறுகின்றார்.

(௬எ—௬எஇ) விந்துவிற்கு ஆடை குடிலாய் விருத்தியடைவதுபோல் விருத்தியே கொள்ளப்பட்டிருக்கின்றது. ஆகையால், சிவபெருமான் நிருவிகற்ப அறிவோடு விந்துவை அதிட்டிக்கின்றான் என்பதாம். (௬எ—௬எஇ)

(அ—கை.) பரிணாமத்தைச் செய்யும் அனந்தருக்குச் சவிகற்ப அறிவின் துணை உண்டென முடித்துக் காட்டுகின்றார்.

(௬அ) யாதொரு காரணத்தால் மாயை பரிணாமமுடையதாயிருக்கிறதோ, அந்தக் காரணத்தால் அனந்தர் மாயையைச் சவிகற்ப அறிவோடு கூடாமல் கலக்கஞ் செய்கின்றாரில்லை என்பதாம். (௬அ)

(அ—கை.) இவ்வாறு புறமதத்தைக் கூறி, இனி அதற்குக் குற்றங் கூறுகின்றார்.

(௬௯) யாதொரு காரணத்தால் குடிலைச் செய்பவனுடைய அறிவும் சவிகற்பமாகக் காணப்படுகின்றதோ, அந்தக் காரணத்தால் விருத்தி பரிணாமங்களால் கருத்திருத்தன்மையில் வேறுபாடு நிச்சயிக்கப்படவில்லை யென்பதாம்.

(உரை.) இவ்வாறான குற்றமானது புறமதத்தை ஒத்துக் கொண்டு கூறப்பட்டது. சித்தாந்தமாகக் கூறப்படவில்லை. எதனாலெனின், விந்துவிற்கும் தத்துவம் புவனம் முதலிய ரூபமாய்ப் பரிணாம முண்டென்பது நூல்களிற் கேட்கப்படுதலானும், விருத்திபரிணாமமென்னு மிவற்றிற்கு மிகுதியான வேறுபாடு இல்லாமையானுமென்க. (௬௯)

(அ—கை.) இனி விந்துவின் பரியாயப் பெயர்களைக் கூறுகின்றார்

(எ௦—எ௦இ) சத்த தத்துவம், அகோஷை, வாக்கு, பிரமம், குண்டலினி, துருவை, வித்தை, சத்தி, பரை, நாதம், மகாமாயை, ஆகாயம், அநாகதமென்று இவ்வாறாக வித்துவான்களால் விந்துவானது கூறப்படுகின்றது என்பதாம். (எ௦—எ௦இ)

(அ—கை.) இனி விந்துவினுடைய சூக்குமை முதலிய சத்த விருத்திகளை ஒடுக்க முறையாகக் கூறுகின்றார்.

(எக) யாதொரு விந்துவினுடைய தொழில்களால் வியாபிக்கப்பட்டு அணுக்கள் மூன்று வகையினராயிருக்கின்றனரோ, அவ்விதமான தொழில்கள் விந்துவிற்கு நான்கு உள்ளன என்பதாம்.

(உரை.) இவ்விதமான நால்வகைத் தொழில்களின் சேர்க்கையால் ஆன்மாக்கள் உத்தம அறிவு மத்திம அறிவு அதம அறிவு என்னும் இவற்றுடன் கூடினவர்களாக ஆகின்றனரென்க. (எக)

(அ—கை.) அத் தொழில்கள் இவையெனக் கூறுகின்றார்.

(எகஇ) வைகரி, மத்திமை, பைசந்தி, சூக்குமை எனத் தொழில்கள் நான்காகின்றன என்பதாம்.

(உரை.) ஆகையால் இந்த நான்கு வாக்குக்களுக்கு முதற் காரணமாக விந்து வுண்டென்று சித்தித்ததென்பது கருத்தென்க. (எகஇ)

(அ—கை.) வைகரியின் சொரூபத்தைக் கூறுகின்றார்.

(எ௨—எ௩) அந்த நால்வகை வாக்கினுள், எந்த வாக்குச் சுரோத்திர இந்திரியத்தால் அறியத் தகுந்ததாயும் அந்தந்தத் தானங்களில் வாயுவை அடக்குமிடத்துச் செய்யப்பட்ட எழுத்தின் தோற்றமுடையதாயும் இருக்கின்றதோ அதுவே வைகரியாம். இந்த வைகரியானது உபயோகிப்பவர்களுடைய பிராண வாயுவின் றொழிலே மிகுதியும் காரணமாகவுடையது என்பதாம்.

(உரை.) இவ்வாறே ஆகாயம் காற்று என்னுமிவற்றாற் றோன்றிச் சரீரத்திலிருந்து வெளியே வரும் நாதமானது முகத்தை யடைகின்றது. அது ஒவ்வொரு தானங்களிலும் பிரிக்கப்பட்டதாய் அக்கரமாயிருக்குந் தன்மையை யடைகின்றது. அதுவே சொல்லெனப்படுமென்று பெரியோருங் கூறியிருக்கின்றன ரென்க. (எ௨—எ௩)

(அ—கை.) மத்திமையின் சொரூபத்தைக் கூறுகின்றார்.

(எ௪—எ௪இ) புத்தியைப்பற்றினதாயும், புத்தியிலிருக்கும் எழுத்துக்களின் முறையை அனுசரித்ததாயும், உள்ளே சொல் ரூபமாயும் இருக்கும் வாக்கானது மத்திமையெனப் பெயர்பெறும். இந்த மத்திமை வாக்கானது செவிக்குப் புலப்படுவதில்லை. பிராணவாயுவின்றொழிலைக் கடந்திருக்கின்றது என்பதாம்.

(உரை) ஆராய்ச்சி அறிவுரூபமான இந்த மத்திமையானது தூலமாகிய வைகரிக்குக் காரணமென்று கூறப்பட்டிருக்கிற தென்க. (எ௪-எ௪இ)

(அ—கை) பைசந்தியின் சொரூபத்தைக் கூறுகின்றார்.

(எ௫—எ௫இ) எழுத்துக்களின் பிரிவின்றி அடக்கப்பட்ட முறையை யுடையதாயும், * மயில் முட்டையினுள்ளிருக்கும் கருப் போன்றதாயும், o சுயம்பிரகாசமாயுமுள்ள வாக்கு பைசந்தி எனப் படும் என்பதாம்.

---

* மயில் முட்டையினுள்ளிருக்குங் கருவானது வேறு வேறு பிரிக்கப்படாத கருப்பு, பச்சை, செம்மை, மஞ்சள் முதலிய நிற முடையதாயிருக்கின்றது போலப் புத்தியைப் பற்றுதற்குமுன் வெளிப்படையாகப் பிரிக்கப்படாத ககார முதலிய எழுத்துக்களின் கூட்ட விசேடத்தையுடையதாய் இருக்கின்றதென்பது கருத்து.

o. சுயம்பிரகாசம்—பொருளை விளக்காது சூக்குமமாய் நிற்பது.

(உரை) இந்தப் பைசந்தியே அக்கரவிந்துவென முன்னர்க் கூறப்பட்டது எனக. (எ௫-எ௫இ)

(அ—கை) இனி, பொருள்களின் அறிவிற்குக் காரணமாக முன்னர்க் கூறப்பட்டதாயும் நாதமென்னும் மறுபெயர் கொண்டதாயும் உள்ள சூக்குமவாக்கின் நிலையைக் கூறுகின்றார்.

(எசு) பொருள்களினுடைய சாமானிய சொரூபத்தை விளக்கஞ்செய்வதாயும், பைசந்தி முதலிய வாக்குக்களைப்போல் நாசம் இல்லாததாயும், புத்தியிலிருப்பதாயுமுள்ள வாக்கு சூக்குமையெனப்படுமென்பதாம்.

(உரை) சுழுத்தி அவத்தையிலும் இந்தச் சூக்குமவாக்கு விளங்குவதுபற்றி இது நாசமற்றது எனக் கூறப்பட்டதன்றி, நித்தியமாயிருப்பதுபற்றிக் கூறப்படவில்லை. எதனாலெனின், ஒவ்வொரு புருடர்களிடத்தும் வேறுவேறாயிருத்தலின் அநேகமாயிருப்பதாலும் அசேதனமாயிருப்பதாலும் அது காரியப்பொருளாதலினென்க. காரியமாயிருப்பதுபற்றித்தான் பாவிந்து இதற்குக் காரணமெனக் கூறப்பட்டதென்க. (எசு)

(அ—கை) அந்தச் சூக்குமவாக்கையே விசேடித்துக் கூறுகின்றார்.

(எசுஇ) இந்தச் சூக்குமவாக்கின் சொரூபங் காணப்பட்டால் அதிகாரம் ஒழிவையடைகின்றது என்பதாம்.

(உரை) யாதொரு சூக்கும வாக்கின் சொரூபத்தை ஆன்ம சொரூபத்தின் வேறாகப் பிரித்து அறிந்த பின்னர்தான் புருடனுக்குப் போகாதிகாரம் நீங்குகின்றது. அவ்வாறாயின் சூக்கும வாக்கு ஆன்மா என்னுமிவற்றின் சொரூபத்தினுடைய பகுத்தறிவினாலேயே முத்தி நிகழுமாயின் தீக்கை பயனற்றதாகுமெனில், ஆகாது. மலமானது திரவியமாகையால், திரவியமான கண்ணின் படலம் கண் வயித்தியனுடைய தொழிலால் நீங்குமாறுபோல, தீக்கையென்னும் பரமசிவனுடைய தொழிலினாலேயே மலம் நீங்குமென்க. (எசுஇ)

(அ—கை) சத்தத்தையே பிரமமெனக் கூறுகின்றவர் சூக்குமவாக்கின் பகுத்தறிவின்மையால் இந்தச் சூக்குமவாக்கை ஆன்மாவிடத்துச் சமவாய சம்பந்தத்தில் இருப்பதாக எண்ணுகின்றனரெனக் கூறுகின்றார்.

(எஎ) பதினாறு கலையினையுடைய புருடனிடத்தில் இந்தச் சூக்குமவாக்கை அமிருதையெனப் பெயர்கொண்டிருக்கிறதாகக் கூறுகின்றனர் என்பதாம். (எஎ)

(அ—கை) இந்த சத்தப் பிரமவாதிகளுக்கு உள்ள மயக்கமிவ்வாறெனக் கூறுகின்றார்.

(எஅ—எகூ) யாதொன்றைப் பகுத்தறி வென்னுங் கத்தியால் பிளந்து ஆன்மாக்கள் சந்தேகம் நீங்கினவர்களாய் வெளிக்கிளம்புகின்றனரோ, அவ்விதமான சத்தப் பிரமமென்னுஞ் சூரியன், கேவலனும், பரமானந்த ரூபனும், தீரனும், எப்பொழுதும் விளங்கித் தோன்றுபவனும், நாசமற்றவனும், உற்பத்தியற்றவனும், சிரமமற்றவனும், விகாரமற்றவனும், எல்லா வுயிர்களினகத்தும் சஞ்சரிக்கின்றவனும் விளங்குகின்றானென்பதாம்.

(உரை) யாதொரு சூரியனை உண்மை அறிவென்றுங் கத்தியால் பிளந்து (அதாவது ஆராய்ந்து உண்மையாய் அறிந்து) சம்சாரத்திலிருந்து ஆன்மாக்கள் வெளிக்கிளம்புகின்றனரோ, அவ்விதமான சத்தப் பிரமமென்னுஞ் சூரியன் கண்ணுக்குப் புலப்படும் சூரியனைவிட வேறுபுள்ளவனென்பது அவர்களுடைய மயக்கமென்க. (எஅ-எகூ)

(அ—கை) இவ்விஷயத்தில் சித்தாந்தங் கூறுகின்றார்.

(அ0) ஆன்ம சொரூபத்தை அறிந்த புருடர்கள் அந்தச் சத்தத்தைச் சூக்குமையென்னும் பெயரினையுடைய வாக்குவிருத்தியே யென்று கூறுகின்றனரென்பதாம்.

(உரை) வடமொழிமூலத்தில் அதனையே என்றவிடத்துள்ள ஏகாரத்தைப் பிரித்து வாக்குவிருத்தி என்றதனோடு கூட்டி உரை கொள்ளப்பட்டிருக்கின்றது.

ஆன்மசொரூபத்தையறிந்த சைவர்களோவெனில், சூக்குமையென்னும் பெயர்கொண்ட அந்தவாக்கை விந்துவின் காரியமான சத்தவிருத்தியென்றே யெண்ணுகின்றனர். ஆன்மாவினிடம் சமவாய சம்பந்தத்திலிருப்பதாக எண்ணுகின்றனரில்லை. எதனாலெனின், அது விகாரமுடைய பொருளாகையாலும் சடப்பொருளாதலாலும் அதனுடைய சமவாய சம்பந்தத்தை ஆன்மாவிற்குக்கொண்டால் ஆன்மாவிற்கும் விகாரமுடையதாந் தன்மை சடத்தன்மை முதலிய குற்றங்கள் நிகழுமாதலாலென்க. (௪௯இ)

(அ—கை.) இவ்வாறு விந்துவின் காரியரூபங்களான சத்தவிருத்திகளைக் கூறிவிட்டு இவ்விஷயத்தைக்கூட்டி முடிக்கின்றார்.

(௫௦) இந்தச் சத்தவிருத்திகளான வாக்குக்கள் பந்தஞ்செய்வனவாய் ஒவ்வொரு ஆன்மாக்கள்தோறும் இன்றியமையாதிருக்கின்றன என்பதாம்.

[உரை.] இந்த வாக்குக்களுக்குக் காரியத்தன்மையும் சடத்தன்மையுமிருத்தலால் சித்துப்பொருளுடன் சமவாயம் பொருத்தமாகாது. ஆன்மாவைக் கட்டுப்படுத்துந் தன்மைதான் இவ்வாக்குக்களுக்குப் பொருத்தமாகும் என்க. [௫௦]

[௫௦இ.] (அவ்வாறாயினும்) இந்த வாக்கு விருத்திகளினின்றும் ஆன்ம சொரூபத்தை வேறாகப் புத்கலர்கள் அறிகின்றனரில்லை என்பதாம்.

(உரை.) புத்கலர்கள் என்பது மலமுடைய ஆன்மாக்களைக் குறித்தது. ஆன்மாக்கள் மலத்தால் மறைக்கப்பட்டிருத்தலால் இவ்வாக்கு விருத்திகளைவிட ஆன்மசொரூபத்தை வேறாகப் பிரித்தறியாது இவ்வாக்குக்களையே ஆன்மாவென மயங்குகின்றனரென்பது கருத்தென்க. (௫௦இ)

(அ—கை.) அவர்களுக்கு இவ்வாறு மயக்கம் நிகழ்ந்தமைக்குக் காரணம் இதுவெனக் கூறுகின்றார்.

(௮௧) பரமான்மாவென்பது வாக்கு ரூபமே. எதனாலெனின், வாக்கே ஆன்மாவெனச் சுருதி கூறுகின்றமையாலென்பதாம்.

[உரை.] ஆன்மாவிற்கு வாக்குச்சத்தி முதலியவற்றுடன் உள்ள சேர்க்கை விஷயத்தில் அர்த்தவாத வாக்கியங்களாயுள்ள இந்தச் சுருதியின் பொருளையறியாமலிவ்வாறு மலமுடைய ஆன்மாக்கள் கருதுகின்றனரென்பது கருத்தென்க. (௮௧)

(௮௨) வைகரி என்னும் வாக்கானது செவி இந்திரியத்தால் நிகழும் அறிவில் அறியப்படுகின்றது. மத்திமை வாக்கானது சவிகற்ப அறிவிலறியப்படுகின்றது. பைசந்தி வாக்கானது மத்திமை வாக்கைத் தோற்றுவிப்பதிலும் அதனுடைய உத்தியோகத்திலும் காரணமாயிருப்பதுபற்றி அறியப்படுகின்றது என்பதாம்.

(உரை.) வைகரியானது செவியாலறியத் தகுந்தது. மத்திமையானது ஆராய்ச்சி ரூபமாகையால் சவிகற்ப அறிவில் காணப்படுகின்றது. இந்த மத்திமையைத் தோற்றுவிப்பதிலும் அந்த மத்திமைக்கு உத்தியோகஞ் செய்விப்பதிலும் பைசந்தி காரணமாயிருக்கின்றது என்க. (௮௨)

(அ—கை.) அந்த மூன்று வாக்குக்களினின்றும் வேறான சூக்கும வாக்கைப்பற்றிக் கூறுகின்றார்.

(௮௩) எப்பொழுது சித்தத்தைச் சார்ந்திருக்கின்ற எல்லா விருத்திகளும் ஒடுக்கத்தை யடைந்திருக்கின்றனவோ, அப்பொழுது சூக்குமையானது சுத்தமுடையதாய் ஆன்மாவைவிட வேறாகப் பிரித்தறியவாராது சித்துப்போல் விளங்குகின்றது என்பதாம்.

(உரை.) சூக்குமையோவெனில், பொருள்களையறியும் அறிவிற்குக்காரணமாய் எல்லா வுயிர்களிடமுமிருந்து பைசந்தி என்னும் வாக்கு விருத்திக்குங்காரணமாய் ஆன்மாவோடு மிகநெருங்கியிருப்பதுபற்றி ஆன்மாவைப்போல் விளங்குகின்றது என்க. (௮௩)

(அச) இதுகாறுங் கூறியவாற்றால் சொற்களின் சம்பந்த மில்லாமல் ஆன்மாவிற்கு அறிவு நிகழ்கிறதில்லை. எல்லாச் சவி கற்ப அறிவுகளும் சொல்லினாலேயே உண்டாகின்றனவென்ப தாம். (அச)

(அரு) (அன்றியும்) அவ்விதமான இந்த நான்கு வாக்குக் களும் நிவிருத்தி முதலிய ஐந்து கலைகளைப்பற்றியிருத்தலால், மீண்டும் ஐந்து விதமாகப் பிரிக்கப்படுகின்றன. அந்தக் கலைகள் விந்துவின் விருத்திகளாயிருக்கின்றன என்பதாம்.

(உரை) சொல் ரூபங்களான அந்த நான்கு வாக்குக்களென் னும் விந்துவின் விருத்திகளும் நிவிருத்தி முதலிய கலைகளைச் சார்ந் திருக்கும் ஆன்மாக்களுடைய வேறுபாட்டிற்குத் தக்கவாறு ஐந்துவிதமாக அறிவை விளக்குகின்றன. கலைகள் விந்துவின் விருத்திகள் என்பதனால் நிவிருத்தி முதலிய கலைகள் எதிலிருந்து தோன்றினவென்பார்க்கு விடைகூறுகின்றார். விந்துவின் அவத் தைகளே கலை முதலிய விருத்திகளாகும். ஆகையால் நிவிருத்தி முதலிய கலைகளுக்கு முதற்காரணமாகவும் விந்து சித்தித்த தென்க. (அரு)

(அ—கை) அந்தக் கலைகளின் பெயர்களைக் கூறுகின்றார்.

(அசு) எந்தக்கலைகளால் ஐந்துவிதமான அத்துவாக்களும் வியாபிக்கப் பட்டிருக்கின்றனவோ, அந்தக் கலைகள் நிவிருத்தி யென்றும் பிரதிட்டை யென்றும் வித்தை யென்றும் சாந்தி யென்றும் சாந்தியதீதை யென்றும் பெயரினையுடையதாயிருக் கின்றன வென்பதாம்.

(உரை) இவ்விதமான கலைகள் சதாசிவ புவனத்திற்குமேல் புவனரூபங்களாயிருக்கின்றனவாயினும், சத்தி ரூபமாய் நின்று எல்லா அத்துவாக்களையும் வியாபித்திருக்கின்றனவென்று" எந்தக் கலைகளால் ஐந்துவிதமான அத்துவாக்களும் வியாபிக்கப்பட்டிருக் கின்றனவோ, என்பதனால் கூறுகின்றாரென்க. (அசு)

(அ—கை) அத்துவாக்களைப்பற்றிக் கூறுகின்றார்.

(அஎ) தத்துவாத்துவா, புவனாத்துவா, வர்ணாத்துவா, பதாத்துவா, மந்திராத்துவா என்னும் ஐந்துவிதமான அத்துவாக்களுக்கும் வியாபகமான கலாத்துவாவானது விந்துவாலதிட்டிக்கப்பட்டிருக்கிறது என்பதாம்.

(உரை) தத்துவாத்துவா புவனாத்துவா முதலிய ஐந்துவித மான அத்துவாக்களுக்கும் வியாபகமாயுள்ள மேலே கூறப்பட்ட கலாத்துவாவானது, விந்துவை முதற்காரணமாகவுடையதாய் அவ் விந்துவால் அதிட்டிக்கப் பட்டிருக்கிறதென்பது கருத்து. அவ் வைந்து அத்துவாக்களுக்குள் தத்துவாத்துவா வென்பது சிவம் முதல் பூமி ஈறான சுத்தாசுத்த தத்துவ வடிவமாயுள்ளது. புவனாத்துவா வென்பது அனாசிருத புவனமுதல் காலமீறான புவன வடிவமாயுள்ளது. வர்ணாத்துவா வென்பது அகாரம் முதல் க்ஷகாரமீறான முதலெழுத்துக்களாகும், பதாத்துவா வென்பது வியோம வியாபினி முதலிய பதங்களாகும். மந்திராத்துவா வென்பது சம்ஹிதா மந்திரங்களாகு மென்க. (அஎ)

(அ—கை) இவற்றிற்கு அத்துவாக்களெனப் பெயர் வருவதற்குக் காரணங் கூறுகின்றார்.

(அஅ) யாதொரு காரணத்தால் ஆன்மாககளால், கலைமுதலியவற்றுள் ஒன்றைவிட்டு மற்றொன்றை யடைந்து, அவ்வாறு எல்லாம் நீங்கியபின்னர், பிறப்பு இறப்பு இல்லாததானமானது அடையப்படுகின்றதோ, அந்தக் காரணத்தால் கலைமுதலியன அத்துவாக்களென (வழிகளென) க்கூறப்படுகின்றனவென்பதாம்.

(உரை) எவ்வாறு உலகிலுள்ள வழிகளுள் முறையே மனிதனானவன் ஒரு காலடியால் வரையப்பட்ட இடத்தை விட்டு மறுகாலடியால் வரையப்பட்ட இடத்தை யடைந்து இவ்வாறே மேலுஞ்சென்று கிராமத்தை யடைகின்றானோ, அவ்வாறே அசுத்த விடயங்களான கலை, தத்துவம், புவனம், வர்ணம், பதம், மந்திரமென்னுமிவற்றில் கன்மத்தின் பயனை அனுபவித்தற்காக-

வும், சுத்த விடயங்களான கலைமுதலிய வற்றில் சருவக்ஞத் தன்மை முதலியவற்றை யடைதற்காகவும், தீக்கையில் இவற் றிற்கு விசேடமான சேர்க்கை செய்யப்படுகின்றது. ஆகையால், கலைமுதலிய பொருள்கள், கன்மபோகம் சருவஞ்ஞத்தன்மை என்னுமிவற்றை யடைதற்கு வழிகளாயிருத்தலின் வழியெனப் பொருள்படும் அத்துவாவென்னுஞ் சொல்லால் கூறப்படு கின்றன. என்க. (அஅ)

(அகூ—அகூஇ) (அந்த அத்துவாக்களுக்குள்) கலாத்துவா வானது நிவிருத்திமுதலிய வேறுபாட்டால் முன்னர்ப் பிரிக்கப் பட்டது. இனி ஆதாரம் அடையாளம் அதிதேவதை என்னு மிவற்றுடன் கூடினதாயும், வடிவம் காரணம் முதலியவற்றுடன் கூடினதாயும், ஆன்மா விந்து சத்திசிவன் என்னும் பொருள் களைப்பற்றி யிருப்பதாயும் உள்ள அந்தக் கலாத்துவாவின் வியா பித்தலைக் கூறுகின்றேனென்பதாம்.

(உரை) ஆதாரங்கள் இருதயம் முதலியன. அடையாளங் கள் வச்சிரமுதலியன. அதிட்டான தேவதைகள் சத்தியோ சாதர் முதலியோர். வடிவங்கள் நாற்கோணமுதலியன. கார ணங்கள் அதாவது அதிபதிகள் பிரமன் முதலியோர். ஆன்மா விந்து சத்தி சிவன் என்னும் பொருள்களைப்பற்றியிருப்பதாவது, போகத்திற்கு இடமாயிருத்தலால் ஆன்மாக்களைப்பற்றி யிருக்கின் றது. முதற்காரணமாயிருத்தலால் விந்துவைப்பற்றியிருக்கின் றது. தோன்றுதற்குச் சாதனமாயும் ஆதாரமாயுமிருத்தலால் சத்தியைப்பற்றியிருக்கின்றது. தோற்றுவிக்குங் கருத்தாவா யிருத்தலால் சிவனைப்பற்றி யிருக்கின்றது என்க. (அகூ-அகூஇ)

(அ—கை.) அவற்றுள் நிவிருத்தி கலையினுடைய வியா பித்தலை ஒடுக்க முறைபற்றிக் கூறுகின்றார்.

(கூ०—கூக—கூஉ) நிவிருத்தி கலையில் பிருதிவி தத்துவம் ஒன்று. புவனங்கள் நூற்றெட்டு. அவற்றுள், காலாக்கினி முதலிய ஆறு புவனங்கள் பிரமாண்டத்திற்குள்ளிருக்கின்றன. கிழக்கு முதலிய பத்துத் திக்குக்களிலும் ஒவ்வொரு திக்கிலும்

பத்துப் புவனங்களாக நூறு புவனங்களிருக்கின்றன. அந்த நூறு புவனங்களும் நூறு உருத்திரர்களைச் சார்ந்திருக்கின்றன. அதற்குமேல் வீரபத்திரற்கும் பத்திரகாளிக்கும் அப்பெயர் கொண்ட இரண்டு புவனங்களிருக்கின்றன. வர்ணங்களுள் இந்தக் கலையில் க்ஷகாரமொன்று என்பதாம்.

(உரை.) உருத்திரர்களின் பெயரே புவனங்களுக்கும் பெயராகும். புவனம் முதலியவை நம்மால் 'பத்ததியில்' விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. நூல் விரியுமென்னு மச்சத்தாலும் பத்ததிகளில் விளக்கமாயிருத்தலாலும் இவ்விடத்தில் அவை விரிவாய்க் கூறப்படவில்லை. இந்தக் கலையிலுள்ள எழுத்து க்ஷ என்பது என்க.

* குறிப்பு. பிரமாண்டத்திற்குள்ளிருக்கும் ஆறு புவனங்களாவன:—காலாக்கினி, கூச்மாண்டம், ஹாடகம், பிராமம், வைஷ்ணவம், ரௌத்திரம் என்பன.

கிழக்குத் திக்கிலிருக்கும் பத்துப் புவனங்களாவன:—கபாலீசன், அஜம், புத்தினம், வச்சிர தேகம், பிரமர்த்தனம், விபூதி, அவ்வியயம், சாஸ்தா, பினாகி, திரிதசாதிபம் என்பன.

அக்கினி திக்கிலிருக்கும் பத்துப் புவனங்களாவன:—அக்கினி ருத்திரம், உதாசம், பிங்களம், காதகம், ஹரம், சுவலனம், தகனம், பப்புரு, பஸ்மாந்தகம், சயாந்தகம் என்பன.

தெற்குத் திக்கிலிருக்கும் பத்துப் புவனங்களாவன:—யாமியம், மிருத்தியு, ஹரம், தாதா, விதாதா, கருத்திரு, சம்யோக்தா, வியோக்தா, தருமம், தருமபதி என்பன.

நிருதி திக்கிலிருக்கும் பத்துப் புவனங்களாவன:—நிருருதி, மாரணம், அந்தா, குரூர திருட்டி, பயானகம், ஊர்த்துவகேசம், விருபாக்ஷம், தூமிரம், லோகிதம், தம்ஷ்டிரீ என்பன.

* குறிப்பு என்று வருவன வினைத்தும் மொழிபெயர்ப்பில் சேர்க்கப்பட்டவை.

மேற்குத் திக்கிலிருக்கும் பத்துப் புவனங்களாவன:—பலம், அதிபலம், பாசஹஸ்தம், மஹாபலம், சுவேதம், சயபத்திரம், தீர்ககபாகு, சலாந்தகம், மேகநாதம், சுஞ்தம் என்பன.

வாயு திக்கிலிருக்கும் பத்துப் புவனங்களாவன:—சீக்கிரம், லகு, வாயுவேகம், சூக்குமம், தீக்ஷணம், க்ஷயாந்தகம், பஞ்சாந்தகம், பஞ்சசிகம், கபர்த்தி, மேகவாகனம் என்பன.

வடக்குத் திக்கிலிருக்கும் பத்துப் புவனங்களாவன:—நிதீசம், ரூபவது, தன்னியம், சௌமிய தேகம், சடாதரம், லக்குமி திருக்கு, ரத்தினதிருக்கு, ஸ்ரீதிருக்கு, பிரசாதம், பிரஹாமதம் என்பன.

ஈசானிய திக்கிலிருக்கும் பத்துப் புவனங்களாவன:—நித்தியாதிபம், ஈசம், சர்வக்ஞம், ஞானபுக்கு, வேதபாரகம், சுரேசம், சர்வம், சேஷ்டம், பூதபாலம், பலிப்பிரியம் என்பன.

பாதாளத்திலிருக்கும் பத்துப் புவனங்களாவன:—விருஷம், விருஷதரம், அனந்தம், குரோதனம், மாருதாசனம், கிரசனம், உதும்பரீசம், பணீந்திரம், வச்சிரம், தம்ஷ்டரீ என்பன.

ஆகாயத்திலிருக்கும் பத்துப் புவனங்களாவன:—சம்பு, விபு, குணத்தியக்ஷம், திரியக்ஷம், திரிதசேசுவரம், சம்வாஹம், விவாஹம், நபம், லிப்சு, திரிலோசனம் என்பன.

வீரபத்திரம், பத்திரகாளி என்னுமிந்த இரண்டும் எல்லாப் புவனங்களுக்கும் மேலே யிருக்கின்றன. (கூ0—கூ உ)

(கூ௩) தேவியான வியோமவியாபி சக்தியானது ஒடுக்க முறையில் எண்பத்தொரு பதங்களையுடையதாயிருக்கிறது. இந்த நிவிருத்தி கலையில் இருபத்தெட்டுப் பதங்களால் அந்த வியோம வியாபி சத்தி பிரதிட்டை செய்யப்பட்டிருக்கிறது என்பதாம்.

(உரை.) வியோம வியாபி ரூபமான சத்தியானது எண்பத்தொரு பதங்களையுடையதாயிருக்கிறது. அந்தச் சத்தி ஒடுக்க

முறையில் பிரணவ முதல் இருபத்தெட்டுப் பதங்களால் இந்த நிவிருத்தி கலையில் நிச்சயிக்கப்பட்டிருக்கிற தென்க.

குறிப்பு. இருபத்தெட்டுப் பதங்களாவன:—ஓம் நம:, ஓம் சிவாய நம:, ஓம் நமோ நம:, சிவ சர்வதாய, சூக்கும சூக்குமாய, சப்த சப்தாய, ஞான ஞானய, பிங்க பிங்காய, பதங்க பதங்காய, துருதாவே, சாக்ஷி சாக்ஷிணே, பூர்வஸ்த்தித பூர்வஸ்த்திதாய, அஸ்துதாஸ்துதாய, அனர்ச்சிதார்ச்சிதாய, ருத்திராய, விஷ்ணவே, பிரம்மணே, சர்வசாநித்திய காராய, சர்வபூத சுகப்பிரதாய, பவோத்பவாய, பவபவாய, சர்வசர்வாய, பிரதமப் பிரதமாய, முஞ்சமுஞ்சாய, யோகாதிபதயே, மஹா தேஜசே, சத்பாவேசுவராய, மஹா தேவாய என்பன. (௩௩)

(௩௪) (அன்றியும்) அந்த நிவிருத்தி கலையில் சத்தியோசாதம் இருதயமென்னு மிரண்டு மந்திரங்களிருக்கின்றன. அந்தச் சிறந்த நிவிருத்தி கலையானது புவன முதலிய ஐந்து அத்துவாக்களையும் வியாபித்து அவற்றிலேயிருக்கின்றது என்பதாம்.

(உரை) நிவிருத்தி கலையானது ஐந்து அத்துவாக்களை வியாபித்து அவற்றிலேயிருக்கின்றதென்பது கருத்து என்க. (௩௪)

(அ—கை) இவ்வாறு நிவிருத்தி கலையினுடைய வியாபித்தலைக் கூறிவிட்டு இதனுடைய வடிவம் முதலியவற்றைக் கூறுகின்றார்.

(௩௫) மஞ்சள் நிறமாகவும், நாற்கோணமாகவும், கடினமாகவும், வச்சிரத்தையடையாளமாக வுடையதாகவும், தோன்றிய அநேகம் காந்திகளால் நிறைந்ததாகவும், நிவிருத்தி கலையானது இருதய தாமரையில் தியானஞ்செய்யத் தகுந்தது என்பதாம். (௩௫)

(அ—கை) இந்த நிவிருத்திகலைக்கு நிவிருத்தி என்னும் பெயர் நிகழ்ந்ததற்குக் காரணங் கூறுகின்றார்.

(௩௬) அந்த நிவிருத்தி கலையில் ஒடுங்கியிருக்கும் ஆன்ம

வர்க்கத்தினுடைய சங்கற்பம் பயன்படாமல் நாசமடைகின்ற மையால் இந்தக்கலை நிவிருத்தி என்று கூறப்படுகின்றது என்பதாம். (கூரு)

(கூசுஇ) (அன்றியும்) இந்த நிவிருத்தி கலையில் * காரணம் பிரம்மா. மந்திரம் சத்தியோசாதம். அதிதேவதை சத்தியோ சாதர் என்பதாம். (கூசுஇ)

(அ—கை) பிரதிட்டா கலையைப்பற்றிக் கூறுகின்றார்.

(கூஎ—க0ா) பிரதிட்டா கலையில் பூமி நீங்கிய ஏனைய நான்கு பூதங்களும், ஐந்து தன் மாத்திரைகளும், ஐந்து கன்மேந்திரியங்களும், ஐந்து ஞானேந்திரியங்களும், மனமும், அகங்கார மும், புத்தியும், அவ்வியத்தமும் என்னும் இருபத்துமூன்று தத்துவங்களிருக்கின்றன. கீழிருந்து எண்ணும் முறையில் ஹ காரமுதல் டகார மிறுதியான இருபத்துமூன்று எழுத்துக் களிருக்கின்றன. ஐம்பத்தாறு புவனங்களுள்ளன. அந்த ஐம் பத்தாறு புவனங்களும் அப்பு, தேயு, வாயு, ஆகாயம், புத்தி, பிரகிருதி, அகங்காரம் என்னும் இந்த ஏழு தத்துவங்களினும் ஒவ்வொரு தத்துவத்தில் எட்டுப் புவனங்களாக இருக்கின்றன. இருபத்தொரு பதங்களும் சிரோமந்திரம் வாமதேவ மந்திரம் என்னும் இரண்டு மந்திரங்களுமுள்ளன. விட்டுணு காரணமாகக் கூறப்படுகின்றனர். இந்தப் பிரதிட்டா கலையானது வெண்மை நிறமுள்ள பாதிமதியினுடைய காந்திபோன்ற காந்தியினையுடைய தாயும், கருசெய்தலின் இதழைக் குறியாகவுடையதாயும், மிருதி யான பிரபையுடன் கூடினதாயும், கண்டத்திலிருக்கும் தாமரை யில் தியானஞ் செய்யத்தகுந்தது. இந்தக்கலையில் ஒடுங்கிய ஆன்மவர்க்கத்திற்குப் புருஷார்த்தமான மோக்ஷத்தில் நிலைத் திருக்கச் செய்தல்பற்றி இந்தக்கலை பிரதிட்டையெனப் பெயர் கொண்டது. இதற்கு அதிபதி வாமதேவர். இதற்கு வாச்சிய மந்திரம் வாமதேவம் என்பதாம்.

---

* காரணம்—அதிபதி. மேல் அகூ-வது சுலோக உரை பார்க்க.

(உரை) மந்திரமென்னுஞ் சொல் மனனம் திராணமெனப் பிரிக்கப்படும். மனன மென்பது எல்லாம் அறிதல். திராண மென்பது சமுசாரிகளுக்கு அனுக்கிரகஞ் செய்தல். இவ்விரண்டு தொழிலுக்கும் தருமியாயிருப்பது பற்றி மந்திரமெனக் கூறப் படுகின்றது. இந்த முறையில் மந்திரமென்னுஞ் சொல்லானது சிவன், சத்தி, சிவசத்திகளால் அனுக்கிரகஞ் செய்யப்பட்டவர் ஆகிய இவர்களையே அறிவிக்கும். ஆயினும், சிவன் முதலிய பொருள்களையறிவிக்கும் வாசகத்திலும் உபசாரமாய்ப் பிரசித்த மாயிருக்கின்றது. ஆகையால் இவ்விடத்திலும் சத்தியோசாதம் வாமதேவம் முதலிய சத்திவிசேடங்களே அதிதேவதைகளெனக் கூறப்பட்டன. இது பற்றியே புவனரூபங்களான நிவிருத்தி முதலிய கலைகளில் அப்புவனங்களையடைய விரும்புவோர்களால் சதாசிவம் முதலிய வடிவத்தோடு பரமசிவன் தியானஞ் செய்யத் தகுந்தவன் எனப் பெரியோர்கள் கூறுகின்றனர் என்க.

குறிப்பு. பிரதிட்டா கலையிலுள்ள புவனங்களின் பெயரும் பதங்களின் பெயரும் வருமாறு :—

அப்பு தத்துவத்திலுள்ள எட்டு புவனங்களாவன :—அமரேசன், பிரபாசம், நைமிசம், புஷ்கரௌஷதி, டிண்டி, முண்டி, பாரபூமி, லகுளீசம் என்பன.

தேயு தத்துவத்திலிருக்கும் புவனங்கள் எட்டாவன :— அரிச்சந்திரம், ஸ்ரீசைலம், சலேசம், ஆமிராதகேசுவரம், மத்தியமேசம், மகாகாளம், கேதாரம், பைரவம் என்பன.

வாயு தத்துவத்திலிருக்கும் புவனங்கள் எட்டாவன :— கயை, குருக்ஷேத்திரம், நாகலம், நகலம், விமலேசம், அட்டகாசம், மகேந்திரம், பீமகேசுவரம் என்பன.

ஆகாய தத்துவத்திலிருக்கும் புவனங்கள் எட்டாவன :— வஸ்திராபதம், ருத்திரகோடி, அவிமுக்தம், மகாலயம், கோகர்ணம், பத்திரகர்ணம், சுவர்ணாக்ஷம், தாணு என்பன.

அகங்கார தத்துவத்திலிருக்கும் புவனங்களெட்டாவன :— சகலண்டம், துவிரண்டம், மகோடம், மண்டலேசுவரம், காலஞ்சரம், சங்குகர்ணம், அாலேசுவரம், தலேசுவரம் என்பன.

புத்தி தத்துவத்திலிருக்கும் புவனங்களெட்டாவன :—பைசாசம், இராக்ஷசம், யாக்ஷம், காந்தர்வம், ஐந்திரம், சௌமியம், பிராஜேசம், பிராமம் என்பன.

பிரகிருதி தத்துவத்திலிருக்கும் புவனங்களெட்டாவன :— அகிருதம், கிருதம், பைரவம், பிராமம், வைணவம், கௌமாரம், ஔமம், சிரீகண்டம் என்பன. ஆகப்புவனங்கள் ஐம்பத்தாறுங் கண்டுகொள்க.

பதங்கள் இருபத்தொன்றுவன :—மகேசுவர, பரமாத்மன், சர்வ, சிவ, நிதனோத்பவ, நிதன, அநிதன, ஓம்சுவ :, ஓம்புவ :, ஓம்பூ :, தூது தூது, நாநா நாநா, அஜுதயே, அபஸ்ம, அதுமா, அனக்கினி, அரூப, ச்யோதிர்ச்யோதி :, தேஜஸ்தேஜ :, பிரதம பிரதம, அருபன்னரூபி என்பன. (கூஎ—க0ங)

(அ—கை) வித்தியா கலையைப் பற்றிக் கூறுகின்றார்.

(க0ச—க0அ) வித்தியாகலையில் புருடன், அராகம், நியதி, வித்தை, கலை, காலம், மாயை என ஏழு தத்துவங்களும், வாமை முதலிய புவனங்களிருபத்தேழும், ஞகாரமுதல் நான்காவது ககார மிறுதிவரை மேல் நோக்கி எழுத்துக்கள் ஏழும், பதங்கள் இருபதும், சிகாமந்திரம் அகோர மந்திரமென்னும் மந்திரங்களிரண்டும் இருக்கின்றன. உருத்திரன் காரணம். அகோரர் அதிதேவதை. இந்த வித்தியா கலையானது விளங்குகின்ற அனேகம் சுவாலையுடையதாயும், முக்கோண வடிவமாயும், சுவத்திகத்தை அடையாளமாகக் கொண்டதாயும், கருமையான மைக்குச் சமானமான காந்தியுடையதாயும், கன்னங்களிலுள்ள தாமரையில் தியானஞ் செய்யத்தகுந்தது. இந்த வித்தியாகலையில் ஒடுங்கியிருக்கும் ஆன்மவர்க்கத்தினுடைய அறிவானது எல்லாப் பொருள்களையும் விளக்கஞ் செய்வது பற்றி இந்தக் கலை வித்தை எனக் கூறப்பட்டது என்பதாம்.

(உரை) எல்லாப் பொருள்களையும் விளக்கஞ்செய்வதுபற்றி என்பதற்கு இந்த வித்தியாகலையிலுள்ள புவனத்திற்குக் கீழ்ப் பட்ட எல்லா அத்துவாக்களையும் விளக்கஞ் செய்யுமென்பது பொருள். இவ்வாறன்றிப் பொதுவாய் எல்லாப் பொருள்களையு மென்று கொள்ளுதல் கூடாது. எதனாலெனின், எல்லாப் பொருள்களையும் அறியும் அறிவு மல மின்மையினாற்றான் நிகழு மாகையாலென்க.

குறிப்பு. வித்தியாகலையிலுள்ள புவனங்களும் பதங்களும் வருமாறு :—

புருட தத்துவத்தில் வாமம், பீமம், உக்கிரம், பவம் ஈசானம், ஏகவீரம் என்னும் ஆறு புவனங்களிருக்கின்றன.

அராக தத்துவத்தில் பிரசண்டம், உமாபதி, அஜம். அனந்தம், ஏகசிகம் என்னும் ஐந்து புவனங்களிருக்கின்றன.

நியதி தத்துவத்தில் குரோதம், சண்டம், சம்வர்த்தம், சுயோதி, சூரம் என்னும் ஐந்து புவனங்களிருக்கின்றன.

வித்தியா தத்துவத்தில் பஞ்சாந்தகம், ஏகவீரமென்னும் இரண்டு புவனங்களிருக்கின்றன.

கலாதத்துவத்தில் சிகேதம், மகாதேஜம் என்னும் இரண்டு புவனங்களிருக்கின்றன.

காலதத்துவத்தில் வாமதேவம், பவமென்னு மிரண்டு புவனங்களிருக்கின்றன.

மாயாதத்துவத்தில் உத்பவம், ஏகாங்குஎம், ஏகேக்ஷணம், ஈசானம், அங்குட்டமாத்திரமென்னும் ஐந்து புவனங்களிருக்கின்றன. ஆகப் புவனங்க ளிருபத்தேழுங் கண்டுகொள்க.

பதங்கள் இருபதாவன:—வியோமங் வியோமங், அசேதக, பரமேசுவரபாராய, ச்யோதி ரூபாய, சர்வவித்தியாதிபாய, சர்வ

யோகாதி கிருதே, அநிதஞய, கோப்திரே, குக்யாதி குக்யாய, ஓம் நமோ நம:, சத்தியோஜாத மூர்த்தயே, வாமதேவகுஹ்யாய, அகோர இருதயாய, தத்புருஷவக்திராய, ஈசானமூர்த்தகே, சிகாய, சர்வப்பிரபவே, ஓம் நமசிவாய, ஓம்த்யானகராய, வியாபின்வியாபினே என்பன. (௧0௪-௧0௮)

(அ—கை) சாந்தி கலையைப்பற்றிக் கூறுகின்றார்.

(௧0௯—௧௧௩) சாந்திகலையில் சுத்தவித்தை, மகேசுவரன், சதாசிவமென்னுந் தத்துவங்கள் மூன்றும், புவனங்கள் பதினெட்டும், மூன்றாவது ககரமுதல் முதலாவது ககரம் வரையிலுள்ள எழுத்துக்கள் மூன்றும், பதங்கள் பதினொன்றும், தத்புருடம் கவசம் என்னும் மந்திரங்களிரண்டும் இருக்கின்றன. இந்தக் கலை புவனமுதலிய ஐந்து அத்துவாக்களை வியாபித்திருக்கிறது. ஆறு புள்ளியை அடையாளமாகவுடையது. அறுகோண வடிவமாயுள்ளது. இந்தச் சாந்தி கலையானது பிரளய காலத்துதித்த சூரிய காந்தியை யுடையதாகப் புருவமத்தியிலுள்ள தாமரை நடுவில் தியானஞ் செய்யத்தகுந்தது. இந்தக் கலையிலொடுங்கியிருக்கும் ஆன்மவர்க்கத்திற்கு விருப்பு வெறுப்பு இல்லாமல் அறிவு சாந்தமாயிருப்பதுபற்றி இந்தக் கலை சாந்தியெனக் கூறப்படுகிறது. இதற்கு ஈசுவரன் காரணம். தற்புருடம் அதிதேவதை என்பதாம்.

குறிப்பு. சாந்திகலையிலுள்ள புவனங்களும் பதங்களும் வருமாறு:—

சுத்தவித்தியா தத்துவத்தில் வாமை, சேஷ்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகாரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி, மனோன்மனி என்னும் ஒன்பது புவனங்களிருக்கின்றன.

மகேசுவர தத்துவத்தில் அனந்தம், சூக்குமம், சிவோத்தமம், ஏகநேத்திரம், ஏகருத்திரம், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டம், சிகண்டம் என்னும் எட்டுப் புவனங்களிருக்கின்றன.

சதாசிவதத்துவத்தில் சதாசிவமென்னும் ஒரு புவனம் இருக்கின்றது. ஆகப் புவனங்கள் பதினெட்டுங் கண்டுகொள்க.

பதங்கள் பதினொன்றுவன:—நித்திய யோகினே, லோகபீட, சாஸ்வதாய, துருவாய, அனுசிருதாய, அனுதாய, அனந்தாய, சிவாய, சர்வவியாபினே, வியோமரூபாய, வியோமவியாபினே என்பன. (௧0௬-௧௧௫)

(அ—கை) சிவதத்துவத்துள் மூன்று தத்துவங்கள் சாந்தி கலையில் அடங்கிவிட்டமையால் சத்தி தத்துவத்திற்குச் சிவதத்துவத்துள் அடக்கத்தை எண்ணினவராய்ச் சாந்தி யதீதகலையின் வியாபித்தலைக் கூறுகின்றார்.

(௧௧௭—௧௧௮) ஐந்தாவதான சாந்தி யதீதகலையானது பரகலையாகும். இதில் சிவதத்துவமொன்றும், புவனங்கள் பதினைந்தும், விசர்க்கமுதல் அகரம்வரையுள்ள ஸ்வரம் என்று சொல்லக்கூடிய உயிரெழுத்துப் பதினாறும், ஓம் என்னும் பதம் ஒன்றும், சிவமந்திரம், ஈசானமந்திரம், அஸ்திர மந்திரமென்னும் மந்திரங்கள் மூன்றும் இருக்கின்றன. இந்தச் சாந்தி யதீதகலையானது ஐந்து அத்துவாக்களையும் கருப்பத்திலுடையதா யிருப்பதுபற்றிப் பரகலை யெனப்பட்டது. இந்தக் கலை மகாகாயரூபமாகச் சிரசிலிருக்கும் தாமரையில் தியானஞ்செய்யத் தகுந்தது. காரணம் சதாசிவதேவர். அதிபதி மந்திரராஜனான ஈசானன். இவ்வாறு கூறப்பட்ட கலை என்னும் அத்துவாவானது புவன முதலிய அத்துவாக்களை வியாபித்திருக்கின்றது. இந்தக் கலை விந்துவால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. விந்துவானது சத்தியால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. சத்தியானது சிவனால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. சிவன் ஒன்றாலும் வியாபிக்கப்படவில்லை என்பதாம்.

(உரை) புவனம் முதலிய ஐந்து அத்துவாக்களையும் வியாபித்திருக்கும் கலாத்துவாவானது விந்துவை முதற்காரணமாகவுடையது. கருத்தாவான சிவன், காரணமாகச் சித்தித்த சமவேதமாயிருக்கும் சிற்சத்தியால் விந்துவை அதிட்டிக்கின்றான். சிவனுக்கோ வெனில், அதிட்டாதா ஒருவருமில்லை யென்பது கருத்தென்க.

குறிப்பு. சாந்தியதீத கலையிலிருக்கும் புவனங்களாவன:—

சிவதத்துவத்துளடங்கிய சத்திதத்துவத்தில் நிவிருத்தி, பிர திட்டை, வித்தை, சாந்தி சாந்தியதீதை என்னும் ஐந்து புவனங் களிருக்கின்றன. சிவதத்துவத்தில் இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமிநி, வியாபிநி, வியோமரூபை, அனந் தை, அநாதை, அநாசிருதை என்னும் பத்துப் புவனங்களிருக் கின்றன. ஆகப்புவனங்கள் பதினைந்துங் கண்டுகொள்க.

(௧௧௪-௧௧௮)

(அ—கை) இன்னும் இதைப்பற்றிக் கூறுகின்றார்.

(௧௧௯) அந்தப் பரமசிவனேவெனில், தன்னினின்றும் வேறாகப் பிரித்தறிய முடியாதசத்தியால் எல்லாப் பொருள்களை யும் மறைத்தும், எல்லாப் பொருள்களையும் வியாபித்தும், பின்னர் அந்தச் சத்தியினலேயே எல்லாப் பொருள்களையும் அறிகின்றான் செய்கின்றானென்பதாம்.

(உரை) ஆகையால் சத்திக்கு எல்லாப் பொருள்களையும் விடயமாகக்கொண்ட அறிவாயிருக்குந் தன்மையும், எல்லாப் பொருள்களையும் விடயமாகக்கொண்ட செயலாயிருக்குந் தன்மை யும் சித்தித்தன என்க. (௧௧௯)

(அ—கை) இனி வியாப்தியின் சொரூபத்தைக் கூறுகின் றார்.

(௧௨௦) ஒரு பொருளுக்கு அதனினும் வேறான பிற பொ ருளில் எக்காலத்தும் பிறட்சி அடையாமல் இருக்கும் இருப்பா னது, வியாப்தி யெனப்படும். அந்த வியாப்தியானது அடை யப்பட்ட பொருளினுடைய தோற்றத்திற்கும் நிலைக்குங் காரண மாயிருக்கின்றது என்பதாம்.

(உரை) பிற பொருளான ஆகாய முதலியவற்றிற்குப் பிற பொருளான சுவர் முதலியவற்றில் எப்பொழுதும் மாறுதலடை யாத இருப்பானது வியாப்தியெனப்படும். அந்த வியாப்தியா னது அடையப்பட்டபொருள் தோன்றுதற்கும் நிலைத்தற்குங் காரணமாயிருககின்றதென்க. (௧௨௦)

(கஉ௦இ) (ஆகையினாலேயே) அந்த வியாத்தியானது இரண்டுவகையாயிருக்கின்றது. ஒன்று சங்கற்பமாத்திரத்தி லிருப்பது. மற்றொன்று ஆன்மாவினிடத்தில் காரியரூபமாய்ப் பரிணமித்திருப்பது என்பதாம். (கஉ௦இ)

(அ—கை) இதனையே விளக்கிக் காட்டுகின்றார்.

(கஉகஇ) அவற்றுள் எவ்வாறு சூரியன், சன்னிதி மாத்திரத்தால் பகலில் நிகழும் செயல்களுக்கு உபகாரஞ் செய்கின்றானோ, அவ்வாறே சிற்சத்தியானது, சங்கற்பமாத்திரத்தால் எல்லாவிதமான காரியங்களையுஞ் செய்கின்றது என்பதாம்.

(உரை) பரமசிவனிடத்தில் சமவாய சம்பந்தத்திலிருக்கும் சிற்சத்தியானது, சூரியன், சன்னதிமாத்திரத்தால் தாமரையை மலரச் செய்வதுபோல், சங்கற்பமாத்திரத்தால் சிருட்டி முதலியவற்றைச் செய்கின்றது. இது சத்தியின் வியாத்தியாகும், இவ்வாறே ஆன்மாவிற்கும் சரீரத்தை அசைத்தல் முதலிய காரியங்களில் சங்கற்ப மாத்திரமே காரணமென்றறிகவென்க. (கஉகஇ)

(அ—கை) சடப்பொருளுக்குச் சித்துப்பொருளினுடைய அதிட்டானத்தினாற்றான் ஆன்மாவினிடத்தில் காரியத்தைச் செய்தல் ரூபமான வியாத்தியென்று விந்துவின் வியாத்தியைக் கூறுகின்றார்.

(கஉஉ—கஉங) விந்துவானது ஆன்மாவினிடத்தில் நாத முதலிய ஆறுவிதமான அத்துவாக்களையும் முறையாக வேறான தனது பரிணமங்களால் சிவனால் ஏவப்பட்டுச் செய்கின்றது. எவ்வாறு மண்ணானது குயவனால் அதிட்டிக்கப்பட்டுக் கலச முதலியவைகளாய்ப் பரிணமித்து அவற்றைச் செய்கின்றதோ அதுபோலு மென்றறிக வென்பதாம்.

(உரை) ஆறத்துவாக்களாகிய கலை, வர்ணம், பதம் மந்திரம், தத்துவம், புவனமென்பவற்றையும் விந்து தோற்றுவிக்கின்றது. ஆயினும் அவ்வாறனுள் சுத்தமான தத்துவாத்துவா புவ

ணுத்துவாக்களைத்தான் விந்து தோற்றுவிக்கின்றது. எதனாலெனின், அசுத்தமான தத்துவாத்துவா புவனாத்துவாக்கள் மாயையிலிருந்து தோன்றுவனவாகையாலென்க. (கஉஉ-கஉஙு)

(கஉச) (அன்றியும்) எந்தப் பொருளால் எந்தப் பொருள் தானாகவே பரிணமரூபமாக வியாபிக்கப்பட்டிருக்கிறதோ அந்த வியாப்தி அந்தப் பொருளினுடைய விகாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. கிரீடமானது பொன்னின் விகாரமாயிருப்பது போலுமென்பதாம். (கஉச)

(அ—கை) இந்த விஷயத்தை விந்துவாகியச் சாத்தியத்தில் காட்டுகின்றார்.

(கஉரு) யாதொரு கலை முதலிய ஆறுவிதமான அத்துவாவானது விந்துவால் வியாபிக்கப்படுகிறதோ, அந்த வியாப்தி அந்த விந்துவினுடைய விகாரமாகும். நாதம் விந்து முதலியன விந்துவால் வியாபிக்கப்பட்டு அந்த விந்துவின் விகாரமாயிருத்தல் போலுமென்பதாம்.

(உரை) அசுத்தகத்துவ புவனத்தினும் வேறான ஆறுவிதமான அத்துவாவானது காரியமாயிருத்தலால் நாதம் * விந்துவைப்போல் தனக்குக் காரணமாக மகாமாயை யென்னும் விந்துவுண்டென்பதை அறிவிக்கின்றது என்க. (கஉரு)

(அ—கை) இனி விந்துவிற்குப் பரமசிவனிடத்தில் சமவாயசம்பந்தங் கூறும் வாதிகளின் மதத்தைக் கூறுகின்றார்.

(கஉசு) யாதொரு காரணத்தால் குண்டலினீ என்னும் விந்துவானது சிவனுடைய கிரியாசத்திரூபமா யிருக்கின்றதோ, அந்தக் காரணத்தால் ஞானசத்தியைப்போல் இந்த விந்துவும் சிவனிடத்தில் சமவாயசம்பந்தத்தில் இருக்கின்றதென்று கூறுகின்றனரென்பதாம்.

---

* இங்கே கூறப்பட்ட விந்துவானது காரியரூபமாய் நாததத்திற்குப் பின்னர்த் தோன்றும் அபரவிந்துவாகும். இது சத்திதத்துவமெனவும்வழங்கப்படும்.

(உரை) ஞானசத்தியைப்போல் விந்து ரூபமான கிரியா சத்தியும் சிவனிடத்தில் சமவாயசம்பந்தத்திலிருக்கின்றது. மாயையினைப்போல் சிவனைவிட வேறாக இல்லை என்க. (கஉசு)

(கஉஎ) (ஆகவே) பரமசிவனிடத்தில் ஞானக்கிரியா ரூபமான இரண்டு சத்திகள் சமவாய சம்பந்தத்திலிருக்கின்றன. அந்த இரண்டனுள் முதலாவதான ஞானசத்திக்கு சம்வித்து என்பதும் விஞ்ஞானமென்பதும் பெயர். கிரியா சத்திக்குக் கிரியை யென்பதும் குண்டலினி யென்பதும் பெயர் என்பதாம்.

(உரை) ஞானசத்தியானது சம்வித்தென்றும் விஞ்ஞானமென்றுங் கூறப்படும். கிரியாசத்தியானது கிரியையென்றுங் குண்டலினி யென்றுங் கூறப்படும் என்க. (கஉஎ)

(கஉஎஇ) (அவ்விரண்டனுள்) ஞானசத்தியால் அறிகின்றான். கிரியா சத்தியால் உலகத்தைச் செய்கிறானென்பதாம்.

(உரை) பரமசிவன் என்னும் பதத்தைச் சேர்த்து அறிகின்றான் செய்கின்றானென்று கொள்ளவேண்டுமென்க. (கஉஎஇ)

(அ—கை) கிரியாசத்தியால் உலகத்தைச் செய்கிறானென்பதற்கு ஏதுக் கூறுகின்றார்.

(கஉஅ) யாதொரு காரணத்தால் புருடர்களுக்குக் கிரியையானது பயனை அளிக்கின்றதோ ஞானம் பயனை அளிக்கவில்லையோ ஆகையாலென்பதாம்.

(உரை) யாதொரு காரணத்தால் குயவன் முதலியவர்களின் முயற்சி ரூபமான கிரியாசத்தியே கடத்தோற்ற ரூபமான பயனை யளிக்கின்றதோ ஞானசத்தியானது அந்தப் பொருளை அறியச்செய்யும் மாத்திரத்தால் பயனடைந்ததா யிருக்கின்றதோ அந்தக்காரணத்தால் பரமசிவனும் ஞானசத்தியால் உலகத்தை அறிந்து கிரியாசத்தியால் எல்லாவுலகத்தையுஞ் செய்கிறானென்க. (கஉஅ)

(கஉஅ) இந்தச் சத்திகளை விட்டுச் சிவன் நீங்கியிருப்பன். * சத்திகளோவெனில் சிவனைவிட்டுத் தனித்திருப்பதில்லை என்பதாம். (கஉஅ)

(அ—கை) இவ்வாறு புறமதத்தை அநுசரித்து விந்துவிற்குச் சிவனோடு சமவாய சம்பந்தம் உண்டென்று கூறிவிட்டுப்புறமதத்தை அநுசரித்தே சதாசிவம் முதலிய தத்துவங்களைக் கூறுகின்றார்.

(கஉகூ) பரவுகின்ற இந்த ஞானக்கிரியாசத்திகள் ஏற்றத்தாழ்வின்றிச் சமமாயிருந்தால் சதாசிவ தத்துவமாகும். கிரியா பாகம் அதிகமாக இருந்தால் ஈசுவர தத்துவமாகும். ஞானபாகம் அதிகமாகவிருந்தால் வித்தியா தத்துவமாகு மென்பதாம்.

(உரை) ஞானக்கிரியா சத்திகள் சமமாய் வியாபரிக்குங் காலத்தில் கிரியா சத்தியே சதாசிவ தத்துவ ரூபமாகப் பரிணமிக்கின்றது. கிரியாசத்தியின் மிகுதியால் ஈசுவரதத்துவமாகப் பரிணமிக்கின்றது. ஞானசத்தியின் மிகுதியால் வித்தியா தத்துவமாகப் பரிணமிக்கிறது என்க. (கஉகூ)

(கஙo—கஙஉ) (அன்றியும்) அந்த ஐந்து சிவ தத்துவங்களிலும் மகான்களான விஞ்ஞான கேவலர்களுக்குப் பரமசிவன் தன்னைவிட்டுப் பிரியாத கிரியா சத்தியால் விசித்திரங்களான புவனங்களையும், இயல்பாகவே அழகு வாய்ந்த நாயகிகளையும், மிகுதியான போகங்களையும், அப்போகங்களுக்குச் சாதனங்களான அழிவற்ற தனுகரணங்களையும், நாத முதலியவற்றையும் தோற்றுவிக்கின்றார். ஆகையால் இந்தப் பரமசிவன் சுத்தாத்துவாவிற்குக் கருத்தாவாகக் கூறப்பட்டிருக்கின்றார் என்பதாம். (கஙo—கஙஉ)

(அ—கை) மேலே கூறிய விஷயத்தைக் கூட்டி முடிக்கின்றார்.

* நீங்கி இருப்பனென்பது சத்தியினால் செய்யுந் தொழிலைச் செய்யாதிருப்பனென்பதாகும்.

(கங்ங) ஆகையால் இந்த விந்துவானது சிவசத்தியினின் றும் வேறானதில்லை. அன்றிச் சிவனுடன் சமவாய சம்பந்தத்தி லிருக்கும் கிரியாசத்தியேயாகும். இவ்விஷயத்திற் கூறுகின்றோ மென்பதாம்.

(உரை) ஆகையால் இந்த விந்துவானது சிவனிடம் சமவாயசம்பந்தத்திலிருக்கும் ஞானசத்தியினின்றும் அதிகமாய் வேறுபட்டதாயில்லை. அன்றிச் சிவனிடம் சமவாயசம்பந்தத்தி லிருக்கும் கிரியாசத்தியேயாகும். இவ்வாறு சில ரெண்ணுகின்ற னர். இவ்விஷயத்தில் கூறுகின்றோமென்பதால் சமாதானங் கூறுகின்றோமென்பது கருத்தாதலின் அது பொருந்தாதென்று கூறுகின்றாரென்க. (கஙங)

(அ—கை) சித்தாந்த முறையைக் கூறுகின்றார்.

(கஙச—கஙசஇ) அந்த விந்துவானது ஆன்மாவினிடத் தில் அநேக புவனக் கூட்டமுடைய தத்துவக்கூட்டத்தையும், அநேகவிதமாயும் அதிகமாயுமுள்ள தனுகாண போகங்களையும் தோற்றுவிப்பதாய்ப் பிரதானம்போல் பரிணாம முடையதாக யுக் தியால் கொள்ளப்படுகிறது என்பதாம்.

(உரை) விந்துவானது தத்துவம் புவன முதலியவற்றிற்கு முதற்காரணமாய் நூல்களிற் கேட்கப்படுகிறபடியால், அதற்குப் பிரகிருதியைப் போலாவது அல்லது மண் முதலியவற்றைப் போலாவது பரிணமிக்குந் தன்மையுண்டென்பது நிச்சயமாய்க் கொள்ளல் வேண்டும் என்க. (கஙச—கஙசஇ)

(அ—கை) விந்துவிற்குப் பரிணாமங்கொண்டால் சமவாய சம்பந்தத்திலிருக்குமென்பதற்குக் குற்றமென்னை என்பார்க்குக் கூறுகின்றார்.

(கஙருஇ) எந்தப்பொருள் பரிணாமமுடையதோ அந்தப் பொருள் நிச்சயமாகச் சடமாயிருக்கும், பால்போலும், ஆகவே இந்த விந்துவும் சடப்பொருளாகையால் இதற்குச் சிவனோடு சம வாய சம்பந்தம் எவ்வாறு பொருத்தமாகுமென்பதாம்.

(உரை) இந்த விந்து பரிணாமமுடையதாகையால் இதற்குச் சடத்தன்மை யுண்டென்பதூஉஞ் சித்தித்தது. சித்திக்கவே இதற்குச் சித்தோடு சமவாய சம்பந்தம் பொருத்தமில்லை என்று "சடப் பொருளாகையால்" என்பதாற் கூறுகின்றார் என்க. (கரு௫இ)

(அ—கை) சடமான விந்துவிற்குச் சிவசமவாயங் கொண்டால் சிவனுக்குஞ் சடத்தன்மைச் சித்திக்குமெனக் கூறுகின்றார்.

(கருசுஇ) சடப்பொருளோடு சமவாயமான தாதான்மிய சம்பந்தமானது, நிகரில்லாத அகண்ட சிற்கன ஏகரூபமான பரம சிவனுக்குச் சடத்தன்மையைக் கொடுக்குமென்பதாம்.

(உரை) நித்திய முத்தனாகையால் நிகரில்லாததாயும், எல்லாப்பொருள்களையும் விடயமாகக் கொண்டிருத்தலால் அகண்டமாயும், ஞானக்கிரியா ரூபமான சரீரமொன்றையே சொரூபமாகவுடையனாகையால் சிற்கனமாயும் உள்ளவரென்பதுகருத்து. சித்துரூபமான சத்தியே சிவனுக்கு வடிவமாயிருக்கின்றது. வடிவரூபமான அந்தச்சத்தி ஒன்றாயிருந்தும் அறியத்தகுந்தபொருள் செய்யத்தகுந்த பொருளென்னும் உபாதி வேறுபாட்டால் உபசாரமாய் ஞானசத்தி கிரியாசத்தி என்னும் வேறு வேறு பெயரை யடைகின்றது. படைத்தல் முதலிய ஐந்தொழில் புரியும் ஈசான முதலிய நிலை வேறுபாட்டால் சரீர காரியத்தைச்செய்வதனால் ஈசான முதலியன உபசாரமாய சிவனுக்கு வடிவமென்று கூறப்படுகின்றன. ஆகையால் பரமசிவனுக்குச் சடரூபமான விந்துவினுடைய சமவாய சம்பந்தம் பொருந்தாது. சமவாய சம்பந்தங்கொண்டால் சிவனுக்குச்சடத்தன்மை முதலிய குற்றம்நிகழுமென்க. (கருசுஇ)

(அ—கை) பரமசிவன் சடப்பொருளாகவே இருக்கட்டும். இருந்தால் குற்றமென்னை என்பார்க்குக்கூறுகின்றார்.

(கருஎஇ) சடபுத்தியையுடைய எந்தப்புருடன் பரமசிவனைச்சடமாக எண்ணுகின்றானோ அவனுக்கு யுத்தி என்னும் அநுமானமும் சாத்திரமும் ஆன்மாவும் கடவுளும் இல்லையாகுமென்பதாம்.

(உரை) பரமசிவனைச் சடப்பொருளெனக் கூறுவோரின் கொள்கையானது, உலகத்திற்குக் கருத்தாவாகப் பரமசிவனை நிச்சயித்துக்கொடுக்கும் அனுமானத்தினாலும், பரமசிவன் சித்துப் பொருளென்று அறிவிக்கும் ஆகமங்களினாலும் மறுக்கப்படும். அன்றியும், நியாயமானது பொதுவாகையால் சித்தென்னும் பொதுமையால் சிவனுக்குச்சமமான சித்துச்சாதியையுடைய ஆன்மாக்களும் சடப்பொருள்களாக ஆகின்றனவென்பது கொள்ளவரும். வரவே, அந்த ஆன்மாக்களுக்குப்போகமோக்ஷமளிப்பதற்காகக் கடவுளும் சித்திக்கிறதில்லை என்க. (௧௬௭இ)

(௧௬அ) பரமசிவனைச் சடமாகக்கூறுதலால் * ஆஸ்திகர்கள் அனைவராலும் நிராகரிக்கப்பட்ட புருடன் விசேடமாய் வித்வான்களால் தள்ளத்தகுந்தவனென்பதாம். (௧௬அ)

(அ—ரை) அங்ஙனமாயின் நமது பக்கத்திலும் சிவனுக்குக்கருத்தாவாயிருக்குந்தன்மை கொள்ளப்பட்டிருக்கின்றது. கருத்தாவாயிருக்குந்தன்மை என்பது கிரியைக்குப்பற்றுக்கோடாயிருக்குந்தன்மையாகும். கிரியைக்குப்பற்றுக்கோடாயிருத்தலால் பரிணமமுடைமை சிவனுக்கும் நிகழுமென்பார்க்குக்கூறுகின்றார்.

(௧௬அஇ) யாதொருகாரணத்தால் கிரியைக்குக்காரணமாயிருத்தலால் ஞானசத்தியே கிரியாசத்தியென்று கூறப்படுகின்றதோ அந்தக்காரணத்தால் குற்றமின்மை காண்கவென்பதாம்.

(உரை) இவ்விடத்தில் கருத்திருத்தன்மை என்பது கிரியைக்குப்பற்றுக் கோடாயிருக்குந்தன்மையன்று. மற்றென்னையோவெனில், கிரியையை நிகழ்த்துவதில் சாமர்த்தியமுடைமையே கருத்திருத்தன்மையாகும். ஆகவே, காந்தத்தின் சந்நிதிமாத்திரத்தால் இரும்பிற்கிரியை நிகழுமாறுபோல் சிவசத்தியின் சன்னிதிமாத்திரத்தாலேயே விந்துவிற்கிரியைநிகழ்கின்றது. ஆகையால்

* ஆஸ்திகர்—பதிபசுபாசங்கள் உண்டென்றும் வேதசிவாகமங்கள் பிரமாணமென்றும் கொள்பவர்.

விந்துவி னிகழுங்கிரியைக்குக் காரணமாயிருப்பதுபற்றி ஞான சத்தியே கிரியாசத்தியென்று கூறப்படுகின்றமையால் குற்றமின்மை காண்க. (௧௩அஇ)

(அ—கை) இவ்விஷயத்தில் புறமதத்தினுடைய சங்கையைக் கூறிவிட்டு இனி எதிலிருந்து சுத்தாத்துவாத்தோன்றுகின்றதோ அதுவே விந்துவென முன்னர்க்கூறியதனை நிச்சயஞ்செய்கின்றார்.

(௧௩௯—௧௪௧) மாயைக்குமேல் அதனினும் வேறாய்ச்சடப் பொருளான விந்துவுள்ளதெனக்கொள்ளாவிடில் சுத்தாத்துவா எதனிடமிருந்து தோன்றுகின்றது; எதனிடத்தில் ஒடுங்குகின்றது; எதனால் தத்துவம் புவனம் முதலிய வேறுபாட்டால் ஆறுவிதமாயிருக்கின்றது. விஞ்ஞான கேவலர்கள் எதனால் மூன்று பிரிவினையுடையவராவர். அவர்களுக்குள் வேறுபாட்டைச்செய்விக்கும் விந்துவையின்றி அவர்கள் எதிலிருந்து மீண்டும் விடுதலையடைவார்கள் என்பதாம். (௧௩௯—௧௪௧)

(அ—கை) சித்ரூபியான சிவசத்தியே இவையனைத்திற்குங்காரணமாகட்டுமென்பார்க்குக் கூறுகின்றார்.

(௧௪௨) சிற்சத்தியானது அவையனைத்தையும் பரிணமத்தாற்செய்கிறதில்லை. எதனாலெனில், சேதனப்பொருளாயிருத்தலாலென்று பின்னர்ச்சத்திவிசாரத்தில் கூறப்போகின்றமையால் என்பதாம்.

(உரை) இவ்விஷயம் முன்னரே கூறப்பட்டிருக்கின்றது. தத்துவப்பிரகாசவிருத்தியிலும் என்னால் விரிவாய்க்கூறப்பட்டிருக்கிறதென்க. (௧௪௨)

(அ—கை) இந்தவிஷயத்தில் பூர்வபக்ஷியின் சங்கையைக் கூறுகின்றார்.

(௧௪௩) அநேக சத்திகளையுடைய பரமசிவன் ஒருவனாயிருந்தும் தொழில் வேறுபாட்டால் கற்பிக்கப்பட்ட அநேக வேறுபாட்டையுடையவனாயிருக்கின்றானென்று கொள்வோமென்பதாம்.

(உரை) முன்னர்க்கூறப்பட்டவாறுபோல் சேதனனான சிவனுக்குத்தத்துவம் முதலிய வடிவமாகப்பரிணமம் பொருத்தமாகாது. ஆயினும் அநேக சக்திகளையுடைய சிவனொருவனுக்கே காரிய வேறுபாட்டால் சதாசிவம் முதலிய தத்துவ வேறுபாடு உபசாரமாய்க் கூறப்பட்டதேயன்றி உண்மையிலில்லையென்பது உனது கருத்தாயின், அதிட்டிப்பவன் விஷயத்தில் அஃதுண்மையே. எதனாலெனில், அதிட்டிப்பவனான சிவனுடைய நிலைவேறுபாடானது அதிட்டிக்கப்படும் பொருளினுடைய வேறுபாட்டால் செய்யப்பட்டதாகையால் அவ்வேறுபாடு உபசாரமாயிருத்தலாலென்க. அதிட்டிக்கப்படும் சுத்தாத்துவாவிற்கோவெனில், தத்துவம்புவனம் முதலிய வேறுபாடு உண்மையேயாகும். அவ்வாறு உண்மையெனக்கொள்ளாவிடில் உபசாரமென்பதே நிகழாதாகையாலென்க. (கசங)

(அ—கை) சித்தினுடைய † விவர்த்தனமே விந்துவின் காரியமாகிய தத்துவம் புவனம் முதலியனவாகையால் அதிட்டிக்கப்படும் பொருளும் அசத்தியமேயெனில் அதன்மேல் கூறுகின்றார்.

(கசஙஇ) யுத்தி சமமாகையால் மாயாசம்பந்தமான அத்துவாவும் அவ்வாறே அசத்தியமாகுமென்பதாம்.

(உரை) சுத்தாத்துவாவில் விவர்த்தன வாதங்கொள்ளின் அந்தவாதத்தை அசுத்தாத்துவாவிலும் கொள்ளவருமாதலால், அந்த அசுத்தாத்துவாவும் அசத்தியத்தன்மையையடையுமென்பது கருத்து என்க. (கசஙஇ)

(அ—கை) மாயாசம்பந்தமான அசுத்தாத்துவாவும் அசத்தியமாயிருக்கட்டும் அதனால் குற்றமென்னை யெனில், அநேக அளவைகளால் நிராகரிக்கப்படுதலின் அசத்தியமாகக் கொள்ளுதல் கூடாதெனக் கூறுகின்றார்.

(கசசஇ) ஏதுக்களாலும் நூல்களாலும் யோகிகளுடைய காக்ஷியாலும் தனித்தனி அறியப்படும் சுத்தாத்துவாக்களை வித்துவான் எவ்வாறு நிராகரிப்பான் என்பதாம்.

---

† விவர்த்தனம்—ஒன்று பிறிதொன்றாய்த் தோன்றல்.

(உரை) இவ்விடத்தில் சுத்தாத்துவாக்களென்பது அசுத்தாத்துவாக்களையுங் கொள்ளுதற்கு உபலக்கணமாய்க் கூறப்பட்டது. ஆகையால் சுத்தாசுத்த ரூபமான உலகத்தை அசத்தியமாகக் கொள்ளுதல் எல்லா அளவைகளோடும் முரணுதலால் அவ்வாறு கூறும் வாதிகள் துஷ்டபுத்தியுடையவர்களென்பது கருத்து என்க. (கசச இ)

(கசரு இ) (அஃதெவ்வாறெனில்,) மேலான பதவியைக் கொடுக்கும் சிறந்தவனான பரமசிவன் உண்டென்று சிந்தித்திருக்கும் பொழுது சாத்திரப் பிரகாரம் ஆன்மாக்களுக்குப் போகத்தின் பொருட்டும் மோக்ஷத்தின் பொருட்டும் பிரவிருத்தி கூறப்படுகின்றது என்பதாம்.

(உரை) போக மோக்ஷத்தைக் கொடுப்பவனாகச் சிவனொருவன் சாத்திரத்தால் சித்திக்குங்கால் அந்தச்சாத்திரங்களில் உபதேசித்த முறையாக ஆன்மாக்களுக்கு அவரவர் அதிகாரத்திற்குத் தக்கவாறு போகத்தின் பொருட்டும் மோக்ஷத்தின் பொருட்டும் பிரவிருத்தி காணப்படுகின்றது என்க. (கசரு இ)

(அ—கை) போகானுபவத்திற்குரிய இடமானது சிவனால் நேரே செய்யப்பட்டதாய் மிகவுஞ் சுத்தமாயிருக்கிறதென்று நூல்களிற் கேட்கப்படுகிறதென்று காட்டுதற்காக ஸ்ரீமதங்க சூத்திரத்தைக் கூறுகின்றார்.

(கசசு இ) சதாசிவ பதமானது யோகத்தினாலும் சரியையினாலும் தீக்ஷையினாலும் சித்தபேதத்தினாலும் அடையப்படுகின்றது. மோக்ஷமு மிந்த நான்கு காரணத்தாலடையப்படுகின்றது என்பதாம்.

(உரை) சித்தபேதம் என்னுஞ் சொல்லால் இவ்விடத்தில் ஞானமென்னும் பொருள் கொள்ளத்தக்கது. சுத்தாத்துவாவில் கன்மத்திற்குப் பிரவிருத்தியில்லாமையானும், கன்மத்தால் நிகழும் போகம், சுகம் துக்கம் மோக ரூபமாயிருப்பதுபற்றி அசுத்தமாகையானும், சதாசிவம் முதலிய புவனத்தில் நிகழும்

போகம் சுத்தபோகமாகும். அது அபரமோக்ஷமென்னும் பெயர் கொண்டது. ஞானத்தால் அவ்வித சுத்தபோகம் அடையப் படுகிறது. சிவசாமிய ரூபமான பரமோக்ஷமோவெனில், யோக முதலியவற்ருேடு கூடிய தீக்ஷையாலடையப்படுகின்றது. இந்தப் பரமோக்ஷம் அபரமோக்ஷம் இரண்டனுள் சிறிது மலபரிபாகம் நிகழ்ந்து பௌதிக தீக்ஷை பெற்றவர்களுக்குப் போகானுபவத்திற்குப் பின்னர்த்தான் மோக்ஷம் நிகழ்கின்றது. மலபரிபாகம் மிகுதியுமுடைய நைட்டிக தீக்ஷை பெற்றவர்களுக்குச் சரீர நாசத்திற்குப் பின்னர்த்தான் மோக்ஷம் நிகழ்கின்றது. சத்தியோ நிர்வாண தீக்ஷை பெற்றவர்களுக்கும் சரீரநாசத்திற்குப் பினனர்த்தான் மோக்ஷம் நிகழ்கின்றது. ஆனல் இந்தச் சூத்திரத்தில் தீக்ஷை சரியை யோகம் ஞானமென்னும் இந்த நான்கும் தனித் தனியே போக மோக்ஷங்களுக்குக் காரணங்களாயிருக்கின்றன வென்று தோன்றுதல் கூடும். அத்தோற்றம் வாக்கியப்பொருளை யறியாமையால் நிகழ்வது. இந்தச் சூத்திரத்தின் வாக்கியார்த்தப் பொருள் வருமாறு :—சதாசிவ பதமென்பது உபலக்ஷணமாய்க் கூறப்பட்டிருத்தலால், சதாசிவ புவனுதிபதிகளின் சாக்ஷாத்காரத்தைப் பயனுகவுடைய யோகத்தாலும், அப்புவனுதிபதிகளை ஆராதித்தல் ரூபமான சரியையாலும், அந்தப் புவனத்தில் சேர்த்தல் ரூபமான தீக்ஷையினுலும், அந்தப்புவனுதிபதிகளின் சொரூபத்தையறிகின்ற ஞானத்தாலும், அந்தந்தப் புவனங்களில் இருத்தல் சித்திக்கும் என்பதாம். இவ்வாறன்றி நான்கு சாதனங்களுள் யாதாவதொரு சாதனத்தாலென்று கொள்ளுதல் கூடாது. ஞான முதலியவற்றிலும் தீக்ஷையின்றி அதிகாரமின்மையால் தீக்ஷை பிரதான சாதனமாகும். ஆகையால் இந்த நான்கும் சேர்ந்துதான் போகத்திற்காவது மோக்ஷத்திற்காவது சாதனமாயிருக்கிறதென்று வாக்கியப்பொருள் கொள்ளல் வேண்டும். கொள்ளவே, சரியை யோக மென்னுமிவற்றை ஞானமின்றி அனுட்டித்தல் பொருத்தமாகாது. எதனுலெனில் அறியப்படாத பொருளில் யோகமாவது சரியையாவது நிகழ்கிறதில்லையாகையா லென்க. அந்த ஞானமும் மலமுதலிய பாசங்கள் திரவியமாகையால் கண்ணினுடைய படலரோகம் கண் வைத்தியனுடைய

வியாபாரத்தால் நாசமடைவதுபோல் தீக்ஷையென்னும் ஈசுவர வியாபாரமின்றிப் பாசங்களை நீக்கிப் புருடர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதற்குச் சமர்த்தமாகிறதில்லை என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் தீக்ஷையே மோக்ஷத்திற்குக்காரணம். வேறு பிரகாணங்களிலும் "ஈசுவரனால் செய்யப்பட்ட முக்கியமான மந்திரக் கிரியையே போகமோக்ஷங்களைக் கொடுக்கக்கூடியதென்று, , கூறப்பட்டிருக்கின்றது. ஸ்ரீ ஷட் சாஹச் சரிகையிலும்" தீக்ஷையே புருடர்களுக்கு அறிவின் விளக்கத்தைச் செய்து மோக்ஷத்தைக் கொடுக்கின்றதென்று, கூறப்பட்டிருக்கிற* தென்க. (கசகூஇ)

(அ—கை) போகத்திற்குப் பற்றுக் கோடாயிருக்குந் தன்மை சதாசிவ பதத்திற்கு உண்டென்று கேட்கப்படுகிறதென்று கூறுகின்றார்.

(கசஎ) இவ்வாறு பெரிதான சதாசிவ பதமென்னும் போகமானது கூறப்பட்டது என்பதாம்.

(உரை) இவ்விடத்தில் போகம் என்னுஞ் சொல்லால் உபசாரமாய்ப் போகத்திற்குப் பற்றுக்கோடு என்னும் பொருள் கொள்ளத் தகுந்தது. சதாசிவபதம் என்பதால் உபலக்ஷணமாய் சுத்தாத்துவ புவனங்களைத்துங்கொள்ளத்தகுந்தன என்க. கசஎ

(அ—கை.) இந்தப் பதமானது புவனரூபமாயிருப்பதுபற்றிக் காரியப் பொருளாகையாலும் சுத்தாத்துவாவாயிருத்தலா

---

* ஞானமே மோக்ஷத்திற்குச் சிறந்த சாதனமென்று நூல்களிற் கூறியிருக்கவும் இவ்விடத்தில் ஞானம் மோக்ஷத்தைத்தராது தீக்ஷையே மோக்ஷத்தைத் தருமென்றதன் கருத்தாவது—பரஞானம் அபரஞானமென்று ஞானம் இருவகைப்படும். அவற்றுள் அபரஞானம் நேரே மோக்ஷத்தைத் தராது. அதனையே இவ்விடத்துக் கூறினார். தீக்ஷையாலுண்டாகும் பரஞானம் நேரே மோக்ஷத்தைத் தரும் என்பதாம்.

னும் இதற்கு விந்துவே முதற்காரணமாகக் கூறப்பட்டதென்னுங் கருத்தால் கூறுகின்றார்.

(கசஅ) அந்தச் சதாசிவ பதத்தில் சுத்தமாயிருத்தலால் மாயையை முதற்காரணமாகக்கொண்டு தனுகரணபுவனபோகம் முதலியன உண்டாவனவல்ல. ஆகையால் போகத்தின் பொருட்டுச் சுத்தாத்துவா சித்தித்தது என்பதாம். (கசஅ)

(அ—கை) வேறுவழியாகவும் சுத்தாத்துவாவைச் சாதிப்பதின்பொருட்டுக் கூறுகின்றார்.

(கசகூ—கசகூஇ) அன்றியும் அசுத்தமாயையானது ஏவப்படுபவனுன யாராவதொரு கருத்தாவா லதிட்டிக்கப்பட்டதாயும், கலையால் வியாபிக்கப்பட்ட வடிவமுடையதாயும், கலை முதலியவற்றிற்கு முதற் காரணமாயிருக்கின்றது. எதுபோலுமெனின், மண்ணனது குயவனு லதிட்டிக்கப்பட்டதாய் கலசம் முதலியவற்றிற்கு முதற்காரணமாயிருப்பது போலுமென்பதாம்.

(உரை) உள்ளது தோன்றுமென்னும் சற்காரிய வாதம் பற்றிக்கலைமுதல் பிருதிவீஈருன காரியமனைத்தும் கலைகளேயாகும். சத்திரூபங்களான கலைகளுக்கு மாயை பற்றுக்கோடாயிருப்பது பற்றி கலைகளால் வியாபிக்கப்படுகிறது என்று கொண்டு கலையால் வியாபிக்கப்பட்ட வடிவமுடையதென்று கூறினர். இத்தகைய மாயையானது மண் முதலியனபோல் அசுத்தமாயிருத்தலால் சிவனுல் ஏவப்படும் கருத்தாவால் கலக்கப்படுகின்றது. விந்துவைப் போல் சிவனுல் நேரே கலக்கப்படவில்லை என்னுங் கருத்தால் சுத்தாத்துவாவில் சிவன் கருத்தா அசுத்தாத்துவாவில் அனந்ததேவர் கருத்தாவென்பதனுல் கூறப்பட்டிருக்கின்றது என்க.

(கசகூ—கசகூஇ)

(அ—கை) குலாலனுக்கும் சிவனுல் ஏவப்படுந்தன்மை உண்டென்பதைப்பற்றிக் கூறுகின்றார்.

(கடுO) இந்தக் குலாலனுனவன் பசுவாயிருத்தலால் ஏவப்படுங் கருத்தாவாக வாகிறான். பரமசிவன் ஏவுதலைச் செய்யுங் கருத்தாவாகிறான் என்பதாம்.

(உரை) பசுவாயிருத்தலினலேயே குயவன் ஏவப்படுங் கருத்தாவாக வாகிறான். நிர்மலனாயிருத்தலால் சிவன் ஏவுதலைச் செய்யுங் கருத்தாவாகவாகிறான் என்க. (கரு௦)

(அ—கை) அஃதெவ்வாறெனில் கூறுகின்றார்.

(கருக) காரியத்தைச் செய்வதில் சுதந்திரத்தன்மையில்லாதவனாகவும், அறிவில்லாதவனாகவும், கூறப்பட்ட ஆன்மா, பரமசிவனால் ஏவப்பட்டவனாய் நல்லகாரியத்தையாவது தீய காரியத்தையாவது செய்வானென்பதாம். (கருக)

(அ—கை) இவ்வாறு திருட்டாந்தத்தைச் சாதித்துவிட்டு அதனைத் ‡ தாஷ்டாந்தத்தில் காட்டுகின்றார்.

(கருஉ—கருஉஇ) குலாலன்போல் அனந்ததேவரும் ஏவப்படுபவராயிருத்தலால் சரீரமுதலியவற்றோடு கூடியே மாயையைக் கலக்கஞ் செய்கின்றார். அந்த அனந்த தேவர் எந்த அத்துவ சம்பந்தமான சரீர இந்திரியங்களோடும் எந்த அத்துவ சம்பந்தமான தேச முதலியவற்றோடுங்கூடினவராய் மாயையைக் கலக்கஞ்செய்கின்றாரோ, அந்த அத்துவாவே சிவசாத்திரத்தில் சுத்தாத்துவாவெனக் கூறப்படுமென்பதாம்.

(உரை) எந்த அத்துவசம்பந்தமான என்பதற்கு, எந்தச் சுத்தாத்துவ மயமான என்பது பொருள். எந்த அத்துவ சம்பந்தமான தேச முதலியவற்றோடு மென்பதற்குத் தனக்கிருப்பிடமான சுத்தாத்துவபுவனம் முதலியவற்றோடு மென்பது பொருள். முதலிய என்பதனால் முன்னர்க்கூறப்பட்ட சவிகற்ப அறிவிற்குக் காரணமான சத்தம் கொள்ளத் தகுந்தது என்க. (கருஉ—கருஉஇ)

(அ—கை) இவ்வாறு புறமதங்களைக் கண்டித்துப் பரமசிவனுடைய பரிக்கிரகசத்தி ரூபியாயும், சுத்தாத்துவாவிற்கு முதற்காரணமாயுள்ளதாயும், சடப்பொருளாயும், பரவிந்துவெனப்

‡ தாஷ்டாந்தமென்பது, இவ்விடத்து அனந்ததேவர்.

பெயர் கொண்டதாயுமுள்ள மகாமாயையைச் சாதித்துவிட்டுப் புறமதத்தை யனுசரித்து அசுத்தாத்துவாவைக் குறித்தும், விந்துவிற்கு முதற்காரணமாயிருக்குந் தன்மையையும் மாயைக்கு விந்துவின் காரியமாயிருக்குந் தன்மையையும் கூறுகின்றார்.

(௧௫௩.இ) யாதொரு காரணத்தால் மாயையானது கலைகளால் வியாபிக்கப்பட்ட வடிவமுடையதாயும், பசுவாகிய ஆன்மாவால் அதிட்டிக்கப்பட்டதாயு மிருக்கிறதோ, அந்தக்காரணத்தால் வேறுசில வித்துவான்கள் அந்த மாயையையும் விந்துவினுடைய அவத்தையாகக் கூறுகின்றனரென்பதாம்.

(உரை) யாதொரு காரணத்தால் மாயையும் விந்துசம்பந்தமான கலைகளால் வியாபிக்கப்பட்டதாயும், பசுவாகிய ஆன்மாவால் அதிட்டிக்கப்பட்டதாயுமிருக்கிறதோ, அந்தக்காரணத்தால் இந்த மாயையினையும் விந்துவின் காரிய ரூபமான சூக்கும பரிணாமமாகக் கூறுகின்றனரெனக. (௧௫௩.இ)

(௧௫௪—௧௫௫) அவ்வாறே பிரகிருதியையும் மகாமாயையின் தூலபரிணாமமாகக் கூறுகின்றனர். அவர்களுக்கு மகாமாயையானது தூலம் சூக்குமம் பரம் என்னும் மூன்றுவிதமான வேறுபாடுடையதாயிருக்கின்றது. அம்மூன்றனுள் தூலாவத்தையாவது புருடனுக்குப் புத்திமுதலிய போக்கியப் பொருளையுண்டுபண்ணும் குண ரூபமான பிரகிருதியாகுமென்பதாம்.

(உரை) பிரகிருதியையும் அந்த மகாமாயையின் தூலமான அவத்தையாகக் கூறுகின்றனர். இவ்வாறு விந்துவொன்றையே முதற்காரணமாகக்கூறும் அவர்களுக்கு மகா மாயையாகிய அவ்விந்து, தூலம் சூக்குமம் பரமென்னும் மூன்றுவிதமாகப் பிரிக்கப்படுகிறது. தூலமான அந்த விந்துவின் அவத்தையே, சாத்துவிகம் இராசதம் தாமதமென்னும் முக்குண ரூபமாய்ப் புருடனுக்குப் போக சாதனங்களான புத்தி முதலிய தத்துவங்களையும், போக்கியப் பொருள்களான விடயங்களையும் உண்டுபண்ணுகின்ற பிரகிருதி என்று கூறப்படுகிறதெனக. (௧௫௪—௧௫௫)

(கடுசு) சூக்குமையென்னும் விந்துவினவத்தையே மாயையெனப் பெயர் கொண்டது. இந்த மாயையானது கலைமுதலிய தத்துவங்களின் சமஷ்டி ரூபமாய் அசுத்தாத்துவ காரியங்களான எல்லாவற்றிற்கும் முதற்காரணமாயிருக்கின்றது. மோகத்தைக் கொடுக்கக்கூடியதாயிருக்கின்றது என்பதாம்.

(உரை) சூக்குமையோவெனில், மாயையென்னும் பெயருடையது. போக்திருத் தன்மைக்குக் காரணங்களான கலை முதலிய தத்துவங்களுக்கும், பிரகிருதி முதலியவற்றிற்கும், அதனுளடங்கிய தத்துவபுவன ரூபமான எல்லாவற்றிற்கும், நேராகவும் பரம்பரையாகவும் காரணமாயிருக்கின்றதென்க. (கடுசு)

(கடுஎ) (அன்றியும்) குண்டலினி என்னும் மகா மாயையே பரையென்று கூறப்படும். அது நித்தமாயுள்ளது. மந்திரங்களுக்கு முதற்காரணமாயும், வித்தியா வித்தியேசுவர ஆன்மாக்களின் சரீரங்களுக்கும் முதற்காரணமாயுமிருக்கின்றது என்பதாம்.

(உரை) பரை என்னும் மகா மாயை, மாயைக்கும் முதற்காரணமாயிருக்கின்றதென்பது கருத்து. அது நித்தமாயுள்ளது; முதற்காரணமாயிருத்தலால் என்க. (கடுஎ)

(கடுஅ) யாதொரு காரணத்தால் அந்த மாயையானது பரிணமத்துடன் கூடியதாய்க் காரிய ரூபமாயிருக்கின்றதோ, அந்தக்காரணத்தால் சரீரேந்திரியங்களையுடைய கருத்தாவைச் சாதித்துக் கொடுக்கின்றது என்பதாம். (கடுஅ)

(கடுகூ—௩டுகூ) (அவ்வாறாயின்) சுத்தாத்துவா வுண்டென்பது தடையின்றிச் சித்தித்தது. எவர்களுடைய மதத்தில் கலை வித்தை முதலியவற்றிற்குக் காரணமான மாயை நித்தமெனக் கொள்ளப்பட்டதோ அவர்களுக்குக் கலையைச் சுத்தி செய்வதால் அசுத்தாத்துவா சுத்தஞ்செய்யப்படாததாக வேண்டுமென்பதாம்.

(உரை) இவ்வாறு புறமதத்தை அனுசரித்து மாயைக்குக் காரியத் தன்மையைச் சாதித்து அம்மதத்தைத் தழுவியே

மாயை நித்தியமெனக் கூறுவோரைக் குறித்து "எவர்களுடைய மதத்திலென்னு"ந் தொடர்ச்சியால் குற்றங்கூறுகின்றார். மாயையை நித்தியமாய்க்கொண்டு சுத்தாத்துவாவை முதற்காரணமாய்க் கொள்ளவில்லையாயின், விந்துவின் காரியமான கலாத்துவாவின் சுத்தியால் மாயாகாரியமான அசுத்தாத்துவாவிற்குச் சுத்தி நிகழாது. ஒரு பொருளின் சுத்தியால் மற்றொரு பொருளுக்குச் சுத்தி நிகழாதாகையாலெனக. ஆகையால் அசுத்தாத்துவாவையும் விந்துவின் காரியமாய்க கொள்ளவில்லையாயின், விந்துவின் காரியமான கலாத்துவாவின் சுத்தியால் அசுத்தாத்துவாவிற்குச் சுத்தி நிகழாதென்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தால் அசுத்தாத்துவாவும் விந்துவின் காரியமென்றே கொள்ளத்தக்கது என்க. (கநின—கநின௯)

(அ—கை) இவ்விஷயத்தையே கூறுகின்றார்.

(க௯௦௦) யாதொரு காரணத்தால் தத்துவம் முதலியவற்றின் சுத்தியின் பொருட்டு நிவிருத்தி முதலிய ஐந்துகலைகள் சுத்தஞ் செய்யப்பட்டிருக்கின்றனவோ அந்தக் காரணத்தால் எல்லா அத்துவாக்களும் விந்துவினுடைய காரியங்களேயாகும் என்பதாம்.

(உரை) எல்லா அத்துவாக்களையும் விந்துவின் காரியமாய்க் கொள்ளவே முதற்காரணமான கலாத்துவாவின் சுத்தியால் எல்லாத் தத்துவங்களுக்கும் சுத்தி தடையின்றி நிகழுமென்பது கருத்து என்க. (க௯௦௦)

(அ—கை) ஆனால் வியாபகமான கலையின் சுத்தியால் வியாப்பியமான தத்துவ முதலியவற்றிற்குச் சுத்தி நிகழும் ஆகையால் மாயை அநித்யமெனக் கொள்ளவேண்டாமெனில் கூறுகின்றார்.

(க௯க—க௯௩) வியாபகப் பொருளின் சுத்தி மாத்திரத்தால் வியாப்பியமான அத்துவாக்கள் விஷயத்தில் சுத்தி கொள்ளப்படமாட்டாது. எதனாலெனில், முதற்காரணமாயில்லாதனவாயுள்ள கலைகட்கு எப்பொழுதுஞ் சுத்தமாயுள்ள சிவன் சிற்சத்தி என்னும்

இவர்களினுடைய சுத்தியினுலேயே எப்பொழுதுஞ் சுத்தி நிகழ வேண்டுமாதலாலென்க. இவ்வாறு எல்லா அத்துவாக்களுக்கும் காரியத்தன்மையைக் கூறுவதில் சாமர்த்தியமுடைய ஆசிரியர்களால் எல்லா அத்துவாக்களுக்கும் முதற்காரணமாகப் பரை என்னும் மகாமாயை கூறப்பட்டது என்க. (கஈக—கஈரு)

(அ—கை) இவ்விஷயத்தில் மாயை அநித்திய மென்பதில் பிரமாணமின்மையாலும், சுத்தமான விந்துவிற்கு அசுத்தாத்துவாவைக் குறித்து முதற்காரணமாயிருக்குந் தன்மை பொருத்தமாகாமையாலும், மாயை நித்தியமென்று கூறும் சுருதியோடு முரணுதலாலும், இந்தப்பக்கமானது ஒதுக்கப்பட்டதென்றெண்ணிச் சித்தாந்த அறிவுடன் கூடிய ஆசிரியர்களின் கருத்துப்பற்றி மாயைக்கு நித்தியத் தன்மையைச் சாதிக்கின்றார்.

(கஈச) இவ்விஷயத்தில் வேறு சில ஆசிரியர்கள் அத்துவாக்களுள் மாயையை அழிவற்றதாகவும் கலை முதலிய தத்துவங்களுக்கு முதற்காரணமாகவும், விந்துவால் வியாபிக்கப்பட்டதாகவும் கூறுகின்றனரென்பதாம்.

(உரை) சுவாயம்புவாகமத்தில் மாயாதத்துவமானது நித்தியமாய் உலகத்திற்கு முதற்காரணமா யிருக்கின்றதென்றும், ரௌரவாகமத்தில் வித்தியா ராஜாராஜேஸ்வரராயும் மந்திரேசுவரராயுமிருக்கும் அனந்ததேவர் மாயையைக் கலக்கஞ்செய்து கலையைத் தோற்றுவித்தாரென்றும் கூறப்பட்டிருக்கிறதென்க (கஈச)

(அ—கை) ஆனல் மாயைக்குக் காரியத்தன்மை யில்லையாயினும் அசுத்தாத்துவாவிற்கு வியாபகமாத்திரமான கலாசுத்தியால் சுத்தி நிகழுமேயென்ற ஆசங்கைக்கு அவ்வாறாயின் எப்பொழுதுஞ் சுத்தமான சிவசத்திகளுடைய சுத்தியினல் எப்பொழுதுஞ் சுத்தி நிகழட்டுமென்று கூறப்பட்ட அதிப்பிரசங்கத்தைப் பற்றிக் கூறுகின்றார்.

(கஈரு) உலகத்தில் யாதொரு காரணத்தால் வியாப்பியப் பொருளின் சுத்தியானது வியாபகப்பொருளின் சுத்தியால்

நிகழ்கின்றதோ, அந்தக் காரணத்தால் கலையின் சுத்தியினால் அசுத்தாத்துவாக்களுக்கும் சுத்தியானது ஆகமமறிந்தவர்களால் அறியத்தகுந்தது என்பதாம்.

(உரை) வியாபகமான கலையின் சுத்தியால் வியாப்பியமான அத்துவா எல்லாவற்றிற்கும் சுத்தியானது தீக்ஷையில் கன்மானுபவத்தின் வழியாய் நிகழ்கின்றதென ஆகமங்களிற் கேட்கப்படுகின்றது. இதன் கருத்தாவது—கன்மமிருக்குங்கால் ஆன்மாக்களுக்குக் கலைமுதலிய அசுத்தாத்துவாவானது பந்தஞ்செய்யுந் தன்மையுடனிருக்கிறது. பந்தஞ் செய்வதான அந்தக்கலை முதலிய அத்துவாவிற்குச் சுத்தியாவது ஆன்மாக்களுக்குப் பந்தமாயிருக்குந் தன்மையின் நிவிருத்தியேயாகும். அவ்விதமான சுத்தியானது மலபரிபாகம் நிகழ்ந்தவனுக்குத் தீக்ஷையால் நிகழுங் கன்மநாசத்தாலுண்டாகிறது. அவ்வாறே கிரணாகமத்திலும் யாதொரு பிராரத்த கன்மத்தால் அநேகம் பிறவிகளில் ஆன்மாக்களால் சம்பாதிக்கப்பட்ட * கன்மமும் ○ வருங்கன்மமும் தீக்கையால் வறுக்கப்பட்ட வித்துப்போல் தடைசெய்யப் பெற்றிருக்கின்றனவோ, அந்தப் பிராரத்த கன்மம் போகானுபவத்தால் நசிக்கின்றதெனக் கூறப்பட்டிருத்தல் காண்க. சுவாயம்புவாகமத்திலும் தருமா தருமங்களுக்கு நாசத்தைச் செய்யுந் தீக்ஷையென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் எல்லா அத்துவாக்களிலும் தனித்தனியே ஒவ்வொரு அத்துவாக்களின் அடக்கத்தால் போகானுபவரூபமான தீக்ஷையானது பொருத்தமடைகிறது என்பதால் வியாபகமான கலாத்துவாவின் சுத்தியால் வியாப்பியமான தத்துவபுவன ரூபமாயும் பொதுவாயுமிருக்கும் அசுத்தாத்துவாவிற்கும் பந்தத்தன்மையின் நிவிருத்திரூபமான சுத்தியானது பொருத்தமடைகிறதென்பதில் ஒருவிதமான குற்றமுமில்லை யென்க. (கசுரு)

* சம்பாதிக்கப்பட்ட கன்மம், சஞ்சிதகன்மம்.

○ வருங்கன்மம், ஆகாமியகன்மம்.

(அ—கை) இவ்வாறு மாயைக்கு நித்தியத்தன்மையினும் குற்றமின்மையைக் கூறிவிட்டு மீண்டும் விந்துவையே விசேடித்துக் கூறுகின்றார்.

(கஅஅ) யாதொரு மகாமாயையானது சிவனுக்குப் பரிக்கிரகசத்தியாய் இருக்கின்றதோ, எந்தச் சத்தியால் எல்லாப் பசுக்களும் வியாபிக்கப்பட்டிருக்கின்றனவோ அந்த மகாமாயையானது மந்திரங்களுக்கு முதற்காரணமாயிருக்கின்றது என்பதாம்.

(உரை) மந்திரங்கள் வாச்சியமந்திரம் வாசகமந்திரமென இருவகைப்படும். அவற்றுள் மந்திரங்களுக்குப் பொருள்களான மந்திரேசுவரர்கள் வாச்சியமந்திரங்களாகும். இவர்களுக்கு உற்பத்தியின்மையால் இவ்விடத்தில் மந்திரங்களென்பது வாசகமந்திரத்தைக் குறிக்கும். சத்தத்திற்கு முதற்காரணமாகையால் வாசகமந்திரங்களுக்கு மகாமாயை முதற்காரணமாயிருக்கின்றது. இதுவே பரமசிவனது பரிக்கிரகசத்தியாகக் கூறப்படுகிறது. இந்த மகாமாயையினாலேயே எல்லாப் பசுக்களும் முன்னர்க் கூறப்பட்டவாறுபோல் நாதமுதலியவற்றின் வழியாய் அதிட்டிக்கப் பெற்றிருக்கின்றனவென்க. (கஅஅ)

(கஅஎ) (அன்றியும்) அவ்விதமான இந்த மகா மாயையானது எக்காலத்தும் விளங்குவதாய் ஈசுவரனுடைய கிரியா சத்தியாக விருக்கின்றது. அது பசுக்களிடத்திலேயே நிலைத்திருத்தல் பற்றிப் பாசமென நிச்சயிக்கப்பட்டது என்பதாம்.

(உரை) இந்த மகாமாயையானது எக்காலத்தும் ஆன்மாக்களுக்குச் சுத்த காரியங்களை யுண்டுபண்ணும் பொருட்டு ஈசுவரனுடைய கிரியாசத்தியால் அதிட்டிக்கப் பட்டிருத்தலாலும், கிரியாசத்தியோடு கலந்து ஒன்றாயிருத்தலாலும், சிலரால் இது ஈசுவரனுடைய கிரியாசத்தியேயாகுமென்று கூறப்பட்டது. ஆனால் உண்மையில் இந்த மகாமாயை சித்தான பரமசிவனிடத்தில் சமவாய சம்பந்தத்திலிருக்கவில்லை. எதனாலெனின், இந்த மகாமாயை முதற்காரணமாகையால் சடப்பொருளென்று முன்னரேயே கூறப்பட்டிருத்தலாலென்க. ஆனதுபற்றியே இந்த

மகாமாயை முத்தான்மாக்களிடத்தில் பிரவிருத்திக்கிறதில்லை. பசுக்களினிடத்திலேயே இருத்தலால் இதுவும் பாசத்தன்மையுடனேயே கூடியிருக்கின்றது. அவ்வாறன்றிப் பாசங்களைக் கடந்த பரமசிவனிடத்தில் சமவாய சம்பந்தத்தி லிருக்கவில்லையென்க. (கசுஎ)

(கசுஎஇ) (ஆனதுபற்றியே) இந்த மகா மாயையானது இவ்வாறிருக்கிறதென்று நிச்சயிக்கப்படாமையினால் பசுக்களை அசுத்தமான யோனிகளில் எக்காலத்து மிருக்கச் செய்கின்றதென்பதாம்.

(உரை) அவ்வாறான இந்த மகாமாயையானது கிரியா சத்தியினின்றும் வேறாகப் பிரித்தறியப்படவில்லையாயின் பசுக்களை அசுத்தயோனிகளிற் சேர்க்கின்றது. கிரியாசத்தியினின்றும் வேறாகப் பிரிந்திருக்குமென்று அறியப்படுமாயின் அசுத்த யோனிகளில் பசுக்களைச் சேர்க்கிறதில்லை என்க. (கசுஎஇ)

(கசுஅ) (அன்றியும்) இந்த மகா மாயையானது, தனது ஆராய்ச்சி அறிவு ரூபமான வீரியத்தால் போக மோக்ஷங்களைக் கொடுக்கின்றது என்பதாம்.

(உரை) மகாமாயைத் தன்னைப்பற்றி நிச்சயிக்கும ஆராய்ச்சி அறிவுரூபமான வீரியத்தால் போக மோக்ஷங்களைக் கொடுக்கின்றது. அஃதாவது போக மோக்ஷங்களுக்குப் பரம்பரையாய் உபகாரஞ் செய்கிறதென்பது கருத்து. மாயையோவெனில், ஆன்மாவல்லாத பொருள்களில் ஆன்மாவென்னும் அறிவிற்குக் காரணமாயிருத்தலால் போகத்திற்கு மாத்திரம் உபகாரஞ் செய்கின்றதென்க. (கசுஅ)

(அ—கை) போக மோக்ஷ மிரண்டனுள் விந்துவிற்குப் போகத்திற்குபகாரஞ் செய்யுந் தன்மை உண்டென்பதைக் காட்டுகின்றார்.

(கசுகூ) ஆராய்ச்சி செய்யப்படாமையால் அந்த மகா மாயை, போகத்திற்குச் சாதனமான பொருள்களினறிவிற்கு

உபாயமான சவிகற்ப அறிவின் தோற்றத்திற்குக் காரணமாயுள்ள சத்தத்தின் சேர்க்கையால் எக்காலத்தும் பசுக்களை மோகிக்கச் செய்கின்றதென்பதாம். (கசுகூ)

(களo) (மோகத்தைக் கொடுக்கவே) விடயானுபவத்தானிக முக்கூடிய சுகத்தில் மிக விருப்பங் கொண்ட மனதையுடைய புருடனுக்கு எவ்வாற்றாலும் மோக்ஷமடைய முடியாமலிருக்குந் தன்மையைச் செய்கிறதாயிருக்கிறது என்பதாம்.

(உரை) விடயானுபவத்தில் சித்தத்தையுடைய புருடனுக்கு எவ்வாற்றாலும் மோக்ஷமடைதற்கு முடியாமலிருக்குந் தன்மையைச் செய்கிறதென்பது கருத்து. (களo)

(அ—கை) மோக்ஷத்திற்கு உபகாரஞ் செய்யுந் தன்மையும் விந்துவிற்குண்டென்பதைக் காட்டுகின்றார்.

(களoக) ஆன்மாவிற்கு இந்த விந்துவை யறிதலே பரமோக்ஷத்திற்குபாயமான தீக்ஷை முதலியவற்றிற்குக் காரணமாயிருக்கின்றது என்பதாம்.

(உரை) பரமோக்ஷமடைதற்கு உபாயமான தீக்ஷைக்கும், தீக்ஷைக்குப்பின் அனுட்டிக்கத்தகுந்த நித்திய நைமித்திக முதலிய கன்மத்திற்கும் இந்த விந்துவின் நிச்சய அறிவே காரணமாயிருக்கின்றது. எதனாலெனில், அறியாத விஷயத்தை அனுட்டிக்க முடியாதாகையாலென்க. நிர்ப்பீஜ தீக்ஷையிலும் ஞானப்பிரதானனான * ஆசிரியனுக்கே காரணத்தன்மை என்றறிகவென்க. (களoக)

(அ—கை) அந்தச் சிவன் முதலிய பொருள்களை அறியும் அறிவைச் சாத்திரவாயிலாக இந்த விந்துவே உண்டுபண்ணுகிறதென்று கூறுகின்றார்.

* நிர்ப்பீஜ தீக்ஷையுடையவனுக்கு நித்தியம் நைமித்திகமுதலிய கன்மங் கிடையாவாகலின் அறியாத விஷயத்தை அனுட்டிக்க முடியாதென்னும் எது சித்திக்காதென்பார்க்கு ஆசிரியன் அறிந்து செய்கின்றானென்று கூறினரென்க.

(கஎக—கஎஉ) அந்தச் சிவன் முதலிய பொருள்களை அறியு மறிவானது சொற்களைத் தொடர்ந்திருத்தலால் சொற்களின் கூட்டத்திலிருந்து தோன்றுகின்றது. அந்தச் சொற்கூட்டமானது விந்துவிலிருந்து தோன்றுகின்றது. இந்த விந்துவானது நாதத்திலிருந்து தோன்றுகின்றது. இந்த நாதமானது அநாகத விந்துவிலிருந்து தோன்றுகின்றது. இந்த அநாகத விந்துவே சுத்தாத்துவாவிற்குக் காரணமாகின்றது என்பதாம்.

(உரை) அநாகதவிந்து வென்பது சுத்தாத்துவாவிற்குக் காரணமான மகாமாயையை அறிவிக்கும் பெயர். அந்த மகாமாயையிலிருந்து நாதமும், நாதத்திலிருந்து விந்துவும், விந்துவிலிருந்து சொல்லும், தோன்றுகின்றனவென்பது கூறப்பட்டது. (கஎக—கஎஉ)

(கஎங) இந்தச் சுத்தாத்துவாவிலிருப்பவர்களுக்குப் போக்கிருத் தன்மை இருப்பதனால் சரீரம் இந்திரியமென்னும் இவற்றிற்கு விடயமான போகங்களினால் மலம் கன்மம் மாயை என்னும் இம்மூன்றும் சுத்தமாயிருக்கின்றனவென ஊகிக்கப்படுகிறது என்பதாம்.

(உரை) இந்தச் சுத்தாத்துவாவிலுள்ள வித்தியேசுவரர் முதலியோருக்குப்போகத்தை யனுபவிக்கிறவராயிருக்குந்தன்மை உண்டென்று சாத்திரங்களிற் கேட்கப்படுதலாலும், போகமானது சரீர இந்திரியம் இல்லாதவருக்கு நிகழாதாகையாலும், அசுத்த போகத்திற்குக் காரணமான சரீர முதலியவற்றிற்குக் காரணமாயுள்ள மலமாயா கன்மங்கள் அந்தச் சுத்தாத்துவாவில் கூடாவாகையாலும், சுத்த போகத்திற்குச் சாதனமான சரீர முதலியவற்றால் போகத்தை யனுபவிக்குந் தன்மைக்குக் காரணமாயுள்ள சுத்தமான அதிகாரமலமும், துணைக்காரணமான பரமசிவ வழிபாடு ரூபமான சுத்த கன்மமும், சரீர முதலியவற்றிற்கு முதற்காரணமான சுத்த மாயையும் உண்டென அனுமானஞ் செய்யப்படுகின்றது. மறைக்கும் மலத்தை நாசஞ் செய்தவர்களாயும், மாயையைத் தாண்டினவர்களாயு முள்ளவர்களுக்கே மகாமாயா புவனங்களில்

வாசமிருப்பதுபற்றி அந்த மகாமாயா புவன வாசமாவது அதற்குக் காரணமான தீக்ஷையாவது அவர்களுக்குச் சுத்தமான அதிகார மலத்தையும், பரமசிவ வழிபாடு என்னும் சுத்தமான கன்மத்தையும் சம்பாதித்துக் கொடுக்கிறதென்க. (களஙு)

(அ—கை) இன்னும் இவ்விஷயத்தையே கூறுகின்றார்.

(களஙு இ) சுத்தமான மல கன்மங்களுக்குச் சுத்தமாயையே காரணமாகின்றது என்பதாம். (களஙு இ)

(அ—கை) ஆன்மாவல்லாத பொருள்களில் ஆன்மாவென்னும் அறிவைத் தோற்றுவித்த அசுத்தமான புருடத்தன்மையென்னும் மலத்திற்கும், அசுத்த போகத்திற்குக் காரணமான அசுவமேதயாகம் பிராமணக்கொலை முதலிய கன்மத்திற்கும், அசுத்த மாயா காரியங்களின் சேர்க்கையே காரணமென்று கூறுகின்றார்.

(களச) அசுத்தமான மல கன்மங்களுக்கு அசுத்த மாயையே காரணமாகின்றது. ஆகையால் மாயை இருவகையாகக் கூறப்பட்டிருக்கிறது என்பதாம்.

(உரை) இவ்விடத்தில் அசுத்த மலமென்னுஞ் சொல்லிற்கு நம்மால் அவதாரிகையில் கூறப்பட்டவாறு புருடத்தன்மை என்னும் பும்ஸ்த்துவ மலமென்றுதான் பொருள்கொள்ளவேண்டுமேயன்றி ஆணவமலமென்று கொள்ளுதல் கூடாது. எதனாலெனின், ஆணவமலம் அநாதியாகவே மறைத்தலைச்செய்கிறதென்று சாத்திரங்களிற் கேட்கப்படுகிறபடியாலும், இடையே வந்து கூடினதாகக் கொண்டால் கூடி மறைத்தற்குக் காரணமின்மையாலு மென்க. ஆனால் கன்மமும் அநாதியெனச் சாத்திரங்களிற் கேட்கப்படுகிறதாலும், கன்மம் உள்ள காலத்திற்றான் மாயை தொழிற்படுகிறபடியாலும், கன்மத்திற்கு மாயை காரணமென்றது எவ்வாறு கூடுமெனில், கன்மத்திற்குஞ் சரீரத்திற்குமுள்ள தொடர்ச்சியானது பிரவாக அநாதியாக விருக்கின்றது. கன்மமின்றி மாயை தொழிற்படுகிறதில்லை யென்பது

உண்மைதான். ஆயினும் கன்மங்களைச் செய்தல் சரீரமுடையோ ருக்கே கூடுமாகலானும், வாசனாரூபங்களான கன்மங்கள் புத்தி யின் வழியாய் மாயையிலிருக்கின்றனவாகலானும், கன்மத்திற் கும் மாயை காரணமாகக் கூறப்படுகின்றது. ஆகையால் குற்ற மின்மை காண்க. கன்மமும் புருடனுக்குச் சுத்தத்தைச் செய் கிறதில்லை. புருடனுக்குச் செய்கிறதாகக் கொண்டால் அவ னுக்கு விகாரம் நிகழுமாகையாலென்க. உழவுமுதலிய தொழில் கள் அத்தொழிலுக்குப் பற்றுக்கோடான பூமியைச் சுத்தஞ் செய்வதுபோல் கன்மமும் அதற்குப் பற்றுக்கோடான புத்தி யைச் சுத்தஞ்செய்வதால் அந்தக் கன்மம் புத்தியின் குணமாக விருக்கிறதென்று மதங்க முதலிய ஆகமங்களிற் கூறப்பட்டிருத் தல் காண்க. ஆகையால் சுத்தமாயை அசுத்தமாயை யென்னும் இரண்டு மாயைகள் நித்தியமாய்ச் சித்தித்திருக்கின்றன. அசுத்த மாயையானது சுத்தமாயையினின்றும் மாறான வேறு காரியத் தைச் செய்கிறபடியால் அந்தஅசுத்த மாயையானது சுத்தமா யையின் காரியமாக ஆகிறதில்லை யென்பது கருத்து என்க. (களச)

(களசஇ) விந்துவிற்கும் புருடனுக்குமுள்ள பேதத்தை யறியும் விவேக ஞானம் உண்டானவுடன் மலமென்னும் மூனை நாசமடைகின்றது என்பதாம்.

(உரை) மலம் திரவியமாகையால் அது ஞானத்தால் அழி வடையாதென்று முன்னர்க் கூறியிருக்கின்றமையாலும், தீக்ஷை யால் மலநாசமுடையவர்களுக்கே சுத்தாத்துவ புவனத்தில் வாசம் நிகழ்கின்றமையாலும், சாத்திரத்தின் வாயிலாய் மகா மாயைக்கும் புருடனுக்குமுள்ள விவேக ஞானமுண்டாகின்றமை யாலும், அதிகார மலநாசம் மகாமாயா புருட விவேக ஞானமுண் டாகவே உண்டாகின்றதென்க. (களசஇ)

(களரு) மாயைக்கும் புருடனுக்குமுள்ள பேதமறியப்பட வே தரும அதருமங்களென்னும் உமி நசிக்கின்றதென்பதாம்.

(உரை) ஞானாக்கினியானது எல்லாக்கன்மங்களையுஞ் சாம்ப லாகச் செய்கிறதென்று கீதையிலுங் கூறப்பட்டுள்ளது. ஆகை

யால் கன்மம் நாசமடைந்தும் பரிபாகமடைந்த மலமுடைய வருக்கு விஞ்ஞான கேவலத் தன்மையே இருக்கின்றது. பிர கிருதி புருஷ விவேகத்திலோவெனில், அந்த விஞ்ஞான கேவலத் தன்மையுஞ் சித்திப்பதில்லை. அவ்வாறே சித்தகுருவால் பர மோக்ஷ நிராச காரிகையில் "சாங்கியர் கொள்ளும் கைவல்லிய மென்னும் முத்தியும் பொருத்தமற்றது. ஏதனாலெனில், குண தத்துவத்திற்கு மேல் அவர்களுக்கு அனுபவமில்லாமையினால் அக்குண தத்துவத்திற்குமேல் அனுபவிக்கத்தகுந்ததாயுள்ள கன்மத்துக்கு நாசமின்மையால்" எனக் கூறப்பட்டிருக்கிறதென்க. (கசரு)

(கசசு) (ஆகையால்) மாயாமலத்தைக் கடந்தவனும், மகாமாயாசம்பந்தம் பெற்றவனுமுள்ள ஆன்மாவைக்குறித்துத் திரோதானசத்தி யென்னும் சிவசத்தியானது, விந்துவின் கலக் கத்தின் பொருட்டுப் பிரவிருத்திக்கின்றது என்பதாம்.

(உரை) சாதக தீக்ஷை பெற்றுச் சுத்தாத்துவ புவனங் களில் போகத்தைக் கருதும் ஆன்மாவிற்குக் கலக்கமடைந்த விந்துவிலிருந்து திரோதான சத்தியென்னும் சிவசத்தியானது சரீர முதலியவற்றைத் தோற்றுவிக்கின்றது. அந்த விந்து வைக் கலக்கஞ்செய்வதும் அந்தத்திரோதான சத்தியேயாகு மென்க. (கசசு)

(கசஎ) எவ்விதம் சமுத்திரமானது காற்றினாலுண்டான அசைதலால் மேல்பாகத்திலேயே விகாரமடைகின்றதோ அது போல விந்துவும் சத்தியால் ஏகதேச பாகத்தில் விகாரமடை கின்றது; சகல புவனங்களையும் வியாபித்திருக்கின்றது என்பதாம்.

(உரை) சத்தியின் ஏவுதலால் விந்துவானது நெய்புழுவா வதுபோல் ஏகதேசத்தில் விகாரமடைகின்றது. பால் தயிராவது போல் முழுப்பாகமும் விகாரமடைகிறதில்லை. முழுப்பாகமும் விகாரமடைகிறதாகக் கொண்டால் விந்துவிற்கு அநித்தியத்தன் மையும், அநித்தியத்தன்மையினால் அதற்குக் காரணமாகப் பிறி தொன்று வேண்டுமெனப்பட்டு அவ்வாறேமேலுஞ் சென்று

வாம்பின்றி யோடலென்னும் அநவத்தையும் நிகழுமென்க. ஆகையால் ஏகதேசத்திற்றான் விகாரமடைகின்றது. அன்றியும், விந்துவானது தனது காரிய ரூபமான கலை முதலியவற்றால் முன்னர்க்கூறிய உலகத்தையும் வியாபிக்கின்றதென்க. (கஎஎ)

(அ—கை) இவ்விதமான நியாயத்தையே மற்ற இடத்தி லுங் கொள்ளவேண்டுமெனக் கூறுகின்றார்.

(கஎஅ) இவ்வாறே மாயையும் ஏகதேசபாகத்தில் விகார மடைகின்றது. அந்த விந்துவைப்போல தனது காரிய வருக்கம் அனைத்தையும் வியாபிக்கின்றது. இவ்வாறே அவ்வியத்தமென் னும் பிரகிருதி மாயையும் ஏகதேசபாகத்திற்றான் விகாரமடைந்து தனது காரிய வருக்கத்தை வியாபித்திருக்கின்றது என்பதாம்.

(உரை) இவ்விடத்தில் விந்துவினின்றும் மாயை பிரகிருதி என்னுமிவற்றிற்கு விசேடமொன்றுண்டு. அதாவது, மாயை பிரகிருதி என்னுமிவை தனது காரிய வருக்கங்களைமட்டும் வியா பிக்குமேயன்றிப் பிறிதொன்றின் காரியத்தை வியாபிப்பதில்லை. விந்துவாகிய சுத்தமாயையோவெனில், வியாபகமாயிருப்பது பற்றி அசுத்த மாயாகாரியத்திலும் வியாபிக்கின்றதென்க. (கஎஅ)

(அ—கை) இனி, சிவனுக்குண்டான இலயம் முதலிய அவத்தையின் வேறுபாடானது விந்துவினுடைய வெவ்வேறு அவத்தைகளை அதிட்டித்தல்பற்றி உபாதிச்சேர்க்கையால்நிகழ்ந்த தெனக் கூறுகின்றார்.

(கஎகூ) அனந்தரூபமான விந்துவானது கலக்கமடையா மலிருக்குங்காலத்து சிவனுக்குப் போகமும், அந்த விந்துவானது கலக்கமடைந்திருக்குங்காலத்தில் அதிகாரமும், விந்துவிற்கு மேற் பட்டிருக்குங்காலத்தில் இலயமும் நிகழ்கின்றன என்பதாம்.

(உரை) அனந்த ரூபமாயும், எங்கும் அதிக வியாபக முடையதாயுமிருக்கும் விந்துவானது சிவசத்தியால் கலக்கஞ் செய்வதின் பொருட்டு விடயமாகச் செய்யப்பட்டுக் காரியங் களைத் தோற்றுவிக்க நேர்முகமாயிருக்குங்காலத்தில் சிவசத்தி

யின் உத்தியோகத்தால் காத்தலென்னும் போகம் நிகழ்கிறது. அந்த விந்துவானது கலக்கஞ்செய்யப்பட்டுக் காரியங்களைத் தோற்றுவிக்கும்போது சத்தியானது வியாபாரத்துடன் கூடியிருத்தலால் அதிகாரம் நிகழ்கிறது. விந்துவானது தனது காரியங்களை ஒடுக்கிக்கொண்டு காரண ரூபமாயிருக்குங்காலத்தில் சத்தியும் வியாபாரமின்றி யிருத்தலால் இலயம் நிகழ்கின்றது என்க. (கஎகூ)

(அ—கை) ஆகையால் சிவசத்திகளுக்கு வியாபார வேற்றுமைபற்றி உபசாரமாய் வேற்றுமை நிகழ்ந்ததெனக் கூறுகின்றார்.

(கஅ௦—கஅக) சிவனிடம் சமவாய சம்பந்தத்திலிருக்கும் சத்தியானது ஒன்றேயாகும். அது உபாதிவேறுபாட்டால் இலயம் போகம் அதிகாரமென்னும் மூன்று தருமத்துடன் கூடி மூன்று விதமாயிருக்கின்றது. சிவனொருவனுமிருந்தும் அம்மூன்று விதமான சத்தியின் சேர்க்கையால் இலயம் போகம் அதிகாரமென்னும் மூன்று நிலையுடன் கூடி முறையே சிவன் சதாசிவன் மகேசுவரனென்னும் மூன்றுபேதமாக விளங்குகின்றானென்பதாம்.

(உரை) இவ்வாறே வேறு நூல்களிலும் சிவன் அதிகாரியென்றும், இலயியென்றும், போகி யென்றும் உபசாரமாய்க் கூறப்படுகிறானென்று கூறப்பட்டிருத்தல் காண்க. இந்த விந்து என்னும் இரத்தினத்தின் சோதனையால் சத்தி என்னும் இரத்தினம் சோதிக்கப்பெற்றதென்றறிந்து கொள்க என்க. (கஅ௦-கஅக)

(அ—கை) சிற்சத்தியின் சொரூபஇலக்கணம் கூறுகின்றார்.

(கஅஉ—கஅச) தடையற்ற மிகுதியான கிரணக் கூட்டத்தின் சொரூபமாயும், அழிவில்லாத தோற்றமுடையதாயும், காலதேசங்களால் பிரிக்கப்படாததாயும், நிருவிகற்பமாயும், ஆவரணமற்றதாயும், (அஃதாவது ஆணவமலமற்றதாயும்) கன்ம சம்பந்தம் மாயாசம்பந்தமான துவந்துவமற்றதாயும், உபாதானத்தன்மை

ரூபமான மகிமையற்றதாயும், அநேகவிதங்களான உபாதிகளின் சேர்க்கையாலுண்டானதாயும், ஒன்று பிறிதொன்றாய்த் தோன்றும் விவர்த்தமென்னும் மயக்கத்தினும் வேறாயுமுள்ள இலயம் முதலிய பேத சுபாவமுடையதாயும், ஒடுங்கியிருக்கும் உலகம் தோன்றுகின்றவுலகம் நிலைத்திருக்கும் உலகங்களாகப் பரிணாம மடைந்த விந்துவை அதிட்டிப்பதில் சாமர்த்தியமுடையதாயும், பிறபொருளைத் துணையாகக் கொள்ளாததாயும், அதுபற்றியே சுயம்பிரகாசமாயும், எங்கும் வியாபகமாயும், முதல் இடைகடையற்றதாயும், எல்லாப்பாசங்களினின்று விலகியதாயும், அளவிலடங்காததாயும், மிகுதிக்கு எல்லையாயும், (அஃதாவது இதற்கு மேலில்லாததாயும்) மிகச்சூக்குமமாயும், அனைவருக்கும் அனுக்கிரகஞ் செய்யுந்தன்மை வாய்ந்ததாயும் உள்ளது சிற்சத்தி என்பதாம்.

(உரை) இவ்விடத்தில் கிரணத்தின் கூட்டமென்பது, இச்சா ஞானக்கிரியைகளின் கூட்டமேயாகும். இந்தச் சத்திக்கு இலயாவத்தையிலுங்கூட உபசாரமாக வேனும் வேறுபாடில்லாமையால் இதனை நிருவிகற்ப வடிவமென்று ஆசிரியர்கள் கூறியிருக்கின்றனர். இந்தச்சத்தி அநேக விதங்களான காரிய ரூபமாயுள்ள உபாதிகளின் சேர்க்கையால் பொய்யான வேறுபாட்டுடன் கூடியது. அஃதாவது காரியங்களின் வேறுபாட்டால் அதிகார முதலிய அவத்தையில் வேறுபாடுடையது போல் காணப்படுகிறதென்பது கருத்து. அன்றியும், இந்தச் சிவசத்தியானது கூறப்பட்டவுலகங்கட்கு முதன்மையான மகாமாயையைச் சார்வதில் சாமர்த்தியமுடையது. மலமின்மையால் பிற பொருளின் துணையின்றித் தானாகவே விளக்கமுடையது. அது பற்றியே ஆன்மசிற்சத்தியினும் வேறாய் எல்லாப் பாசங்களாலும் சாரப்படாமை முதலிய் குணங்களையுடையது. அளவற்றது. அளவுக்கு எல்லையாயுள்ளது. மிகச் சூக்குமமாயுள்ளது. அனைவருக்கும் அனுக்கிரகிக்குந் தன்மையுடையது. இவ்வாறு சிற்சத்தி அறியத்தகுந்தது என்க.

குறிப்பு—உலகத்தில் ஒவ்வொருவரும் செய்யத்தகுங் காரியத்தை அறிந்து இச்சித்துச்செய்து முடிப்பது இயல்பு. அவ்

வாறே பரமசிவனுடைய சத்தியும் அறிவு இச்சை செயல் ரூபமாய் இருத்தலால் சத்தியின் மாத்திரத்தாலனைத்தையுஞ் செய்கின்றான். உயிர்களின் சத்தியானது பிற பொருளின் துணையைக் கொண்டு தொழிற்படுவதுபோல் சிற்சத்திக்கும் துணை வேண்டுமென்பாரையும், விந்துசத்தி சமவேதமாயிருந்து முதற்காரணமாவது போல, சமவேதமாயிருக்கும் இந்தச் சிற்சத்தியும் முதற்காரணமாதல் வேண்டுமென்பாரையும், விலக்குவதற்காக ஆணவமலமற்றதாயும் மாயை கன்மங்களற்றதாயும், முதற்காரணத் தன்மையற்றதாயும் என்னும் விசேடணங்கள் கூறப்பட்டன. மாயையின்றிக் கன்மம் போகத்திற்குக் காரணமாயில்லாமையாலும், கன்மமின்றி மாயை சரீர முதலியவற்றைத் தோற்றுவிக்காமையாலும், அவையிரண்டுஞ் சேர்ந்தே தொழில் புரிகின்றமைபற்றி அவை துவந்துவமெனக் கூறப்பட்டன. சத்திக்கு காரியங்களின் சேர்க்கையால் நிகழ்ந்த இலயபோக அதிகாரத் தன்மை, ஒன்று பிறிதொன்றாய்த் தோன்றும் விவர்த்தமாகிய மயக்கமன்றென்பதறிவித்தற்கு வேறாயுள்ள இலய முதலியபேத சுபாவ முடையதெனப்பட்டது என்க. (கஅ௨-கஅ௩)

(அ—கை) இந்தச் சிற்சத்தியானது பரமசிவனுடைய ஞானக்கிரியா ரூபமான அறிவேயன்றி வேறு பொருளன்றெனக் கூறுகின்றார்.

(கஅ௪இ) இந்தச் சிற்சத்தியே பரமசிவனுக்கு அழிவற்ற மகிமையாகக் கூறப்பட்டிருக்கிறது என்பதாம். (கஅ௪இ)

(அ—கை) கருத்தாவான பரமசிவனுடைய சன்னிதானத்தில் கரணமான சிற்சத்தியின் சேர்க்கையால் விந்துவானது காரியங்களைத் தோற்றுவிக்கின்றதெனக் கூறுகின்றார்.

(கஅ௫—கஅ௭இ) எவ்வாறு சமுத்திரமானது சூரியனுடைய சன்னிதானத்தில் சந்திரனுடைய சேர்க்கையால் அசைகின்ற அலைகளால் ஆகாயத்தைச் சத்திக்கச் செய்து விகாரத்தையடைகின்றதோ, அவ்வாறே விந்துவும் புதிதான விசேடத்தால் வியாபிக்கப்படாத பரமசிவனுடைய சன்னிதானத்தில் அழிவற்ற

தாயும், பரமசிவனுடைய மகிமை ரூபமாயுமுள்ள சிற்சத்தியின் சேர்க்கை விசேடத்தால் அணுசம்பந்தமான அறிவென்னும் ஆகாயத்தை விசித்திரங்களான நாத முதலிய விருத்திகளால் அடிக்கடி நிறையச்செய்து விகாரத்தையடைகின்ற தென்பதாம்.

(உரை) விந்துவானது ஒவ்வொரு புருடர்களிடத்தும் வெவ்வேறான நாதங்களினால் அப்புருடர்களின் அறிவைப்பூர்த்தி செய்கிறதென்று முன்னரே கூறப்பட்டிருக்கின்றது. ஆனால் பரமசிவனுக்கு இந்திரிய முதலிய கருவிகளில்லாமையினால், கருவியில்லாதவனுக்குக் கருத்திருத்தன்மை சித்திக்காதே யெனில், இந்தக்கேள்வி பொருத்தமற்றது. எதனாலெனில், உயிர்களிடத்து தனக்குக் கருவியான தேகத்தை அசைத்தலில் தனது சத்திமாத்திரம் காரணமாய்க் காணப்படுகிறபடியாலென்க. எனவே, சத்திமாத்திரத்தால் பரமசிவனுக்குக் கருத்திருத்தன்மை சித்திக்கு மென்பது கருத்தென்க. (கஅ௬—கஅ௭)

(அ—கை) இந்தச்சத்தியானது பரமசிவனிடத்தில் பிரிக்க முடியாத சம்பந்தத்திலிருப்பதால் பரிணமிப்பதில்லை. ஆகவே, இதற்குண்டான இச்சை ஞானம் கிரியை முதலிய வேறுபாடு காரியங்களின் வேறுபாட்டால் உபசாரமாய் நிகழ்ந்ததெனக் கூறுகின்றார்.

(கஅஅ—கஅ௯) எவ்வாறு ஒரே சூரியனுடைய சத்தியானது நீரைக்கொடுத்தல் இழுத்தல் என்னுங்காரியவேறுபாட்டால் வேறுபாட்டையடைந்திருக்கின்றதோ, அவ்வாறே விவர்த்தமற்றதாயும், பலத்துடன் கூடியதாயும் உள்ள சிவசத்தியும், தான் ஒன்றாயிருந்தும் காரிய வேறுபாட்டால் வேறுபாட்டையடைகின்றது என்பதாம். (கஅஅ—கஅ௯)

(அ—கை) இவ்விஷயத்தையே விரித்துக் கூறுகின்றார்.

(க௯௦) அழிவில்லாத இந்தச் சிற்சத்தியானது, தான் இச்சா ரூபமாயில்லாவிடினும் இச்சையென்னுங்காரியத்தைச்

செய்வதால் இச்சாசத்தியென்றும், தான் * ஞான ரூபமாயில்லாவிடினும் ஞானமென்னுங் காரியத்தைச் செய்வதால் ஞானசத்தியென்றும், தான் கிரியா ரூபமாயில்லாவிடினும் கிரியையென்னுங் காரியத்தைச் செய்வதால் கிரியாசத்தி யென்றும் கூறப்படுகிறது என்பதாம்.

(உரை) அறியத்தகுந்தபொருள் செய்யத்தகுந்தபொருள் முதலிய உபாதி வேறுபாட்டால் ஞானம் கிரியை முதலிய வேறுபாட்டையடைகிறதென்பது கருத்து என்க. (கக௦)

(அ—கை) இவ்விஷயத்தை மிகுதியாகக் கூறுவதால் என்னபயனென்று சுருக்கிக் கூறுகின்றார்.

(ககக) சாத்திரங்களாலும், உலகத்திலுள்ளவர்களாலும் இது இதனுடைய காரியமென்று எந்தக் காரியம் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்தக்காரியமனைத்தையும் எண்ணமுடியாத மகிமையையுடைய சிற்சத்தியே செய்கின்றது என்பதாம்.

(உரை) இதனால் இந்தச்சிற்சத்தியானது எல்லாப்பொருள்களுக்கும் அதிட்டானமாயிருக்கிறதென்று கூறப்பட்டதாக முடிந்தது. அவ்வாறே வேறு நூல்களிலும், சிவகலையானது எந்தப் பாவகலையில் வியாபித்து அதிட்டிக்கவில்லையோ, அவ்விதமான இரண்டு சந்தானத்திலிருக்கும் பாவகலை ஒன்று கிடையாதெனக் கூறப்பட்டிருக்கின்றதென்க. (ககக)

(அ—கை) சிற்சத்தியானது தான் விகாரமடையாமல் எல்லாப் பொருள்களையும் செய்வதென்னும் விஷயத்தைத் திருட்டாந்த மூலமாக நிச்சயம் செய்கின்றார்.

(ககஉ—ககங) எவ்வாறு மனதினால் கவரமுடியாத மகிமையையுடைய கற்பக விருக்ஷமும், சிந்தாமணியென்னும் இரத்தினமும், தான் ஒரு பொருளாக இருந்துகொண்டே அநேக

---

* ஞானரூபமாயில்லாவிடினு மென்பதற்குச் சிறப்பான ஞானரூபமாயில்லாவிடினுமென்பது கருத்து.

விதமான விரும்பப்படும் பொருள்களைப் பிறருக்குக் கொடுக்கின்றனவோ, அவ்வாறே மதிக்கமுடியாத பரமசிவனுடைய சிற்சத்தியும் ஒருவிதமான விசேடமுமற்றதாய் ஒரு பொருளாகவிருந்துகொண்டே, எல்லாப்பொருள்களையுந் தோற்றுவிப்பதில் சாமர்த்தியமுடையதாகின்றது என்பதாம். (கசுஉ--கசுங)

(அ—கை) சிற்சத்தி அறிவுடைப் பொருளாகையால் விகாரத்தையடைகிறதில்லையெனக் கூறுகின்றார்.

(கசுச) இந்தச் சிற்சத்தியானது ஒளி ரூபமாயும் சடப்பொருளன்றி அறிவுடைப்பொருளாயுமிருக்கின்றமையால், இது உண்டாகிறதில்லை. அதுபற்றியே நசிக்கிறதுமில்லை. குறைவையடைகிறதில்லை. அதுபற்றியே விருத்தியடைகிறதுமில்லை என்பதாம். (கசுச)

(அ—கை) இவ்விஷயத்தையே எதிர் மறைத் திருட்டாந்தத்தில் வைத்துச் சாதிக்கின்றார்.

(கசுரு—கசுருஇ) எந்தப்பொருளானது தோற்ற நாசங்களுடனும் குறைதல் அதிகத்தன்மைகளுடனும் கூடியிருக்கின்றதோ, அந்தப்பொருள் ஒளி வடிவமற்றதாயும் சடப்பொருளாயுங் காணப்படுகின்றது. சரீரம் முதலியன போல. சிற்சத்தி அவ்வாறு காணப்படவில்லை. ஆகையால் விகாரமற்றதாகுமென்பதாம்.

(உரை) யாதொரு காரணத்தால் இந்தச் சிற்சத்தியானது ஒளிவடிவமாயில்லாமலும், சடப்பொருளாயும் இருக்கவில்லையோ, அந்தக் காரணத்தால் இது விகாரத்தை யடைகிறதில்லை என்பது கருத்து என்க. (கசுரு—கசுருஇ)

(அ—கை) இவ்வாறு இந்தச் சிற்சத்திக்கு பால் தயிராவது போல், முழுப்பாகத்திலும் விகாரம் இல்லை எனப்பட்டது. இனி மேலே கூறப்பட்ட இரண்டு காரணங்களைக்கொண்டே ஏகதேசபாகத்திலும் விகாரமில்லையெனக் கூறுகின்றார்.

(கக௯௬இ) யாதொரு காரணத்தால் அறிவற்ற சடப்பொரு ளுக்கே உலகத்தில் பரிணமங் காணப்படுகின்றதோ, அந்தக் கார ணத்தால் சிற்சத்திக்குமேலே கூறப்பட்டவாறு ஒளிவடிவமாயி ருத்தலாலும், அறிவுடைப் பொருளாயிருத்தலாலும் என்னும் இரண்டு உபதேசங்களாலும் ஏகதேச பரிணமமுங் கிடையாது என்பதாம். (கக௯௬இ)

(அ—கை) இவ்விஷயத்தையே விரித்துக் கூறுகின்றார்.

(கக௯எஇ) பரிணமத்தால் வாட்டமடையாதவனும், நித் தியனுமுள்ள பரமசிவனைச் சமவாய சம்பந்தத்தால் சார்ந்திருக் கும் சிற்சத்தியும், சிவனோடு தாதான்மியமாயிருப்பதுபற்றிப் பரிணமிக்கிறதில்லை என்பதாம்.

(உரை) பரிணமமற்றவனும், நித்தியனும், சேதனனு முள்ள பரமசிவனைத் தாதான்மிய ரூபமான சமவாயச் சேர்க்கை யால் பற்றியிருக்கும் சிற்சத்தியும் பரிணமத்துடன் கூடாதது. அவ்வாறே வேறு நூல்களிலும் சித்தினுடைய சத்தியானது அசேதனமாகாது எனக் கூறப்பட்டிருக்கிறதென்க. (கக௯எஇ)

(கக௯அஇ) இந்தச் சிற்சத்தியானது எல்லாக் காரியங்களுக் கும் காரணமாயிருத்தலால், பரமசிவனைப்போலும், தானுண்டாவ தற்கு வேறு காரணமின்மையால் விந்துவைப்போலும் நித்திய மாகக் கொள்ளப்படுகிறது என்பதாம்.

(உரை) இதனை அநித்தியமெனக்கூறின் அதற்குக் காரணம் வேண்டப்படும். அக்காரணமநித்தியமெனில், அதற்குங் கார ணம் வேண்டப்படும். இவ்வாறே மேலுஞ்சென்று வரம்பின்றி யோடலென்னுங் குற்றத்திற் கிடனுமென்பது கருத்தென்க.

(கக௯அஇ)

(கக௯௯—உ௦௦) அவ்வாறே சிற்சத்தியை ஆதாரமாகக் கொண்டே எல்லாப் பொருள்களுந் தோன்றுகின்றன. அந்தச் சிற்சத்தியானது உற்பத்தி இல்லாதது. இந்தச் சிற்சத்தி இருந் தாற்றான் உலகமிருக்கின்றது. சிற்சத்தி இல்லையாயின் உலகம்

ஒருபொழுதுமிருக்கிறதில்லை. ஆகையால் அந்தச் சிற்சத்தியி னுடைய இருப்பானது எவருக்கு எந்தப் பிரமாணத்தால் சாதிக்க முடியும். எந்தப் பிரமாணத்தால் அதன் சொரூபம் அறிவிக்கப் படும் என்பதாம்.

(உரை) உலகத்திற்கு முதற்காரணமான விந்துவை அதிட் டிக்கின்ற யாதொரு கருத்திரு சத்தியான சிற்சத்தியினுடைய இருப்பினுற்றான் காரியமான சுத்தாசுத்த உலகங்களிருக்கின் றனவோ, அவ்விதமான சிற்சத்தியின் இருப்பு வேறு எந்தப் பிரமாணத்தால் நிச்சயிக்கமுடியும். சிற்சத்தி இல்லையாயின், காரியப்பிரபஞ்சத்தின் தோற்றமே இல்லையாகுமாகையால், சிற் சத்தி இன்றியமையாது சித்தித்திருக்கவேண்டுமென்னும் அருத் தாபத்திப் பிரமாணத்தால் சிற்சத்தி சித்தித்ததென்பது கருத்து என்க. (கககூ—உ00)

(அ—கை) இவ்வாறு சிற்சத்தியைச் சாதித்துவிட்டு சிற் சத்திக்கும் அசித்துக்கும் அத்துவிதங்கூறும் வாதிகளின் மதத் தைக் கூறுகின்றார்.

(உ0க) சில வித்துவான்கள் இந்தச் சிற்சத்தியைச் சத்துப் பொருளாகவும் அசத்துப்பொருளாகவும் விவர்த்திக்கும் உல்லாச முடையதெனவும், அத்துவிதமெனவுங் கூறுகின்றனரென்பதாம்.

(உரை) சில வித்துவான்களென்றதனால் அந்தக் கொள்கை மறுக்கப்படுமென்பது அறிவிக்கப்பட்டது. அவர்கள் சித்துரூப மான சத்தியே மெய்ப்பொருள். அச்சத்தி தனது விவர்த்தத் தால் சுத்தாசுத்தபுவன ரூபங்களான பொய்ப் பொருள்களை விளக்கஞ் செய்கின்றது. ஆகையால் இரண்டான பொருளின் தோற்றம் இரண்டு சந்திரனென்னும் அறிவுபோல்மயக்க அறிவே யாகுமென்று கூறுகின்றனரென்க. (உ0க)

(அ—கை) இவ்விஷயத்தையே திருட்டாந்த மூலமாக விளக்குகின்றார்.

(உ0உ—உ0உஇ) கயிறனது எவ்வாறு பாம்பென்றும், உலந்தமாலையென்றும் மயக்கத்தைச் செய்வதாய், அசத்திய மான பாம்பு, மாலை முதலிய பொருள்களை யுண்டுபண்ணுகிற தில்லையோ, அவற்றின் தோற்றத்தைமாத்திரஞ் செய்கிறதோ, அவ்வாறே சிற்சத்தியும் தான் ஒரு பொருளாயிருந்துகொண்டு அநேக பொருள்களாகத் தோன்றுகின்றது. அத்தோற்றம் மயக்கமாகும் என்பதாம். (உ0உ—உ0உஇ)

(உ0௩—உ0௫இ) இந்த மயக்கமானது ஆதாரமற்றதாயும், எல்லா நியாயங்களோடும் முரண்படுவதாயும், ஆராயுங்கால் காரண மற்றதாயுமிருக்கின்றமையால் இது பந்தமோக்ஷங்களுக்குக் கார ணமாகிறதல்லை. ஆகையால் பந்தமும், பந்தமுடையவனும், பந்தத்தைச் செய்பவனும் ஆராயுங்காலில்லையாகும். நித்திய முத்தமாயும், இரண்டற்றதாயும், அறிவற்றதாயுமிருக்கும் சத்தி என்னும் அறிவு ஒன்றே உண்மைப்பொருளாகும். ஆனல் உல கத்தில் பேத அறிவுங்காணப்படுகின்றதே அது எவ்வாறு பொ ருந்துமெனில், உலகத்திற்காணப்படும் பேதவியவகாரம், இந்த ஆலமரத்தின்கண் பூதமிருக்கிறதென்று சொல்லுபவர் அது இருக் கிறதாகத் தானறியாதுகூறும் பழமொழிபோல் பிரமாணமற்ற தாகுமென்பதாம். (உ0௩—உ0௫இ)

(அ—கை) பேத அறிவு பிரமாண மற்றதாகுமென்றல் எவ் வாறு கூடுமென்பார்க்கு அவன் கூற்றைக் கூறுகின்றார்.

(உ0௬) அவ்வாறே காணப்படும் பொருள்களினுடைய வேற்றுமையானது பிரத்தியக்ஷத்தாலறியத் தகுந்ததில்லை. எத ஞலெனில், பிரத்தியக்ஷ அறிவானது கற்பிக்கப்பட்ட பொருளை விடயமாகக்கொண்டு நிகழ்கின்றதாகையாலென்க. ஆதலால், இது பாலர்கள் ஊமையர்களின் அறிவிற்கு நிகராகவே ஆகுமென் பதாம்.

(உரை) பொருளின் சாமர்த்தியத்தாலுண்டாகும் நிருவிகற்ப அறிவுதான் பிரத்தியக்ஷ அறிவாகும். ஆகையால் அதற்குத்தான் பிரமாணத் தன்மையுண்டு. பேத அறிவோவெனில், விகற்ப

ரூபமாகையால் அது பிரத்தியக்ஷமாகச் சித்திப்பதில்லை என்பது கருத்து என்க. (உ0சு)

(உ0சுஇ) (அன்றியும்) பிரத்தியக்ஷ அறிவானது பொருள்களைத் தோற்றுவிக்குமேயொழிய ஒரு பொருள்களையும் விலக்குகிறதில்லை என்பதாம்.

(உரை) அவ்வாறே வேறு நூல்களிலும் "ஓ அறிஞர்களே!" பிரத்தியக்ஷமானது தோற்றுவிக்குமேயொழிய விலக்குகிறதில்லை எனக் கூறப்பட்டிருத்தல் காண்க. பேதமென்பது ஒரு பொருளின் தன்மை பிறிதொரு பொருளினிடத்து இல்லாமையை யறிதலை முன்னிட்டு நிகழக் கூடியதாகையால், காணப்படும்பொருளை விடயமாகக்கொண்ட பிரத்தியக்ஷத்தால் அபாவமான பேதத்தை யறிதல் கூடாதென்பது கருத்தென்க. (உ0சுஇ)

(அ—கை) சவிகற்ப அறிவைப்பற்றிக் கூறுகின்றார்.

(உ0எ—உ0அ) சத்தத்தின் சம்பந்தத்தை முன்னிட்டு உண்டாகும் விசேடண அறிவானது தேச காலங்களைத் துணையாகக்கொண்ட இந்திரியங்களால் உண்டுபண்ணப்படுகிறது. ஆகையால் அந்த அறிவு பொருளின் சாமர்த்தியத்தால் உண்டான அறிவாக ஆகிறதில்லை. அன்றியும், அதுநினைவு சங்கற்பம் முதலிய அறிவுபோல் கொள்ளப்பட்டிருக்கின்றது என்பதாம்.

(உரை) சொல்லின் சேர்க்கையை முன்னிட்டு யாதொரு சவிகற்ப அறிவானது தேசகாலங்களைத் துணையாகக்கொண்டு இந்திரியங்களால் உண்டுபண்ணப்படுகிறதோ, அந்த அறிவு தேசகாலங்களைத் துணையாகக்கொண்டதனால், பொருளின் சாமர்த்தியத்தால் நிகழ்ந்ததில்லை. நினைவு சங்கற்பம் என்னுமிவைபோல அது பிரமாணமாகக் கொள்ளப்படுகிறது. அவ்வாறே பெரியோர்களும் கற்பனையற்றதாயும் மயக்கமற்றதாயுமிருக்கும் அறிவே பிரத்தியக்ஷமெனக் கூறுகின்றனரென்க. (உ0எ—உ0அ)

(உ0அஇ) (அதுபற்றியே) பேதத்திற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணமின்மையால், அனுமானப் பிரமாணமும், ஆகமப் பிரமாணமும் சம்பவிக்கிறதில்லை என்பதாம்.

(உரை) காணப்படும் பொருள்களின் பேதங்களுக்குப்பிரத்தியக்ஷத்திற்கு விடயமாயிருக்கும் தன்மை இன்மையால் அவ்விஷயத்தில் அநுமானமும் ஆகமமும் பிரமாணமாகாவென்க. (உ0அ)

(அ—கை) அஃதெவ்வாறென்பார்க்குக் கூறுகின்றார்.

(உ0கூ) அந்த அநுமானம் ஆகமமென்னும் இரண்டு பிரமாணங்களும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சித்தித்த பொருளிலேயே விகற்பத்தைத் தோற்றுவிக்கின்றமை பற்றிப் பிரமாணமாகின்றனவென்பதாம்.

(உரை) யாதொரு காரணத்தால் அந்த அநுமானம் ஆகமமென்னும் இரு பிரமாணங்களும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சித்தித்த பொருளிலேயே விகற்பத்தை யுண்டுபண்ணுகின்றமை பற்றிப் பிரமாணங்களாகின்றனவோ, அந்தக்காரணத்தால் அநுமானம் ஆகமமென்னும் பிரமாணங்களால் பேதத்தை அறியமுடியாதென்க. சம்பந்த அறிவானது பிரத்தியக்ஷத்தை முன்னிட்டு நிகழ்கின்றமையாலும், விகற்ப ரூபமாயிருத்தலாலும், பிரத்தியக்ஷ சித்தமான பொருளிலேயே அநுமான ஆகமப் பிரமாணங்கள் பிரவிருத்திக்கின்றன. பேதத்தைப் பிரத்தியக்ஷத்தால் அறியமுடியாதென்ற விஷயம் முன்னரே கூறப்பட்டிருக்கிறது. அது பற்றி காணப்படும் பொருள்களினுடையபேதத்தில் ஒருவிதமான பிரமாணமும் இல்லாமையால் பேதத்தோற்றம் சொற்பனத்தோற்றம்போல் அசத்தியமேயாகுமென்க. (உ0கூ)

(உகo) (அதுபற்றியே) மூடபுத்தியுடைய புருடனானவன் தானாகவே தோன்றிய சந்தேகமென்னும் பாசங்களாலே கட்டப்படுகின்றான். பின்னர் அவைகளாலேயே விடுதலையடைகின்றான். ஆகையால் பந்தமும் மோக்ஷமும் சத்தியமில்லை என்பதாம். (உகo)

(அ—கை) இவ்வாறு சத்தியொன்றே உண்மைப்பொருளென்று கூறும் அத்வைதிகளின் மதத்தைக் கூறிவிட்டு இனிச் சித்தாந்தத்தைக் கூறுகின்றார்.

(உகக) இவ்வாறு அத்துவிதமென்னும் பிசாசினால் பிடிக்கப்பட்டவர்களாய்ப் புலம்புகின்றவாதிகள் தயையுடன் கூடினவர்களாயும், சித்தாந்தவறிவைக் கொடுப்பவர்களாயுமுள்ள ஆசிரியர்களால் அறிவிக்கப்படுகின்றனரென்பதாம். (உகக)

(அ—கை) எவ்வாறு அறிவிக்கப்படுகின்றாரென்பார்க்குக் கூறுகின்றார்.

(உகஉ) அறிவு ரூபமான சிற்சத்திக்கு ஒன்றாயிருக்குந் தன்மை வியவகார சித்தங்களான பிரமாணங்களால் சாதிக்கப்படுமேயானால் அந்தப் பிரமாணங்களாலேயே, அந்தச் சிற்சத்திக்கு இரண்டுடன் கூடியிருக்குந்தன்மை நிச்சயமாய்ச் சித்தித்தது என்பதாம்.

(உரை) சம்வித்து என்னும் சிற்சத்தியானது ஒன்று என்ற விடயம் உலகவியவகார விடயங்களான பிரமாணங்களாலே நும்மால் சாதிக்கப்படுமேயானால், அந்தப் பிரமாணங்கள் உண்மையாயிருத்தல்பற்றி இரண்டாவது பொருளில்லை என்னும் அத்துவிதத் தன்மை சித்திக்காது. அந்தப் பிரமாணங்களும் அசத்தியமென்று கொண்டால், அசத்தியமான அவை சம்வித்து ரூபமான சிற்சத்திக்குச் சத்தியமான ஒன்றாயிருக்குந் தன்மையை எவ்வாறு சாதித்துக்கொடுக்கும். ஆகையால், எவ்வாற்றானும் நும்மால் கூறப்படும் அத்துவிதத்தன்மை சித்திக்காதென்பது கருத்து என்க. (உகஉ)

(அ—கை) இவ்விடயத்தையே விரிவாய்க் கூறுதற்பொருட்டு அனுமானத்தின் வடிவத்தைக் காட்டுகின்றார்.

(உகங) வெளிப்படையானதருமி, (அஃதாவது பக்கம்) திருட்டாந்தம், ஏது என்னுமிவை, உடனிகழ்ச்சியால் விருத்தி செய்யப்பட்டுப் புலப்படாத தருமத்தினுடைய (அஃதாவது துணி பொருளினுடைய) சித்தியின் பொருட்டுச் சாமர்த்தியமுடையனவாகவாகின்றன என்பதாம்.

(உரை) திருட்டாந்தமான அடுக்களையில் புகைக்கும் நெருப்பிற்கும் உண்டான விட்டுப்பிரியாமை யென்னும் வியாத்தியை

யுணர்ந்து பின்னர்த் துணிபொருளுக்குப் பற்றுக்கோடான மலை முதலியவற்றில் புகையுடைமை என்னும் ஏதுவால் கண்ணுக்குப் புலப்படாத தீயுடைமையென்னும் துணிபொருளானது ஊகிக்கப்படுகின்றது. ஆகையால், துணிபொருளினின்றும் ஏது திருட்டாந்த முதலியன வெளிப்படையாய் அறியப்படுவனவாயும், வேறானவையாயும் இருக்கின்றனவாகக் கொள்ளத்தகுந்தது என்க. (உகங)

(உகச) துணியப்பட்ட பொருளானது உலகத்தில் சாதனங்களால் சாதிக்கப்படுகிறதில்லை. அவ்வாறே துணியப்படாத ஏது திருட்டாந்தங்களாகிய சாதனங்களாலும் நிச்சயமான பொருள் சாதிக்கப்படுகிறதில்லை. துணிவும் துணியாமையுஞ் சேர்ந்து ஓரிடத்தில் இருப்பனவல்ல வென்பதாம்.

(உரை) துணியப்பட்ட பொருள் துணியப்படுதற்காக வேறு பொருளைத் துணையாகக் கொள்ளுகிறதில்லை. அவ்வாறே துணியப்படாத ஏது திருட்டாந்தங்களும் துணிவைச் செய்யாதென்பது கருத்து என்க. (உகச)

(உகரு—உகசு) (ஆகையால்) நிச்சயிக்கப்பட்ட துணிபொருளையுடைய சபக்கமும், சந்தேகத்துக்கு விடயமான துணிபொருளையுடைய பக்கமும் வேறாயிருக்குமானால், அனுமானமானது பிரமாணமாகும். அவை இரண்டும் ஒன்றாயிருக்குமேயானல், ஏதுவும் துணிபொருளும் சேர்ந்து ஓரிடத்திலிருக்கக்கூடிய திருட்டாந்தமில்லாமற் போய்விடும். திருட்டாந்தமில்லையாயின் எந்தப் பொருளுக்கு எந்தப் பொருளுடன் எவ்விடத்தில் வியாத்தியுணர்ச்சியுண்டாகும். இவ்வித தோஷங்கள் நிகழ்கின்றமைபற்றி, அத்துவித சித்தியின் பொருட்டு உபயோகிக்கப்பட்ட அனுமானப் பிரயோகம், தான் நிறைவேறுதற்காக நிச்சயமாய்ப் பேதத்தைக் கூறுகின்றது என்பதாம்.

(உரை) யாதொரு காரணத்தால் நிச்சயிக்கப்பட்ட துணிபொருளுக்கிடமான சபக்கமும், சந்தேகத்திற்கு விடயமான துணிபொருளுக்கிடமாயுள்ள பக்கமும், ஒன்றாயிருக்குமாயின்,

துணியப்பட்ட புகையென்னுமேதுவுடன் துணியப்படும் தீ யென்னும் பொருள் ஓரிடத்திலிருக்குமென்பது திருட்டாந்த மூலமாகச் சித்திக்கிறதில்லையோ, அந்தக் காரணத்தால் முன்னர்க் கூறப்பட்ட பக்க சபக்கங்கள் ஒன்றாயிருக்குமாயின், அனுமானத்தால் துணி பொருளின் நிச்சயம் உண்டாகிறதில்லை. திருட்டாந்தமின்மையால் விட்டு நீங்காத உடநிகழ்ச்சி உணர்வும் உண்டாகிறதில்லை என்று 'திருட்டாந்தமில்லையாயின் என்பதனாற் கூறுகின்றார். இவ்வாறாகவே அத்துவிதம் சித்திப்பதின்பொருட்டு அனுமானப்பிரயோகஞ் செய்யுங்கால் பேதம் இன்றியமையாது வேண்டுமென்று' அத்துவிதசித்தியின் பொருட்டு என்பதனாற், கூறுகின்றார். தான் நிறைவேறுதற்பொருட்டு என்பதற்குத் தனது சாதனங்களான ஏது முதலியவற்றின் சித்தியின் பொருட்டு என்பது கருத்தாகக் கொள்கவென்க. (உகரு-உகசு)

(அ—கை) அன்றியும், சிற்சத்தி ஒன்றே என்னும் வாக்கியத்தால் பிறிதொரு சிற்சத்தி இல்லை என்று விலக்கப்படுமேயன்றிச் சிற்சத்தியின் வேறான சடப்பிரபஞ்சம் இல்லை யென விலக்கப்படாதென்று கூறுகின்றார்.

(உகஎ—உகஎஇ) சம்வித்து என்னுஞ் சிற்சத்தியானது இரண்டற்றதென்ற விலக்கும் அவர் மதத்தில் பிறிதொரு சிற்சத்தி இல்லையென்று சிற்சத்தி விஷயத்திற்றான் பொருத்தமடைகின்றது. அதனினும் வேறான சடப்பொருள் விஷயத்தில் பேதத்தன்மை சித்திக்கின்றது. சித்திக்கவே, ஆசை மாத்திரத்தால் விருத்தியடைந்த அவர்களுடைய மேற்கோள் பிளக்கப்பட்டது என்பதாம். (உகஎ-உகஎஇ)

(அ—கை) ஆகமப் பிரமாணத்தால் அத்துவிதம் சித்திக்கிறதென்று கூறுவோமெனில், அதனாலும் அத்துவிதஞ் சித்திக்காதெனக் கூறுகின்றார்.

(உகஅ—உகக) ஆகமமானது சிற்சத்தி இரண்டற்றதென்று கூற இச்சிக்குமாயின், அந்த ஆகமமும் அந்தந்தச்சொற்களால் அறிவிக்கப்பட்ட பொருள் விசேடத்தினுடைய கூட்டத்தாலுண்டாகும் பொருளை எவ்வாறு கூறுமென்பதாம்.

(உரை) ஆகமம், சிற்சத்தி இரண்டற்றதென்று கூற இச்சிக்குமாயின், அந்த ஆகமமானது, சாதி, குணம், கிரியை, திரவியமென்னும் இவற்றையறிவிக்கும் பதங்களால், அறிவிக்கப்படும் பொருள்களின் சேர்க்கை ரூபமாய் இந்தப் பசுவானது கிராமத்தை நோக்கிச் செல்லுகிறதென்னும் அறிவை எவ்வாறு தோற்றுவிக்கும். * இதன் கருத்தாவது—உண்மையான ஆகமத்தைப் பிரமாணமாகக்கொள்ளின், அந்த ஆகமமும், அவ்வாகமத்தின் அவயவங்களான பதங்களும், அப்பதங்களின் பொருள்களான திரவியம் குணம் முதலியனவும் சத்தியமாகச் சித்திக்கின்றன. சித்திக்கவே, அத்துவித விரோதமாகுமென்பதாமென்க.

(௨௧௮-௨௧௯)

(௨௨௦) ஆகமமும், அனுமானமும் அத்துவிதத்தைத்தடை செய்வதில் சாமர்த்தியமாயுள்ள அவற்றினங்கங்களான திரவியம், குணம், கிரியை, ஏது திருட்டாந்தம் என்னும் இவை முதலியவற்றால் தடுக்கப்பட்டு அத்துவிதத்தை எவ்வாறு சாதித்துக் கொடுக்குமென்பதாம். (௨௨௦)

(அ—கை) இனி, சிற்சத்தி ஒன்றே என்று கூறும் சுருதிகள் ஏனைய பிரமாணங்களுடன் முரணுதலால், அவற்றிற்கு முக்கியப்பொருள் கொள்ளக்கூடாதெனக் கூறுகின்றார்.

(௨௨௧—௨௨௩) அன்றியும், பசுப்பிராமணன், ஆதித்தன் † யூபஸ்தம்பம் என்பது முதலாக உலகத்திலும் வேதங்களிலுமுள்ள சொற்கள் முக்கியப் பொருளைத் தள்ளிவிட்டுக் கௌணமான பொருளில் இருக்கின்றனவாகக் காணப்படுகின்றனவென்பதாம். (௨௨௧—௨௨௩)

* பசு, சாதியையும், வெண்மை, குணத்தையும்; கிராமம், திரவியத்தையும், செல்லுதல், கிரியையினையும் அறிவிக்கும் பதங்களாம்.

† பசுப்பிராமணனென்பது உலகச்சொல். ஆதித்தன் யூபஸ்தம்பமென்பது வேதச்சொல். பிராமணன் பசுவாகாளுகையாலும், யூபஸ்தம்பம் ஆதித்தனுகாதாகையாலும், முக்கியப்பொருள் கொள்ளுதல் பொருந்தாது. ஆகையால் பிராமணன் பசுவிற்குச் [illegible]. யூபஸ்தம்பம் ஆதித்தனுக்குச் சமானமென்னும் உபசாரப்பொருள் இலக்கணையால் கொள்ளவேண்டுமென்பதுகருத்து.

(அ—கை) அனுமானமோவெனில் விட்டுப்பிரியாமையென்னும் வியாத்தியுணர்ச்சியிருக்கும்போதுதான் பிரமாணமாகுமாகையால், பொருளைச் சாதித்துக்கொடுக்கும் தன்மை அனுமானத்திற்கில்லையென்று ஒதுக்க முடியாதெனக் கூறுகின்றார்.

(உஉஉ) வியாத்தியானது குற்றமற்றதாயிருக்குமாயின், ஏதுவானது துணிபொருளை நிச்சயித்துக் கொடுக்காமலிருப்பதில்லை என்பதாம். (உஉஉ)

(அ—கை) ஆகையால் பேதத்தைச் சாதித்துக் கொடுக்கும் அனுமானத்தோடு முரண்படுகின்றமைபற்றிச் சிற்சத்திக்கு ஒன்றாயிருக்குந் தன்மையையறிவிக்கும் வேதங்கள் அதற்கு நித்தியத்தன்மை வியாபகத்தன்மை முதலிய ஒப்புமையைத் தோத்திரஞ்செய்வதில் கருத்துடையனவெனக் கூறுகின்றார்.

(உஉ௩) ஆகையால் ஏதுரூபமான பலத்தால் வியாபிக்கப்பட்ட சுருதிகள், அத்துவித ரூபமான முக்கியப் பொருளையும் விட்டுச் சிற்சத்தியினுடைய தோத்திரத்தைச் செய்கின்றனவென்பதாம். (உஉ௩)

(உஉ௪—உஉ௫) (அன்றியும்) பெயர் முதலிய விசேடத்தின் நினைவை முன்னிட்டுத் தோன்றுவதாயும், ஐயமற்றதாயும், பிறட்சியற்றதாயும், அதுபற்றியே பிரமாணமாயுமிருக்கும் சவிகற்பப்பிரத்தியக்ஷ அறிவானது தனக்கு முன்னர்த் தோன்றியயாதொரு நிருவிகற்பப் பிரத்தியக்ஷத்தால் தோன்றுகின்றதோ, அந்த நிருவிகற்பப் பிரத்தியக்ஷமும், ஒரு பொருளுக்குப் பிறபொருளினின்றும் வேற்றுமை ரூபமான பேதத்தைக் கொள்ளுகிறது. அவ்வாறில்லையாயின், வேற்றுமையில்லாத நிருவிகற்ப அறிவிற்குப்பின் பெயர் முதலிய விசேடணத்துடன் கூடிய சவிகற்ப அறிவும் தோன்றுகிறதில்லையாகுமென்பதாம்.

(உ௬) இவ்விஷயத்தில் பெயர் பிரமாணம் முதலிய விசேடங்களின் நினைவை முன்னிட்டுத் தோன்றும் சவிகற்ப அறிவும் ஐயமற்றதாயும், பிறட்சியடையாமை முரண்படாமை

முதலியவற்றுடன் கூடியதாயுமிருத்தலால், பிரத்தியக்ஷப்பிர மாணமென்றே கொள்ளப்படுகிறது. அவ்வாறே பெரியோர்களும் அதன் பின்னர்ப் பொருளின் தருமங்களான சாதி உருவ முதலியவற்றுடன் கூடி அப்பொருள் புத்தியாலறியப்படுகிறது; அந்த அறிவும் பிரத்தியக்ஷ அறிவெனக் கொள்ளப்பட்டிருக்கிறதெனக் கூறுகின்றனர். ஆகையால் அவ்வாறே பிரமாணமான பிரத்தியக்ஷ அறிவும் தனக்கு முன்னர்த் தோன்றிய யாதொரு நிருவிகற்ப அறிவால் தோன்றுகின்றதோ அந்த நிருவிகற்ப அறிவும் ஒரு பொருளுக்குப் பிறபொருளின் வேற்றுமை ரூபமான பேதத்தை அறிகின்றது. எதனாலெனின், காரியங்களில் காரணத்தினுடைய குணங்களின் சேர்க்கை இருத்தலாலும், சற்காரியவாதத்தைக் கொண்டிருத்தலாலுமென்க. நிருவிகற்ப அறிவிற்குப் பேதத்தை அறியுந்தன்மை கொள்ளவில்லையாயின், அதற்குப் பின்னர் பேதத்தோடு கூடியதான சவிகற்ப அறிவு தோன்றுகிறதில்லையென்று, அவ்வாறில்லையாயின் என்ற தொடரால் கூறுகின்றார். ஆனால் பேதமானது ஒன்றினிடத்துப் பிறிதொன்றின் இன்மையையறியும் அறிவை முன்னிட்டு நிகழ்கின்றமையால், காணப்படும் பொருளை விடயமாகக் கொண்ட பிரத்தியக்ஷத்தால் ; அறியப்படமாட்டாதென மேலே கூறப்பட்டிருக்கிறதேயெனில், அது பொருந்தாது. எதனாலெனின், பேதம் சித்தித்த பின்னர்த்தான் ஒன்றினிடத்துப் பிறிதொன்றினின்மை அறியப்படுதலாலென்க. அவ்வாறு கொள்ளவில்லையாயின், நீர் வேண்டுபவன் தீயைத் தொடர்வான். ஆகையால் நீ கூறிய அனைத்தும் பொருத்தமற்றவையேயாகுமென்க. (உஉச-உஉரு)

(உஉ௬) பேத அறிவு நிகழ்ந்தாற்றான் அனுமானத்திற்கும் பயனுடன் கூடியிருக்குந்தன்மை இருக்கின்றது. வியாத்தியுணர்ச்சியின் சம்பந்தமானது பொதுவாயிருந்தால் அப்பொழுது முடிந்ததைச் சாதித்தலென்னும் சித்த சாதனமாகிய குற்றம் நிகழுமென்பதாம்.

(உரை) வியாத்தி அறிவின் பொருட்டுப் பேதஅறிவு இன்றியமையாதாகையால், அப்பேதவறிவு இருந்தாற்றான் அனுமானம் நிகழ்கிறதென்பது கருத்து. பேத அறிவின்றிப் பொது

வாய்ப் பொருள்களின் அறிவுமாத்திரமிருந்தால் அவ்வறிவு முன்னரே இருப்பதுபற்றிப் பொருளின் நிச்சயமிருக்கின்றது. இருக்கவே, ஒரு பொருளில் ஒரு தருமத்தைச் சாதித்தற்பொருட்டு அனுமானம் நிகழ்கிறதில்லையென, 'பொதுவாயிருந்தாலென்பதனாற் கூறுகின்றார்' என்க. (உ௨எ)

(அ—கை) வேறு வழியாகவும் பேதமுண்டென்பதைக் கூறுகின்றார்.

(உ௨அ) அன்றியும், அத்துவிதத்திற்கும் பேதத்திற்கும் பேதங் கொள்ளப் புடுமாயின் அப்பொழுது பேதமுண்டென்பது சித்திக்கின்றது. இரண்டும் ஒன்றென்று கூறில் நம்மாலுமதுவே சாதிக்கப்படுகின்றது என்பதாம்.

(உரை) அத்துவிதமென்பதைத்துவிதமென்னும் பேதத்தினின்றும் வேறாகக்கொள்ளின் துவிதம் அத்துவிதமென இரண்டு பொருள் சித்திப்பதுபற்றிப் பேதஞ் சித்திக்கின்றது. துவித அத்துவித ரூபங்களாயுள்ள துவிதத்தையும் அத்துவிதத்தையும் ஒன்றெனக் கொண்டால் அப்பொழுது பேதத்திற்கே அத்துவிதமென்னும் பெயர் நம்மவர்களால் கூறப்படுகின்றதென்பது பற்றி எங்களுக்கும் பெயரில் விவாதமில்லையாதலால் அது சம்மதமேயாம். எதனாலெனில் எங்களாலும் இவ்விதமான பேதமே சாதிக்கப்படுகிறதாகையாலென்க. (உ௨அ)

(அ—கை) ஆனால் ஒரே கயிற்றில் பாம்பு முதலியவற்றின் மயக்கம் நிகழ்வதுபோல் சத்தியமாயும் ஒன்றாயுமுள்ள சிற்சத்தியில் அசத்தியமான பொருள்களின் பேதவறிவு உண்டாகின்றதென மேலே கூறப்பட்டிருக்கின்றதே எனில், அது பொருத்தமற்றதெனக் கூறுகின்றார்,

(உ௨௯) திருட்டாந்த மாத்திரத்தால் துணியப்படும் பொருளின் நிச்சயம் உண்டாகிறதில்லை. ஆகையால் கயிறு பாம்பு திருட்டாந்தமானது சிடனுக்கு மோகத்தை மாத்திரமே விளைவிக்குமென்பதாம்.

(உரை) ஏது முதலியனவின்றித் திருட்டாந்த மாத்திரத்திற்குப் பொருளை யறிவிக்குந் தன்மை இல்லையாகையால், திருட்டாந்த மாத்திரத்திற்குச் சத்தியத்தன்மை இருப்பினும் அத்துவிதத்துடன் முரண்படுவது பற்றி அசத்தியமெனக் கொள்ளில் தாட்டாந்திகமான சிற்சத்திக்கும் அசத்தியத்தன்மை சம்பவிக்கும். ஆகையால் கயிறு பாம்பு திருட்டாந்தம் பயனற்றதேயாகுமென்க. (௨௨௯)

(௨௩௦) (அன்றியும்) விசேடம் விளங்கித்தோன்றாமையால் சிவஞான மாத்திரத்தால் நசிக்கக்கூடியனவாயுள்ள அந்தந்த உள்பொருள்களோடு விவர்த்திக்கின்ற ஆன்ம ரூபமான சிற்சத்தியானது கயிற்றுக்கு நிகராக ஆகின்றதில்லை என்பதாம்.

(உரை) கயிறு முதலியவற்றினுண்டான பாம்பு முதலியவற்றின் மயக்கங்கள் இது கயிறு என்னும் உண்மையறிவால் நசிக்கின்றன. அவ்வாறு உண்மையறிவால் நசிக்கின்றமையால் திமிரரோகம் முதலிய குற்றத்தானிகழ்ந்த பாம்புத்தோற்றம் அசத்தியமேயாகும். கடம் படம் முதலிய பொருள்களின் தோற்றமோவெனில், வேறு காலங்களிலும் வேறு தேசங்களிலுங்கூட விசேடங் காணப்படாமையால் சிவஞானம் தோன்றவில்லையாயின், எக்காலத்தும் விளங்கிக்கொண்டிருப்பனவாயும், ஒன்றாலும் நாசஞ்செய்யப்படாமை பற்றிச் சத்தியங்களாயுமிருக்கும். அவ்வாறான உள்பொருள்களான உபாதிகளோடு விவர்த்தித்துத் தானும் கடம்படம்போல் வெவ்வேறாகத்தோன்றுகின்ற ஆன்மரூபமான சிற்சத்தியானது கயிற்றோடு சாம்மியமடைகிறதில்லை. இதனால் கூறப்பட்ட பொருளாவது—கடம்படம் முதலிய வெளிப் பொருள்களின் பேதம் உண்மையே யாகும். ஆன்மரூபமான சிற்சத்திக்குண்டானதாயும் அந்தந்தப்பொருள்களின் முன்னிலையில் அந்தந்தப்பொருள் வடிவமாகத் தோன்றுதல் ரூபமாயுமுள்ள புத்தியின் நிச்சயபேதமானது உபாதியால் நிகழ்ந்ததாகும். இவ்விஷயம் பின்னர் விரிவாகக் கூறப்படுகின்றது. ஆகையால் அந்தந்தப் பொருள்களின் முன்னிலையில் தோன்றுகிறதாயும் அந்தந்தப் பொருள்களின் வடிவமாயுமுள்ள புத்தியின்

நிச்சய ரூபமான அறிவிற்கு அடிக்கடி பேதமிருப்பினும், அவ்வித நிச்சயத்தின் கருத்தாரூபமாயும், எக்காலத்தும் ஒரேவிதமாய்த் தோன்றுகிறதாயும், அறிபவன் ரூபமாயுமிருக்கும் சிற்சத்திக்கு வேறு ரூபமாக மாறுதல் பொருந்தாது. அன்றியும் அது நித்தியமேயாகும். எதனுலெனின், சேதனமாகையாலும், விகாரமின்மையாலுமென்க. ஆகவே ஆன்மரூபமான சிற்சத்திகள் அநேகமேயாகும். ஒன்றென்றால் எல்லா ஆன்மாக்களுக்கும் ஒரே காலத்தில் போகாநுபவமும் அவ்வாறே ஒரே காலத்தில் மோக்ஷமும் நிகழுமெனக் குற்றம் நம்மால் வேறிடத்தில் கூறப்பட்டிருக்கிறதென்க. (உகo)

(அ—கை) இனி பசுவாகிய ஆன்மாக்களுக்குப் புத்தி சம்பந்தமான நிச்சயத்தினின்றும் ஆன்ம ரூபமான சிற்சத்தியை வேருகப் பிரித்தறியாமையால் நிகழ்ந்த ஆன்மரூபமான சிற்சத்தி அநேக ரூபமென்னும் மயக்கம் மலத்தைக் காரணமாகக்கொண்டதெனக் கூறுகின்றார்.

(உகக) படலத்தால் மறைக்கப்பட்ட கண்ணையுடைய புருடனுக்குச் சந்திரன்போல் மலத்தால் மறைக்கப்பட்ட ஞான சக்தியையுடைய பசுவிற்கு அந்த சிற்சித்தியானது அறியப்படாததாய் அந்தந்த உள்பொருள்களோடு அவ்வப்பொருள்கள்போல் வேறு வேருகத் தோன்றுகின்றது என்பதாம்.

(உரை) எவ்வாறு திமிரரோகத்தால் மறைக்கப்பட்ட கண்களையுடைய புருடனுக்குச் சந்திரன் ஒருவனுயிருந்தும் இரண்டாகத் தோன்றுகின்ருனே, அவ்வாறே மலத்தால் மறைக்கப்பட்ட ஞான சத்தியையுடைய புருடனுக்குச் சேதன ரூபமான சிற்சத்தி ஒன்ருயிருந்தும் அநேக ரூபம்போல் தோன்றுகின்றதென்க. (உகக)

(அ—கை) எவ்வாறு வேறு பிரமாணங்களால் நிச்சயிக்கப்பட்ட ஒரு சந்திரன் பல சந்திரனைத் தோன்றுதல் திமிரமென்னும் நோயைக் காரணமாகக் கொண்டிருக்கிறதோ, அவ்வாறே சாத்திரம் முதலியவற்ருல் நிச்சயிக்கப் பட்டதாயும், ஒன்ருயும்

அறிபவன் ரூபமாயுமுள்ள சிற்சத்திக்கும் அநேக ரூபத்தன்மை யுண்டென்ற மயக்கம் தனக்குக்காரணமாக மலம் உண்டென்பதை அறிவிக்கின்றது என்று கூறுகின்றார்.

(உகஉ—உகடுஇ) எவ்வாறு திமிர ரோகமுடைய புருடன் அநேக யுத்திகளால் ஊகிக்கின்றவனாயிருந்தும் ஒரே சந்திரனைப் பல சந்திரனாக அடிக்கடிப் பார்க்கின்றானோ, எவ்வாறு பித்தத் தால் குற்றமடைந்த நாவையுடைய புருடன் பால் தித்திப்பென்று ஊகிக்கிறவனாயிருந்தும் காண தோஷத்தால் தித்திப்பான பாலைக் கசப்பாகவே யறிகின்றானோ, எவ்வாறு மையுடன் கலந்ததாயும் கொதிப்புடையதாயும் உள்ள நீரில் அறிஞர்களுக்கும் அவிவேகத் தால் நீர் சூடெனவும் நீர் கறுப்பெனவும் தோன்றுகின்றனவோ, அவ்வாறே சிற்சத்தியானது யுத்திகளுடன் கூடிய அநேக ஆகமங் களால் ஆராய்ச்சி செய்யப்பெற்றிருந்தும் அந்தச்சிற்சத்தியானது விவர்த்திக்கின்றது தோற்றமுடையது அழிவையுடையது அநேக ரூபமான தன்மையையுடையது என்ற அறிவுகளின் நாசமின்மை யானது மலமென்னுங் காரண முண்டென்பதை அறிவிக்கின்ற தென்பதாம். (உகஉ—உகடுஇ.)

(அ—கை) அந்த மலமானது திரவியமாயிருப்பதால் கண்ணி னுடைய படலம் போல் அறிவுமாத்திரத்தால் நிவிருத்தியடைகிற தில்லை. கண் வைத்தியனுடைய தொழிலால் படலம் நீங்குமாறு போல் பரமசிவனது தீக்ஷை யென்னுந் தொழிலால் மலம் நீங்கு கின்றதெனக் கூறுகின்றார்.

(உகசு—உகஎ) எவ்வாறு திமிர முதலிய ரோகம் ஆரோக் கிய சாத்திரங்களில் கூறப்பட்ட கன்மத்தினாலே நீங்குகின்றதோ அவ்வாறே அந்த மலமும் சிவசாத்திரங்களிற் கூறப்பட்ட சிவத் தியானத்துடன் கூடிய தீக்கை யென்னுங் கன்மத்தினாற்றான்

நீங்குகின்றது. அவ்வாறன்றிக் கோடி ஞானங்களினாலும் நீங்குகிறதில்லை * என்பதாம்.

(உரை) அந்த மலமானது சிவசாத்திரங்களில் கூறப்படுஞ் சிவத்தியானத்தைத் துணையாகக் கொண்ட அந்தத் தீக்கை என்னுந் தொழிலால் நீங்குகின்றது. அவ்வாறே ஸ்ரீசுவாயம்புவாகமத்திலும் தீக்கையே ஆன்மாவை மலத்தினின்றும் விடுதலையடையச் செய்கின்றது. மேற்பட்டதான சிவபதத்தையும் அடையச் செய்கின்றதென்று கூறப்பட்டிருத்தல் காண்க. இவ்விஷயத்தில் அனுமானப் பிரயோகமாவது—மலம் ஞானத்தால் நீங்குகிறதில்லை; ஆன்மாக்களுடைய காரணமான சத்தியை மறைப்பதனால்; ஆன்மாக்களுடைய காரணமான கண்ணைமறைக்குந் திமிரரோகம் போலும். மலம் உண்மைப்பொருள்; மறைப்பைச் செய்தலென்னும் காரியத்தைச் செய்தலினால்; மயக்கமென்னுங் காரியத்தைச் செய்யும் காசம் திமிரம் முதலியன போலும் என்க. (உ௩௬—உ௩௭)

(அ—கை) இவ்வாறு அறிதலைச் செய்யும் அறிபவன் ரூபமான சிற்சத்திக்கு நித்தியத்தன்மையைக்கூறும் முறைபற்றி மலத்தையும் அதன் நீக்கத்துக்குண்டான காரணத்தையும் கூறிவிட்டு அறிவிற்கு விடயமான பிரபஞ்சத்தின் பேதம் உண்மையெனக் கூறுகின்றார்.

(உ௩அ—உ௩அஇ) மறுக்கப்படாத பிரமாணங்களால் தேசம், காலம், மானுடர் என்னும் பேதங்கள் வெவ்வேறாக விருந்தும் ஒன்றுபிறிதொன்றாகத் தோன்றுதலில்லாத உலகமானது எவ்வாறு சித்தினுடைய விவர்த்தமாக ஆகும். அன்றியும் அவ்வுலகமானது மாயையின் காரியமெனப் பிரமாணங்களாலே சாதிக்கப்பட்டிருக்கிறது என்பதாம். (உ௩அ—உ௩அஇ)

---

* இவ்விடத்தில் விலக்கப்பட்ட ஞானம் ஆராய்ச்சி ஞானமாகிய அபரஞானமாம். அநுபவ அறிவில்லாத வைத்தியன்றொழில் பயன்படாதவாறுபோல் அனுபவ ஞானத்தோடு கூடாத தீக்ஷை பயன்படாதென்பது கருதியே சிவத்தியானத்துடன் கூடிய தீக்கை என்றது கவனிக்கத்தக்கது.

(அ—கை) சிற்சத்திக்கு அநேக வடிவங்களாய்த் தோன்றுந் தன்மையுண்டென்பது மயக்கத்தானிகழ்ந்ததென முன்னரே கூறப்பட்டிருக்கிறதெனக் கூறுகின்றார்.

(உ௩௯) ஆகையால் அணுக்களுக்குப் பந்தஞ் செய்யும் மலத்தால் சிற்சத்தி விவர்த்திப்பதாகத் தோன்றுகின்றது என்பதாம். (உ௩௯)

(அ—கை) இவ்விஷயத்தையே விரிவாய்க் கூறுகின்றார்.

(உ௪௦) சிற்சத்தியின் விவர்த்தமாவது யாதொரு பரிணமத்தால் விடய வடிவமாயில்லாவிடினும் விடய வடிவமாய்த் தோன்றுகின்றதோ அந்தப்பொய்யான பரிணமமேயாகுமென்பதாம். (உ௪௦)

(அ—கை) அவ்விதமான விவர்த்தமும் ஆன்மாக்களுக்குச் சிற்சத்தியைப் புத்தியினின்றும் வேறாகப் பிரித்தறியாமையால் நிகழ்ந்ததெனக் கூறுகின்றார்.

(உ௪௧) ஒன்றுக்கொன்று சம்பந்தம் பற்றியும் சித்துப் பொருள் சடப் பொருள்களை விடயமாகக் கொண்டும் இருக்கின்ற அந்த விவர்த்தமானது சித்தைச் சடமாகவும் சடத்தைச் சித்தாகவும் நினைத்தலென்னும் அத்தியாசத்தால் உண்டாகின்றமையால் சித்துச் சடங்களுக்குண்டான பகுத்தறிவின்மையால் தோன்றுகின்றது என்பதாம். (உ௪௧)

(அ—கை) இதனையே விரிவாய்க் கூறுகின்றார்.

(உ௪உ—உ௪௫) சித்தானது தன்னுடன் சார்ந்திருக்கும் புத்தி தத்துவத்தைத் தன்னினும் வேறாகப் பிரித்தறியாமல் தான் விகாரமற்றிருந்தும் புத்தி விருத்தியின் விகாரங்களான தோற்றம் முதலியவற்றைத் தன்னிடத்தில் ஏற்றிக்கொண்டு தோற்றமுடையதென்றும், அழிவையுடையதென்றும், அநேகத்தன்மையுடையதென்றும், சுகத்துடன்கூடியதென்றும், துக்கத்துடன்கூடியதென்றும் தன் வடிவத்தை அணுவிற்குக்காட்டு

கின்றது. அதுபோல் ஆன்மாவினிடத்தில் சித்தின் குணமான சைதன்னியத்தையும் சடத்தன்மையையும் ஏற்றிக்கொண்டு அவற்றைப்பகுத்தறியாமல் நான் பாலனென்றும் நான் இளைத்தவனென்றும் அறிகின்றது. இவ்வாறு எல்லா அணுக்களுக்குமுண்டான இந்தச் சிற்சடப்பொருள்களின் பகுத்தறியாமையானது மலத்தைக் காரணமாகக் கொண்டது. மயக்கக்கூட்டங்களுக்கு மூலையாயுள்ளது என்பதாம்.

(உரை) அநித்தியமாயும், அசுத்தமாயும், துக்கமாயுமிருக்கும் ஆன்மாவல்லாத பொருள்களில் நித்தியமாயும் சுத்தமாயும் சுகரூபமாயுமிருக்கும் ஆன்மத்தோற்ற ரூபமான யாதொரு அவிவேகம் புருடர்களுக்கிருக்கின்றதோ, அந்த அவிவேகமானது காரணமற்றதில்லை. காரணமற்றதாயிருந்தால் முத்திபெற்ற ஆன்மாவிற்கும் அவிவேகம் உண்டாக நேரும். ஆகையால் அந்த அவிவேகத்திற்கு அநாதியாயொரு காரணமிருக்கவேண்டும். அவிவேகம் அநாதியாகையால் அதற்குக் காரணமான மலமும் அநாதியே யென்பது கருத்து என்க. (உசஉ—உசரு)

(அ—கை) இவ்விஷயத்திற்குக் காரணங்கூறுகின்றார்.

(உசசு) சிற்சத்தி விசேடங்களுக்கு, விசேடணங்களுடன் கூடிய சடப்பொருள்களோடு விவர்த்தபேதங்கள், பலமான பந்தமின்றிப் பொருத்தமடைகின்றனவல்ல வென்பதாம்.

(உரை) இவ்விடத்துக்கூறிய கருத்தாவது—ஆன்மாக்களுடைய அறிவு முதலியவை மலத்தால் மறைக்கப்பட்டிருத்தல் பற்றிக் கலைமுதலியவற்றின் வழியாய்த்தான் விளக்கமடைகின்றன. அவ்வாறு கலைமுதலியவற்றால் தோற்றுவிக்கப்பட்ட தோற்றமும் ஆன்மாவல்லாத பொருள்களில் ஆன்மாவென்னும் தோற்றமேயாகும். எதனாலெனில், கலை முதலியவை மோகத்தைச் செய்யும் அசுத்தமாயையின் காரியமாகையாலென்க. (உசசு)

(அ—கை) விவர்த்த பேதத்திற்குப் பந்தத்தைக் காரணமாய்க் கொண்டிருக்குந் தன்மையை விரித்துக் கூறுகின்றார்.

(உசஎ) யாதொரு காரணத்தால் நானென்னும் அறிவு தேகத்திற்றான் தோன்றுகின்றதோ, ஒட்டிற்றோன்றுகின்ற தில்லையோ, அவ்வித அறிவும் சிற்சில அணுக்களுக்குத்தான் இருக்கின்றதோ, எல்லா அணுக்களுக்கும் இல்லையோ, அந்தக் காரணத்தால் அவற்றிற்குக் காரணமாய்ப் பந்தங்கொள்ளப்பட்டிருக்கிறது என்பதாம்.

(உரை) அந்தச் சிற்சடங்களுக்கு ஒன்றை ஒன்றிலேற்றுதற்குப் பந்தமே காரணமென்பது கருத்து என்க. (உசஎ)

(உசஅ—உ௫௦) (அன்றியும்) எந்தப் புருடனுடைய அறிவு தொழில்களில் எந்த இந்திரியங்கள் சாதனங்களோ, அந்த இந்திரியங்கள் வேறு புருடனுடைய அறிவு தொழில்களில் சாதனங்களாகவில்லை. அவ்வாறே எல்லாருடைய எல்லா விசிட்ட புத்தியும் சித்து விசேடத்தினுடைய விவர்த்தத்தின் பொருட்டுச் சாமார்த்தியமுடையதாகிறதில்லை. ஆகையால் இந்த விவர்த்தத்திற்குக் காரணமாகப் பந்தத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். புத்தியைப் பற்றிய சில சுகதுக்கங்களானவை சில புருடர்களால் அனுபவிக்கப்படுகின்றன. எல்லாராலும் அனுபவிக்கப்படவில்லை. ஆகையால் அச்சுகதுக்கங்களுக்குக் காரணமாகப் பந்தம் ஒப்புக்கொள்ளத் தகுந்ததென்பதாம்.

(உரை) இவற்றால் கூறப்பட்ட பொருளாவது—சாத்திரங்களிற் கேட்கப்பட்ட சருவஞ்ஞத் தன்மை என்னும் ஆன்மாவின் சொரூபம் * சம்சாரவத்தையில் காணப்படாமையினால் அந்த அவத்தையில் அதனை விளங்கவொட்டாமல் மறைக்கும் பொருளான மலம் ஒன்றுண்டென்பதை நிச்சயமாகக் கொள்ளல்வேண்டும். சம்சாரவத்தையில் ஆன்மாக்களுக்குச் சிற்றறிவுடன் கூடியிருக்குந் தன்மை காணப்படுதலால், கலை முதலியவற்றின் வழியாய் அச்சிற்றறிவிற்குக் காரணமாயும், மோகத்திற்குக் காரண

* சிவனோடு அநாதியே பிரிப்பின்றி நிற்பதுபற்றி சிவனுக்குரிய சருவஞ்ஞத் தன்மை சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுடைய ஆன்மாவின்சொரூபமெனப்பட்டது.

மாகையால் மயக்கத்தை யுண்டுபண்ணுவதாயும் உள்ள மாயை யென்னும் பந்தம் அவர்களுக்குண்டென்று கொள்ளல் வேண்டும். சுகதுக்க ரூபமான போகமும் அப்போகத்திற்குச் சாதனங்களான சரீரேந்திரியங்களும் ஒவ்வொரு ஆன்மாக்கள் தோறும் இன்றியமையாது வேறு வேருயிருத்தலால் அவ்வித வேற்றுமைக்குக் காரணமாகக் கன்மமுண்டென்பதும் நிச்சயமாய்க் கொள்ளல் வேண்டுமென்க. (உசஅ--உருO)

(அ—கை) இது விஷயத்தில் சாங்கிய மதத்தைச் சார்ந்து அவிவேகமே முன்னர்க் கூறியவற்றிற்குக் காரணமாகட்டும் ஆன்மாவிற்கு அப்பிரசித்தமான மலமென்னும் பந்தம் உண்டென்று கூறுதலால் யாது பயன் எனப் பூர்வ பக்ஷியின் சங்கையைக் கூறுகின்ருர்.

(உருOவ) அவிவேகமே காரணமாக இருக்கட்டும் என்பதாம். (உருOவ)

(அ—கை) அது கூடாதென்று கூறுகின்ருர்.

(உருOஇ) ஆன்மாக்களுக்கு அந்த அவிவேகம் எதனுலுண்டாயிற்று என்பதாம்.

(உரை) அந்தப் புத்தி அறிவு என்னுமிவற்றிற்கு ஒன்ருக் கொன்றுள்ள வேற்றுமையை யறியாமையானது எதனுலுண்டாயிற்று. அந்த அவிவேகம் காரணமன்றி நிகழ்ந்திருந்தால் முத்தனுக்கும் நிகழநேரும். ஆகையால் அந்த அவிவேகத்திற்குக் காரணமாக அஞ்ஞானத்தை மறைத்தலைச் செய்யும் மலம் உண்டென்பது கொள்ளத்தகுந்தது. அவ்வித மலமில்லாமையாற்ருன் முத்தனுக்கு மீண்டும் அவிவேக முண்டாகிறதில்லை என்க. (உருOஇ)

(அ—கை) ஆகையினுற்ருன் அவ்விதமான மலபந்தத்தை நீக்குதற் பொருட்டுப் பரமேசுவரன் உண்டென்று சித்தித்திருப்பதாகக் கூறுகின்ருர்.

(உருக) மலமிருத்தலால் பந்தமிருக்கின்றது. அந்த மலபந்தமும் பரமசிவனினின்றும் வேருகவே கொள்ளப்பட்டிருக்கிறதென்பதாம். (உருக)

(உ௫உ—உ௫உ இ) (ஆகையால்) அறிவில்லாமல் மோகத்தை யடைந்த ஆன்மா அந்தப் பந்தத்திற்குளகப்பட்டிருக்கிறான். அவ னுடைய பந்தத்தை நீக்குவதே முத்தியாகும். எல்லாவிதமான பந்தமும் நீங்கவே ஆணவ மலமும் நீங்குகின்றது. பின்னர் எல் லாப் பொருள்களையும் அறியும்படி செய்யும் சிவசத்தியானது விருத்தி யடைகின்றது என்பதாம்.

(உரை) இதனால் பந்தத்தினுடைய நீக்கமானது பரமசிவ னுடைய அனுக்கிரக விசேடத்தாலேயே உண்டாகின்றதென்பது கூறப்பட்டதாகும் என்க. (உ௫உ—உ௫உ இ)

(உ௫௩ இ) எல்லா மறைப்புக்களினின்றும் விடுபட்டதாயும் பூஜிக்கத் தகுந்ததாயுமுள்ள இந்தச் சிற்சத்தியே ஏகதேசமான விடயத்தை மறைத்து எல்லாவிடயங்களையும் அறியும்படி செய் கின்றது என்பதாம். (உ௫௩ இ)

(அ—கை) எவ்வாறு அறியும்படி செய்கின்றதென்பார்க்குக் கூறுகின்றார்.

(உ௫௪ இ) பர சம்வித்து ரூபமான சிற்சத்திக்குப் பந்த மில்லையாகவே, எக்காலத்தும் முத்தான்மாக்களுக்குப் பிறபொ ருள்களின் இருப்புமாத்திரம் விளங்குமென்பதாம்.

(உரை) முத்தான்மாவினுடைய அறிவில் மலமின்மையால் தன்னையும் பிறபொருளையும் அறியும்படி செய்யும் அந்த அறிவா னது பிறபொருள்களின் இருப்பு மாத்திரத்தை அறியும்படி செய் கின்றது. பெத்தான்மாவிற்குப்போல் முத்தான்மாவிற்குச் சிறப் பாகவும் (அதாவது வேறு வேறாகவும்) போக்கியப் பொருள் களாகவும் பிற பொருள்களை அறியும்படி செய்கிறதில்லை என்பது கருத்து. அவ்வாறு அறியும்படி செய்யுமாயின் முத்தனுக்கும் சுகதுக்க அறிவு நிகழுமாகையால் போகத்தை அனுபவிக்குங் கருத்தாதன்மை நிகழக்கூடுமென்க. (உ௫௪ இ)

(உ௫௫) ஆகையால் எல்லா மறிந்தவர்களே முத்தான்மாக் களாவர். சித்துரூபனான தன்னை மாத்திரம் அறிந்தவர்கள் முத் தான்மாக்களாகார் என்பதாம்.

(உரை) தன்னையறியும் அறிவுமாத்திரையி லிருப்பவர்கள் * முத்தர்களில்லை. சிவன்போல் எல்லாமறிந்தவர்களே முத்தர்களென்பது கருத்து என்க. (உருரு)

(உருரு௬) (ஆகையால்) வெளிப் பொருள்களிருந்தும் அவற்றை அறியாமையானது தமசு என்னும் மலத்தால் நிகழ்ந்தது என்பதாம்.

(உரை) வெளிப்பொருள்களிருந்தும் அவற்றைப் பெத்தான்மாக்கள் அறிகிறதில்லை. அதற்குக் காரணம் மலமேயாகும் என்க. (உருரு௬)

(அ—கை) ஆகையால் எல்லாவற்றையும் அறியாதவர்கள் முத்தராகாரெனக் கூறுகின்றார்.

(உருசு) தமசால் மறைக்கப்பட்ட ஆன்மாக்கள் முத்தர்களாக ஆகின்றனரில்லை என்பதாம். (உருசு)

(அ—கை) சொல்லின் சேர்க்கையைத் துணையாகக்கொண்ட சவிகற்ப அறிவும் பந்தத்திற்குக் காரணமாயிருக்கிறதென்று கூறுகின்றார்.

(உருஎ) மலத்தால் மறைப்புண்ட உயிர்களுக்குப் பொருள்களை அறியும்படி செய்வதில் அவ்வுயிர்களின் அறிவுகளுக்கு விந்துவின் கலக்கத்தாலுண்டான சொல்லின் சேர்க்கையோடு கூடிய விகற்பமானது உண்டாகிறது. மலமற்ற ஆன்மாக்களுக்கோவெனில், விந்துவின் கலக்கமான சொல்லின் சேர்க்கை இல்லாமையினால் பந்தம் நீங்கினமைபற்றி அன்று பிறந்த பாலனுக்குப்போல் விகற்பமற்ற நிருவிகற்பத் தோற்றமே நிகழ்கின்றது என்பதாம்.

---

* புத்தி விருத்தியின் வேறாகத் தன்னையறிந்த விவேகஞான மாத்திரமுடையவர்கள்.

(உரை) முத்தான்மாக்கள் மாயாகாரியங்களாயும் விந்துவின் காரியங்களாயும் உள்ள பாசங்களைத் தாண்டினவர்களாகையால், சொற்களின் சேர்க்கையைத் துணையாகக்கொண்டதாயும் புத்தியைச் சார்ந்ததாயுமிருக்கும் சவிகற்ப அறிவு அவர்களுக்குண்டாகிறதில்லை. பிற பொருளைத் துணையாகக்கொள்ளாத சிற்சத்தியே அறியத்தகுந்த எல்லாப் பொருள்களையும் அறியும்படி செய்கின்றது. அன்று பிறந்த பாலனை உவமையாகக் கூறியது சத்தம் முதலியவற்றின் விகற்பமின்மைக்கு மாத்திரமென்று கொள்க. எதனாலெனில், உண்மையில் பாலனுக்கும் மலமறைப்பு இருத்தல்பற்றி உண்மைத்தோற்ற மின்மையாலென்க. (உ௩ள)

(அ—கை) முத்தான்மாக்களுக்கு மலமின்மையால் அவர்களுடைய சத்தியே எல்லாப் பொருள்களையும் உள்ளவாறறியும்படி செய்கின்றதெனக் கூறுகின்றார்.

(உ௩அ) எந்த உள்பொருளானது எக்காலத்திருக்கின்றதோ எக்காலத்திருந்ததோ எக்காலத்திருக்கப் போகின்றதோ அக்காலங்களிலெல்லாம் அந்த உள்பொருளைச் சுயம்பிரகாசமான அழிவற்ற அறிவானது உள்ளவாறறிகின்றது என்பதாம்.

(உரை) இவ்வாறே (மோக்ஷ காரிகையிலும்) சிவனென்னுஞ் சூரியனுடைய சத்தி என்னுங் கிரணத்தால் விருத்தி செய்யப்பட்ட அறிவென்னுங் கண்ணால் மறைப்பில்லாத ஆன்மா, சத்தி முதலியவற்றோடு பரமசிவனைப் பார்க்கின்றானென்று கூறப்பட்டிருக்கிறதென்க. (உ௩அ)

(அ—கை) இந்த முத்தான்மாக்களுக்குச் சருவஞத்தன்மை சருவகருத்திருத்தன்மை இருந்தும் தொழில் கிடையாதெனக் கூறுகின்றார்.

(உ௩அ௯) முத்தான்மாக்கள் உலகத்திற்குக் கருத்தாக்களாகவாகிறதில்லை. சிவனொருவனே உலகத்திற்குக் கருத்தாவாவன் என்பதாம். (உ௩அ௯)

(அ—கை) சிவனொருவனே உலகத்திற்குக் கருத்தாவென்பது எதனாலென்பார்க்குக் கூறுகின்றார்.

(உ௫கூ) அநேகர்களுக்குக் கருத்திருத்தன்மை உண்டென்பதற்கு ஓரிடத்திலாவது பிரமாணமறியப்படவில்லை யாதலாலென்க என்பதாம்.

(உரை) அநேகம் கருத்தாக்களையுடைய தேர் முதலியவற்றிற்கும் ஸ்தபதி என்னும் ஒருவனுடைய இச்சையையின்றி நிறைவேறுமை காணப்பட்டிருக்கிறது. அவ்வாறே வேறு நூல்களிலும் எந்தக் காரியத்தை அநேகர் பெருமையை விரும்பித் தங்களைப் பண்டிதர்களாக எண்ணிக்கொண்டு நடாத்துகின்றனரோ, அந்தக் காரியம் உலேக்கு முடிவை யடைகின்றதில்லையெனக் கூறப்பட்டிருத்தல் காண்க. ஈசுவரத் தன்மையாவது சொரூபத்தின் பிரகாச லாபமே ஆதலால் அது எக்காலத்துங் கெடுதலில்லை. ஆதலால், பிரவாகேசுவர பக்கமும் ஒதுக்கப்பட்டது. ஆகவே நித்திய முத்தனான அந்தச் சிவனாலேயே படைத்தல் முதலிய காரியங்கள் நிகழ்கின்றன. முத்தர்கள் விருப்பு வெறுப்பு அற்றவர்களாதலால், படைப்பு முதலிய தொழில்களைச் செய்கின்றனரில்லை என்க. (உ௫கூ)

(அ—கை) இன்னும் இவ்விடயத்தையே கூறுகின்றார்.

(உ௬௦—உ௬க) நித்திய முத்தமாயும், கருதமுடியாத மகிமையுடையதாயும், சத்தியென்னும் பெயர்கொண்டதாயுமிருக்கும் சிற்சத்தியானது பரமகாரணரான பரமசிவனைப்பற்றி யிருக்கின்றது. இந்தப் பரமசிவனும் அந்தச் சத்தியால் சடப்பொருள்களை வியாபித்து ஆன்மாக்களின்பொருட்டுப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களையுஞ் செய்கின்றானென்பதாம்.

(உரை) இவ்வாறு சிவசத்தியின் ஆராய்ச்சியின் முடிவால் அச்சத்திக்குப் பற்றுக் கோடான பரமசிவனுடைய ஆராய்ச்சியும் செய்யப்பட்டதாக அறியத்தகுந்தது. எவ்வாறெனில், உலகம்

அவ்யவப்பகுப்புடன் கூடியிருப்பதுபற்றிக் காரியப்பொருளாகை யால் அவ்வுலகத்திற்குக் கருத்தாவாகவும், ஆன்மாக்கள் மலத் தால் மறைக்கப்பட்டிருத்தலால் அம்மறைப்பை நீக்கி முத்தியைக் கொடுப்பவராகவும், பரமசிவன் உண்டென்பது சித்தித்தது. இவ் வாறே பெரியோர்களும் ஆராய்ச்சிக்கு முன்னிலையாயிருக் கின்ற உலகமானது அவ்வுலகத்தை யறிந்துசெய்யும் கருத்தாவை யுடையது; காரியமாயிருத்தலால்; பிரத்தியக்ஷத்திற் காணப்படும் கடம் முதலியவைபோலுமென்று கூறுகின்றனர் என்க.

(உகு௦—உகுக)

(அ—கை) இனி அந்தப் பாமசிவனுக்குக் காரியவேற்று மையால் வேற்றுமையுண்டென்று கூறுகின்றார்.

(உகுஉ) அந்த ஐந்தொழில்களிலும் பாமசிவன் சத்தியோடு கூடிச் சத்தனென்றும், உத்தியோகஞ்செய்யும் முறைபற்றி உத்தி யுத்தனென்றும், பிரவிருத்தனென்றும் ஆசிரியர்களால் மூன்று விதமாய்க் கூறப்படுகின்றான் என்பதாம். (உகுஉ)

(அ—கை) இதனையே விரித்துக் கூறுகின்றார்.

(உகுங) அம்மூவருள் முதலாவதான சத்தன் நிட்கள சிவ னென்னும் பெயர்கொண்டவனாகின்றான். அவனிடத்தில் கிரியை யென்னும் பெயர்கொண்ட சிவசத்தியானது விளக்கமடையாமல் மூடுதலையடைந்தது போலிருக்கின்றது என்பதாம்.

(உரை) சத்தி ஒன்றாகையாலும், ஞானத்திற்கே கிரியா ரூபமாயிருக்குந்தன்மை நிச்சயமாயிருத்தலாலும், அந்தச் சத்தி க்கு ஞானம் கிரியையென்ற வேறுபாடு உபாதியானிகழ்ந்ததெனை அறிவிப்பதற்காகக் கிரியையென்னும் பெயர்கொண்ட சத்தி யென்று கூறப்பட்டது. அந்தச் சத்தியானது எல்லா வியாபா ரங்களையும் தன்னுளடக்கிக்கொண்டு தான்மாத்திரமாக இருக்குங் கால் அந்தச் சத்தியை யதிட்டித்த பாமசிவன் சத்தனென்று கூறப்படுகிறான், அவ்வாறு சத்தி தனித்திருக்கும் நிலையே, பரவிந்துவை யதிட்டிக்கும் பாமசிவனுக்கு இயலாவத்தையெனக் கூறப்படுகின்றது என்க. (உகுங)

(அ—கை) பின்னர்ப் போகாவத்தையில் உத்தியுத்தனென்னுஞ் சொல்லால் கூறப்படுகின்றானெனக் கூறுகின்றார்.

(உ௬௪) அந்தக் கிரியாசத்தியே விளக்கமாயும், அடையப்பட்ட விந்துவின் கருப்ப பாரத்தால் வாட்டமடைந்ததாயும் நின்று பதியான பரமசிவனுடைய பரமானந்த சந்ததியை விளங்கும்படி செய்கின்றது என்பதாம்.

(உரை) அந்தக் கிரியாசத்தி, மகா மாயையின் கலக்கத்தால் காரியங்களைத் தோற்றுவிப்பதில் நேர்முகமாகிப் பதியினுடைய பரமானந்த சந்ததியென்னும் ஞானக்கிரியைகளின் ஆக்கத்தை எப்பொழுது காரியங்களைத் தோற்றுவித்து வெளிப்படுத்துகின்றதோ, அப்பொழுது அந்தச் சிவனுக்குக் காந்தலென்னும் போகம் நிகழ்கின்றது. இவ்விடத்தில் சிவனுடைய பரமானந்த சந்ததி என்பதற்கு ஞானக்கிரியைகளின் ஆக்கமென்றும், காந்தலென்பதற்குப் போகம் என்றும் பொருள்கொள்ளாமல், ஆனந்த சந்ததி என்பதற்குச் சுகத்தின் மிகுதி என்றும், போகமென்பதற்குச் சுகதுக்க அறிவென்றும் பொருள்கொள்ளக்கூடாது. எதனாலெனில், நிர்மலனான பரமசிவனுக்கு உபாதிகளான சுகதுக்கங்கள் சம்பவியாதாகையாலென்க. (உ௬௪)

(அ—கை) அப்பொழுது உத்தியோகமென்னும் முயற்சியோடுகூடிய சத்தியையுடைய பரமசிவன் உத்தியுத்தனென்னுஞ் சொல்லிற்குப் பொருளாய் விளங்குகின்றானெனக் கூறுகின்றார்.

(உ௬௫) சகள நிட்களராயும், ஐந்து மந்திரங்களை வடிவமாகக்கொண்டவராயும், பிரகாசமுடையவராயும் இருக்குஞ் சதாசிவதேவர், முயற்சியையுடையவராய் முயற்சியையுடைய சத்தியோடுகூடி விளங்குகின்றார் என்பதாம்.

(உரை) தொழில் ரூபங்களான உபாதிகளின் வேறுபாட்டால் வேறுபாட்டையடைந்த ஈசான முதலிய ஐந்துமந்திர வடிவங்களான சத்திகளே சரீரத்தின் றொழிலைச் செய்கின்றமைபற்றி அம்மந்திரங்கள் பரமசிவனுக்குச் சரீரமாகக் கூறப்படுகின்றனவே

யன்றி உண்மையில் அவனுக்கு சரீரமில்லை. அவ்வாறே மிருகேந்திரத்திலும் ஐந்தொழில்களுக்குபயோகங்களான ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்னும் ஐந்து மந்திரங்களால் சிரசு முதலாகப் பரமசிவனது சரீரம் கற்பிக்கப் பெற்றிருக்கிறதென்று கூறப்பட்டிருத்தல் காண்க. ஆகையால் பரமசிவனுக்கு ஆகமங்களிற் கூறப்பட்டிருக்கும் வடிவங்கள் தியானத்தின் பொருட்டேயாகும். அவ்வாறே பௌட்கரத்திலும் பூஜை செய்பவனுடைய லக்ஷியத்திற்காகப் பரமசிவனுக்கு வடிவங்கொள்ளப்பட் டிருக்கின்றதெனக் கூறப்பட்டிருக்கின்றது. இவ்விடத்தில் சிவன் சத்திகளுக்குண்டான இலயம் முதலிய வேறுபாடானது விந்துவினுடைய நிலை வேறுபாட்டால் உண்டானதாகையாலுஞ் சாந்தியதீதகலை ரூபமான அந்த விந்துவை இலயாவத்தையாகச் சாத்திரங்களிற் கேட்கப்படுகிறதாகையாலும், சாந்திமுதலிய நான்கு கலைகளின் பரிணாமமே போகத்திற்கு அதிட்டானமாகும். அந்தப் போகாதிட்டானத்தை அதிட்டித்த பரமசிவனுக்கும் போகங்கூறப்படுகின்றது. இவ்வாறே மதங்க பாரமேசுவரத்திலும் சாந்தி முதலிய நான்கு கலைகள் ரூபமாயும் நிர்மலமாயுமிருக்கும் சகள நிட்களத்தில் உலகத்திற்குப் பதியான பரமசிவனுக்குப் போகங்கூறப்பட்டிருக்கிறதென கூறப்பட்டிருக்கின்றது. அவ்வாறாயின் சதா சிவபுவனங்களை அதிட்டிக்குங் காலத்திற்றான் பரமசிவன் ஐந்து மந்திரங்களை வடிவமாகவுடையவனாய் சதாசிவ மூர்த்தியாயிருத்தலால் போகாவத்தையில் சதாசிவ தேவரைக் கூறியது என்னையெனில், நிவிருத்தி முதலிய புவனங்களிலும் தனித்தனியே சத்தியோசாதமுதலிய மந்திரவடிவமாகப் பரமசிவன் தியானிக்கத் தகுந்தவனாகையால் இவ்வாறு கூறப்பட்டதென்க. அதிகாராவத்தையினையுடைய பிரவிருத்தனுக்கு ஐந்து மந்திரங்களினுடைய கூட்டம் வடிவமாயிருத்தல் சதாசிவ புவனத்திற்றானென்று பின்னர்க் கூறப்போகிறார். இவ்விஷயமானது மதங்க பாரமேசுவரத்தில் விரிவாய்க் கூறப்பட்டிருத்தலால் விரிவை அவ்விடத்திற் கண்டு கொள்கவென்க.

(உகூ)

(அ—கை) இனி, சிவசத்திக்கு மந்திரத்தன்மை யுண்டென்று கூறுகின்றார்.

(உ௬௬) எல்லா உள்பொருள்களையும் அறிதலினாலும், சம்சாரக்கடலினின்று நீங்கும்படி செய்து காப்பதினாலும், மனனத்துக்கும் திராணத்திற்கும் தருமியான அந்தச் சிவசத்தியானது மந்திரவடிவமா யிருக்கின்றதென்பதாம்.

(உரை) அவ்வாறே மனனமென்பது எல்லாமறிதல்; திராணமென்பது சமுசாரிகளைக் காத்தல். இவ்விரண்டுக்குந் தருமியாயிருப்பதுபற்றி மந்திரமென கூறப்படுகின்றாளென்று சாத்திரங்களில் கூறப்பட்டிருத்தல் காண்க. இவ்விதமான பொருளானது சிவனுக்கும் சத்திக்கும் வித்தியேசுவரர்களுக்கும் பொதுவாகும். ஆகையால் வாசகமான சொற்களுக்கும் உபசாரமாய் மந்திரமென்னும் பெயர் கூறப்படுகிறதென்க. (உ௬௬)

(அ—கை) இந்தச் சிற்சத்திக்கு உபாதி வேறுபாட்டால் மந்திர வேறுபாடெனக் கூறுகின்றார்.

(உ௬௭) அந்தச் சிற்சத்தியானது காரியவேறுபாட்டாலும் அதிட்டித்தலாலும் தானொன்றாயிருந்தும் ஐந்தாக வேறுபாட்டை யடைந்திருக்கின்றது. அது அதிட்டிக்கத்தகுந்த விந்துவென்னும் சாந்தி யதீதகலை சாந்திகலை முதலிய ஐந்து பொருள்களை விடயமாய்க் கொண்டு பிரகாசிக்கின்றது என்பதாம்.

(உரை) விந்து சாந்தி முதலிய புவனங்களை யதிட்டித்தலால் சிவனுக்கு ஈசானமுதலிய வேறுபாடு நிகழ்கின்றதென முன்னரே கூறப்பட்டிருக்கின்றதென்க. (உ௬௭)

(அ—கை) இதனையே விரிவாய்க் கூறுகின்றார்.

(உ௬௮) விந்து, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிருத்தி என இவ்வைந்து கலைகளும் போகத் தானங்களாகும். இவற்றிற்கு விந்து வென்னும் பெயர் பரமசிவனால் கூறப்பட்டிருக்கின்றது என்பதாம்.

(உரை) அவ்வாறாயின் சாந்தி முதலிய நான்கு புவனங்கள் தானே முன்னர்ப் போகத்தானமாகக் கூறப்பட்டிருக்கின்றன வெனில், அஃதுண்மையே. சாந்தியதீத ரூபமான விந்து இலயத்தானமாயிருந்தும் சிருட்டியாரம்பத்தில் அக்கலையிலும் புவனங்கள் தோன்றுகின்றமைபற்றி அதுவும் போகத்தானமெனக் கூறப்பட்டது. ஆதலால் விரோதமின்மை கண்டுகொள்க வென்க. (உ௬௮)

(அ—கை) அதுபற்றியே இந்த விந்து கலைகளுக்குக் காரணவத்தையில் இலயரூபமாக யிருத்தலால் பரவிந்து வெனப் பெயர் நிகழ்ந்ததெனக் கூறுகின்றார்.

(உ௬௯) ஐந்து கலைகளினுடைய சூக்கும அவத்தையே பரவிந்து வெனப்படும். அந்தப் பரவிந்துவை விடயமாகக்கொண்ட பரமசிவனது மூர்த்தி பரமூர்த்தியாகும். காரியத்தை விடயமாகக் கொண்ட பரமசிவனது மூர்த்தி அபரமூர்த்தியாகுமென்பதாம்.

(உரை) பரமசிவனது பரமூர்த்தியாவது விந்துவை அதிட்டிக்கும் இலயாவத்தையான சத்தியேயாகும். அபரமூர்த்தியாவது காரியங்களை யதிட்டிக்கும் சத்தியேயாகுமென்க. (உ௬௯)

(உ௭0) நிர்மல ரூபியான யாதொரு சிவசமவேத சத்தியுண்டோ அதுவே தொழில் வேறுபாட்டால் பரமசிவனுக்குச் சாதாக்கிய வடிவமாகக் கூறப்படுகின்றதென்பதாம்.

(உரை) சிவனோடு பிரிக்கமுடியாத சமவாய சம்பந்தத்திலிருக்கும் சமவேதசத்தியே,விந்துவின் பரிணமமாயும், நிவிருத்தி புவனம்வரை கீழே வியாபித்திருப்பதாயும் உள்ள சதாசிவ புவனத்தை அதிட்டித்து அதிகாரஞ்செய்வதுபற்றி உபசாரமாகப் பரமசிவனது சாதாக்கியவடிவமாய்க் கூறப்படுகின்றதென்பது கருத்தென்க. (உ௭0)

(அ—கை) தீக்ஷை முதலியவற்றால் அந்தந்தப் புவனங்களை அடைந்தவருக்குண்டாம் வேறுபாடு உண்மையேயாகும். அவர்களை யதிட்டிக்கும் சிவசத்திகளுக்குத் தொழில் வேறுபாட்டால் வேறுபாடு கூறப்பட்டிருக்கிறதெனக் கூறுகின்றார்.

(உஎக—உஎ௨) ஆற்றலுடன் கூடிய பரமசிவனால் அதிட்டிக்கப்பெற்ற மகாமாயையானது, மலமற்றவர்களாயும், போகத்தானத்திலிருப்பவர்களாயும், அநுபற்றிச் சிவரூபர்களாகவுமிருக்கும் ஆன்மாக்களுக்குச் சரீரம் போகம் இந்திரியம் இடம் விஞ்ஞானம் முதலிய காரியத்தைச் செய்கின்றதோ, அந்தக் காரியமாகவே பரமசிவனது கிரியாசத்தியும் பரமசிவனும் கூறப்படுகின்றன ரென்பதாம்.

(உரை) சிவசத்தியால் கலக்கஞ்செய்யப்பட்ட மகாமாயையானது எக்தெந்த காரியத்தைத் தோற்றுவிக்கின்றதோ, அந்தந்த காரியத்தை அதிட்டிக்கும் சிவன் சத்திகளுக்கும் தொழில் வேறுபாட்டாலும் இட வேறுபாட்டாலும் உபசாரமாய் அந்தந்தப் பெயர் உண்டாகின்றது. எவ்வாறெனில், சாந்திபுவனத்தை அதிட்டித்து அதனைத் தோற்றுவிக்குங்கால் சிவசத்தியானது சாந்தி என்னும் பெயரை யடைகின்றது. சிவன் சாந்தனென்னும் பெயரையடைகின்றான். இவ்வாறே மற்ற இடங்களிலும் அறிந்துகொள்க. அவ்வாறே மிருகேந்திரத்திலும், "நால்களிற் கூறப்பட்டிருக்கும் பதிபேதமானது சத்தி வேறுபாடுபோல் காரிய வேறுபாட்டால் உபசாரமாய் நிகழ்ந்தது. காரிய வேறுபாடானது தொழில் வேறுபாட்டால் நிகழ்ந்ததெனக்" கூறப்பட்டிருக்கின்றதென்க. (உஎக—உஎ௨)

(அ—கை) இதனையே விரிவாய்க் கூறுகின்றார்.

(உஎங) காரியங்களைக் காரணமாகக்கொண்ட இச்சாஞானக்கிரியைகள் எதிலிருந்து உண்டாயினவோ அந்த ஞானக்கிரியா ரூபமான பரமசிவனது சிற்சத்தி ஒன்றேயாகு மென்பதாம்.

(உரை) எதிலிருந்து உண்டாயினவோ என்பதற்கு இச்சாஞானக்கிரியைகள் எதனுடைய அவத்தைகளாக இருக்கின்றனவோவென்பது கருத்து. காரியங்களைக் காரணமாகக்கொண்ட என்பதற்குக் காரிய ரூபங்களான உபாதிகளால் நிகழ்ந்ததென்பது கருத்தென்க. (உஎங)

(அ—கை) இவ்வாறு காரியங்களை விடயமாகக்கொண்ட சத்தியே பரமசிவனுக்கு வடிவமாயிருக்கிறதென்று கூறப்பட்டது. இனி, போக தத்துவம் அதிகார தத்துவமென்னும் இவற்றில் வசிப்பவர்களின் சரீரங்களும் விந்து சம்பந்தங்களே யென்று கூறுகின்றார்.

(உஎச) ஈசுவரர்களுடையவும் அபரமுத்த சிவன்களுடையவுமான தேகேந்திரியங்கள், சுத்தங்களாயும், மிக அழகுடன் கூடினவையாயும், அதிகாரத்தைச் செய்கின்றனவாயும் இருத்தல்பற்றி மகாமாயா மயங்களாயிருக்கின்றன வென்பதாம். (உஎச)

(உஎரு) கிரியா ரூபமான அந்தச் சிவசத்தியானது சிவனை விட்டுப் பிரியாததாயிருக்கின்றது. அதன் சேர்க்கையால் பரமசிவனும் எல்லாக் காரியங்களுக்கும் காரணமாகக் கூறப்படுகின்றான். (உஎரு)

(அ—கை) அதிகாராவத்தையைப்பற்றிக் கூறுகின்றார்.

(உஎசு—உஎகூ) அந்தப் பிரபுவான பரமசிவன், விந்துவினின்று இறங்கி, அணுசதாசிவர்களால் சூழப்பட்டவராயும், பதியின் றொழில்களான அதிகாரங்களில் சதாசிவர் மந்திரமகேசுவரர்களை ஏவுகிறவராயும், எல்லா அத்துவாக்களினுடைய சிரசில் விளங்குகின்றாரென்பதாம்.

(உரை) விந்துவினின்று இறங்குதலென்பதற்கு உத்தியோக அவத்தையினின்றும் நீங்கிப் பிரவிருத்தியுடன் கூடியிருக்குந் தன்மையென்பது பொருள். பிரவிருத்தியாவது சுத்தஞ் செய்யத் தகுந்த சதாசிவர்களையும் வித்தியேசுவரர்களையும் முறையே அவரவர்களுக்குரிய புவனங்களிலும் அசுத்தாத்துவ அதிகாரத்திலும் ஏவுதலாகும். அதுபற்றியே பிரபுத்தன்மையுடையவராயும் எல்லா அத்துவாக்களையும் அதிட்டிப்பவராயும் விளங்குகின்றார். அஃதாவது சதாசிவ வடிவமுடையவராகத் தியானஞ் செய்யத் தகுந்தது என்பது கருத்து என்க. (உஎசு—உஎகூ)

(அ—கை) இனி, தியானஞ் செய்யத்தகுந்த வடிவங்களி னதிட்டானத்தைக் காட்டுகின்ருர்.

(உஎஎ—உஎகூ) பிரவிருத்தியுடன் கூடிய தேவஞண பரம சிவன், ஐந்து சுரோதசுடன் கூடினவராயும், பிரபுத்தன்மை யுடையவராயும், சத்தியைச் சிரசாகவும் ஞானம் கிரியை இச்சை என்னும் மூன்றனேயும் விரிந்த மூன்று கண்களாகவும் உடைய ராயும், விஞ்ஞானமென்னும் சந்திர கலேயுடன் கூடினவராயும், ஈசான மந்திரத்தைச் சிரசாகவும் தற்புருட மந்திரத்தை முகமாக வும் உடையாராயும், பத்துத் திக்குக்களிலும் கைவரிசைகளேயுடைய வராயும், அகோர மந்திரத்தை இருதயமாகவும் வாமதேவ மந்தி ரத்தை குஹ்யமாகவும் கொண்டவராயும், சத்தியோசாத வடிவத் தால் விளங்குகின்றவராயும், எல்லாவற்றையும் பரிசுத்தஞ் செய் பவராயும், சகளமூர்த்தியாயும் விளங்குகின்ருரென்பதாம்.

(உரை) இவ்விடத்தில் ஐந்து சுரோதஸ் என்னுஞ் சொல் லால் மந்திரரூபமான சத்தியின் ஐந்து அவத்தை வேறுபாடுகள் கூறப்படுகின்றனவென்க. (உஎஎ—உஎகூ)

(அ—கை) இவ்வாறு விந்துவின் அவத்தைகளே அதிட்டித் தலால் வேறுபாடிருப்பினும், உண்மையில் சிவனுஞ் சத்தியும் ஒன்றெனக் கூறி இவ்விடயத்தைக் கூட்டி முடிக்கின்ருர்.

(உஅ0) பரமசிவன் ஒருவனுகவேயிருக்கின்ருன். அவனது சத்தியும் விகாரமற்றதாயிருக்கின்றது. அவ்விருவரும் இலயம் போகம் அதிகாரமென்னுமிவற்றிலும் சின்மாத்திர வடிவமுடைய வராயிருக்கின்றனரென்பதாம். (உஅ0)

(அ—கை) இனி, சிவனுக்குஞ் சத்திக்கும் அநேகத் தன் மையென்னும் வேறுபாடு உபசாரமாய் நிகழ்ந்ததென்னும் விட யத்தை வேறு வழியாய்க் காட்டுதற்பொருட்டு இலய போக அதிகாரவத்தைகளே யடைந்த ஆன்மாக்களுக்கு வேறுபாடு உண் மையெனக் கூறுகின்ருர்.

(உஅக) அவ்வாறே அந்தப் பரமசிவனால் அதிட்டிக்கப் பட்ட சில ஆன்மாக்கள் நிர்மலமாயும் மிகக் கம்பீரமாயுமிருக்கும் சைதன்னிய சமுத்திர ரூபமான தனது சொரூபத்தில் இலயத் தையடைந்திருக்கின்றனரென்பதாம்.

(உரை) மல பரிபாகமடைந்த சிற்சில ஆன்மாக்கள் அனுக் கிரகஞ்செய்யும் அந்தப் பரமசிவனால் அனுக்கிரகஞ் செய் யப்பட்டவர்களாய்; அதாவது அனுக்கிரக சத்தியால் விடுதலை செய்யப்பட்டவர்களாய்; மிக நிர்மலமாயும், அதிக கம்பீரமாயுமிருக்கும் சருவக்ஞத் தன்மை, சர்வகருத்திருத் தன்மை என்னும் சமுத்திர ரூபமான தனது சொரூபத்திலிருக் கின்றனர். பரமசிவனது அனுக்கிரகத்தால் அவனது சாமியரூப மான மோக்ஷத்தையடைகின்றன ரென்பது கருத்து. சிவனிடத் தில் இலயமடைகின்றனரென்பதற்கு ஐக்கியத்தை யடைகின்றன ரென்று பொருள் கொள்ளுதல் கூடாது. அத்துவிதமானது முன்னரேயே ஓதக்கப்பட்டிருக்கிறதாகையாலென்க. இலயா வத்தையையுடைய சிவனுடன் சாமியத்தை யடைந்தமையால் இவர்களும் இலயாவத்தையை யுடையவர்களெனக் கூறப்படு கின்றனரென்க. (உஅக)

(அ—கை) விஞ்ஞான கேவலர்களும் பரிபாகமடையாத மலமாயைகளைத் தாண்டியிருத்தலாலும், மகாமாயையைப்பற்றி யிருத்தலாலும், போகமில்லாதிருத்தலாலும், தொழிலற்றவரா யிருத்தலாலும், இலயாவத்தையை யடைந்தவர்களாகக் கூறப்படு கின்றனரெனக் கூறுகின்றார்.

(உஅகஇ) வேறு சிலர்களும் பரமசிவனால் அடக்கப்பட்ட சத்தியுடன் கூடினவர்களாயிருக்கின்றனரென்பதாம். (உஅகஇ)

(அ—கை) போகாவத்தையை அடைந்தவர்களைப் பற்றிக் கூறுகின்றார்.

(உஅஉஇ) வேறு சிலர் பரிணாமத்துடன் கூடிய மகாமாயை யை ஆலிங்கனஞ் செய்துகொண்டு போகத்தில் ஆசைகொண்ட வர்களாயும், அந்த மகாமாயையினுடைய சேர்க்கையாலுண்டான சுகத்தில் பற்றிய மனதுடையவர்களாயுமிருக்கின்றனர் என்பதாம்.

(உரை) சாந்தி முதலிய புவனரூபமாகப் பரிணமித்த மகாமாயையைப்பற்றி யிருக்கின்றனரென்பது கருத்து என்க.

(உ௮௨ இ)

(அ—கை) அதிகார அவத்தையை அடைந்தவர்களைப் பற்றிக் கூறுகின்றார்.

(உ௮௩ இ) அவ்வாறே வேறு சிலர் பரமாகாசமென்னும் மகாமாயையைச் சார்ந்து அத்துவாக்களினுடைய சிரசிலிருந்து கொண்டு பரமசிவனுடைய ஆணையைப்பெற்று ஐந்தொழில் செய்கின்றனரென்பதாம்.

(உரை) அனந்தர் முதலியோர் சுத்தாத்துவாவின் சிரசினுள்ள மகாமாயா புவனங்களைச் சார்ந்து பரமசிவனுடைய ஆணையால் ஐந்தொழில் புரிகின்றவராய் இருக்கின்றனரெனக் கூறப்பட்டிருக்கின்றது என்க. (உ௮௩ இ)

(உ௮௪—உ௮௫) இலயம் போகம் அதிகாரமென்னும் இவற்றுடன் கூடிய ஆன்மாக்களை அதிட்டித்தலால், பரமசிவன் ஒருவனுயிருந்தும் உபசாரமாய் வேறுபாட்டையடைகின்றான். அதுபோலவே சத்தியும் வேறுபாட்டை யடைகின்றது. இனி, சிவனுக்கும் சத்திக்குமுண்டான வேறுபாடு கூறப்படுகின்றது என்பதாம். (உ௮௪—உ௮௫)

(அ—கை) சிவசத்திகளின் வேற்றுமையைப் பற்றிக் கூறுகின்றார்.

(உ௮௬) சுத்தாத்துவாவில் சிவன் கருத்தாவாகவும் சத்தி காரணமாகவும் கொள்ளப்பட்டிருக்கின்றது. தன்னிடமிருக்கும் நிறைந்த சைதன்னிய வடிவமான அந்தப் பரமசிவன் அந்தச்சத்திக்குப் பற்றுக்கோடாக இருக்கின்றானென்பதாம். (உ௮௬)

(அ—கை) தரும தருமித்தன்மை பற்றி இந்தச் சிவசத்திகளுக்கு வேறுபாடு நிகழ்ந்தது. அந்தத் தரும தருமி இரண்ட—

னுள் தருமி சொருபமான அறிவு தன்னிடத்திலேயே யிருக்கின் றது. விடயங்களை அறிவதில் சாமர்த்திய ரூபமான அறிவானது தருமமாகக் கூறப்படுகிறதெனக் கூறுகின்றார்.

(உ௮எ) அந்த அறிவானது எல்லாப் பொருள்களையும் அறிவதில்சாமர்த்தியம் பொருந்திய தோற்றமுடையதாயும் வியாபிக்கும் சொரூபமாயும் இருக்கும் பரமசிவனுடைய மகிமையாகின் றது என்பதாம். (உ௮எ)

(உ௮௮—உ௮௯) மகத்தன்மை பொருந்திய பரமசிவன் எல்லாப் பொருள்களிலும் வியாபகமாயிருக்கின்றான். அந்தச் சத்திசிவமென்னும் இரண்டனுள், சிவமென்னும் பெயர் கொண்ட அறிவைப் பிறபொருளைத் துணையாகக் கொள்ளாத வடிவமென்றும், அவனது சத்தியைப் பிறபொருளைத் துணையாகக் கொண்டிருக்கும் வடிவமென்றும் வித்துவான்கள் கூறுகின்றனரென்பதாம்.

(உரை) எல்லா விடயங்களிலும் வியாபகமான சாமர்த்தியத்துடன் கூடியிருப்பதுபற்றிப் பரமசிவன் எல்லாப்பொருள்களையும் வியாபித்தவனுகின்றான். சிவமென்னும் பெயர் கொண்டவென்பதனால் இப்பொருளையே விளக்கஞ் செய்கின்றார். பிறபொருளைத் துணையாகக் கொண்டதென்பதற்கு விடயங்களைத் துணையாகக்கொண்டதென்பது பொருளென்க. (உ௮௮-உ௮௯)

(அ—கை) எதனுலிவ்வாறு கற்பிக்கப்படுகிறதென்பார்க்குக் கூறுகின்றார்.

(உ௯௰) எல்லாப்பொருள்களுக்கும் பிறபொருளைத் துணையாகக் கொள்வதனாலும், துணையாகக் கொள்ளாமையாலும் இரண்டு வடிவம் அறியப்படுகின்றது. ஆகையால் சிற்சத்தியானது சிவனைப்பற்றி யிருக்கின்றது என்பதாம்.

(உரை) சுடப்பொருளில் சுடுதலைச்செய்யும் அக்கினிக்குச் சுடப்படும் பொருள்களான விறகு முதலிய பிறபொருள்களின் சம்பந்தத்தில் சுடுதலென்னும் சாமர்த்தியம் காணப்படுகின்றது.

பிறபொருள்களின் சம்பந்தமில்லையாயின் அந்தச் சாமர்த்தியம் விளங்கித் தோன்றுகிறதில்லை. சித்துப் பொருளில் ஆன்மாவி னிடத்தில் விடயங்களைத் துணையாகக் கொள்ளும் விடய அறிவு ரூபமான அறிவும், அறிபவன் ரூபமான சுயம்பிரகாச அறிவும் இருக்கின்றன. ஆகையால் எல்லாப் பொருள்களுக்கும் இரண்டு வடிவமுண்டு. அதுபற்றிச் சிவனிடமும் பிறபொருள்களைத் துணையாகக் கொள்ளும் சத்தியென்னும் வடிவமிருக்கின்றது என்க. (உஅகூஇ)

(அ—கை) அவ்வாறாயின் ஆன்மசத்தியினின்றும் சிவசத் திக்கு விசேடமென்னை என்பார்க்குக் கூறுகின்றார்.

(உகூ0—உகூக) யாதொரு காரணத்தால் எக்காலத்தும் விளங்கித்தோன்றுகின்றதாயும்,காலதேசங்களால் வரையப்படாத தாயுமான மகிமைபொருந்திய பரமசிவனுக்கு அறியத்தகுந்த பொருள், அதிட்டிக்கத்தகுந்த பொருள், செய்யத் தகுந்த பொருள் என்னுமிவற்றில் சத்தியென்னும் வடிவத்தைத்தவிர வேறான பொருள் காரணமாயிருக்கவில்லையோ, அந்தக்காரணத் தால் சத்தியானது பரமசிவனுடைய பிறபொருளைத் துணையாகக் கொள்ளும் வடிவமாகின்றது என்பதாம்.

(உரை) பரமசிவன் நித்தியமுத்தனுகையால் பொருள்களை அறியும் விடயத்தில் சத்தியைத் தவிர வேறான புத்தி முதலிய காரணங்களையும் ஒளி முதலிய துணைக்கருவிகளையும் துணையாகக் கொள்ளவில்லை. அதுபற்றிச் சத்தியே அவனுடைய பிறபொரு ளைத் துணையாகக் கொள்ளும் வடிவமாகின்றது. வேறொன்றும் ஆகின்றதில்லை என்க. (உகூ0—உகூக)

(அ—கை) பெத்தான்மாக்களுக்கு விடயங்களைத் துணை யாகக் கொள்ளும் சத்தியானது தனது சொரூபமாத்திரமாய் (அஃதாவது சுதந்திரமாய்) காரியங்களைக்குறித்துக் காரணமாகின்ற தில்லை. எதனாலெனில், அந்தப் பெத்தான்ம சத்திகளுக்குப் புத்தி முதலிய காரணங்களின் துணை காணப்படுதலாலென்று கூறு கின்றார்.

(உகூஉ) அணுவருக்கும் இந்தச் சத்தியானது விடயத்தைத் துணையாகக் கொள்ளும் ரூபமாத்திரமாயிருந்துகொண்டு காரியங்களுக்குக் காரணமாகின்றதில்லை. காரியமான புத்திரன் முதலிய ரூபங்கள் வேறுவிதமாக அறியப்படுதலால் என்பதாம்.

(உரை) அணுவருக்கும் என்றவிடத்தில் சிவனுக்கு என்று பாட பேதமுண்டு. அந்தப்பாடத்திற்குக் கேவலனுன பரம சிவனுடைய ஞானமானது சொரூபமாத்திரமாயிருந்து கொண்டு காரியங்களுக்குக் காரணமாகின்றதில்லை. விடயங்களைத் துணையாகக் கொண்டே காரணமாகின்றது என்று பொருள் கொள்க. பெத்தான்மாக்களுக்கு அவ்வாறில்லை. எதனுலெனில், பார்க்கப்பட்ட காரியரூபமான புத்திரன் முதலியோருக்கு, விடயம் முதலியவற்றைத் துணையாகக்கொண்ட பிதா:முதலியோரின் ஞானமுதலிய * வற்றுற்றான் உற்பத்தி காணப்படுதலால் என்பது பொருளாகக் கொள்கவென்க. (உகூஉ)

(அ—கை) ஆகையால் பரமசிவனுக்கும் விடயங்களைத் துணையாகக்கொள்ளாத அறிதல் ரூபமான அறிவு சம்பவிக்கவில்லையெனக் கூறுகின்றூர்.

(உகூஉஇ) விடயமற்ற அறிவுகிடையாது. அதுவே விடய அறிவாதலால் என்பதாம்.

(உரை) அவ்வாருயின் விடயங்களின் சேர்க்கையிலேயே அறிவு நிகழ்கின்றமையால் பரமசிவனுடைய தரும சொரூபத்திற்கு அநித்தியத்தன்மை வருமேயெனில், வராது. எதனுலெனில், பரமசிவனுக்கு எக்காலத்தும் விந்து முதலிய நித்தியப் பொருள்கள் விடயமாயிருத்தலானும், அறியுஞ் சாமர்த்தியமானது அறிபவனிடத்தில் சமவாய சம்பந்தத்தால் எப்பொழுதுமிருத்தலானுமென்க. (உகூஉஇ)

---

* முதலிய என்றதனுல், கன்மங் காலம் தத்துவங்கள் கொள்ளப்படும்.

(அ—கை) அவ்வாருயின் ஆன்மாக்களுக்கு இது கருமை யாயிருக்கின்றதென்னும் அறிவு நீங்கி இது பொன்மையாயிருக் கின்றதென்னும் அறிவுமுறையே உண்டாகின்றமையால் அறியுஞ் சாமர்த்தியமும் அநித்தியமாகவே அறியப்படுகின்றதென்பார்க் குக் கூறுகின்ருர்.

(உகூ௩இ) யாதொருகாரணத்தால் சிறிது காலத்தில் வேறு விதமாய்த் தோன்றுதலே அழிவுடைய பொருள்களின் தரும மாக விருக்கின்றதோ, அந்தக்காரணத்தால் கருமை பொன்மை என்னும் இவற்றை விடயங்களாகக் கொண்ட அறிவுகள் ஒன்றுக் கொன்று மாறுதலாயிருக்கின்றமைபற்றி அழிவுடையனவே. அவ்வறிவுகளை அறியும் ரூபமான சாமர்த்தியம் அழிவில்லாதது என்பதாம்.

(உரை) கருமையாயிருக்கின்றதென்னும் நிச்சயத்தினின் றும் வேருன பொன்மையாயிருக்கின்றதென்னும் நிச்சய ரூப மான புத்தி விருத்தியானது அழிவினையுடையதாகையாலும் ஒன்றுக்கொன்று விரோதமாதலாலும் முறையே வெவ்வேருய்த் தோன்றினும் சுகதுக்க ரூபமான புத்தியையறிதலென்னுஞ் சாமர்த்தியம் எக்காலத்தும் அறிபவனிடத்தில் சமவாயச் சேர்க் கையாவிருக்கின்றதாக அறியப்படுதலால் அந்தச் சாமர்த்தியம் அழிவில்லாததே. ஆகையால் வெவ்வேருன தோற்றங்களெல் லாம் புத்திவிருத்தியின் பரிணமங்களே ஆகுமென்க. (உகூ௩இ)

(உகூசஇ) ஆகையால், அழிவில்லாத ஆன்மசாமர்த்தியம் நித்தியமாகவேயிருக்கின்றது. இதுபோலவே சிவசத்தியானது தனக்குப் பற்றுக்கோடான பரமசிவனினின்றும் வேருயிருக்கின் றது. அந்தப் பரமசிவனும் அந்தச் சத்தியினின்றும் வேரு யிருக்கின்ருன். ஆகையால் சிவனுஞ் சத்தியும் தருமியும் தரும மும் ஆகுமென்பதாம்.

(உரை) அந்த ஆன்ம சாமர்த்தியமான சத்தியையும் சிவ சாமர்த்தியமான சத்தியைப் போல் நித்தியமாகக் கொள்ளல் வேண்டும். இவ்வாருகவே சிவனுக்குஞ் சத்திக்கும் சொரூபத்

தில் வேற்றுமை இல்லையாயினும், தருமதருமி ரூபமான வேற்றுமை உண்மையேயாகும். ஆகையால் சிவசத்தி சிவனுடைய தருமமேயாகுமென்க. (உகூச)

(அ—கை) இவ்விடயத்தில் பூர்வபக்ஷியின் சங்கையைக் கூறுகின்றார்.

(உகூ௫) ஞானவடிவினனான பரமசிவனிடத்தில் தொழில் ரூபமான உபாதிபற்றிச் சத்தியென்னும் பெயர் நிகழ்ந்திருக்கிறதேயன்றி உண்மையில் பிறபொருளைத் துணையாகக்கொண்டிருக்கும் சத்தி என்னுந் தருமம் அவனிடத்திலில்லை யென்று சிலர் கூறுகின்றனரென்பதாம்.

(உரை) தருமியின் சொரூபந்தான் உண்மை. தருமசொரூபம் உண்மையில்லையென்பது கருத்தென்க. (உகூ௫)

(அ—கை) பூர்வபக்ஷிக்கு விடை கூறுகின்றார்.

(உகூசு) காரணமில்லாது காரியத்தைச் செய்பவன் கருத்தாவாயிருக்கின்றானென்னும் யுத்திக்கும் பிரத்தியக்ஷத்திற்கும் மாறுபட்ட இவர்களுடைய புத்தியானது மிகப்பொருத்தமற்றதென்பதாம்.

(உரை) குலாலன் முதலியோருக்குத் தண்டம் முதலிய காரணங்களின்றிக் கருத்திருத்தன்மை காணப்படாமையால் கருத்தாவான சிவனுக்கும் காரணம் நிச்சயமாய் வேண்டும். அந்தக் காரணம் சத்தியேயாகும். அவ்வாறே மிருகேந்திரத்திலும், "பரமசிவனுக்குச் சத்தியைத் தவிர வேறு காரணங்கிடையா" தென்று கூறப்பட்டிருக்கின்றமை காண்க. இவ்வாறே ஆன்மாக்களுக்கும் அவர்களுடைய தேகத்தின் அசைதலில் சத்தியே காரணமாகக் கூறப்பட்டிருக்கிறது. அன்றியும் அறிவு ரூபமான சத்தியை உண்மையாகக் கொள்ளவில்லையாயின் நிதி காலத்திலும் உபாதியான சதாசிவ தத்துவம் முதலிய விந்து காரியங்களை விடயமாகக் கொள்ளாமையால், இந்தப் பரமசிவனுக்குச் சதாசிவம் முதலிய வேற்றுமையைக் கற்பித்ததும் பொருத்தமற்றதாகின்றதென்க. (உகூசு)

(அ—கை) விந்து காரியமான சதாசிவ தத்துவமுதலிய உபாதிகளின் அறிவு இல்லையாயினும் உபசாரமாய்ச் சதாசிவ முதலிய வேற்றுமையைக் கொள்வோமெனில், பரமசிவனுக்கு எக்காலத்தும் அதிகார அவத்தைதானிருக்கும். இலயாவத்தை இராது. எதனாலெனில், விசேடமின்மையாலென்று கூறுகின்றார்.

(உகூஎஇ) அன்றியும், அறிவிற்கு விடயமாகாத காரியமே பரமசிவனுக்கு உபாதியென்று கொண்டால் எக்காலத்தும் உபாதியுடன் கூடியிருத்தலால் உபாதியற்றவனாகப் பரமசிவன் எக்காலத்துமிருக்க மாட்டானென்பதாம். (உகூஎஇ)

(அ—கை) விந்து முதலியவற்றைப் பரமசிவன் அறியவில்லையாயின், அவற்றைக் கலக்கஞ்செய்வனென்பதும் பொருத்தமற்றது; அறியப்படாததைச் செய்ய முடியாதாகையாலென்று கூறுகின்றார்.

(உகூஅ) காரணத்தினுடைய அறிவில்லாதவன் எவ்வாறு கருத்தாவாக விருப்பன் என்பதாம். (உகூஅ)

(அ—கை) அன்றியும் ஆன்மாக்களையும் சிவனுக்குச் சமமான குணமுடைமை பற்றித் தருமி ரூபமாய்க் கொண்டு தருமரூபமான அறிவைக் கொள்ள வில்லையாயின், அவர்களுக்குச் சுகம் முதலியவற்றின் அறிவு ரூபமான போகமும் நிகழ்கின்றதில்லையெனக் கூறுகின்றார்.

(உகூஅஇ) புருடன்றான் தருமரூபமான சத்தியையின்றிச் சுகதுக்க ரூபமான புத்தியை எவ்வாறு அறிவன் என்பதாம். (உகூஅஇ)

(உகூகூஇ) (இவ்வாறாகவே) இந்த எல்லாவுலகங்களும் சத்தியென்னும் தீபமில்லையாயின் அஞ்ஞானமென்னும் பெரிய இருளுடன் கூடினவையாகும். அன்றியும் சத்தியற்ற பரமசிவனுக்குத்தான் என்னசெய்ய முடியும் என்பதாம்.

(உரை) சத்தியைக் கொள்ளவில்லையாயின் போக மோக்ஷத்தின் பொருட்டு ஒருவித முயற்சியுமின்றிச் சூனியமாக உலகமாகின்றதென்பது கருத்து என்க. (௨௯௯இ)

(௩௦௦இ) ஆகையால் சிவனுடைய சத்தியானது சிவனோடு விட்டுப் பிரியாததாயிருந்தபோதிலும் மருவரை யென்னும் தானிய விசேடம் அங்குட்ட மென்னும் தானியவிசேடத்தினின்றும் எவ்வாறு வேறாயிருக்கின்றதோ அவ்வாறு வேறாயிருக்கின்றது. அவ்வாறு வேறாயிருப்பினும் முன்னர்க்கூறப்பட்ட தரும தருமி யென்னுங் காரணங்களால் வேறாகவுமில்லை என்பதாம்.

(உரை) எவ்வாறு மருவரை யென்னும் தானியவிசேடமும் அங்குட்டமென்னும தானியவிசேடமும் ஒரே இனமாயிருந்தும் சில வடிவ வேறுபாட்டால் வேற்றுமை யடைகின்றனவோ, அவ்வாறே சிவனும் சத்தியும் வெவ்வேறு பொருள்களாயில்லையாயினும் தரும தருமித் தன்மையால் வேறுபாடுடையனவாயிருக்கின்றன. இவ்விடத்தில் மருவரை அங்குட்டங்களைத் திருட்டாந்தமாகக் கூறியது சாதியொருமைபற்றி ஒன்றென்னும் விடயத்தில் கூறப்பட்டது. உண்மையில் அங்குட்டத்திற்கும் மருவரைக்கும் வேற்றுமையுளதாகையாலென்க. இவ்வாறே சிவனுக்குஞ் சத்திக்கும் தரும தருமி ரூபமான வேற்றுமையிருந்தும் தாதான்மியச் சேர்க்கையால், வேறான ஆன்மாவைப்போல் வேற்றுமையிலையாதென்று, “முன்னர்க் கூறப்பட்ட காரணங்களால்,” என்பதனால் கூறுகின்றாரென்க. (௩௦௦இ)

(அ—கை) சத்திக்கும் சத்திமானுக்கும் வடிவத்தில் வேற்றுமையில்லையாயினும் தரும தருமித் தன்மைபற்றி வேற்றுமையுண்டென்பதைக் கூறிவிட்டு இவ்விடயத்தைக்கூட்டி முடிக்கின்றார்.

(௩௦௧இ) இந்தச் சத்தியானது பரமசிவனோடு பிரிக்க முடியாத அபின்னத்தினிருந்தும் சூரியனுடைய கிரணம்போல் நிர்மலமாயும் சுபாவசித்தமாயும் பரமசிவனைப் பற்றுக்கோடாய்க் கொண்டதாயும் வேறாயுமிருக்கின்றது என்பதாம். (௩௦௧இ)

(அ—கை) பரமசிவன் விந்துவென்னும் சடசத்தியினு லேயே காரியத்தைச் செய்யட்டும்; சிற்சத்தியினால் யாதுபய னென்பார்க்குக் கூறுகின்றார்.

(௯௦௨-இ) இந்தப் பரமேசுவரன் தன்னினின்றும் மிக வேற்றுமையை யுடையதான விந்துவென்னும் சத்தியைக் கொண்டு ஒருபொழுதும் ஒரு பொருளையும் செய்கின்றானில்லை. அறிகின்றானில்லை என்பதாம்.

(உரை) விந்துவானது முதற்காரணமாயிருப்பதுபற்றி வெ ளிச் சாதனமாயிருத்தலாலும் முதற்காரணமாயிருப்பதுபற்றியே அசேதனப் பொருளாயிருத்தலாலும், சித்து ரூபமாயும் தன்னி டத்தில் சமவாயச் சேர்க்கையால் இருக்கின்றதாயுமுள்ள சத்தி யையின்றி விந்து முதலிய பொருள்களை விடயமாகச் செய்வதற் கும் அவற்றைக் கலக்கஞ் செய்வதற்கும் சிவன் சமர்த்தனாகின்று னில்லை. உலகத்திலும் குலாலன் முதலியோர் சிற்சத்தியோடு கூடியே கடம் முதலிய காரியங்களைச் செய்கின்றவர்களாகக் காணப்படுகின்றனராகையாலென்க. (௯௦௨-இ)

(அ—கை.) அவ்வாறாயின் சத்தியையின்றிப் பரமசிவ னுக்கு ஒரு காரியத்தையுஞ் செய்யுந்தன்மை இல்லாமையால் இந்தச்சத்தியே உலகத்திற்கு நிமித்த காரணமாக விருக்கட்டும். பெரியோர்களும் "சத்தியே யாதொரு உண்மையின்றிப் பரமசிவ னும் சருவஞ்ஞனுயில்லையோ அத்தகைய உன்பொருட்டு நமஸ் கார" மென்று சத்தியைப் புகழ்ந்திருக்கின்றனரெனில், அது பொ ருந்தாது. எதனாலெனில், சத்தியானது தருமமாகையால் அது தருமியைவிட்டு இராமையால் அச்சத்திக்குத் தருமியாகச் சங் கற்பமாத்திரத்தால் உலகத்திற்குக் கருத்தாவான பரமசிவன் நிச் சயமாய் வேண்டுமென்று கூறுகின்றார்.

(௯௦௯) ஒருவிதமான விசேடமற்றவனாயிருந்தும் பரமசிவ னே உலகத்திற்கு நிமித்த காரணனாயிருக்கின்றானென்பதாம். (௯௦௯)

**(அ—கை)**—இனி, கருத்திரு சத்திக்கு உபசாரமாய்க் கூறப் பட்ட வேற்றுமை விஷயத்தில் உபாதியாயுள்ள காரியங்களின் வேறுபாடு உண்மையென்று கூறுகின்றார்.

(கoக.இ) காரியவேறுபாடானது காரியங்களின் அவத்தை வேறுபாட்டால் நிகழ்கின்றது என்பதாம். (கoக.இ)

(அ—கை.) இதனையே விரியாய்க் கூறுகின்றார்.

(கoச இ—கoடு இ) ஒடுக்கிய காரியங்களையுடையதாயும் சிவசத்தியாலேவப்பட்டதாயுமிருக்கும் விந்துவானது சிருட்டி யின்பொருட்டும் நிலைத்தலின் பொருட்டும் படைக்கப்பட்ட உலகத்தின் ஒடுக்கத்தின் பொருட்டும் அவத்தையின் வேறு பாட்டை யடைந்து நீண்ட நாளாக இருக்கும்படி செய்யப்பட்ட உலகத்தையுடையதாய்ப் பிரவிருத்திக்கின்றது என்பதாம்.

(கoச இ—கoடு இ)

(அ—கை,) இவ்விஷயத்தையே திருட்டாந்த முகத்தால் காட்டுகின்றார்.

(கoசு இ) எவ்வாறு மண்ணானது வேறுவிதமான அவத் தையால் கடத்தைத் தோற்றுவிக்கின்றதோ, அவ்வாறே இந்த விந்துவும் தோற்றுவிக்கின்றது என்பதாம். (கoசு இ)

(கoஎ—கoகூ) (அன்றியும்) இந்த விந்துவானது பரம சிவன் விகாரமற்றவனாயிருந்தும் அவனிடத்தில் அவனுடைய சத் தியால் கலக்கஞ் செய்யப்பட்டதாய் அந்தந்த விருத்தி விசேடத் தால் காரியவேறுபாட்டின் பொருட்டுச் சேருகின்றது. பரமசிவ னும் தான் ஒருவிதமான விகாரமில்லாதவனாயிருந்தும் மேலே கூறப்பட்ட முறையாகத் தோன்றுவனவாயும் அவத்தை வேறு பாட்டால் உண்டானவையாயுமிருக்கும் படைத்தல் முதலிய காரியங்களைச் சூரியன் விகாரமற்றவனாயிருந்து தாமரைகளை மலரச் செய்வதுபோலச் செய்கின்றான் என்பதாம். (கoஎ—கoகூ)

(அ—கை.) ஆனால் அந்தப்பரமசிவன் என்ன பயனைக்கருதி படைத்தல் முதலிய தொழில்களைச் செய்கின்றானென்பார்க்குப் பசுக்களுக்கு அனுக்கிரகஞ் செய்வதின்பொருட்டுச் செய்கின்றா

னென்று கூறுகின்றோம். அவ்வாறாயின் பரமசிவன் அனைவருக்கும் அனுக்கிரகஞ் செய்யவேண்டியதாயிருக்கச் சிலர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கின்றான். சிலர்களுக்குக் கொடுக்கவில்லை. இவ்வாறு செய்வது அவனுடைய இயல்பானல் அப்பொழுது சில ஆன்மாக்களிடத்தில் விருப்பும் சில ஆன்மாக்களிடத்தில் வெறுப்புமுடையனாகின்றா னென்பார்க்குக் கூறுகின்றார்.

(கக௦—கக்க) எவ்வாறு சூரியனானவன் தான் ஒருவிதமான விகாரமற்றிருந்தும், விருப்பு வெறுப்பற்று, மெழுகை உருகவும் மண்ணை உலரவும் செய்கின்றானோ, அவ்வாறே பரமசிவனும் தான் ஒருவிதமான விகாரமற்றவனாயிருந்தும் புண்ணிய பாவரூபமான வினைகளின் ஒப்பையடைந்த ஆன்மாக்களுக்கு மோக்ஷத்தையும் அந்த இருவினை யொப்பைப் பெறாத ஆன்மாக்களுக்குப் பந்தத்தையுஞ் செய்கின்றானென்பதாம்.

(உரை) பரமசிவன் அனைவருக்கும் அனுக்கிரகஞ் செய்கின்றானென்பது உண்மையே. ஆயினும் அவனுக்கு விருப்பு வெறுப்பு கிடையா. எதனாலெனில், அனாதியே மலமற்றவனாயிருத்தலாலென்க. உரிமை இருப்பதுபற்றி ஆன்மாக்களுக்கே பந்தமோக்ஷங்களுக்குக் கருத்தாவாயிருக்குந் தன்மை யிருக்கின்றது. ஆகையால் எவ்வாறு சூரியன் தானொருவனாய் விகாரமடையாமலிருந்து தனது சன்னிதானத்தால் உருக உரிமையுடைய மெழுகுக்கு உருகுதலையும், உலர உரிமையுடைய மண்ணுக்கு உலர்தலையும் செய்கின்றானோ, அவ்வாறே பரமசிவனும் மோக்ஷத்திற் குரியவர்களான மலபரிபாகமுடைய ஆன்மாக்களுக்கு மோக்ஷத்தைச் செய்கின்றான். பந்தத்துக்குரியவர்களான மலபரிபாகமில்லாத ஆன்மாக்களுக்கு மலபரிபாகம் நிகழ்வதின் பொருட்டுப் பந்தத்தைச் செய்கின்றான். இவ்வாறு கொள்ளின் ஒரு விதமான முரணுதலுமில்லாமை காண்க. இவ்விடத்தில் புண்ணியம் பாவமென்னுஞ் சொல்லால் எவனொருவன் உபகாரத்தில் மகிழாமலும் அபகாரத்தில் வெகுளாமலும் எல்லாவுயிர்களிடத்தும் ஒரேவிதமாயிருக்கின்றானோ அவனே சிவன் முத்தனென்று கூறப்படுகின்றானென்ற நீதியை அனுசரித்து உபகாரம்

அபகாரமென்னும் இரண்டு கன்மங்கள் கூறப்படுகின்றன. இவ்வாறான உபகாரம் அபகாரமென்னு மிவற்றிற்கு மலபரிபாகத்தால் ஒப்பு நிகழவே மோக்ஷம் நிகழ்கின்றது. அவற்றின் ஒப்பு இல்லையாயின் பந்தம் நிகழ்கின்றதென்று தான் பொருள்கொள்ள வேண்டுமேயன்றிப் புண்ணியம் பாவமென்பது அசுவமேதம் பிராமணக்கொலை முதலியனவென்றும், ஒப்பு என்பது அவ்விரண்டின் ஒப்பு மென்றும் பொருள் கொள்ளுதல் கூடாது. எதனாலெனில், சாத்திரவிரோதமாதலாலும், அசுவமேதம் பிராமணக் கொலை முதலிய கன்மங்களுக்கு ஒப்பு சம்சாரவத்தையிலும் இருக்கின்றமையாலும், அந்தக் கன்ம ஒப்பு கன்மநாசத்தினாலேயே உண்டானதாயிருத்தலால் மோக்ஷத்திற்குக் காரணமாகாமையாலும், முன்னர்க் கூறப்பட்ட கன்ம ஒப்புரூபமான குறியால் ஊகிக்கப்பட்ட மலபரிபாகமே தீக்ஷையின் வழியாய் மோக்ஷத்திற்குக் காரணமாயிருக்கின்றமையாலு மென்க. இன்னும் இதுபோன்ற வற்றை நம்மால் மிருகேந்திர விருத்தி தீபிகையில் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றமையால் அவ்விடத்துக் கண்டு கொள்க வென்க. (நகO—நகக)

(நகஉ) ஒன்றுக்கொன்று விரோதத்தால் தடுக்கப்பட்ட பரிபாகமுடைய கன்மங்களுக்குச் சம்பந்தமேற்படுங்கால் அணுவினிடத்தில் சிவசத்தி விழுகின்ற தென்பதாம்.

(உரை) ஒன்றுக்கொன்று மாறுதலான பயன்களையுடைய அசுவமேதம் பிராமணக்கொலை முதலிய புண்ணியபாவ ரூபங்களான கன்மங்களுக்காவது, அல்லது சுவர்க்கலோகம், பிரமலோகம் என்னுமிவற்றைப் பயன்களாகக்கொண்ட புண்ணிய ரூபமான கன்மங்களுக்காவது, அல்லது அவீசினம் ரௌரவம் என்னும் நரகங்களைப் பயனாகக்கொண்ட பாவரூபமான கன்மங்களுக்காவது, ஆன்மாவினிடத்தில் சம்பந்தமிருப்பின், அந்த ஆன்மாவினிடத்தில் சிவத்தன்மையைக் கொடுப்பதாயும், அனுக்கிரகஞ் செய்வதாயுமுள்ள சிவசத்தியானது விழுகின்றதில்லை. எதனாலெனில், அனுக்கிரகஞ்செய்யுஞ் சத்தியானது மலபரிபாகம் நிகழ்ந்தபின்னர்த்தான் விழுகின்றதாகச் சாத்திரங்களில் கேட்கப்படுதலா

லென்க. அன்றி, திரோதான சத்தியே நியதியின் வழியாய் மாறுபட்ட கன்மங்களுடைய நாசத்தின் பொருட்டு விழுகின்றது. அவ்வாறே மதங்காகமத்தில், புண்ணிய பாபவங்களுக்குப் பரிபாகமேற்படுங்கால் என்ற தொடக்கத்தால், மலபரிபாகத்தை இன்றியமையாத தீக்ஷைக்கே கன்ம நாசத்தின்வழியாய் மோக்ஷத்திற்குக் காரணமாயிருக்குந் தன்மை கூறப்பட்டிருத்தல் காண்க. இவ்வாறே கிரணாகமத்திலும் எந்தப் பிராரத்த கன்மத்தால் அநேகம் பிறவிகளில் சம்பாதிக்கப்பட்ட கன்மமும் வருங் கன்மமும் வறுத்தவித்துப் போல் தடைசெய்யப்பட்டிருக்கின்றனவோ, அந்தக் கன்மமும் போகத்தால் நசிக்கின்றதென்று கூறப்பட்டிருக்கின்றது. மலபரிபாகம் நிகழ்ந்த பின்னர் அநுக்கிரக சத்தி விழுகின்றது என்க. (௩கஉ)

(௩கங) அந்தச் சிவசத்தி விழுந்தமாத்திரத்தில் நெருக்கமான மறைப்பினின்றும் விலகினவனாய் மலத்தாலுண்டாகிய கலக்கத்தினின்றும் நீங்கிய தனது சொரூபத்தைப் பார்க்கின்றானென்பதாம்.

(உரை) மலமென்னும் மறைப்பினின்று நீங்கிய ஆன்மாவுக்குச் சருவஞ்ஞத்தன்மை முதலிய அவனது உண்மைச் சொரூபம் விளங்குகின்றதென்பது கருத்து என்க. (௩கங)

(௩கங இ) எப்பொழுது சிவனுடைய இச்சாரூபமான சிவசத்தியால் சம்பந்திக்கப்பட்டானோ அப்பொழுதே முத்தனாகின்றானென்பதாம் (௩கங இ)

(அ—கை.) தீக்ஷையென்னும் சிவசத்தியினால் சம்பந்திக்கப்பட்டவன் முத்தனாயிருந்தாலும் பிராரத்தபந்தத்தை நீக்குதற்காக அவன் கன்மங்களை அநுட்டிக்கின்றானென்று கூறுகின்றார்.

(௩கச) இந்த முத்தனும் நித்தியகன்மம் நைமித்திக கன்மமென்னும் இவற்றோடு மாத்திரமிருக்கின்றானென்பதாம். (௩கச)

(௧௧௫) (அந்த முத்தர்களுள்ளும்) மிகத்தீரர்களான சிலர் இந்தச்சரீரத்துடனேயே மேலான வியாத்தியை யடைகின்றனர். அவர்கள் மிகப்பெருமைவாய்ந்த சிவயோகிகளாவரென்பதாம்.

(உரை) யோகாப்பியாசத்தால் இவ்விடத்திலேயே சருவஞ்ஞத்தன்மை முதலியன அவர்களுக்குத் தோன்றுகின்றனவென்பது கருத்து எனக. (௧௧௫)

(அ—கை) எடுத்துக்கொண்ட விஷயத்தை அனுசரித்துச் சிவயோகியின் மகிமையைக் கூறுகின்றார்.

(௧௧௬—௧௧௬இ) சிவயோகியானவன் தனது லீலையாக பார்வையாலும், வாக்காலும், காலாலும், கையாலும், நதிகள், கிராமங்கள், உத்தியானங்கள், பட்டணங்களென்னுமிவற்றைப் பரிசுத்தஞ் செய்கின்றான். அவ்வாறாயின் சம்சாரத்திற்கு அஞ்சிச் சரணமடைந்தவர்களைக் காக்கும் விஷயத்தில் சொலலவேண்டியதில்லை என்பதாம். (௧௧௬—௪௧௬இ)

(அ—கை.) இனி இந்தப் பிரகரணஞ்செய்த ஆசிரியர் தனது குருவுக்கு நமஸ்காரத்தைச் செய்கின்றார்.

(௧௧௭—௧௧௮) மிகப் பிரசித்திபெற்றவராயும், அதிகமான பலன்களைத் தரக்கூடிய யோக இரத்தினங்களுக்கு இருப்பிடமாயும், சிவயோகியாயுமிருக்கும் எனது குருவின்பொருட்டு நமஸ்கரிக்கின்றேன் என்பதாம். (௧௧௭—௧௧௮)

(அ—கை,) இனி இந்தப்பிரகரணம் இன்னரால் செய்யப்பட்டதெனக் கூறுகின்றார்.

(௧௧௯) ஸ்ரீ ராமகண்டரால் செய்யப்பட்ட ஆலோகமென்னும் வியாக்கியானத்தால் நிர்மலமாகச் செய்யப்பட்ட மனதையுடைய ஸ்ரீ கண்டரென்னும் வித்துவானல் இந்த இரத்தினத்திரயங்களின் பரீக்ஷை செய்யப்பட்டது என்பதாம்.

(உரை) இராமகண்டருடைய அழகான விருத்தியை அனுசரித்து என்னால் மூன்று இரத்தினங்களுடைய ஆராய்ச்சி சுருக்கமாய்ச் செய்யப்பட்டது என்க. (௩௧௬)

அழகிய சொற்களையுடையவராயும் கவிகளுக்கெல்லாம் மேற்பட்டவராயுமுள்ள யாதொருவரால், மதுரம்பொருந்தியஆச்சரியசாரமென்னும் நூலும், பாஷண்டாபஜயம் என்னும் நூலும், பக்தப் பிரகாசம் என்னும் நூலும், நாட்டியாப்புயதயம் என்னும் நூலும், சிவாகமங்களுக்கு அநேகம் விருத்திகளும் செய்யப்பட்டனவோ, அத்தகைய அகோர சிவாசாரியரால் இந்த இரத்தினத்திரயத்திற்கு உல்லேகினி என்னும் கடைதலும் நன்றாய்ச்செய்யப்பெற்றது என்க.

இரத்தினத்திரயம் மூலமும்,

விருத்தியுரையும்,

முற்றுப்பெற்றன.

சிவபெருமான் றிருவடிவாழ்க.

---

உ
சிவமயம்

ஸ்ரீ சத்தியோஜ்யோதி சிவாசாரியாரால் இயற்றப்பெற்ற

# போககாரிகை மூலமும்,

இதற்கு

ஸ்ரீ அகோர சிவாசாரியராலியற்றப்பெற்ற

# விருத்தியுரையும்.

(தமிழ் மொழிபெயர்ப்பு)

## உரைமங்கலம்.

(க) போக மோக்ஷங்களை அளிப்பவரான சிவபெருமானை நமஸ்கரித்து மந்தாதிகாரிகளின் நன்மையின் பொருட்டுப் போக காரிகை யென்னும் நூலுக்குச் சிறிது விளக்கமான உரையைச் செய்கின்றேன் என்பதாம். (க)

## நூல் மங்கலம்.

(அவதாரிகை) பூசிக்கப்படுபவரான சத்தியோ ஜ்யோதி சிவாசாரியார் இப்பிரகரணத்தில் கூறப்படும் போக மோக்ஷ ரூபமான பொருள்களின் குறிப்புடன், நூல் விக்கினமின்றி முடியும் பொருட்டு முதலாவது பரமசிவனை நமஸ்கரிக்கின்றார்.

## மூலம்.

(க—உ) மூன்று பந்தங்களையுடைய ஞான சொரூபமான ஆன்மாக்களுக்குக் கலையினுடைய சேர்க்கையால் போகத்தையும், அதன் நீக்கத்தால் மோக்ஷத்தையுங் கொடுக்கிறவராயும், காலம்

மூன்றனையும், பொருள்களனைத்தையும் அறிபவராயும், பிறவி யற்றவராயும், விகாரமில்லாதவராயுமுள்ள பரமசிவனை நமஸ்கரித்துச் சாதகர்கள் அறிந்துகொள்ளும் பொருட்டு யுக்தியினால் நிர்ணயஞ் செய்யப்பட்டவையாயும், ரௌரவாகமத்தினால் சித்தித்தவையாயும், சாதனங்களுடன் கூடினவையாயும் உள்ள போக மோக்ஷங்களை ரௌரவாகமத்தை அனுசரித்தே சிறிது கூறுகின்றேனென்பதாம்.

## உரை.

மூன்று பந்தங்களாவன, மல கன்ம மாயைகள். இவை எவர்களுக்கிருக்கின்றனவோ அவர்களே மூன்று பந்தங்களையுடையவர்கள். அந்த மூன்று பந்தங்களையுடைய சகல வருக்கத்து ஞான சொரூபமான ஆன்மாக்களுக்குச் சூக்குமதேகத்தை யுண்டு பண்ணக்கூடிய கலைமுதல் பிருதிவி ஈறான தத்துவரூபமாயும், அந்தந்தப் புவனங்களினின்றுண்டான தேகரூபமாயுமுள்ள மாயையைச் சார்ந்த அவயவங்களுடன் சேர்க்கையால் போகத்தையும், இவற்றின் நீக்கத்தால் மோக்ஷத்தையும் கொடுக்கிறவனென்றதனால் சிவன் அனாதி முத்தனென்பது பெறப்படும். அதுபற்றி அனைவருக்கும் அநுக்கிரகஞ் செய்யுந் தன்மையும், எவற்றிற்குங் கருத்தாவாயிருக்குந் தன்மையும் சிவனுக்குள்ளன வென்பது குறிப்பிக்கப்படுகின்றது. அதுபற்றியே அவர் இறப்பு, நிகழ்வு எதிர்வு என்னும் காலங்களையும், அவ்வவக் காலங்களிலுண்டாகும் எல்லாப் பொருள்களையும் அறிகின்றவராகின்றார். இவ்வாறு கூறியவாற்றால் சிவன், நின்மலன், சர்வகருத்தா வென்பது பெறப்படுதலால் எப்பொழுதும் இவருக்கு எல்லாவற்றையும் அறியுந் தன்மை இருக்கின்றதென்பது கூறப்படுகின்றது. இன்னும் சிவன் நின்மலனா யிருப்பதினாலேயே சரீர முதலியவற்றின் சம்பந்த ரூபமான பிறவியற்றவராயும், விகாரமில்லாத வராயுமிருக்கின்றார். வித்து முதலியவற்றிற்குப் போலப் பரிணாமியாயிருக்குந் தன்மை இவருக்கில்லை. விகாரியாயிருக்கிறாரென்று கூறில் ஈசுவரனுக்குச் சடத்தன்மை யுண்டெடன்பது சித்திக்கும். முதலாவது சுலோகத்தில் இத்தகைய சிவபெருமானை நமஸ்கரித்து

என்று எச்சமாகக் கூறி இரண்டாவது சுலோகத்தில் போக மோக்ஷங்களைக் கூறுகின்றேனென்று முடிக்கின்றார். போக மோக்ஷங்களைச் சாதித்துக் கொடுத்தல் பற்றிச் சாதகரென்னும் பதத்தால் ஆசிரியர் முதலியோரையுங் கொள்ளல் வேண்டும். அவர்களுக்குப்போக மோக்ஷங்களுக்குச் சாதனங்கள் தீக்ஷை முதலியவை யென்பது அறிவித்தற் பொருட்டு யுத்தியினால், அதாவது அனுமானத்தால் நிச்சயிக்கப்பட்டவையாயும், ரௌர வாகமத்தினால் சித்தித்தவையாயும், சாதனத்துடன் கூடினவை யாயுமுள்ள போக மோக்ஷங்களை ரௌரவத்தை அனுசரித்தே அருக்கமாகக் கூறுகின்றேன் என்றாரென்க. (க-உ)

## நூல்.

(அ—கை) சாதனத்துடன் கூடின போகத்தை யறிவித் தற்பொருட்டு, போகத்தில் அதிகாரம் இத்தன்மையருக் குண் டெனக் கூறுகின்றார்.

(ங) மலத்துடன் கூடியிருத்தலால் ஈசனாலேவப்படுந் தன் மையுடைய ஆன்மாக்களுக்குச் சம்சார நிலையில் கன்மத்தை அனுசரித்துப் போகத்தில் ஆசையுண்டாகிறது என்பதாம்.

(உரை) மலத்துடன் கூடியிருத்தலால், ஈசனென்றவற் றால், அதிகாராவத்தையிலிருக்கும் சிவனால் அனந்தர் வாயிலாக போகத்துடன் கூடியிருக்கும் ஆன்மாக்களுக்கு மலம் காரணமாக சம்சார நிலையில் கன்மங்களின் பக்குவத்திற்கு ஏற்பப் போகத்தில் இச்சையானது உண்டாகின்றதென்பது அறிவிக்கப்பட்டது. சாங்கியர்கள் ஆன்மாவை நின்மலனாகக் கூறுகின்றனரோ எனில், அது பொருந்தாது. ஆன்மா நின்மலனாயின் அவனுக்குப் போகத் தில் பற்றுதல் கூடாது. நின்மலனுக்கும் பற்றுதல் உண்டென்று கூறின் முத்தனுக்கும் போகத்தில் ஆசையுண்டாகவேண்டும். ஆசைக்குக் காரணம் மலமன்று. அராகமேயெனில், அஃதுண் மையே. ஆயின், அராகமும் மலமுள்ளவனுக்குத்தானுண்டு. இதற்குப் பிரமாணம் "புருடனுக்கு மலமில்லையாயின் போகத் தில் ஆசையானது எதனால் நிகழும்." என்னும் சுவாயம்புவாகம மேயாகுமென்க. (ங)

(அ—கை) பின்னர் போகமென்பது எது? அது எந்தச் சாதனங்களால் அடையப்படுகிறதென்பதைப் பற்றிக் கூறுகின்றார்.

(௪) ஈசுவரனுடைய இச்சையினால் கலக்கப்பட்ட ஜகத்பீஜத்தினின்றுண்டான சாதனங்களால் யாதொரு போகமானது சாதிக்கப்படுகின்றதோ, அந்தப் போகமானது ஆன்ம சைதன்னியத்திற்குப் புத்தியின் வியாபாரத்தாலுண்டாகும் ஆசையின் ரூபமாக இருக்கின்றது என்பதாம்.

(உரை) ஈசுவரனென்பது இவ்விடத்து அனந்த தேவரைக் குறித்தது. அவருக்கே மாயையைக் கலக்குந் தன்மையுண்டு. "சுத்தாத்துவாவிற் சிவனும் அசுத்தாத்துவாவிலனந்தரும் கருத்தா." என்று கிரணாகமத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது. அவருடைய இச்சையினால் கலக்கப்பட்ட ஜகத்பீஜமென்பது அசுத்தமாயையாகும். அந்த மாயையினின்றுண்டான சிறப்பான சூக்கும தேக ரூபமாயும், பொதுவான புவனமுதலிய ரூபமாயும், பொதுச் சிறப்பான தூலதேக ரூபமாயும் உள்ள சாதனங்களால் யாதொரு போகம் உண்டுபண்ணப்படுகின்றதோ, அந்தப் போகமானது சுகதுக்க மோகமென நிச்சயிக்கும் ரூபமான புத்தி வியாபாரத்தால் ஆன்ம சைதன்யத்திற்கு ஆசையின் ரூபமாக இருக்கின்றது. ஆசையாவது, சுகத்தை நிச்சயிக்கும் ரூபமான புத்தி வியாபாரத்திலிருக்கும் ஞானம். ஞானமாவது, சுகானுபவமே. புத்தி விருத்தியில் ஆன்மாவிற்குப் பிரதி பிம்பங் கிடையாது. உண்டென்று கொள்ளின் பரிணாமதோஷம் நிகழும். இவ்வாறே சுவாயம்புவத்திலும் "போகமாவது சுக துக்கங்களை அறிவிக்கும் புருடனுடைய ஞானம்" என்று கூறப்பட்டிருக்கிறது என்க. (௪)

(அ—கை) பூதங்கள் போகத்திற்குச் சாதனமென்று கூறுகின்றார்.

(ரு) காரணமான தன்மாத்திரைகளால் விருத்தியடைந்த பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசங்களென்னுமிவை, இவற்றின்

குணங்களும், விருத்திகளும், இந்திரியங்களுக்கு ஆதாரமாயிருக்குந் தன்மையும் ஆகிய இவற்றால் போகத்திற்கு அங்கமாயிருக்கின்றன என்பதாம்.

(உரை) இவ்விடத்தில் பூமிமுதலிய பூதங்களினுடைய குணமுதலியவையே அந்தப்பூதங்களுக்குப் போகத்திற்கு அங்கமாயிருக்கும் தன்மையைச் சாதித்துக் கொடுக்கின்றன. அவற்றுள், குணங்கள் கந்தமுதலியன. விருத்திகள் தரித்தல் முதலியன. இவை பின்னர் விளக்கமாய்க் காட்டப்படும். ஆகவே குணங்கள், விருத்தி, இந்திரியங்களுக் காதாரமாயிருக்குந் தன்மையென்னுமிவற்றால், பூமி முதலிய பூதங்கள் போகத்திற்குச் சாதனமாயிருக்குந் தன்மையை யடைகின்றன வென்பது கருத்து. பூமி முதலியன எத்தன்மையுடையவை யென்பது அறிவித்தற்கு காரணமான தன்மாத்திரைகளின் கூட்டத்தால் விருத்தி செய்யப்பட்டன வென்றார். செய்யப்படாததைச் செய்தலும், செய்ததை விருத்திசெய்தலும் முதற்காரணத்தின் றொழிலாதலால், காரணமான தன்மாத்திரைகளால் பூதங்கள் விருத்தி செய்யப்பட்டனவாம். இந்தப் பூதங்கள் தமக்குக் காரணமான தன்மாத்திரைகளுடன்கூடி தூலமாயும், சூக்குமமாயும், இந்திரியங்களுக்கு ஆதாரமாயிருக்கின்றன. இவ்வாறே "தன்மாத்திரைகள் கடம் போலும். மகா பூதங்கள் பூச்சுப்போலும் இருக்கின்றன" என்று மதங்கத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது. இந்தப் பத்துக் காரியங்களும் கரணங்களுடன் சேர்ந்து தொழிற்படுகின்றன. கரணங்களுக்குத் தானே தொழிற்படுஞ் சாமர்த்திய மின்மையால் இந்தப் பத்துக் காரியங்களையும் ஆதாரமாகக் கொண்டே தொழிற்படுகின்றன வென்பது தத்துவ சங்கிரகத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது. (௫)

(அ—கை.) இவ்வாறாகவும் சூக்கும தேகத்திலிருக்கும் பூதங்களுக்கு இந்திரியங்களுக் காதாரமாயிருக்குந் தன்மையும், தூலதேகத்திலிருக்கும் பூதங்களுக்கு விருத்திசெய்யுந் தன்மையும் பொதுவாயிருப்பினும், அந்தப் பூதங்களுக்குத் தரித்தல் முதலியன சிறப்பான தொழில்களெனக் கூறுகின்றார்.

(சு) கரணங்களுக்கு ஆதாரமாயிருக்குந்தன்மை சித்தித்திருக்கும்பொழுது தரித்தல், சேர்த்தல், பாகஞ்செய்தல், அவயவங்களைத் திரட்டல், இடங்கொடுத்த லென்னுமிவை பூமி முதலியவற்றின் தொழில்களாக இருக்கின்றன என்பதாம்.

(உரை.) அவற்றுள், தரித்தல் பூமியின்றொழில் சேர்த்தலாவது உண்டையாகச் செய்தல். இது ஜலத்தின்றொழில். பாகஞ்செய்தல் அக்கினியின்றொழில். அவயவத்தைத்திரட்டல் வாயுவின்றொழில். இடங்கொடுத்தல் ஆகாயத்தின் றொழிலெனக. (சு)

(அ—கை.) பின்னர்ச் சூக்கும தேக ரூபமாக இந்திரியங்களுக் காதாரமாயிருக்குந்தன்மை பூமிமுதலிய பூதங்கட்குப் பொதுவெனக் கூறுகின்றார்.

(எவ) ஆதி வாகிகமான தேகத்திலிருந்து கொண்டே இந்திரியங்கள் தொழிற் செய்கின்றன. அந்த இந்திரியங்கள் புருடார்த்தத்தைக் கொடுக்கின்ற கன்ம வசத்தால் புருடனுக்குப் போகத்தை யுண்டுபண்ணும் பொருட்டு ஒரு யோனியிலிருந்து மற்றொரு யோனியை யடைகின்றன என்பதாம்.

(உரை) ஆன்மாக்களுடைய கன்மங்களைப் போகானுபவத்தால் நாசஞ் செய்வது பற்றி ஆதிவாகிக சப்தத்தால் சூக்கும தேகத்தைக் கொள்ளல் வேண்டும். ஆதிவாகிக மென்பது, நாசஞ் செய்வதென்னும் பொருள் குறித்தது. அந்தச் சூக்கும தேகத்திலிருந்து கொண்டே இந்திரியங்கள் தொழிற்செய்கின்றது. இந்திரியங்களுக்குச் சாமர்த்தியமின்மையால் பற்றுக்கோடின்றித் தொழிற் செய்யாது. அதுபற்றிச் சூக்கும தேகத்திலிருக்கும் பூதங்கள் தன் மாத்திரைகளென்னு மிவற்றை ஆதாரமாகக் கொண்டே இந்திரியங்கள் தொழிற் செய்கின்றன வெனக் கூறப்பட்டது. அன்றியும் அந்தச் சூக்கும தேகத்திலிருக்கும் இந்திரியங்கள் புருஷார்த்தத்தைக் கொடுக்கக்கூடிய கன்ம வசத்தால் அதே புருஷனுக்குப் போகத்தை யுண்டுபண்ணுதற் பொருட்டு ஒரு யோனியினின்றும் பிறிதொரு யோனியை யடைகின்றன. தத்துவ சங்கிரகத்திலும் "பூமி முதல் கலை யீறான தத்துவக்கூட்

டம் ஒவ்வொரு உயிர்தோறும் இன்றியமையாதிருந்துகொண்டு கன்மத்துக் கீடாகப் புவனத்திலிருந்தும் உண்டான தூல தேகங்களில் சஞ்சரிக்கின்றது." எனக் கூறப்பட்டிருக்கின்றது. (எ)

(அ—கை) இந்தச் சூக்குமதேகம் சூக்குமமாயிருத்தல் பற்றிப் பிசாசுகள்போல் நம் போன்றவருக்குத் தோன்றாது. ஆனால் யோகிகளின் பிரத்தியக்ஷத்தால் அறியத்தகுந்தது எனக் கூறுகின்றார்.

(அ) இந்திரியங்களுக் காதாரமான இந்தச் சூக்குமதேகம் பிரத்தியக்ஷத்தால் அறியத்தகுந்ததில்லை. சாமர்த்தியமில்லாதார் பிசாசுகளை அறிய முடியாதவாறுபோலு மென்பதாம். (அ)

(அ—கை) பூதங்களின் குணங்களைக் கூறுகின்றார்.

(கூ—கக) பூமியில் கந்த குணமிருக்கின்றது. ஆறுவித சுவையுண்டு. பூமி, ஜலமென்னு மிவற்றில் இரத மிருக்கின்றது. பூமி, ஜலம், அக்கினி என்னு மிவற்றில் உருவமிருக்கின்றது. பூமியில் வெளுப்பு முதலிய பேதத்தால் அனேகவிதமான உருவமிருக்கும். ஜலத்தில் வெளுப்பு ரூபமொன்றே. அக்கினியில் பிரகாசிக்கும் ரூபமிருக்கும். பூமி வாயு வென்னுமிவற்றில் தட்பமின்மையான பரிசமும், வெப்பமின்மையான பரிசமுந் தனித்தனி யிருக்கின்றன. ஆனால் அவை முறையே பாகத்தாலுண்டாம் பரிசம், பாகமின்மையாலுண்டாம் பரிச மென்னும் பேதத்தால் வேறுபடுகின்றன. ஜலத்தில் சீதள பரிசமும், அக்கினியில் உஷ்ண பரிசமுமுண்டு. பிருதிவி முதலிய பூதங்களாலுண்டு பண்ணப்பட்டது சத்தம். அது பிருதிவி முதலிய நான்கிலுமிருக்கும். ஆகாயத்தில் எதிரொலி வடிவாயிருக்கும். இவ்வாறு வித்துவான்கள் கூறுகின்றனரென்பதாம்.

(உரை) அவற்றுள், கந்தம் நறுநாற்றம் தீ நாற்றமென இருவகையாகப் பூமியிற்றானுண்டு. இரதம், பூமி ஜலமென்னும் இவற்றிலுண்டு. பூமியில் உறைப்பு, புளிப்பு, கைப்பு, தித்திப்பு, கசப்பு, துவர்ப்பு முதலிய ஆறுவகை இரதமுமுண்டு. ஜலத்தில்,

கித்திப்பு ஒன்றுதான். உருவம் பூமி, ஜலம், அக்கினி என்னும் மூன்றினுமுண்டு. பூமியில் வெண்மை, செம்மை, பொன்மை, கருமை என்னும் உருவங்களிருக்கின்றன. ஜலத்தில் வெண்மை யொன்றுதானுள்ளது. அக்கினியில் பிரகாசிக்கும் ரூபமிருக்கின் றது. வாயுவில் பரிசமிருக்கின்றது. பூமி, வாயுவென்னுமிவற் றில் குளிரின்மையான பரிசமும், வெப்பமின்மையான பரிசமும் உண்டு. பூமியிலிருக்கும் பரிசம் பாகத்தாலுள்ளது. வாயுவி லிருக்கும் பரிசம் பாகமின்மையாலுள்ளது. பூமி, வாயுவென்னும் இரண்டினுமுள்ள பரிசத்திற்கு வேற்றுமை பாகமுண்மையும், பாகமின்மையுமேயாம். பரிசத்திற்குக் கூறிய இவ்வேற்றுமையை உபலக்கணமாக வைத்துக்கொண்டு பூமியின் குணங்களான உருவ முதலியவையும் பாகத்தாலுள்ளன வென்று கொள்ளவேண்டும். நீரில் தட்பமென்னும் பரிசமொன்றுதான் இயல்பாகவுள்ளது. நெருப்பில் வெப்பமென்னும் பரிசந்தானுள்ளது. சத்தம் பூமி முதலிய நான்கினும் இருக்கின்றது. பூமி முதலிய திரவியங்களில் ஒன்றுடனொன்று அடிபட்டுச் சத்தமுண்டாகின்றது. ஆகாசத் தில் எதிரொலிவடிவாகவிருக்கின்றது.

வைசேடிகர் சத்தத்துக்குப் பற்றுக்கோடான பேரிமுதலிய வற்றினும் வேறான ஆகாயத்தில் சத்தங் காணப்படுதலால், ஆகாசத்திற்கு மாத்திரந்தான் சப்தகுண முண்டென்று கூறு கின்றனர். அது பொருந்தாது. பிரத்தியக்ஷம் ஆகமமென்னும் பிரமாணங்களுடன் முரணுதலால் வைசேடிகர் கூறிய ஏது, பாதித மென்னும் குற்றத்தால் கண்டிக்கப்படுகின்றது. பேரி முதலியவற் றிலுண்டாகும் சத்தமும், அவற்றைப் பற்றுக்கோடாகக் கொண்டு தான் உண்டாகின்றது. அன்றியும், பூமியில் கடகடவென்றும், நீரில் சலசலவென்றும், நெருப்பில் தமதமவென்றும், வாயுவில் சகசகவென்றும், ஆகாயத்தில் எதிரொலி ரூபமாயும் சப்தமிருக் கின்றது. வைசேடிகரால் கூறப்பட்ட கொள்கையின் மறுப்பு மிரு கேந்திர விருத்தி தீபிகையில் விரிவாகக் கூறியிருக்கின்றோம். மிரு கேந்திரத்திலும் "சப்தம் ஐந்து பூதங்களிலும், பரிசம் நான்கு பூதங்களிலும், சீதளமின்மையான பரிசமும், உஷ்ணமின்மையான பரிசமும் பூமி வாயுக்களிலும், சீதபரிசம் ஜலத்திலும், உஷ்ணபரி

சம் அககினியிலும், பிரகாசிக்கும் ரூபம் அக்கினியிலும், வெண்மை ரூபம் நீரிலும், வெண்மை முதலிய அனேக ரூபம் பூமியிலும், தித்திப்பு இரதம் நீரிலும், ஆறுவகை இரதமும் நறுநாற்றம் தீநாற்றமும் பூமியிலும் உண்டென்று வித்துவான்களாற் கூறப்பட்டிருக்கின்றது." எனக் கூறப்பட்டிருக்கின்றது. (கூ—கக)

(அ—கை.) பூதசம்பந்தமாகக் கூறப்பட்ட விஷயத்தை முடித்துக் காட்டுகின்றார்.

(ககவது) இவ்வாறு கூறப்பட்ட கந்தம் முதலிய குணசமூகத்துடன் கூடின பிருதிவி முதலியவை உலகத்தில் பிரசித்தமாயுள்ளனவென்பதாம்.

(உரை.) கந்தம் முதலியவற்றிற்குப் பற்றுக்கோடாகப் பிருதிவி முதலியன உலகத்தில் பிரசித்தமாயுள்ளன. (ககவது)

(அ—கை.) இந்த ஐந்து பூதங்களும் நம்மனோருடைய வெளியிந்திரியங்களால் அறியப்படுங் குணத்தையுடையனவாயிருத்தல்பற்றிக் கடமுதலியவற்றிற்குப் போல் இப்பூதங்களுக்குக் காரியத்தன்மையுண்டென்பது சித்தித்தலால் அவற்றின் காரணமாக ஐந்து தன்மாத்திரைகள் சித்தித்தனவெனக் கூறுகின்றார்.

(கஉ) அனுமானத்தால் தன்மாத்திரைகள் சித்தித்தனவென்பதாம். (கஉ)

(அ—கை.) இனி, குணங்களை யறிந்தநிலையே குணங்களினின்றும் வேறுபடாத குணிகளையும் அறிந்ததாக ஆகின்றதென்பதைக் காட்டுதற்காகக் கூறப்பட்ட பூதங்களுக்குக் குணங்களினின்றும் வேறுபடாமலிருக்குந் தன்மையைச் சாதிக்கின்றார்.

(கங) குணங்களால் வேறுபாடடைந்த முன்னர்க் கூறப்பட்ட பிருதிவி முதலியன பலவிதமான இயல்பினையுடையன. சுற்றப்பட்ட ஆடையிலுள்ள சித்திர ரூபம் எவ்வாறு முறையாக அறியத்தகுந்ததாக ஆகின்றதோ, அவ்வாறே பிருதிவி முதலியவையும் முறையாக அறியத்தகுந்தனவா யாகின்றனவென்பதாம்.

(உரை) கந்தம் முதலிய குணங்களால் வேறுபாட்டை யடைந்த பிருதிவி முதலியன தரை, கல், மலை, நதி, கடல் முதலியரூபமான வேறுபாட்டால் பலவிதமான இயல்பினையுடையனவாய்க் காணப்படுகின்றன. ஆதலால் இந்தப் பூதங்கள் மடிக்கப்பட்ட ஆடையிலிருக்கும் சித்திர ரூபம்போல் முறையாகவே அஃதாவது ஒவ்வொன்றாகவே அறியத்தகுந்தனவாக ஆகின்றன. காணப்படுகின்ற உட்பிரிவால் வேறுபாடடைந்ததாயும் *சமீபத்திலுந் தூரத்திலுமிருப்பதாயுமுள்ள பிருதிவி முதலியவற்றின் சொரூபத்தை ஒரே சமயத்திலறியமுடியாது. இந்திரியங்களாலும் அனுமானத்தாலும் ஒவ்வொன்றாக அறியப்படுகின்றது, (கங)

(அ—கை.) இவ்வாறு கூறியதன் கருத்து இன்னதெனக் கூறுகின்றார்.

(கச) இந்தப் பூதங்கள் முறையாக அறியத்தகுந்தமை பற்றிப் பலவிதமான ஞானங்களுக்கும், விசேடண விசேடியத் தன்மையைக் குறிப்பதற்கும் விஷயமாக ஆகின்றன என்பதாம்.

(உரை.) இந்தப் பூமி முதலிய பொருள்கள் முறையாக அறியத்தகுந்தமைபற்றி நறுநாற்றமுடைய பிருதிவி யென்பது முதலிய விசேடண விசேடிய ரூபமான ஞானபேதங்களுக்கும், விசேடண விசேடியத் தன்மையைக் குறிப்பதற்கும் விஷயங்களாக ஆகின்றன என்க. (கச)

(கரு—கருவது) கந்த முதலிய குணங்களின் ஞானமின்றி பூமி விஷயமான ஞானம் உண்டாகிறதில்லை. நீர் முதலிய பொருள்களின் ஞானமில்லாமலே உண்டாகின்றது. ஆகையால் பூமியானது கந்த முதலியவற்றினின்றும் வேறில்லை; நீர்முதலியவற்றினின்றும் வேறு என்பதாம்.

(உரை) யாதொரு காரணத்தால் விசேடண ரூபமாயிருக்கும் கந்த முதலிய குணங்களை யறியாது குணி ரூபமாயிருக்கும்

*சமீபத்திலிருப்பது மண்ணுலகத்துள்ள பிருதிவி முதலியவற்றின் சொரூபம். தூரத்திலிருப்பது அப்புலோக முதலியவற்றிலுள்ள அப்பு முதலியவற்றின் சொரூபம்.

விசேடியமான பூமி விஷயமான அறிவு எக்காலத்தும் உண்டாவ தில்லையோ, நீர் முதலியவற்றின் ஞானமின்றிப் பூமி விஷயமான ஞானம் உண்டாகின்றதோ, அந்தக் காரணத்தால் கந்த முதலிய வற்றினின்றும் பூமி வேறில்லை. நீர் முதலியவற்றினின்றும் பூமி வேறுதான் என்க. (கரு—கருவரு)

(அ—கை) இவ்வாறே ஏனைய பூதங்களிலும் அறிந்து கொள்ள வேண்டுமெனக் கூறுகின்றார்.

(கசு) இந்த ஏதுவானது நீர் முதலியவற்றில் புத்திமான் களால் இவ்வாறே அறியத்தகுந்தது என்பதாம். (கசு)

(அ—கை) படிகமானது செவ்வரத்தையின் சமீபத்திலிருக் கும்பொழுது சிவப்பு வர்ணத்தை யடைந்திருக்கும். அந்தப் படிகமணியை அதன் குணமான வெளுப்பு வர்ணத்தைக்கொண்டு அறியாது பிரதிபலித்த சிவப்பு வர்ணத்துடன் கூடினதாக அறிகி ரேம். ஆதலால், குணியையறிவதற்கு அதன் குணத்தினறிவு வேண்டுமென்பது சித்திக்காதென்னும் ஆசங்கைக்கு விடை கூறு கின்றார்.

(கள) உருவமானது வடிவமாயும், நிறமாயும், இருவகைப் படும். இதுகொண்டு குணியை யறிவதற்குக் குணத்தையறிய வேண்டாமென்று சொல்லுதல் கூடாது. செவ்வரத்தை பிரதி பலித்த படிகத்தை, வடிவரூபமான குணத்தை அறிந்தபின்னரே அறிகின்றேமென்பதாம்.

(உரை) பொருள்களின் நிறத்தை எவ்வாறு குணமாகக் கொள்கின்றேமோ, அவ்வாறே வடிவரூபமான உருவத்தையும் குணமாகக் கொள்ளல் வேண்டும். ஆதலால், செவ்வரத்தை பிரதி பலித்த படிகத்தையறியுமிடத்து அப்படிகத்தில் வெளுப்பு ரூப மான குணத்தை அறியவில்லையாயினும், வட்டமாயும், நான்கு முக்குச் சதுரமாயும், இன்னும் இவைபோன்றிருக்கும் வடிவ விசேடத்தை அறிந்தே செவ்வரத்தையினறிவு உண்டாகின்றது. ஆகையால் குணியை யறிவதற்குக் குணத்தை யறிதல் இன்றி யமையாததென்பது சித்தித்தது என்க. (கள)

(அ—கை) இவ்வாறு பூதங்கள் போகத்திற்கு அங்கங்களெனச் சாதித்துவிட்டு, இனி அனுமானத்தால் சித்தித்தனவென்று முன்னர்க் கூறப்பட்ட தன் மாத்திரைகள் உண்டென்று சித்திப்பதைக் கூறுதற்குப் பூதங்களுக்குக் காரியத்தன்மை யுண்டென்று கூறுகின்றார்.

(கஅ) குணங்களுக்குக் காரியத்தன்மை உண்டென்பது சித்திப்பதற்காக எந்த ஏதுவானது கூறப்படுகின்றதோ, அதே ஏதுவைக்கொண்டு பிருதிவி முதல் கலை ஈறாகவுள்ள தத்துவங்களும் காரியங்களென்று கொள்ளல் வேண்டும். எதன்பொருட்டெனின், பிருதிவி முதலியவற்றிற்குக் காரணமான தன் மாத்திரைகள் உண்டென்பது சித்தித்தற்பொருட்டு என்பதாம்.

(உரை) குணங்களுக்கு அறிவின்மையும் அநேகத்தன்மையும் இருப்பதுகொண்டு கடம் முதலியவற்றிற்குப்போல் காரணத்தை முதன்மையாகக் கொண்டிருக்குந் தன்மை உண்டென்று கூறப்படுகின்றது. ஆகையால் அதே ஏதுவைக்கொண்டு பிருதிவி முதலியவற்றிற்கும் காரியத்தன்மையுண்டென்று சித்திக்கின்றது. பலவிதமான போகங்கள் காணப்படுவது கொண்டு பிருதிவிமுதல் கலை ஈறாகவுள்ள முப்பது தத்துவங்களின் ரூபமாயும், ஒவ்வொரு ஆன்மாக்கள் தோறும் இருக்கிறதாயுமுள்ள சூக்கும தேகமுண்டென்று கூறப்பட்டது. ஆகமங்களிலுமிவ்வாறு கேட்கப்படுகின்றது. ஆகையால் பிருதிவி முதலியன ஒவ்வொரு ஆன்மாக்கள் தோறும் இன்றியமையாதிருத்தலாலும், அறிவின்மையும் அனேகத்தன்மையும் அவற்றிற்கிருத்தலாலும், அப்பூதங்களுக்குக் காரணமான தன்மாத்திரைகளுண்டென்பது சித்திக்கிறது.

(கஅ)

(அ—கை) பூதங்களுக்குக் காரணமாகத் தன்மாத்திரைகள் சித்திப்பதால் தன்மாத்திரை ரூபமான அந்தந்தக் குணங்களின் பேதத்திலேயே பிருதிவி முதலியவற்றின் முறை சித்திக்கிறதெனக் கூறுகின்றார்.

(கசு) சத்தம் முதலிய ஒவ்வொரு குணத்தை அதிகமாகக் கொண்டவையாயும், குணங்களினின்றும் விசேடமின்மையால் காரணங்களாயுமிருக்கும் தன்மாத்திரைகள், குணிகளான ஆகாச முதலியவற்றின் தோற்ற முறையைச் செய்கின்றன வென்பதாம்.

(உரை) இதன் கருத்தாவது:—வெளிப்படாத விசேட சத்தத்தை மாத்திரம் சொரூபமாகவுடைய சத்த தன்மாத்திரை ஆகாசத்திற்குக் காரணம். சத்தம் பரிசமென்னும் இரண்டையும் சொரூபமாகவுடைய பரிசதன்மாத்திரை வாயுவுக்குக் காரணம். சத்தம், பரிசம், உருவமென்னும் மூன்றையும் சொரூபமாக வுடைய ரூபதன்மாத்திரை அக்கினிக்குக் காரணம். சத்தம், பரிசம், உருவம், இரதமென்னும் நான்கையும் சொரூபமாகவுடைய இரத தன்மாத்திரை ஜலத்திற்குக் காரணம். சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தமென்னும் ஐந்தனையுஞ் சொரூபமாகவுடைய கந்ததன் மாத்திரை பூமிக்குக் காரணம்.

ஆகாசம் முதலியனபோல் சத்தம் முதலிய ஒவ்வொரு குணத்தை அதிகமாகவுடையனவாயும், வெளிப்படையாயில்லாத விசேட சத்தம் முதலியவற்றின் சொரூப மாத்திரத்தால் ஆகாயம் முதலியவற்றிற்கு முறையே முதற்காரணங்களாயுமிருக்கும் சத்த முதலிய தன்மாத்திரைகள், விசேட குணங்களையுடையனவாயும், குணிகளாயுமிருக்கும் இந்த ஆகாசம் முதலிய பூதங்களின் தோற்ற முறையைச் செய்கின்றன. குணங்கள் அதிகமாயிருக்கும் முறையினால் குறைந்த குணமுடைய தன்மாத்திரைகள் காரியங்களான பூதங்களுக்கும் குறைந்த குணங்களைச் செய்கின்றனவென்பது பொருள். (கசு)

(அ—கை) இந்தத்தன்மாத்திரைகள் எவ்வாறு போகத்திற்கு அங்கங்களாக ஆகின்றன என்பதைப்பற்றிக் கூறுகின்றார்.

(உ௦) யாதொரு காரணத்தால் எல்லா முதற்காரணங்களினிடத்தும் தனது காரியத்தை உண்டுபண்ணுவதும் அதன் விருத்தியைச்செய்வதும் காணப்படுகின்றனவோ, அதே காரணத்

தால் தன்மாத்திரைகளிடத்தும் புருடார்த்தத்திற்குச் சாதனமா யிருக்குந் தன்மை யிருக்கின்றதென நிச்சயிக்கப்பட்ட தென்ப தாம்.

(உரை) தோன்றுதலைத் தோற்றுவித்தலும் தோற்று வித்ததை விருத்தி செய்தலும் எல்லா முதற்காரணங்களினிடத் தும் இருக்குமாறுபோல, காரியங்களுக்கு முதற்காரணங்களான தன்மாத்திரைகளுக்கும் மாயைக்கும் போகத்திற்குச் சாதனங் களான தத்துவங்களைத் தோற்றுவித்தலாலும், அவற்றை விருத்தி செய்தலாலும், போகத்திற்கு அங்கமாயிருக்குந் தன்மை சித்தித் தது என்க. (உo)

(அ—கை) இந்திரியங்களும் போகாங்கங்கள் என்பது அறி வித்தற்காக முதலாவது கன்மேந்திரியங்கள் உண்டென்று சித் திப்பதைக் கூறுகின்றார்.

(உக) ஆனந்தித்தல், நடத்தல், மலங்கழித்தல், சொல்லு தல், வாங்குதலென்னும் கிரியைகளுக்காக முறையே உபஸ்த்தம், கால், பாயு, வாய், கை என்னும் இந்திரியங்கள் உண்டென்பது சித்திக்கும் என்பதாம்.

(உரை) ஆனந்தித்தல் முதலிய கிரியைகளின் ஏதுவால் உபஸ்தம் முதலிய கன்மேந்திரியங்களுண்டென்று சித்தித்தன வென்பது பொருளென்க. (உக)

(அ—கை) உபத்த முதலிய இவை தானங்களேயல்லது இந்திரியங்களல்ல வென்பாரை மறுத்துரைக்கின்றார்.

(உஉ) தானங்களிருந்தும் கிரியைகளின் உண்மையினையும் இன்மையினையும் மேற்கொண்டிருத்தல் காணப்படுதலால் உபத் தம் முதலிய ஐந்தும் கன்மேந்திரியங்களென்று சித்தித்தன என்பதாம்.

(உரை) இவ்வுலகில் சிலருக்குக் கால் முதலிய தானங்க ளிருந்தும் அந்தந்த இந்திரியங்களின் சத்தியில்லாமையால் செல் லுதல் முதலிய காரியங்கள் நிகழுவதில்லை. ஆகையால் தானங்க

ளிருந்தும் கிரியைகளின் உண்மையின்மைகள எவற்றை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றனவோ, அவை அந்தந்தத்தானங்களிலிருக்கும் சத்திகளேயாகும். இந்தச் சத்திகளை ஐந்து இந்திரியங்களாக அறியவேண்டும். இவ்வாறு கூறியவாற்றால் கன்மேந்திரியங்களை ஒப்புக்கொள்ளாத நையாயிகர் மறுக்கப்பட்டனரென்க. (உஉ)

(அ—கை) கன்மேந்திரியங்கள் ஐந்தாயின் புருவநெரித்தல் முதலியவையும் கிரியைகளாதலால் கன்மேந்திரியங்கள் மிகுதியாக வேண்டுமே யென்பார்க்கு விடை கூறுகின்றார்.

(உக) சொல்லப்பட்ட ஆனந்தித்தல் முதலிய இந்தக் கன்மங்களால் கன்மேந்திரியங்கள் சித்தித்தன. தொழில்களின் வசத்தால் ஐந்திற்கு மேல் உண்டென்ற தோஷம் இல்லை என்பதாம்.

(உ.ங) கன்மேந்திரியங்களைச் சரீரத்தின் ஏகதேசத்தில் மாத்திரம் இருப்பனவாக நாம் கொள்ளும் விஷயத்தில் இந்தத் தோஷம் நேரிடும். தோல் இந்திரியம் போல் சரீரமுற்றும் வியாபித்திருப்பதாகக் கன்மேந்திரியங்களைக் கொண்டிருப்பதால் புருவ நெரித்தல் முதலிய தொழில்கள் கையினுடையஃதயாம். ஜீரணமானவற்றை வெளியில் தள்ளுதல் முதலியன பாயு முதலியவற்றிற்கு இருப்பது போலாம். ஆகவே புருவ நெரித்தல் முதலியவையும் ஆனந்தித்தல் முதலியவற்றுள் அடங்குதலால் கன்மேந்திரியங்கள் ஐந்திற்குமேல் இல்லை. அன்றியும் இந்த ஆனந்தித்தல் முதலியன வாய் முன்னர்க் கூறப்பட்ட பிரதானமான கன்மங்களினாலேயே ஐந்து கன்மேந்திரியங்களும் சித்திக்கின்றமையால், அதிகமென்னும் தோஷங்கிடையாது. பாணி முதலிய கன்மேந்திரியங்கள் புருவ முதலிய ஏனைய உறுப்புக்களையும் அதிட்டிக்குமாயின் பாணி முதலியனவாய்ப் பெயரிடுதல் எவ்வாறு கூடுமெனின், அந்தந்தத் தானங்களில் அந்தந்தக் கிரியைகள் விசேடமாக அதிட்டிப்பதுபற்றிக் கூடுமென்க. (உங)

(அ—கை) இனிஞானேந்திரியங்களுண்டென்று சித்திப்பதைக் கூறுகின்றார்

(உ௪) சத்த முதலியவற்றை அறியும் விஷயத்தில் கருத்தா வான புருஷனுடைய கிரியையானது காரணமின்றி நிகழாது. யாதொரு காரணத்தால் அபேக்ஷையானது நிவிர்த்தியாகவில்லை யோ அந்தக் காரணத்தால் கரணம் ஒன்றென்று சொல்லவும் முடியாது என்பதாம்.

(உரை) சத்தம் முதலியவற்றை அறிதலும் கிரியையாத லால், அறுத்தலென்னுங் கிரியையானது எவ்வாறு காரணமின்றி நிகழாதோ, அவ்வாறே இந்தக் கிரியையும் காரணமின்றி நிகழாது. இந்த ஐந்து கிரியைகளும் காது முதலியவற்றுள் யாதானு மொரு காரணத்தினின்று நிகழ்கிறதில்லை. எதனாலெனின், யாதொரு காரணத்தால் வேறு காரணங்களை விரும்புதல் நீங்கு கிறதில்லையோ, அதே காரணத்தாலென்க. சத்தத்தை யறிதற் குக் காரணமாகிய செவியிருப்பினும் பரிச முதலியவற்றை யறியும் விஷயத்தில் தோலிந்திரிய முதலிய காணங்களை விரும்புதல் காணப்படுதல் காண்க. (உ௪)

(அ—கை) அந்த ஞானேந்திரியங்கள் இவையெனக் கூறு கின்றார்.

(உ௫) செவி, தோல், கண், நாக்கு, மூக்கு என்னும் இவைகளே ஞானேந்திரியங்களென்பதாம். (உ௫)

(அ—கை) சத்த முதலியவற்றைக் கிரகித்தல் வேறு வழி யாக நிகழாமையின் அவ்விந்திரியங்கள் உண்டென்றறியப்படு கின்றன வென்னும் அபிப்பிராயங்கொண்டு கூறுகின்றார்.

(உ௬) சத்த முதலியவற்றின் சன்னிதியில் அவற்றை யறி தல் அந்த ஞானேந்திரியங்களின் தொழில் என்பதாம்.

(உரை) சன்னிதி என்று பாடங்கொள்ளாது சன்னிபா வென்று பாடங்கொள்ளின் வெளியிலிருக்கும் சத்த முதலியவற் றின் சொரூபத்திற்குச் சமானமான உள்ளிருக்குஞ் சொரூபத்தை நிச்சயிக்கும் புத்தியுடன் கூட மனதா லதிட்டிக்கப்பட்ட இந்திரி யங்கள் வித்தையென்னும் தத்துவத்திற்கு விஷயமாகச் சேர்க்

கின்றனவென்பது பொருள். இந்திரியங்களால் சமீபத்தில் வைக்கப்பட்டுப் புத்தியினல் நிச்சயிக்கப்பட்ட சொரூபத்தை வித்தையென்னும் பெயருடைய உட்காரணத்தால் புருடன் கிரகிக்கின்ருன் என்று பின்னர்க் கூறப்போகின்றேம். "புத்தியினல் நிச்சயிக்கப்பட்ட பொருளைப் புருடன் கிரகிக்கின்றுன்" என்று பிறிதோரிடத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது. (உசு)

(அ—கை) செவி முதலிய இடங்களிலிருக்கும் முறுக்குப்போன்ற வடிவங்களை மாத்திரம் இந்திரியங்களெனக் கொள்ளலாகாது. யாதொரு காரணத்தால் அந்தந்தத் தானங்களிருந்தும் கன்மங்காரணமாக அந்தந்தத் தானங்களுக்குரிய சத்தியின்மையால் சத்த முதலியவற்றின் அறிவு நிகழ்கிறதில்லையோ, அந்தக் காரணத்தால் செவி முதலிய தானங்களிலிருக்கும் சத்திகளைத் தான் இந்திரியங்களாகக் கொள்ளவேண்டுமெனக் கூறுகின்றார்.

(உசு) இந்தத் தானங்களை மாத்திரம் ஞானேந்திரியங்களாகக் கொள்ளக்கூடாது. தானங்களிருப்பினும் சத்தியின்மையால் ஞானம் நிகழாமையே தானங்கள் இந்திரியமாகாமைக்குக் காரணமென்பதாம். (உசு)

(அ—கை) பின்னர் அந்தக்கரணம் உண்டென்று சித்திப்பதை கூறுகின்றார்.

(உஎ) இச்சை, சம்ரம்பம், போதமென்னும் வியாபாரங்கள் மேலே கூறப்பட்ட சாதனங்களால் சித்திப்பதில்லை. ஆகையால் சொல்லப்பட்ட இந்த வியாபாரங்கள் சித்திப்பதின் பொருட்டு மனம், அகங்காரம், புத்தி என்னும் அந்தக் காணங்கள் வேண்டப்படு மென்பதாம்.

(உரை) பிருதிவி முதலிய தத்துவங்கள் தத்தம் காரியங்களினலேயே சித்திக்கின்றன. ஏனைய காரியங்களை ஏதுவாகக் கூறுவதில் பிரயாணமில்லை. அன்றியும், அனேக தத்துவங்களில்லாமல் போய்விடும். அதுபோல இவ்விடத்தும் இச்சை முதலியன சித்திக்கும் விஷயத்தில் எவை சாதனங்களோ, அவை மனம்,

அகங்காரம், புத்தி என்னும் இவைகளே என்று அந்தக் காணங்களுண்டென்பது சித்திக்கிறது. இச்சை என்னும் பதத்தால் கவனமென்னும் ரூபமான சங்கற்பத்தைக் கொள்ளவேண்டும். இது மனத்தின் றொழில். சம்ரம்பமாவது அகங்காரத்தின் பிரயத்தினம். போதமாவது, புத்தியினுடைய நிச்சயம். இவை பின்னர் விரிவாய்க் கூறப்படுகின்றன. (உஎ)

(அ—கை) உட்காரணங்கள், வெளிக்காரணங்களென்னுமிவை ஒன்றுக்கொன்று உபகரித்துப் புருடார்த்தத்திற்குச் சாதனங்களாக வாகின்றனவெனக் கூறுகின்றார்.

(உஅ—உகூ) உள்ளேயிருக்கும் கரணங்களும் வெளியிலிருக்குங் காணங்களும் சிவிகை தூக்கும் மனிதர்போல் சேர்ந்து இச்சை முதலியவற்றிற்குச் சாதனங்களாக ஆகின்றன. ஆகையால் ஆன்மாவிற்குப் போகப் பயனைச் சாதித்துக் கொடுக்கின்ற உட்காணங்கள் வெளிக்கரணங்களென்னு மிவற்றுள் யாதானுமொன்று இல்லையாயின், வெளியிலுள்ள சத்த முதலியவற்றின் அறிவுடன் கூட இச்சை முதலிய கிரியைகள் புருடார்த்தத்தைச் சாதித்துக்கொடுக்கமாட்டா என்பதாம்.

(உரை) யாதொரு காரணத்தால் உட்காரணங்களும் வெளிக்காரணங்களும் சிவிகை சுமப்பவர்போல் சேர்ந்தே இச்சை முதலிய கிரியைகளுக்குச் சாதனங்களாக ஆகின்றனவோ, அதே காரணத்தால் வெளியிலிருக்கும் பொருள்களைப் பார்த்தபின்னரே நிச்சயம் முதலியன காண்டலானும், ஒரே கவனமாயிருத்தல் முதலியனவின்றி வெளியிலிருக்கும் பொருள்களை அறிய முடியாமையானும், சேர்ந்தே போகத்திற்குச் சாதனமெனக் கூறப்பட்டது. ஆதலால் ஆன்மாவிற்குப் போகமாகிய பயனைச் சாதித்துக் கொடுக்கின்ற உட்காரணங்கள் வெளிக்கரணங்களென்னும் இவற்றுள் யாதானுமொரு காணமில்லையாயின் இச்சை முதலிய கிரியைகளாவது வெளியிலுள்ள சத்த முதலியவற்றை யறிதலாவது புருடார்த்தத்திற்குச் சாதனமாக ஆகிறதில்லை. சிவிகை சுமப்பவருள் ஒருவனில்லையாயினும், சுமத்தற்றொழில் காணப்படாதவாறு போலுமென்க. (உஅ-உகூ)

(அ—கை) இவ் விஷயத்தில் பிறருடைய அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்.

(உகூஇ) சிலர் வெளிப்படையான சேதனத்தன்மையினை யுடைய பிராண வாயுவையே அந்தக் காரணமாக எண்ணுகின்றன ரென்பதாம்.

(உரை) உலகாயதருள் சிலர் மேலே செலுத்துதல் முதலிய வியாபாரங்களினால் சிவித்தல் முதலியவற்றிற்குக் காரணமாயும் பூதங்களின் பரிணாம விசேடத்தால் வெளிப்படையான அறிவை யுடையதாயும் இருக்கும் பிராணனென்னும் பெயருடைய உள்ளிருக்கும் வாயுவையே அந்தக் காரணமாகக் கூறுகின்றனர் என்க. (உகூஇ)

(அ—கை.) இந்த அபிப்பிராயத்திற்கு மறுப்புக்கூறுகின்றார்.

(நூO) அந்த வாயு பிரயத்தினமின்றி நிகழ்கிறதில்லை. அந்தப் பிரயத்தனம் சித்திப்பதற்குக் காரணம் எது என்பதாம்.

(உரை) பிராண வாயு சில சமயத்தில் மாத்திரம் தொழிற்படுவதால், பிரயத்தனத்தை முன்னிட்ட தொழிற்பாடு அதனிடத்தில் காணப்படுகின்றது. இவ்வாறே "ஏவுதல் இழுத்தலென்னும் தொழில்கள் பிரயத்தனமன்றி வாயுவுக்கு எவ்வாறு நிகழும்" என்று பிறருங் கூறுகின்றனர். ஆகையால் சம்ரம்ப ரூபமான பிரயத்தினம் சித்திப்பதின் பொருட்டு யாதானுமொரு காரணம் வேண்டப்படும் என்பதுகொண்டு அந்தக்காரணம் உண்டென்பது சித்திக்கின்றது. நூலாசிரியரும் "சம்ரம்பம் அகங்காரத்தின் றொழில்" என்று பின்னர்க் கூறப்போகின்றாரென்க. (நூO)

(அ—கை.) அன்றியும் பிராணனுக்குச் சைதன்னியத்தின் உற்பத்தி உண்டென்று உன்னால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றது. அந்தச் சைதன்னிய உற்பத்திக்குக் காரணம் இதுவென்று நீ கூறவேண்டுமெனக் கூறுகின்றார்.

(நக) இந்தப் பிராணனுக்குச் சைதன்னியம் உண்டென்று நீ கூறுவதற்குக் காரணம் இன்னதென்று கூறுவாயாக. இந்தப் பிராணனுக்குச் சைதன்னியம் நிச்சயமாக இல்லை; வாயுவாயிருக்கிறபடியால்; வெளியிலிருக்கும் வாயுப்போலென்பதாம்.

(உரை) சடத்திற்குச் சைதன்னியத்தின் தோற்றம் பொருந்ாது. ஏதனுலெனின், எல்லாவற்றிற்கும் சைதன்னியத்தின் தோற்றம் உண்டாய்விடும் ஆதலாலென்க. இதற்குப்பிரமாணமாக "இதற்குச் சைதன்னியமில்லை; வாயுவானபடியால்; வெளியிலிருக்கும் வாயுப் போலும்" என்று கூறப்பட்டதென்க. (நக)

(அ—கை.) இவ்வாறு பிராணனையே அந்தக்கரணமென்னும் கொள்கையை மறுத்துவிட்டு மேலே கூறப்பட்ட அந்தக்காணம் மூன்றனுள் மனம் உண்டென்று சாதிப்பதற்காகக் கூறுகின்றார்.

(நஉ) இச்சைக்குக் காரணமாயும், விரைவில் செல்லுகிறதாயும், வெளியிலிருக்கும் இந்திரியங்களைத் தொழிற்படுத்துகிறதாயும் இருப்பது மனம். இதுவேகமாய்ச் சுழல்கிறபடியால் ஒரே காலத்தில் ஐம்பொறிகளும் தொழிற்படுகிறதில்லை என்பதாம்.

(உரை) இந்திரியங்களிடத்தும் பொருள்களிடத்தும் உள்ள சம்பந்தம் ஆன்மாவிற்கிருந்தும் எல்லா இந்திரியங்களும் ஒரே காலத்தில் தொழிற்படுகிறதில்லை. ஒவ்வொரு இந்திரியங்களாகத்தான் தொழிற்படுகின்றன. அந்த ஒரு இந்திரியமும் எப்பொழுதும் தொழிற்படுகிறதில்லை. ஆகையால் இந்திரியங்களைத் தொழிற்படுத்துவதில் எது காரணமோ அதுவே இச்சைக்கு அதாவது சங்கல்பரூபமான கவனத்திற்கு ஏதுவாயும், வெளியிலுள்ள பொறிகளைத் தொழிற்படுத்துகிறதாயுமுள்ள மனமென அறிந்துகொள்ளல் வேண்டும். அதுகொண்டே மனம் உள்ளிருக்கும் பிற அந்தக் கரணங்களை அதிட்டித்துச் சுக முதலியவற்றைச் சங்கற்பிக்கின்றமையாலும், வெளி இந்திரியங்களை அதிட்டிக்கின்றமையாலும், இரண்டு விதமான அதிகாரமுடையதாக ஆகுமென்று மதங்கத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அது வருமாறு:—

"ஆன்மாவிற்குப் போகத்தை யுண்டுபண்ணுகின்ற மனம் வெளியி லிருக்கும் காரணத்தாலும் தன்னிடத்திலிருக்குஞ் சங்கற்பத்தா லும் உள்ளிருந்துகொண்டு இந்திரியங்களுக்குச் சாமர்த்தியத்தை யுண்டுபண்ணுகின்றது. இதுபற்றியே மனம் அந்தக் கரண மெனப் பட்டது" என்பதாம். மிருகேந்திரத்திலும் "மனம் இந் திரியங்களைத் தொழிற்படுத்துகிறதாயும், விரைவில் செல்லுகிற தாயும், சங்கற்பத்தைத் தருமமாகக் கொண்டுமிருக்கின்றது" எனக் கூறப்பட்டிருக்கின்றது.

சுவையாயும், நல்லமணமுடையதாயும், அழகாயும். மா மர வென்னும் சப்தத்துடன் கூடினதாயுமுள்ள முறுக்கென்னும் உணவுப்பொருளையுண்ணுங்கால் ஒரேகாலத்தில் ஐம்பொறிகளுக் கும் அறிதற்றொழில் நிகழ்கின்றதே யெனின், அவ்வாறன்று. அநேகம் இதழ்களை ஒன்றாகச் சேர்த்து அடுக்கி ஊசியினால் குத்தின் ஒரே கணத்தில் எல்லா இதழ்களிலும் குத்துப்படுகின் றது. இவ்விடத்தில் ஒவ்வொரு இதழாகச் செல்லும் முறை யைச் சூக்குமமாக அறியவேண்டுமாறு போல மேலே கூறப் பட்ட உணவுப்பொருளை யுண்ணும் பொழுது ஒவ்வொரு இந் திரியமாகவே தொழிற்படும் முறை சூக்குமமாக அறியத்தக்கது. [விரைவுபற்றி ஒரே காலத்தில் எல்லாம் தொழிற்படுதல் போலக் காணப்படுதலேயன்றித் தொழிற்படுமாறில்லை.] இதுபற்றியே மனம் விரைவிற் செல்லும் தொழிலையுடையதெனக் கூறப்பட்ட தென்க. (கஉ)

(அ—கை) இவ்வாறே அகங்காரத்தையும் சாதிக்கின்றார்.

(கஉ ஹூ) ஐந்து தொழில்களையும் செய்கின்ற வாயுவி னுடைய சீவனத்தின் பொருட்டுப் பிரவிருத்திக்கின்ற சம்ரம்ப மென்னுமுயற்சி அகங்காரத்தின் றொழில் என்பதாம்.

(உரை) சீவனத்தின் பொருட்டு அஃதாவது சரீரத்தைத் தரித்தற் பொருட்டுப் பிராணனம் அபனயனம் முதலிய ஐந் தொழில்களைச் செய்கிறதாயும், அந்த அந்தத் தொழில்களின் பேதத்தால் பிராணன் அபானன் முதலிய பெயரை அடைகிற

தாயுமுள்ள வாயுவைத் தொழிற்படுத்துகிற சம்ரம்ப ரூபமான யாதொரு பிரயத்தனமுண்டோ, அது, அகங்காரத்தின் தொழில் என்று அகங்காரம் உண்டென்பது சித்திக்கின்றது. ஸ்ரீ மிருகேந்திரத்திலும் "பின்னர் உள்ளிருக்கும் வியக்தமான புத்தியினின்றும் ஆன்மாவிற்குக் கரணமாகக் கருவம் உண்டாயிற்று. யாதொன்றினுடைய சம்ரம்பத்தால் சரீரத்திலுள்ள ஐந்து வாயுக்களும் தொழிற்படுகின்றனவோ" என்று கூறப்பட்டிருக்கின்றது.

பிரணயனமாவது, சூக்கும தேகத்தை மேலுங் கீழுமாகக் கொண்டுபோதல். இது, பிராணன் என்னும் வாயுவின் றொழில்.

அபனயனமாவது, மல முதலியவற்றைக் கீழே தள்ளுதல். இது அபானனென்னும் வாயுவின்றொழில்.

சாமானனென்னும் வாயுவின் றொழிலாவது, ரசரூபமான அன்ன முதலியவற்றைச் சமமாகச் சரீரமெங்குங் கொண்டுசேர்த்தல்.

வியானனென்னும் வாயுவின் றொழிலாவது, அங்கங்களை வணங்கும்படி செய்தல்.

உதானனென்னும் வாயுவின் றொழிலாவது, உள்ளிருக்குந் தொனியை எழுத்து ரூபமாகச் சேர்த்தல்.

பிரதானமாக ஐந்து தொழில்களையும் செய்வதுகொண்டு ஐந்தொழில்களைச் செய்வது வாயுவெனக் கூறப்பட்டது. வெளியில் கக்குதல் முதலிய தொழிற்பாடுகள் வாயுவுக்கு உண்டென்று காணப்படுகின்றது. ஸ்ரீ காலோத்தரத்திலும் "வெளியில் கக்குதல் ரூபமான கிரியையில் நாகனென்ற வாயுவும், விழித்தலில் கூர்மனென்ற வாயுவும், தும்முதல் அழுதல்களில் கிரிகரனென்ற வாயுவும், ஓடுதல் இளைத்தல்களில் தேவதத்தனென்ற வாயும் இருக்கின்றன. தனஞ்சயனென்ற வாயு உயிர்நீங்கினும் நீங்குகிறதில்லை" யென்று கூறப்பட்டிருக்கின்றது. (கூஉ௭)

(அ—கை) அன்றியும் புத்தியின் காரியமாயும், இந்தக் கடம் என்பது முதலியவாய்க கிரகிக்கத் தகுந்த பொருள்களின் நிச்சயரூபமாயும், ஒவ்வொரு பொருள்தோறும் வேறு வேறான சொரூபத்தையுடையதாயுமுள்ள ஞானத்தினின்றும் மிகவும் வேற்றுமையுடன் விளக்குகிறதாயும், பொருள்களனைத்தையும் கிரகித்தலில் ஒரே ரூபமாயுமுள்ள நானென்னும் நிச்சய ஞான ரூபமான அறிவு அகங்காரத்தின் றொழிலென்று கூறுகின்றார்.

(கங) அகங்காரத்தின் தொழில் ரூபமான ஞானம், பொருள் விஷயமான அறிவினின்றும் வேறு என்பதாம்.

(உரை) அகங்காரத்தின் வியாபார ரூபமான ஞானம், பொருள் விஷயமான ஞானத்தினும் வேறென்பது பொருளென்க. (கங)

(அ—கை) சத்தத்தை அறிதல் முதலிய தொழில்கள் காது முதலிய இந்திரியங்களுக்குச் சிறப்பாக இருக்கின்றன. சம்ரம்பமோவெனின், அதே யிந்திரியங்களின் பொதுவான தொழிலென்று கொள்ளாமல் அகங்காரமுண்டென்று அதனைப் புதிதாக ஏன் கொள்ளல் வேண்டுமென்று ஆசங்கை செய்வார்க்கு விடை கூறுகின்றார்.

(கச) இந்திரியங்களின் பொதுத் தொழிலாக சம்ரம்பத்தைக் கொள்ளக்கூடாது. எதனாலெனில், இந்திரியங்களுள் ஓரிந்திரிய மில்லாதிருப்பினும் அகங்காரம் நிகழுகின்றது என்பதாம்.

(உரை) பொதுவான காரியத்தைச் செய்கிறவர்களுள் ஒருவரில்லையாயின், அந்தச் செயல் நிகழாது. இது முன்னரே கூறப்பட்டுள்ளது. இந்தச் சம்ரம்பரூபமான தொழில் இந்திரியங்களுள், ஒன்றில்லையாயினும் நிகழ்கின்றது. ஆகையால் நானென்னும் இந்த அறிவு அகங்காரத்தின் காரியமென்க. (கச)

(அ—கை) இவ்விடத்தில் சந்தர்ப்பத்தை அநுசரித்து மனதுடன் கூட ஞானேந்திரியம், கன்மேந்திரியம், தன் மாத்திரை

களென்னுமிவை, அகங்காரத்திலிருந்து உண்டாகின்றனவென்று கூறுகின்றார்.

(கரு) இன்னும் ஞானேந்திரியம் கன்மேந்திரியம் தந்மாத்ரை ஆகிய இவற்றை உண்டுபண்ணும் ஏனைய சாத்துவிக முதலிய அகங்காரங்கள் முறையே தைசச முதலிய பெயரைவுடையன வாக ஆகின்றன வென்பதாம்.

(உரை) சத்துவம், ரஜசு, தமசு, என்னுங் குணங்கள் நிரம்பப்பெற்ற சாத்துவிக அகங்காரம், இராசத அகங்காரம், தாமச அகங்காரமாகிய இம்மூன்றும், முறையே தைசசம், வைகாரிகம், பௌதிக மென்னும் பெயர்களை யடைகின்றன. சத்துவமுதலிய குணங்கள் மிகுதியாயிருத்தலால், சாத்துவிக முதலியவாய்க் கூறப்பட்டன. "கலப்பில்லாதது பரிணமத்தை யடையாது" என்னும் நியாயத்தால், வேறு குணங்களின் சேர்க்கையும் இந்த அகங்காரங்களுக்கு இருக்கின்றதென்க. (கரு)

(அ—கை) எந்தத் தத்துவங்கட்கு எந்த அகங்காரத்திலிருந்து உற்பத்தி யென்பதைப் பற்றிக் கூறுகின்றார்.

(கசு) யாதொரு காரணத்தால் விளக்குகின்றதோ அந்தக் காரணத்தால் தனக்குரிமையான சாத்துவிக அகங்காரத்திலிருந்து மனமும் ஞானேந்திரியங்களும் தோன்றுகின்றன வென்பதாம். (கசு)

(அ—கை) இவ்விடத்தில் நையாயிகருடைய மதத்தை அநுவாதஞ்செய்து மறுக்கின்றார்.

(கஎ) சிலர், விஷயங்களுக்கு நியமமிருத்தலால், ஞானேந்திரியங்களைப் பவுதிகங்களாகக் கொள்ளுகின்றனர். அது பொருந்தாது. அந்த விஷய நியமம் அசித்தமான ஏதுவால் கற்பிக்கப்படுகின்றதென்பதாம்.

(உரை) காது, சத்தம் ஒன்றை மாத்திரம் அறியக்கூடியது. தோல், பரிசம் ஒன்றை மாத்திரமறியக் கூடியது. இவ்வாறே

பிற இந்திரியங்களுமாம். ஆதலால் இந்திரியங்கள், சப்தம் முதலியவற்றிற்கு ஆதாரமான ஆகாசம் முதலிய பூதங்களினின்றும் உண்டாயின. அகங்காரத்தினின்று உண்டாயின வென்று கூறின், காரணமான அகங்காரம் ஒன்றாதலின் காரியமான இந்திரியங்களும் ஒரே ரூபமாயிருக்கவேண்டும்; தனித்தனி விஷய நியமம் சித்திக்காதென்று நையாயிகர் கூறுகின்றனர். இந்தக் கூற்று அசித்தமான ஏதுவால் கற்பிக்கப்படுகிறது. ஏதனாலெனின், முதற்காரண நியமத்தைச் சாதிக்கும் விஷய நியமம் இந்திரியங்களுக்குச் சித்திக்காமையாலென்க. இந்திரியங்களை நியதமான விஷயங்களையுடையனவாகக் கொள்ளின், அவ்விந்திரியங்கள் தனக்குக் காரணங்களான பூதங்களை மாத்திரம் குணத்துடன் அறியவேண்டும். வேறு திரவியங்களையும் அவற்றின் குணங்களையும் அறிதல் கூடாது. கண் முதலிய இந்திரியங்கள் ஏனைய திரவியங்களையும் அவற்றின் குணங்களையும் அறிகின்றன. (ஆதலால் இந்திரியங்கள் பூதகாரியங்களாகாமை காண்க) (௫எ)

(௫அ) (எவ்வாறெனின்) வாயுவைச் சேர்ந்த தோலிந்திரியம் வாயுவுடன் கூடவே பிருதிவி, அப்பு, தேயுவாகிய திரவியங்களையும், அந்தத் திரவியங்களிலுள்ள பரிசங்களையும் கட்டுப்பாடின்றி அறிகின்றதென்பதாம்.

(உரை) நையாயிகர் பக்கத்தில் தோலிந்திரியமானது வாயுவின் காரியமாக ஒப்புக்கொள்ளப்பட்டது. வாயுவுடன் கூட பிருதிவி, அப்பு, தேயுவென்னும் இவற்றையும், அவற்றினிடத்துள்ள பரிசங்களையும், தோலிந்திரியமானது அறிகின்றதென்க. (௫அ)

(௫௯) (அன்றியும்) கண்ணிந்திரியமானது அக்கினியின் காரியமாக ஒப்புக்கொள்ளப்பட்டது. இது பிருதிவி, அப்பு, தேயுவென்னு மிவற்றையும், இவற்றின் ரூபங்களையும் அறிகின்றது. ஆகையால் இந்திரியங்களைக் கட்டுப்பாடான விஷயங்களையுடையனவாகக் கூறலாகாது. (௫௯)

(அ—கை) இன்னுமொரு குறை கூறுகின்றார்.

(௪0) பூதகாரியத்துக்காக நியமத்தை ஒப்புக்கொள்ளும் விஷயத்தில் கன்மம், சாமான்யம், சமவாய மென்னும் இவற்றின் அறிவு இந்திரியங்களால் உண்டாகக்கூடாது என்பதாம்.

(உரை) இந்திரியங்கள் பூதகாரிய மென்பதைச் சாதிப்பதற்காக அவற்றிற்கு விஷய நியமத்தை ஒப்புக்கொண்டால் பூதங்களில் நின்றும் குணங்களில் நின்றும் வேறாக உங்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட கன்மம் சாமான்யம் சமவாய மென்னும் பதார்த்தங்களினறிவு இந்திரியங்களில் நின்றும் உண்டாகக்கூடாது. (௪0)

(அ—கை) அகங்காரத்தில் நின்றும் இந்திரியங்கள் உண்டாகுமாயின் இந்திரியங்களுக்குக் காரியபேதம் எவ்வாறு கூடுமென்று முன்னர்க் கேட்கப்பட்டது. அந்தக் கேள்வி பொருந்தாது. உற்பத்தியின் பேதத்தால் கரும்பின் விகாரங்களான வெல்லம் சருக்கரைகள்போல் காரியபேதங் கூடும். செவி முதலியன விசேடமாக சத்த முதலியவற்றை அறியும் விஷயத்தில் புருடார்த்தத்தைக் கொடுக்கக்கூடிய கன்மமே நியமிப்பதாக எங்களால் ஒப்புக்கொள்ளப் படுகிறதெனக் கூறுகின்றார்.

(௪க) விஷய நியமத்திற்குக் காரணமாக அகங்காரத்தில் நின்றும் தோன்றுவதை நாங்கள் கொள்ளவில்லை. புருடார்த்தத்தைக் கொடுக்கக்கூடியதாயும், சிவனால் அதிட்டிக்கப்பட்டதாயும் இருக்கும் கன்மமும், விஷய நியமத்திற்குக் காரணமென்பதாம்.

(உரை) அகங்காரத்தில் நின்றும் உண்டாவதையே விஷய நியமத்திற்குக் காரணமாக நாங்கள் கூறவில்லை. சிவனாலதிட்டிக்கப்பட்ட கன்மமும் அதற்குக் காரணமென்க. (௪க)

(அ—கை) சரீரத்திலிருக்கும் துவாரத்துடன் கூடின ஆகாசம் சத்தத்தை வெளிப்படுத்துகிறதாக ஒப்புக்கொள்ளின், மூக்குத்துவாரமும் செவியாய் விடுமென்பதுபற்றி, செவியிலிருக்கும்

ஆகாசந்தான் சத்தத்தை அறியுமென்னும் நியமத்தில் கண்ணுக்குப் புலப்படாத கன்மமே நியமிப்பதாக இந்திரியங்களைப் பூதகாரியமாய்க் கூறுகிறவர்களும் ஒப்புக்கொள்ள வேண்டுமெனக் கூறுகின்றார்.

(சஉ) அநேகஞ் செவிகள் ஏற்பட்டு விடுமென்னும் அச்சத்தால் செவியின் துவாரத்திலிருக்கும் ஆகாசமே சத்தத்தை அறியுமென்னுங் நியமத்திற்குக் காரணமாக புருஷார்த்தத்தைக் கொடுக்கக்கூடிய கன்மம் உன்னாலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது என்பதாம்.

(உரை) சரீரத்திலிருக்கும் ஆகாசம் சத்தத்தை அறிகிறதாகக் கூறுமிடத்தில் அனேகஞ் செவிகள் ஏற்பட்டு விடுமென்பது கொண்டு செவியிலிருக்கும் ஆகாசமே சத்தத்தை யறியுமென்று கொள்வதில், புருஷார்த்தத்தைக் கொடுக்கக்கூடிய கன்மமே காரணமென்றுஉன்னாலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றதென கூட்டி முடித்துக்கொள்ள வேண்டும் என்க. (சஉ)

(அ—கை) இவ்வாறே கன்மேந்திரியங்களும் அகங்காரத்தினின்று உண்டாகின்றன வென்று கூறுகின்றார்.

(சங) இராசதமான வைகாரிக அகங்காரத்தினின்றும் கன்மத்தைச் செய்யும் கன்மேந்திரியங்களின் கூட்டமானது உண்டாயிற்று. காரியத்திற்குக் காரணத்தை யநுசரித்திருக்குந் தன்மையானது யாதொரு காரணத்தால் காணப்படுகின்றதோ என்பதாம்.

(உ—ரை) இரசோ குணத்தைத் தொழிற் படுத்துவதால் இராசதமான வைகாரிக அகங்காரத்தினிறும் கிரியைக்கு எதுவான கன்மேந்திரியக்கூட்டம் உண்டாயிற்று. யாதொரு காரணத்தால் காரணத்தை யநுசரித்திருக்குந் தன்மை காரியத்திற் காணப்படுகின்றதோ, அந்தக் காரணத்தால் சத்துவகுணம் பிரகாச ரூபமாயிருப்பதுபற்றிப் பிரகாச ரூபமான ஞானேந்திரியக்கூட்டம் சாத்துவிகமான அகங்காரத்தினின்றும் உண்டாயிற்றென்று முன்னர்க் கூறப்பட்டது. இவ்வாறின்றி மாறுபட்ட இயல்புடைய இந்த

இரண்டிந்திரியவர்க்கங்களும் ஒன்றிலிருந்தே உண்டாயினவெனக் கொள்ளின், காரணத்திற்கு நியமமின்மையைக் குறிப்பிடக் கூடிய வரம் பின்றியோடலென்னும் குற்றம் நேருமென்க. (சங)

(அ—கை) வரம்பின்றியோடலென்னுங் குற்றத்தைக் காட்டுகின்றார்.

(சச) சாத்துவிகத்தினின்றும் இரு வர்க்கங்களும் உண்டாயினவென்று கொள்ளின், சத்துவத்தின் விகாரம் இராசசின் விகாரம் பற்றி உண்டாயினவென்று கூறும் வரம்பில்லையாய் விடும் என்பதைத் தடுக்க முடியாது என்பதாம். (சச)

(சரு) (ஆகையினாலேயே) கூறப்பட்ட இருவர்க்கங்களுக்கும் மாறுபட்ட தன்மாத்திரைகளின் கூட்டமும் தாமசமான பவுதிக அகங்காரத்தினின்றும் உண்டாயிற்று என்பதாம். (சரு)

(அ—கை) இனி, புத்தியானது அத்தியவசாய முதலியவற்றிற்கு ஏதுவாகுமெனக் கூறுகின்றார்.

(சசு) விஷய சொரூபமான அறிவும் இந்திரியங்களை வாயிலாக உடையது. சில விடங்களிலில்லை. புருடனுடைய அறிவு விளங்குவதற்கு இடமாயிருத்தலால், அந்த அறிவானது, புத்தியினுடைய வியாபாரமாகு மென்பதாம்.

(உரை) இந்திரியங்களை வாயிலாகக் கொண்டு இந்தக் கடம் என்பது முதலியனவாய் வெளியிலிருக்கும் விஷயங்களை நிச்சயிக்கும் ரூபமான அறிவும், இந்திரியங்களை வாயிலாகக் கொள்ளாது உள்ளிருக்கும் நினைவு கூர்மை என்னும் இவற்றினறிவும், பாவப்பிரத்திய ரூபமான அறிவும், ஆன்மாவிடத்துத் தோன்றுதற்குப் புத்தி யிடமாய் யிருத்தலால் இவை அனைத்தும் புத்தியின் வியாபார மென்றறிந்து கொள்க. ஆகையால் நிச்சயம் நினைவு என்னும் இவற்றை அடையாளமாக வுடைய புத்தியுண்டென்பது சித்திக்கின்றது. ஸ்ரீ மிருகேந்திரத்திலும் "பாவப் பிரத்தியய ரூபமான புத்தியின் பிரகாசமானது புருடனுக்கு அறிவு தோற்று மிடமாகையால் அந்த அறிவு புத்தியின் வியாபாரமென்று சொல்லப்படும்." என்று கூறப்பட்டிருக்கின்றது. (சசு)

(அ—கை) இந்தப் புத்தியினுடைய அறிவு மூன்று விதமாயிருக்குமென்று கூறுகின்றார்.

(சகூவ) க்லுப்தி, மதி, ஸ்மிருதி என்று (புத்தியின் போதம் மூன்று வித மென்பதாம்)

(உ—ரை) க்லுப்தி யென்பது கற்பித்தல். அதாவது கூர்மை யென்பதாம். மதியாவது, மனனம் அல்லது ஞானம். அஃதாவது நிச்சயம் என்பதாம். (சகூவ)

(அ—கை) இவ்வாறு இச்சை முதலிய காரிய பேதத்தால் அந்தக் காரணங்களின் பேதம் சித்திக்கின்றதென்று முடித்துக் காட்டுகின்றார்.

(சஎ) இச்சை, சம்ரம்பம், போதமென்னும் வியாபார வேறுபாட்டால் அந்தக் கரணம் மூன்று விதமாயிற்றென்பதாம்.

(உ—ரை) நினைப்பு முதலியவற்றிற்குத் தம்முட் பேதமிருப்பினும், அறிவிக்குந்தன்மை யென்ற ஒற்றுமை இருப்பது கொண்டு ஒரே பொருளாயிருத்தலால் அவற்றைப் புத்தியிலிருப்பதாகக் கொள்ளவேண்டும். இச்சை முதலிய வியாபாரங்களோவெனின், வேறு வேறான பொருளையுடையனவா யிருத்தலால் வேறு வேறான காரணங்களையுடையன வென்பது பொருள். (சஎ)

(அ—கை) பிருதிவி முதலியன விடயமாயிருத்தல் பற்றிப் போக்கியமாயிருத்தலாலும், இந்திரியங்கள் அந்த விடயங்களையறிதற்கு ஏதுவாயிருத்தலாலும், இந்தப் பிருதிவி முதலியவைகளும் இந்திரியங்களும் போக சாதனமாயிருக்கட்டும். புத்தியோவெனின், இந்திரியம் பொருள் என்னும் இவற்றின் சம்பந்தத்தால் ஆன்மாவினிடத் துண்டாகும் ஞான ரூபமாயிருத்தலால் போக சாதனமெனக் கொள்ளக்கூடாது. ஆன்மாவின் குணமென்றே கொள்ளல் வேண்டு மென்று கூறும் நையாயிகர் கொள்கையை மறுக்கின்றார்.

(சஅ) குணங்களுடன் கூடியிருக்குந் தன்மை சமமாயிருப்பது கொண்டு புத்தியை அறியப்படும் பொருளாகவே கொள்ளல் வேண்டும். நீயோ புத்தியை அறியப்படாததென்று கொள்கின்றாய். மிக நன்றாயிருக்கின்றதென்பதாம்.

(உரை) இதன் கருத்தாவது—அறிவு, அநத்யவசாயமென்றும் அத்யவசாய மென்றும் இருவகைப்படும். அநத்யவசாய அறிவானது எப்பொழுதும் அறியும் ரூபமாகவே விளங்கிக்கொண்டிருப்பதால் ஆன்மாவிற்கு இயல்பாகும். அத்யவசாய அறிவானது தோற்ற நாசங்களைத் தருமமாக உடையதாய் விளங்கிக் கொண்டிருப்பதால் ஆன்மாவிற்கு இயல்பாகாது. எதனாலெனில், நித்தியப்பொருளுக்கு அநித்தியத் தன்மையின் சேர்க்கை கிடையாதாதலாலென்க. அத்யவசாயத்தை ஆன்மாவின் இயல்பென்று கொள்ளின் ஆன்மாவிற்கு அநித்தியத்தன்மை வந்துவிடும். இந்த அத்யவசாயம் நித்தியமாக அநுபவிக்கப்படுகிறதில்லை. ஆகையால் புருடனுடைய இயல்பில்லை. இது எதனுடைய இயல்போ அதுவே புத்தியாகும். இக்தப் புத்தி, பதார்த்தங்களை நிச்சயிக்கிறதாயும் தருமம் ஞானம் முதலிய எண் குணங்களையுடையதாயுமிருக்கும். ஆகவே விஷயங்களை நிச்சயித்தலாலும், பாவங்கள் பிரத்தியயங்களென்னும் இவற்றின் ரூபமாயும் சத்துவமுதலிய முக்குணங்களுடன் கூடினதாயுமுள்ள சொரூபத்தால் போக்கியமாயிருத்தலாலும், புத்தியானது அறியப்படுவதாகவே இருக்கின்றது. ஆன்மகுணமாக இருக்கவில்லை.

இவ்வாறே தத்துவசங்கிரகத்திலும் "விஷய ரூபமாயும் சுகம் முதலியவற்றின் ரூபமாயும் இருக்கும் புத்தி சுருக்கமாகப் போக்யமாகும்" என்று கூறப்பட்டிருக்கின்றது. புத்தி அறியப்படுவதாகும்; சத்துவம் முதலிய முக்குணங்களுடன் கூடியிருத்தலால்; பிருதிவி முதலியனபோலென்று பிரயோகமும் காணப்படுகின்றது. விஷயங்களை நிச்சயிக்கும் ஏதுவால் இந்திரியம்போல புத்திக்குக் காரணத்தன்மையும் சித்தித்ததென்று கூறப்பட்டிருக்கின்றது.

தர்மமுதலிய பாவங்களும் ஆன்ம குணங்களென்றே எங்களால் ஒப்புக்கொள்ளப்படுகின்றதென்பையாயின், அது பொருந்தாது. தர்ம முதலிய குணங்கள் ஆன்மாவிற்குச் சமஸ்க்காரமாக ஆகிறதில்லை. சோதிஷ்டோம முதலிய கன்மங்களின் சமஸ்க்காரம் ஆன்மாவினிடத்துச் சம்பவிக்கிறதில்லை. எதனாலெனில், ஆன்மாவிகாரியாகாமையாலென்க. அன்றியும் உழுதல் முதலிய தொழில்களின் சமஸ்க்காரம் உழுதவனிடத்து நிகழ்கிறதில்லை. அத்தொழிலுக்கிடமான பூமியிற்றான் காண்கின்றோம். எந்தவிடத்தில் கன்மங்களின் சமஸ்க்காரங்கள் காணப்படுகின்றனவோ அந்த இடமே புத்தி யெனப்படும். இவ்வாறே ஞானமுதலியவற்றின் சமஸ்க்காரத்திலும் கூறிக்கொள்க. இந்தச் சமஸ்காரம் பற்றியே சொப்பனம், நினைப்பு, கூர்மை என்னு மிவற்றில் பொருளில்லையாயினும் தோற்றங் காணப்படுகின்றது. (சஅ)

(சகூ) (ஆகையால்) உள்ளிந்திரியம் வெளி இந்திரியமென்னும் இவை போகத்திற்கு நேரே காரணமாக இருக்கின்றன. போக்கியமின்றிப் போகமில்லை யாகையால் போக்கியமானது போகத்திற்குச் சாதனம் என்பதாம்.

(உரை) உள்ளே இருக்குங் கரணங்களும் வெளியிலிருக்குங் கரணங்களும் சுகமுதலியவற்றின் ரூபமான போகத்திற்கு நேரே காரணமாக இருக்கின்றன. இவ்வாறே ஸ்ரீ சுவாயம்புவத்திலும் "புருஷனுடைய சுகதுக்க ரூபமான அறிவேபோகம்" எனக் கூறப்பட்டிருக்கின்றது. அந்தப் போகமானது மாலை சந்தனம் முதலிய போக்கியப் பொருள்களின்றி உண்டாகாதாகையால் அவற்றின் அறிவை முன்னிட்ட சுகமுதலியவற்றின் நிச்சயத்திற்கும் போக்கியங் காரணமாகக் கொள்ளப்படுகின்றது.(சகூ)

(அ—கை) இதனையே திருட்டாந்தத்தில் வைத்துக் காட்டுகின்றார்.

(ருo—ருஉ) அரசனானவன் வெற்றியின் பொருட்டுச் சேனைகளை எவ்வாறு ஏவுகின்றானோ, அவ்வாறே சிவனானவன் அறிவு முதலியவற்றின் பொருட்டுக் குணதத்துவ முதலிய

வற்றை ஏவுகின்றான். வெற்றியானது சேனையிடத்திலிருப்பினும் கருத்தாவாயிருக்குந் தன்மை அரசனுக்கு எவ்வாறு ஏற்படுகின்றதோ, அவ்வாறே அறிவு முதலியன புத்தி முதலியவற்றிலிருப்பினும் கருத்தாவாயிருக்கும் தன்மை ஆன்மாவுக்குச் சித்திக்கின்றது. சேனைகளின் வெற்றி அந்தச் சேனைகளுக்கு ஆகாதவாறு போல மகதத்துவ முதலியவற்றால் உண்டான அறிவுமுதலியன அத் தத்துவங்களுக்கு ஆமிறதில்லை. சேனைகள்போல இத் தத்துவங்கள் சாதனங்களாக நிச்சயிக்க பட்டனவென்பதாம்.

(உரை) காணங்கள் அசேதனங்களாகையால் அவற்றின் வியாபாரம் அவற்றின் பொருட்டாக இல்லை. சேதனான ஆன்மாவின் பொருட்டாகவே என்பது கருத்து. (௩௰-௩௨)

(௩௩) ஆகையால் அறிவு முதலிய வியாபாரங்களுக்குக் குணத்தத்துவ முதலியன சாதனங்களாகு மென்பதாம். (௩௩)

(அ—கை) இனி, போக்கியத்தைப் பிரித்துக் கூறுகின்றார்.

(௩௪) மோகம், துக்கம், சுகமென்னும் இவற்றின் சொரூபமாயும், ரூபமென்னும் பெயருடைய தாயுமுள்ள தரும முதலிய பாவ வருக்கமும் அவற்றிலிருந்தும் உண்டான சித்தி முதலிய பிரத்யயவருக்கமுமான இந்த இரண்டு விதமாயுள்ள புத்தி போதமும் புருஷனுக்கு நேரே போக்கியமாய் இருக்கின்றது. மாயை முதலியன அதற்காக ஏற்பட்டுள்ளன என்பதாம்.

(உரை) வெளிப்பட்ட குணத்துடன் மோக முதலியவற்றிற்கு ஏதுவாய் பாவப் பிரத்திய யங்களிருக்கின்றமையால், மோக முதலியவற்றின் ரூபமாயும் ரூபமென்னும் பெயருடையதாயுமுள்ள தரும முதலிய பாவ வருக்கமும், அவற்றிலிருந்து உண்டான சித்தி முதலிய பிரத்தியயவருக்கமும் என்னும் இந்த இரண்டு விதமான புத்தியிலுள்ள போதமும் புருடனுக்கு நேரே போக்கியமாக இருக்கின்றன. மாயை முதலியனவும் புவன முதலிய பொருள்களும் அந்தப் போக்கியத்துக்காக ஏற்பட்டுப் போகத்திற் கிடமாயிருத்தலால் பரம்பரையாகப் போக்கியமாயிருக்கின்றன. (௩௪)

(அ—கை) ரூபமென்னும் பெயருடையது என்றால் என்னை யென்பதை பற்றி கூறுகின்றார்.

(ருரு) தமோ குணம் பற்றிய அதர்மம் முதலிய மூன்றும், இராசதகுணம் பற்றிய இராகம் ஒன்றும், சாத்துவிக குணம் பற்றிய தரும முதலிய நான்கு மாகிய இந்த எட்டு விதமான ரூபமும் புத்தியில் குணமாக இருக்கின்றன. இந்த ரூப முதலியன முதற் காரணமான கன்மத்தினின்றும் உண்டாயின வென்பதாம்.

(உரை) அதர்மம், அஞ்ஞானம், அனைஸ்வரிய மென்னும் மூன்று ரூபங்களும் தமோ குணம் பற்றி நிகழ்வன. அவைராக்கியம் இராசத குணம்பற்றி நிகழ்வது. தருமம்,ஞானம், வைராக்கியம்,ஐஸ்வரிய மென்னும் நான்கும் சத்துவ குணம்பற்றி நிகழ்வன. இந்த எட்டும் புத்தியினிடத்துக் குணமாக இருக்கின்றன. முதற் காரணமான கன்மத்தினின்றும் உண்டாயின. தத்துவம், புவனம், சரீர மென்னும் இவை யோவெனில், துணைக்காரணமான கன்மத்துடன் முதற் காரணமான மாயையில் நின்றும்நேராயும், பரம்பரையாயும் உண்டாயின. இவ்வாறு சுவாயம்புவம் முதலிய ஆகமங்களில் கூறப்பட்டிருக்கின்றது. (ருரு)

(ருசு) (இவை) முத்தியில் முற்றும் அற்றுப்போவன வாதலாலும், எங்கும் வியாபகமாய் வெளிப்பட்டுத் தோன்று வன வாதலாலும், ஆடை முதலிய வற்றின் ஞானம் வியாபகமாயில்லாததாலும், அதர்மம் முதலியன ஆன்மாவின் குணங்களாக ஆவன வல்ல வென்பதாம்.

(உரை) யாதொரு காரணத்தால் முத்தியில் தர்மம் முதலிய வற்றிற்கு முற்றும் நாசத்தை அன்னியர்களும் ஒப்புக் கொள்ளுகின்றனரோ, யாதொரு காரணத்தால் நித்தியமாயும் வியாபகமாயுமிருக்கும் ஞானக்கிரியா ரூபமான ஆன்ம சுபாவத்திற்கு முத்தியில் எவ்விடத்தும் வியாபகத் தன்மையுடன் வெளிப்பட்டு விளங்குதல் கேட்கப் படுகின்றதோ, யாதொரு காரணத்தால் நிச்சய ரூபமான ஆடை முதலியவற்றின் ஞானக்

கட்கு வியாபகமில்லாதிருக்குந் தன்மை காணப்படுகின்றதோ, அந்தக் காரணங்களால் அநித்தியமாயும் வியாபகமில்லாத தாயுமிருக்கும் அதர்மம் முதலியன, நித்தியமாயும் வியாபகமாயுமிருக்கும் ஆன்மாவின் குணங்களாக ஆவனவல்ல. ஆன்மாவிற்கு அநித்தியங்களின் சேர்க்கை உண்டாயின் பரிணமிக்குந் தன்மை முதலிய தோஷங்கள் நேரு மாதலாலென்க.

இந்த அதர்மம் முதலியன சாமுசித்திகம், வைநயிகம், பிராகிருதமென்னும் பேதத்தால் மூன்று விதமாய் ஆன்மாவினின்றும் தோன்றுகின்றன. இவ்வாறே மிருகேந்திரத்திலும் கூறப்பட்டிருக்கின்றது. அது வருமாறு:—" இந்தப் பாவங்கள் ஆன்மாவினிடத்து சாமுசித்திகம் வைநயிகம் பிராகிருதமென மூன்று விதமாயிருக்கும். விசேடமான தரும சமஸ்காரத்தால் பிரகாசிக்கப்பட்ட சித்தத்தை யுடையாருக்குத் தேகம் நீங்கிய பின்னரும் முன் போலவே பிரகாசிக்கும் குணம் சாமுசித்திகமெனப்படும். உலகத்தார் புத்தியாலும் குருமுகத்தாலும் சாத்திரத்தாலும் பிரகாசிக்குங்குணம் வைநயிகமெனப்படும். இது மனம் வாக்குக் காயங்களால் உண்டாவது. சொப்பனம் முதலிய வற்றைப் போல் தேகமிருக்கும் பொழுது மாத்திரம் தோன்றிக் கொண்டு பின்னர்த் தோன்றுமலிருக்குங் குணம் பிராகிருத மெனப்படுமென்பதாம். (௩௯)

(அ—கை) இவ்வாறே மூன்றுவிதமான அதர்மம் முதலிய வற்றிலிருந்தும் உண்டாகும் பல பேதங்களைக் கூறுகின்றார்.

(௩எ.௩அ.௩௧) பிராகிருத ரூபத்திற்கும், வைநயிகரூபத்திற்கும், கீழேபோதல், பந்தம், தடை, சம்சாரம் சுவர்க்கம், முத்தி பிரகிருதிபாவம், தடையின்மை யென்னும் பலன்களும், சாமுசித்திகரூபத்திற்கு சம்சாரம், தனது தானத்தினின்றும் நீங்குதல், விக்கினம், போகத்தைக் கடத்தலின்மை, தனது தானத்திற்குக் கீழுள்ளவர்களை யதிட்டித்தல், அந்தந்த விஷயங்களில் நன்றாக ஞானமிருத்தல், போகத்திலாசையின்மை, தன்னால் நினைக்கப்பட்ட விஷயங்களில் விக்கினமின்மை யென்னும் பலன்களும் உண்டாகுமென்பதாம்.

(உரை) வைகயிகமாயும் பிராகிருதமாயுமுள்ள அதர்மம் முதலியவற்றினின்றும் கீழே செல்லுதல் முதலிய பலன்கள் உண்டாகின்றன. சாமுசித்திகத்தினின்றும் சமுசாரமுதலிய பலன்கள் உண்டாகின்றன. கீழே செல்லுதலாவது நரகத்தை யடைதல். பந்தமாவது ஆன்மாவல்லாத பொருள்களில் ஆன்ம பாவனை செய்தல். சம்சாரமாவது பல பிறவிகளை யடைதல். முத்தியாவது ஏனைய மதத்தினருடைய முத்தியடைதல். பர முத்தியை தீக்கைக்குப் பலனாக மோக்ஷ காரிகையில் கூறப்போகின்றமையால் இவ்விடத்து முத்தியென்பதற்கு மேலே கூறிய வாறு கொள்க. பிரகிருதிபாவமாவது பிரகிருதியில் ஒடுங்குதல். போகத்தைக் கடத்தலின்மையாவது போகத்திலிச்சையுடமை. மற்றவை வெளிப்படை. (நிஎ.நிஅ. நிக)

(அ—கை) இவ்வாறு பாவங்களைக் கூறிவிட்டு இனிப் பிரத்தியயங்களைக் கூறுகின்றார்.

(கூ0) இராசதமான அவைராக்கியத்துடன் கூடின சாத்துவிகமான தரும முதலிய நான்கினின்றும் குணம் முதலியவையும் பிரகிருதியும் புருஷனுமென்னும் இவற்றின் விஷயமான ஞான ரூபமாகிய சித்தி யுண்டாகின்றதென்பதாம்.

(உரை) இவ்விடத்தில் புத்தியில் வாசனை ரூபமாக இருப்பனவாய் தரும முதலிய எட்டுப் பாவங்கள் கூறப்படுகின்றன. "யாதொரு காரணத்தால் லிங்கங்களாயிருந்து கொண்டு புத்தியைச் சாதித்துத் தருகின்றனவோ, அந்தக் காரணத்தால் பாவங்களெனக் கூறப்பட்டன" என்று பிறருங் கூறுகின்றனர். அந்தப் பாவங்களே மேலான அவத்தை யடைந்து நூல ரூபமாகப் போக்கியா வத்தையு மடைந்து சம் சாரிகளுக்கு அறிவை யுண்டு பண்ணுவதால் பிரத்திய யங்களென்று கூறப்படுகின்றன. இவ்வாறே "யாதொரு காரணத்தால் புருடனுக்கு அறிவையுண்டு பண்ணுகின்றனவோ அந்தக் காரணத்தால் பிரத்திய யங்களென்று கூறப்பட்டன" என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே இராசத சம்பந்தமான அவைராக்கியத்துடன் சிறிது சேர்ந்த சாத்துவிக

மான தரும முதலிய பாவங்கள் நான்கினின்றும் சித்தியானதுண்டாகின்றது. அது, குணம், பிரகிருதி, புருடனென்னும் இவற்றின் விஷயமான ஞானத்தின் மேலான அவத்தையெனக் கூறப்படுகின்றது. இவ்வாறே "புருடன் பிரகிருதியென்னுமிவற்றை விஷயமாக உடைய யாதொரு அறிவுண்டோ அதுவே இவ்விடத்துச் சித்தியாகும்" என்று கூறப்பட்டிருக்கின்றது. குணம், பிரகிருதியென்னும் இவை விஷயமான புத்தியினுடைய அறிவில் அவற்றை யறிவிப்பவனான புருடன் தனியாகவேயிருந்துகொண்டு தானாகவே பிரகாசிக்கிறான். இவ்வாறே "அப்பொழுது அறிபவனுக்குத் தனது சொரூபத்திலிருப்பு" என்று பிறருங் கூறுகின்றனர். இவ்வாறன்றி ஆன்மாவைப் புத்தி அறிவிப்பதில்லை. எதனாலெனில், போக்கியத்தன்மை முதலிய குற்றங்கள் நேரிடுமாகையாலென்க. "புத்திக்கு விஷயமாக புருடனாகும் விஷயத்தில் புருடனுக்குப் பரிணமத்தன்மையும் போக்கியத்தன்மையும் வந்துவிடும்" என்று மோக்ஷகாரிகையிலும் கூறப்போகின்றார். (சுo)

(சுக) தரும முதலிய ரூபத்துடன் கூடிய அதர்ம முதலிய மூன்றினின்றும் துஷ்டி உண்டாகின்றது. சித்தியினால் ஆன்மாவிற்கு ஞானம் உண்டானபொழுது கிருதார்த்தனாய்விட்டேனென்ற ஞானந்தான் துஷ்டியெனப்படுமென்பதாம்.

(உரை) சிறிது சத்துவ சம்பந்தமான தரும முதலியவற்றுடன் சேர்ந்த தமசின் சம்பந்தமான அதர்ம முதலிய மூன்றினின்றும் துஷ்டி உண்டாகின்றது. முன்னர்க் கூறப்பட்டவாறு பூததன்மாத்திரை முதலியவற்றை அறிதல் ரூபமான சித்தியினால் அந்தந்த மதத்திற் கூறப்பட்ட சொரூபத்தின்படி ஆன்மாவிற்கு அறிவு உண்டாகும்பொழுது குறைந்த வைராக்கியத்தினால் கிருதார்த்தனாகாதிருந்தும் கிருதார்த்தனாய்விட்டதாகத் தோன்றும் புத்தி துஷ்டியெனப்படும். இவ்வாறே "அகிருதார்த்தனிடத்தில் கிருதார்த்தனாய்விட்டேனென்னும் யாதொரு புத்தியுண்டோ அதுவே துஷ்டியெனப்படும்" என்று கூறப்பட்டிருக்கிறது. (சுக)

(௬உ) சுகம் முதலியவற்றில் இந்திரியங்களின்மையாலுண்டான யாதொரு சத்தியின்மையுண்டோ அது சிறிது அராகத்துடன் கூடின அதர்மம் முதலிய மூன்றினின்றும் உண்டாகின்றது என்பதாம்.

(உரை) சுகம் என்னும் சொல்லால் இவ்விடத்தில் உபத்தேந்திரியத்தின் தொழிலான ஆநந்தம் கூறப்படுகிறது. அந்த ஆநந்த முதலியவற்றில் இந்திரியங்களில்லாமையாலாவது, அல்லது இந்திரியங்களிருத்தற்குரிய சரீரத்தின் உறுப்பு இல்லாமையினாலாவது உண்டான அலித்தன்மை செவிட்டுத்தன்மை ரூபமான யாதொரு சாமர்த்தியமின்மையுண்டோ அதுவே சத்தியின்மை யெனப்படும். இது இராசசத்துடன் சிறிது சேர்ந்த தாமச வருக்கத்தினின்றும் உண்டாகிறது. இவ்வாறே "அசத்தியென்பது வியாப்பிர வர்த்தியில்லாமையால் தாமசமாகவும் துக்கமாவதால் இராசசமாகவும் சொல்லப்படும். காரணத்தின் குணம் காரியத்திற் றோன்றுமாதலால் இரசசின் குணமாகிய துக்கம் அசத்தியில் தோற்றுவதால் இராசசமென்றும் சொல்லல் வேண்டும்" என்று கூறப்பட்டிருக்கின்றது. (௬உ)

(௬௩) அராகமில்லாததாயும் சிறிது தரும முதலியவற்றுடன் கூடினதாயுமுள்ள அந்தத் தாமசவருக்கத்தினின்றும் உள்ளதை உள்ளவாறு அறியாமையென்னும் விபர்யயம் உண்டாகின்றதென்பதாம்.

(உரை) இராச சம்பந்தமில்லாததாயும் சிறிது சாத்துவிகத்துடன் கூடினதாயுமுள்ள அந்தத் தாமசவருக்கத்தினின்றும் உள்ளதை உள்ளவாறு அறியாமை ரூபமான விபர்யமுண்டாகின்றது. அது தமசு, மோகம், மகாமோகம், தாமிச்ரம், அந்ததாமிச்சிரமென்னும் இவற்றின் ரூபமாக இருந்து கொண்டு தோன்றுகின்றது. இவ்வாறே "சிறிது பொதுத்தன்மையைக் கொண்டு ஒரு பொருளினிடத்தில் பிறிதொரு பொருளினறிவானது விபர்யயம்" என்று கூறப்பட்டிருக்கின்றது. (௬௩)

(அ—கை) இவ்வாறு மிகச்சுருக்கமாகக் கூறப்பட்ட பாவப்ரோத்தியரூபமான புத்தியினறிவை முடித்துக் காட்டுகின்றார்.

(௬௫-வ) இந்தப் புத்தியின் தருமம் சிறிது கூறப்பட்டதென்பதாம்.

(உரை) இந்தப் பாவங்கள், ப்ரத்தியயங்களென்னுமிவற்றின் விரிவு மதங்க முதலியவற்றில் கூறப்பட்டிருக்கின்றது. மிருகேந்திர விருத்தி தீபிகையில் எம்மாலுங் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலின் விரிவை அவ்விடங்களிலறிந்துகொள்க. விரியுமென்றெண்ணி இவ்விடத்துக் கூறவில்லை. (௬௫-வ)

(௬௫-இ) (இது) சேதனனால் அநுபவிக்கப்படுகின்றதென்பதாம்.

(உரை) போக்கியமாயிருக்கின்றமையாலென்பது மூலத்தில் சேர்த்துக் கொள்ளவேண்டும். (௬௫-இ)

(அ—கை) புத்தியின் தருமத்திற்குப் போக்கியத் தன்மையைச் சாதிக்கின்றார்.

(௬௬) யாதொரு காரணத்தால் தோன்றியநுபவிக்கப்படுகின்றதோ அந்தக் காரணத்தால் இந்தப் புத்தியின் தருமத்திற்குப் போக்கியத் தன்மை சித்தித்தது என்பதாம்.

(உரை) இந்தப்புத்தியினுடைய ஞானமானது தோன்றியழிதல் பற்றிப் போக்கியத்தன்மையை உடையதாய் இருக்கின்றது. இந்தப்புத்திக்குப் போகத்தையநுபவிக்கும் கருத்தாவாயிருக்குந்தன்மை கிடையாது. அந்தக் கருத்தாத் தன்மையோவெனின், நிலைபேறுடையதாய் அறிவிக்கும் ரூபமாயிருந்துகொண்டு தன்னுடைய அறிவால் அறியக்கூடியதாயிருக்கும். (௬௬)

(௬௫) (ஆகவே) அந்த அநுபவமே போகம். அநு கருத்தா உண்டென்பதைச் சாதித்துக் கொடுக்கின்றது. யாதொரு காரணத்தால் போகக்கிரியையின் சித்தியானது அநுபவிக்கிறவனையின்றி நிகழாதோ, அந்தக் காரணத்தால், வேண்டப்படுங் கருத்தா ஒருவனுண்டென்று சாதித்துக் கொடுக்கின்றது என்பதாம்.

(உரை) இவ்விடத்தில் புத்திக்குச் சைதன்யத்தன்மை கூறும் பௌத்தர்களால் போக்தாவாக ஒப்புக்கொள்ளப்பட்ட இந்தப்புத்தி சம்பந்தமான ஞானமானது நிலைபேறில்லாமையாலும், கடம் முதலியனபோல் அசேதனமாயிருப்பதாலும், வேறு காலத்தில் நிகழப்போகுங்கன்மபலனை அநுபவித்தல் கூடாமையாலும், மேலே கூறியவாறே போக்கியமாயிருத்தலாலும், அந்தந்த விஷயங்களிலுள்ள சுக முதலியவற்றின் அநுபவரூபமான போகமே போக்தாவைச் சாதித்துத் தருகின்றது. யாதொரு காரணத்தால் போகக்கிரியையின் சித்தியானது சேஷ்டிக்கிற போக்தாவன்னியில் உண்டாகாதோ, அந்தக் காரணத்தால் போகமும் கிரியையாதலால் அதற்குக் கருத்தாவாக ஆன்மா சித்திக்கின்றது. (௬௫)

(அ—கை) இவ்விடத்து வேறுமதத்தைக் கூறுகின்றார்.

(௬௫இ) காணப்பட்ட வியாப்தியின்றி அநுமானமும் பிரமாணமன்றென்பதாம்.

(உரை) புகையினால் அநுமானஞ் செய்யப்பட்ட அக்கினியானது அநுமானஞ்செய்கிறவனால் முன்னரே பிரத்தியக்ஷமாகச் செய்யப்படுகிறது. அதனால் அநுமானத்திற்கு ஏனைய பிரமாணங்களுடன் ஒற்றுமையைக் காண்கின்றோம். அதுபற்றியே அந்த அநுமானத்திற்குப் பிராமாண்யமுண்டு. சுழற்றப்படும் சக்கரத்தின் சிரசில் புகையிருந்தும் அக்கினி காணப்படவில்லை. ஆகையால் இவ்விடத்தும் அநுபவரூபமான ஞானமாத்திரங் காணப்பட்டு அறிபவனுக்கும் அறிவிற்கும் சொரூபபேத மறியப்படாமையால் போகம் நிகழ்வது கொண்டு போக்தா உண்டென்று

சாதிக்கில் பிறட்சி கேரிடுமேயென்னும் சங்கை நிகழுமாதலின் இந்த அனுமானத்திற்குப் பிராமாண்யங் கிடையாது. ஆகையால் ஞானத்தைத் தவிர போக்தாவான ஆன்மா ஒன்று சித்திக்காதென்று பௌத்தர் கூறுகின்றனர். அவ்வாறே "அறிவுரூபமான இந்த ஒன்றையே சுகந்துக்கம் முதலிய அநேக ரூபமான பரிணமத்தையுடையதாகப் பார்க்கின்றோம். அந்த ஞானத்திற்கு விருப்பப்படி பெயர்களிட்டுக் கொள்ளட்டும்" என்று பௌத்தர் கூறுகின்றனர். (கூருஇ)

(அ—கை) பௌத்தர் கூற்று பொருந்தாதெனக் கூறுகின்றார்.

(சூ-ஈ) யாதொரு பிரத்தியக்ஷத்தோடு ஒற்றுமையிருப்பதுபற்றி அந்த அநுமானத்திற்குப் பிரமாணத்தன்மை யிருக்கின்றதோ, அதுபோல் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கப்பட்டதற்கு எதனுடன் ஒற்றுமை வேண்டுமென்பதாம்.

(உரை) இதன் கருத்தாவது—விஷயங்களின் அறிவு ரூபமான அனுபவம் போகம். அந்தப் போகத்திற்குச் சுழுத்தி முதலியவற்றில் வெளியிலுள்ள விஷயங்களின் சம்பந்தமில்லையாயினும், உள்ளிருக்கும் தேகத்தின் பரிசமாத்திரம் விடயமாகஇருத்தலால் போகரூபமான அந்த அறிவு நிலைபேறுடையதாகவே இருக்கிறது. ஆதலால் தன்னுடைய அந்த அறிவுப் பிரத்தியக்ஷத்தால் சித்தமாயும் அறியும் ரூபத்துடன் கூடினதாயும் ஆன்மா உள்ளதென்பது கூறப்பட்டது. பௌத்தர் க்ஷணிகமான ஞானத்திற்குப் பிறபொருள்களினிடத்தில் கிரியை நிகழுமேயன்றித் தன்னிடத்துக் கிரியை நிகழாதாதலால் நிலைபெற்றிருக்குந் தன்மையை ஞானத்தால் தன்னிடத்தில் கற்பித்தல் பொருத்தமன்று; அன்றியும் நிலைத்திருக்கும் பொருளுக்கு ஒன்றன்பின் ஒன்றாகவும் ஒரேகாலத்திலும் கிரியை நிகழவுமாட்டாது; ஆகையால் எது சத்தோ அது க்ஷணிகம் என்று கூறுகின்றனர். அவருடைய அந்தக் கூற்றும் நன்றன்று. எதனாலெனில், ஒளியையுடைய இரத்தினமுதலியன நிலைத்திருந்து முறையாகக் கடம் முதலிய பொருள்களை விளக்கிக்கொண்டும், ஒரே காலத்தில்

ஒரே வீட்டிலுள்ள பொருள்களை விளக்கிக்கொண்டிருப்பதாக அனுபவத்துடன் காண்கின்றமையாலென்க. இதுவன்றி க்ஷணிகமானது தோன்றும்பொழுதே நசிக்குமாகையால் அதற்கு அனேக க்ஷணத்தில் நிகழக்கூடிய கிரியையின் நிகழ்ச்சி சம்பவிக்காது. இந்த விஷயம் மதங்கவிருத்தியில் ஆசிரியர்களால் விரிவாய்ச் சாதிக்கப்பட்டிருக்கின்றது. (சுசு)

(அ—கை) ஆகவே ஆன்மா தனது ஞானத்தால் சித்தமாயினும் அநுமானத்தாலறியக் கூடுந்தன்மையை ஒப்புக்கொண்டு கூறுகின்றார்.

(சுசுஇ) பிரத்தியக்ஷத்திற்குப் பிராமாண்ய மிருக்கிறபடியால் இவ்விடத்தில் பிரமாணத்துடன் ஒற்றுமைகிடையாது என்பதாம்.

(உரை) இவ்விடத்தில் பிரமாணத்திற்கு வேறு பிரமாணங்களுடன் ஒற்றுமை வேண்டுமென்பது கிடையாது. ஏதனாலெனின், பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்கு வேறு பிரமாணங்களுடன் ஒற்றுமை யில்லையாயினும் அறியப்படாத விஷயங்களின் ஞானத்தை யுண்டுபண்ணும் வழியால் பிராமாண்யமிருத்தலாலென்க. இவ்வாறே "அறியப்படாத பொருளை யறிவிப்பது பிரமாணம்." என்று பிறருங் கூறுகின்றனர். (சுசுஇ)

(அ—கை) சக்கரத்தின் சிரசில் புகை காணப்பட்டும் நெருப்பில்லாமையாகிய பிறட்சி காணப்படுகின்றதே என்பதைப் பற்றிக் கூறுகின்றார்.

(சுஎ) உடன்பாட்டானும் எதிர்மறையானும் பிறட்சி நீங்கி விடுகின்றதென்பதாம்.

(உரை) எந்தப் புகை முதலியவற்றிற்கு எவற்றுடன் விட்டுப் பிரியாத சம்பந்தமானது உடன்பாடு எதிர்மறைகளால் நிச்சயிக்கப்பட்டதோ, அவற்றிற்கு அவற்றினிடத்துப் பிறட்சி காணப்படுகிறதில்லை. எதுபோலுமெனின், நன்றாய் ஆராய்ச்சி செய்யப்பட்ட புகை முதலியவற்றிற்கு அக்கினி முதலியவற்றி

னிடத்தில் பிறட்சீ காணப்படாதது போலுமென்க. சக்கரத்தின் கிரசில் உண்டானதோ வெனின், சொரூப ஆராய்ச்சியின்மையால் புகை யென்னும் மயக்கத்தைத் தோற்றுவிக்கின்றதென்க. ஆகவே எவ்விடத்தும் கிரியையானது கருத்தாவை முன்னிட்டதாகக் காண்டலால் இவ்விடத்தும் போகக்கிரியையினால் போக்தாவை யனுமானஞ் செய்துகொள்ளல் வேண்டும். (கஎ)

(அ—கை) உங்களாலும் தனது தேகத்தில் புத்தி பூர்வமாக உண்டான காரியமுதலியவற்றால் அன்னியருடைய சரீரத்தில் புத்தியுண்டென்பது வேறு பிரமாணங்களுடன் ஒற்றுமையின்றியே அநுமானத்தால் ஊகிக்கப்படுகிறதென்று கூறுகின்றார்.

(கஎஇ) சரீரதர்மத்திற்குப் பிராமாண்யமிருக்கும் பொழுது அதுகொண்டு அன்னியருடைய சரீரத்திலும் புத்தியுண்டென்பது நிச்சயிக்க படுகின்றதென்பதாம்.

(உரை) சேட்டை முதலியவற்றின் ரூபமான சரீரதர்மம் புத்தியை நிச்சயிப்பதற்கு ஏதுவாயிருப்பது கொண்டு பிறருடைய சரீரத்திலும் சேட்டை முதலியவற்றிற்குக் காரணமான புத்தியுண்டென்பது சாதிக்கப்படுகின்றதென்பது பொருள். அவ்வாறே "தனது சரீரத்தில் புத்திபூர்வமான கிரியையைப்பார்த்து அன்னியருடைய சரீரத்திலும் அதே ஞானத்தால் புத்தியானது அறியப்படுகின்றது" என்று பிறருங் கூறுகின்றனர். (கஎஇ)

(அ—கை) ஆகவே, எவ்வாறு ரூபம் முதலியவற்றின் காட்சி வேறு வழியாக யேற்படாதது கொண்டு கண் முதலிய இந்திரியங்கள் சித்திக்கின்றனவோ, அவ்வாறே இவ்விடத்தும் போக்தாவன்னியில் போகம் ஏற்படாதது கொண்டு போக்தா சித்திக்கிறதென்னும் கருத்துடன் கூறுகின்றார்.

(கஅவ) பொதுவாகக் காணப்பட்ட இந்தச் காரணத்தால் அநுமானத்திற்கும் பிராமாண்யம் சித்தித்ததென்பதாம்.

(உரை) சாருவாகன், போக்தா ஒருவனிருக்கட்டும்; ஆனால் அவன் காணப்படும் பிருதிவி முதலிய நான்கு பூதங்களுடைய விகாரங்களின் கூட்ட ரூபமாயிருக்கும் சரீரந்தான்; மதுவைத் தோற்றுவிக்கும் பாளை முதலியவற்றின் விகாரமாகிய மதுவால் மதசத்தி தோன்றுமாறுபோல் அந்தச்சரீரத்தின் பரிணாம விசேடத்தினாலேயே அறிவின் தோற்றம் ஏற்படுகின்றது. பிராணன் முதலிய வாயுக்களின் பலத்தால் போகமுதலிய கிரியைகள் காணப்படுதலாலும் சரீரத்தின் வேறாகப்போக்தா உண்டென்று சொல்லுதல்கூடாது. எதனாலெனின், பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் அந்த போக்தாவை அறியமுடியாதாகையாலென்க. "காணப்பட்டது சம்பவிக்கும்பொழுது காணப்படாததைக் கற்பிப்பது நியாயமில்லை" யென்று பிறருங்கூறுகின்றனர். (கஅ-வ)

(அ—கை) அந்தச்சாருவாக மதமும் ஒதுக்கப்பட்டதென்று கூறுகின்றார்.

(கசுஇ) இதே காரணத்தினாலேயே புத்தி போதத்தை யனுபவிக்கின்றவன் சேதனனென்பது பிரமாணத்தால் நிச்சயம் செய்யப்பட்டது. பிருதிவி முதலியவற்றின் கூட்டம் போக்தாவாயிருக்கட்டுமென்று சொல்லுவது பொருந்தாதென்பதாம்.

(உரை) இதன் கருத்தாவது, யாதொரு காரணத்தால் சரீரத்தினுள்ளே சூலமுதலிய நோய்களின் ரூபமான பரிசத்தாலும் வெளியில் மிருதுவாயும் கடினமாயுமுள்ள பரிசத்தாலும் சரீரத்தில் போக்கியத்தன்மை காணப்படுகின்றபடியால் கடமுதலியனபோல் சரீரத்திற்குச் சேதனத்தன்மை பொருந்தாதோ, அந்தக் காரணத்தால் இந்தச்சரீரத்தை அனுபவிக்கின்றமையால் ஆன்மா சித்தித்ததென்பது கொண்டு இந்தச்சரீரத்திற்கு ஒரு பிரமாணத்தாலும் சேதனத்தன்மை சொல்லமுடியாதென்க. (கசுஇ)

(எo) சரீரத்திற்குச் சைதன்யத்தன்மை எந்தக்காரணத்தால் உன்னால் நிச்சயிக்கப்பட்டதென்பதாம். (எo)

(அ—கை) சுக்கிலம், இரத்தமென்னும் இவற்றின் ரூபமான சரீரத்தையுண்டு பண்ணும் பூதங்களிருக்கும் பொழுது தான் சைதன்யம் தோன்றுகின்றது. அவை இல்லாத பொழுது தோன்றுகிறதில்லை. ஆதலின் சைதன்யம் சரீரரூபமாகவே இருக்கின்றதென்று சொல்லுவாரை நோக்கிக் கூறுகின்றார்.

(எ0-வ) பூதங்களிருந்தும் பிறட்சி காணப்படுகின்றதென்பதாம்.

(உரை) பிணசரீரத்திலும் கருப்பமுதலியவற்றிலும் தேகரூபமான பூதங்களிருப்பினும் சைதன்யந் தோன்றாமையால் தேகரூபமாயிருப்பது சைதன்யமென்று கூறுதல் பொருந்தாது. (எ0வ)

(அ—கை) ஆகையால் சரீரத்தை ஆன்மாவாகக் கூறும் கூற்றுப்பிரமாணத்திற்குப் பொருந்தாதெனக் கூறுகின்றார்.

(எ0இ) ஆகையால் சரீரத்தை யான்மாவாகக்கூறும் கூற்று காகத்தின் கரைதலுக்கு ஒக்குமென்பதாம். (எ0இ)

(அ—கை.) போக்கியமாதலின் இந்தச் சரீரத்திற்கு அசேதனத்தன்மை உண்டென்று கூறுகின்றார்.

(எகஇ) சர்க்கரை முதலியன சீவனுடைய சாயையினால் போக்கியமாயிருத்தல்பற்றி அவற்றில் சைதன்யத்தன்மை தோன்றுதவாறுபோல் சரீரரூபமான பூதக்கூட்டமும் சீவனுடைய சாயையினால் போக்கியமாயிருப்பதுபற்றிச் சருக்கரை முதலியவற்றுடன் ஒக்குமென்பதாம்.

(உரை) சாயை என்பது அநுபவரூபமான ஞானம். சருக்கரை முதலியன சீவனான ஆன்மாவினுடைய அநுபவ ரூபமான ஞானத்தினால் போக்கியமாக அறியப்படுந்தன்மையுடன் விடயமாயிருத்தலால் எக்காலத்தும் அவை சேதனத்தன்மையுடையனவாய்க் காணப்படாதவாறுபோல் சரீரரூபமான பூதக்கூட்டமும் முன்னர்க்கூறியவாறு அறியப்படுந்தன்மையுடன் போக்கிய ரூபமாக விஷயமாயிருத்தலால் அசேதனமென்பதுபற்றி அந்தச்சரீ

ரத்திற்குப் போக்திருத்தன்மைப் பொருந்துகிறதில்லை. அன்றியும் சரீரத்வதைச் சேதனனுகக்கூறின் அந்தச் சரீரம் அடிக்கடி பரிணமத்தையடைந்து நாசத்தையடைவதால் பாலியநிலையில் அனுபவிக்கப்பட்டதை விருத்தநிலையில் நினைத்துப்பார்த்தால் ஞாபகத்திற்குவாராமலிருக்கவேண்டும். இவ்வாறு விரிவாக இந்தப்பட்சம் பிருகேந்திரவிருத்தி தீபிகையில் எம்மால் விலக்கப்பட்டிருக்கின்றது. (எகஇ)

(அ—கை.) சரீரத்தினும் வேறுன இந்திரியங்களே போக்தாவாயிருக்கட்டும். அவற்றின் வேறுன பொருள்களுக்குப் போக்திருத்தன்மையில்லையென்றும் இந்திரியங்களுக்குச் சைதன்யத்தன்மை உண்டென்றும் கூறுவோர் கூற்றுப் பொருந்ாதெனக் கூறுகின்றார்.

(எஉஇ) போக்கியத் தன்மை காணத் தன்மையென்னும் இவற்றுல் இந்திரியங்களுக்குச் சைதன்யமின்மை சித்தித்தது. ஆகையால் ஞானசுபாவனுன புருடன்றுன் போக்தாவாவனென்பதாம்.

(உரை.) முன்னர்க்கூறியவாறு இந்திரியங்களும் போகத்திற்காக ஏற்பட்டமைபற்றிப் போக்கியமாயிருத்தலானும், ஆயுதம் முதலியனபோல் காணத்தன்மையுடன் கூடியிருத்தலானும், இதற்குச் சேதனமின்மை மறுக்கமுடியாததாகும். ஆகையால் இந்திரியங்களுக்குக் கருத்தாவாயிருக்குந்தன்மை கிடையாது. ஞானசுபாவனுன ஆன்மாவிற்கே கருத்தாவாயிருக்குந் தன்மையுண்டு. ஏனையகாரகங்களின் பிரவிருத்தியிலும் நிவிருத்தியிலும் ஆன்மாவேயேதுவாக இருக்கின்றமையால் அவனுக்கே கருத்தாவாயிருக்குந்தன்மை பொருந்துகின்றது. இவ்வாறே "காரகங்களைத் தொழிற்படும்படி செய்வதிலும் தொழிற்படாதிருக்கச்செய்வதிலும் எவன் சமர்த்தனுயிருக்கின்றுனே அவனே கருத்திருகாரகன். அவன் பிரவிருத்தியில்லாதவனுகவாவது பிரவிருத்தியுடையவனுகவாவது இருக்கலாம்" என்று பிறருங்கூறுகின்றனர். (எஉஇ)

(௭௩) போக்கியத்தினுடைய சாயையினால் சம்பந்தஞ்செய்யப்பட்ட அறிவின் தோற்றமே போக்தாவிற்கு போகமாகும் என்பதாம்.

(உரை) போக்யமென்பது சுகம்முதலியவற்றின் ரூபமான புத்தியாகும். சாயையென்பது இவ்விடத்தில் புத்தியின் சொரூபம். இந்த புத்தி சொரூபத்துடன் சம்பந்தித்த அறிவின்தோற்றமே போக்தாவிற்குப் போகமாகும். இவ்வாறே சுவாயம்புவத்தினும் "இந்தப்புமானுடைய சுகதுக்கங்களைக் குறிக்கக்கூடிய ஞானமே போகம்" என்று கூறப்பட்டிருக்கின்றது. (௭௩)

(௭௩இ) (அவ்வாறாகவும்) அசேதனமான போக்கியமானது அந்த ஆன்மாவின் சைதன்ய சம்பந்தத்தால் சேதனம் போல் பிரகாசிக்கின்றதென்பதாம்.

(உரை) புத்தி முதலிய போக்கியமானது அசேதனமாயினும் அந்த ஆன்மாவின் சைதன்ய சம்பந்தத்தால் சேதனம் போல் பிரகாசிக்கின்றது. அவ்வாறே சாங்கியர்களும் "அசேதனம் சேதனம்போலிருக்கின்றது" என்றுகூறுகின்றனர். (௭௩இ)

(௭௪இ) (இவ்வாறாகவும்) பசுக்களுக்கும் பாசங்களுக்கும் ஒன்றுக்கொன்று சேதன மசேதனமென்னும் இவற்றின் சாயா சம்பந்தமானது போக்கியம் வாயிலாக மிகவும் பிரகாசிக்கின்றது என்பதாம்.

(உரை) சித்தத்தாலதிட்டிக்கப்பட்ட ஞானேந்திரியங்களின் சமூகமானது போக்கிய வஸ்துக்களை ஆன்மாவிற்கு விஷயமாகும்படி சேர்க்கின்றது. புத்தியினால் நிச்சயிக்கப்பட்ட அந்தப் போக்கியப்பொருளை ஆன்மா அறிகின்றான். இவ்வாறே "புத்தியினால் நிச்சயிக்கப்பட்ட பொருள்களைப் புருடன் கிரகிக்கின்றான்" என்று பிறருங்கூறுகின்றனர். ஆகவே பிரகாசரூபமாயிருத்தலால் கண்ணாடிபோலிருக்கும் புத்திபோதரூபமான போகம் வாயிலாக போக்தாவான ஆன்மாக்களுடையனவும், விஷயரூபமாகப் பரிணமத்தையடைந்த போக்கியங்களான பாசங்களுடையனவும் ஆகிய

பிரதிபிம்பிக்கப்பட்ட சேதனுசேதன ரூபமான சாயைகளின் சொரூபத்தினுடைய சம்பந்தமாத்திரம் எப்பொழுதும் ஒரே ரூபமாகப் பிரகாசிக்கின்றது. அதுகொண்டே ஆன்மாவல்லாத பொருள்களில் ஆன்மாவென்னும் மயக்கமானது சம்சாரிகளுக்குண்டாகின்றது. ஆன்மாவைப்பற்றிய விவேகஞானம் உண்டாகும்பொழுது சம்சாரிகளுக்குப் பிரகிருதிலயமென்று கூறப்பட்டிருக்கின்றது. அதுவே சாங்கியர்களுக்கு முத்தியாகும். (எசஇ)

(எரு) (ஆகவே) பிரபுவினுடைய போக்கியத்தை விடயமாக உடைய போகமானது நீரில் சந்திரனுடைய சாயை எவ்வாறோ அவ்வாறிருக்கின்றதென்பதாம்.

(உரை) பிரபு என்பது இவ்விடத்திலான்மாவைக் குறித்தது. போக்கியத்தை விஷயமாக உடைய போகமானது வியாபகனுன ஆன்மாவினுடையதாகும். அந்த ஆன்மா போகத்தின் நிச்சயரூபமான புத்தி போகத்தில் நீரில் சந்திரனுடைய சாயை போலிருக்கின்றது. சந்திரபிம்பம் சடமாயுந் தூலமாயுமிருப்பதால் சைதன்யத்தின் தோற்றத்திற்குத் திருட்டாந்தமாகாது. சொரூபத் தோற்றத்திற்கு மாத்திரம் திருட்டாந்தமாகக் கொள்ளல் வேண்டும். ஆகவே சேதனனுக்குப் போக்திருத்தன்மையிருப்பதுகொண்டு புருடனுக்குத்தான் கருத்திருத்தன்மை சொல்லல் வேண்டும். அசேதனங்களாயும் போக்கியங்களாகவுமிருக்கும் புத்தி முதலியவற்றிற்குக் கருத்திருத்தன்மை கூறுதல் பொருந்தாது. (எரு)

(அ—கை) கருத்திருத்தன்மையாவது கிரியையை நிகழ்த்துதல். அது புருடனுக்கிருப்பின் அவனுக்குப் பரிணுமத்தன்மை வந்துவிடும். புருடன் விகாரமற்றவனல்லவா. ஆகையால் இந்தப் புருடனுக்குக் கருத்திருத்தன்மை யுண்டென்பது பொருந்தாது. ஆனுல் பிரகிருதிக்குக் கருத்திருத்தன்மை கூறவேண்டும். அந்தப்பிரகிருதியானது விவேகஞானம்வருமுன்னர் மகத்து முதலியவற்றின் ரூபமாகப் போக்கியமாயிருந்து கொண்டு புருடனுக்குப் போக்கியரூபமாய்த் தன்னைக்காட்டுகின்றது. ஆதலால் இந்தப்பிரகிருதி சம்சாரமென்று கூறப்படுகின்றது. பிர

கிருதி புருடவிவேகம் உண்டான பொழுது புருடனிடத்தினின்றும் பிரகிருதி நீங்குதலே முத்தியென்று சொல்லத்தகுந்தது. இவ்வாறு சாங்கியர் கூறுகின்றனர். இதற்கு "நாட்டியத்தலத்திலிருப்பவர்க்கு நடனஞ்செய்பவள் தன்னுடைய நடனத்தைக் காட்டியபின்னர் அந்தத்தலத்தினின்றும் நீங்குவதுபோல, பிரகிருதியானது தனது சொரூபத்தைப் புருடனுக்குக் காட்டிய பின்னர் அவனிடத்தினின்றும் நீங்குகின்றது" என்று திருட்டாந்தமும் அவர் காட்டுகின்றனர். இதைப்பற்றிக் கூறுகின்றார்.

(எசு) புத்திமுதலியவற்றை அறியும் ரூபமான போகத்தில் புருடனுக்குப் பரிணாமத்தன்மை வந்துவிடுமென்னுமச்சத்தால் போகத்தை கொள்ளாத விஷயத்தில் பெத்தான்மா முத்தான்மாவாகிய இருவருக்கும் விசேஷமில்லாமற் போய்விடுமென்பதாம்.

(உரை) இதன் கருத்தாவது, கருத்திருத்தன்மையாவது தொழிற்பாடுடைமையன்று; தொழிற் செய்யுஞ் சக்தியுடைமையேயாம். காந்தத்தின் சன்னிதியில் இரும்பு தொழிற்படுமாறுபோல் ஆன்மாவின் சன்னிதியில் சரீரமுதலியவற்றிற்கே அலைத்தல் முதலியரூபமான தொழிற்பாடு காணப்படுகின்றது. ஆகையால் புத்திமுதலியவற்றை அறியும் ரூபமான போகவிடயத்தில் புருடனுக்குப் பரிணாமத்தன்மை கிடையாது. புத்திமுதலியவற்றிற்கு வேறாயிருந்து அவற்றை யறியுந்தன்மை புருடனுக்கிருக்கின்றது. நின்பக்கத்திலோவெனின், புருடன் நின்மலனாகையாலும், புத்திமுதலியவற்றிற்கு வேறாயிருப்பதென்பதை ஒப்புக்கொள்ளாமையாலும், போக்தாவிற்கும் முத்தனுக்கும் விசேடமில்லாமற் போய்விடும். எதனாலெனின் இருவருக்கும் மலமின்மை சமமாகையாலென்க. (எசு)

(அ—கை) பிறிதொரு காரியத்திற்காகப் பிரவிருத்தித்த பிரகிருதியே புருடனுடைய மோக்ஷத்தின் பொருட்டுப் பிரவிருத்திக்கின்றதென்று கூறவேண்டும். "கன்றின் விருத்தியின் பொருட்டு அசேதனமான பாலுக்கு எவ்வாறு பிரவிருத்தி காணப்படுகின்றதோ அவ்வாறே புருடனுடைய மோட்சத்தின் பொருட்டுப் பிரகிருதிக்குப் பிரவிருத்தி காணப்படுகின்றது" என்பாரை நோக்கிக் கூறுகின்றார்.

(எகூஇ) புருடனுடைய மோட்சத்தின் பொருட்டுப் பாசங்களின் பிரவிருத்தி தடுக்கப்பட்டதென்பதாம்.

(உரை) பிரகிருதி சடமாயிருத்தலால் அதற்குப் புருடனைக் குறித்துப் பிரவிருத்தி யுண்டென்பது பொருந்தாது. பாலுக்கும் சேதனனுன பசுவாலதிட்டிக்கப்பட்டே பிரவிருத்தி காணப்படுகின்றது. பாசங்கள் சடம்; சேதனனுல் அதிட்டிக்கப்பட்டுப் பிரவிருத்திக்கின்றமையால் என்னும் இந்த அனுமானத்தில் வாயு நீர் என்னும் இவையும் பக்கமாகின்றமையால் இவை சேதனனை யதிட்டித்தே தொழிற்படுகின்றன. அன்றியும் பிரகிருதிக்குப் பிரவிருத்தியை ஒப்புக்கொள்ளும் விடயத்தில் மலமில்லாதவனுன ஆன்மாவைக் குறித்து பிரகிருதியின் றொழிற்பாடு பொருந்தாது. பொருந்துமெனின், முத்தனிடத்தும் பிரகிருதிக்குப் பிரவிருத்தி உண்டாகும். (எசு இ)

(அ—கை) ஆகவே பெத்தான்மா ஆசையுடன் கூடியிருக்கும்பொழுது போகத்திற்காக முயற்சித்தலால், அந்த ஆன்மாவினிடத்தில் விகாரத்தை ஒப்புக்கொள்ளாத விஷயத்தில் போகமும் பொருந்ாதெனக் கூறுகின்றார்.

(எஎ) போக்தாவினிடத்தில் விகாரத்தன்மையை ஒப்புக்கொள்ளாத விஷயத்தில் முத்தனிடத்துப்போல் அவனிடத்திற் போகம் பொருந்துகிறதில்லை யென்பதாம்.

(உரை) பிரகிருதியைத் தொழிற்படுத்துவதற்கு அவிவேகமேகாரணம். பிரகிருதி புருடவிவேகஞானம் உண்டாயின் பிரகிருதியானது புருடனிடத்தில் தன்னதிகாரத்தினின்று நீங்கினமையால் பிரவிருத்திக்கிறதில்லை. ஆகையால் பெத்தன் முத்தனிருவருக்கும் விசேடமில்லை யென்பது கூடாது. இவ்வாறே "பிரகிருதியைவிட நல்ல பொருளானது வேறொன்றுமில்லையென்பது எனது அபிப்பிராயம். எந்தப் பிரகிருதியானது பார்க்கப்பட்டு அதன் பின்னர் மீண்டும் புருடனுடைய பார்வையை அடைகிறதில்லையோ" என்று கூறுகின்றனர். அது பொருந்தாது. எவ்வாறெனின், நின்பக்கத்தில் புருடன் நின்மலனுகையால் அவி

வேகம் உண்டென்பது பொருந்ாது. மலமாகிய காரணமின்றி அவிவேகமிருப்பின் எப்பொழுதும் விவேகமுண்டென்பது சித்திக்காது. ஆகையால் வேறு வழியால் அவிவேக முண்டென்பது பொருந்தாதது கொண்டு புருடனுக்கு மலத்தன்மை அராகத்தன்மைகளை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று கூறப்போகின்றோம். (எஎ)

(அ—கை) இவ்வாறயின் மலத்தன்மையுடன் கூடியிருத்தலால் ஆன்மாவிற்கு அஞ்ஞான சுபாவத்தையும், சரீரத்துடன் கூடியறியுந்தன்மை யிருத்தலால் விகாரத்தையும் ஒப்புக்கொள்ளும் விஷயத்தில், பிறிதொன்றன் சுபாவத்தின் சேர்க்கையால் ஆன்மாவிற்கு அநித்தியத்தன்மை வந்துவிடுமென்னும் புறமதத்தின் ஆசங்கையைக் கூறுகின்றார்.

(எஅ) விகாரத்தன்மை யிருத்தலால் அநித்தியனென்று கூறின் என்பதாம்.

(உரை) போக்தாவானவன் என்பது சேர்த்துக்கொள்ளல் வேண்டும். (எஅ)

(அ—கை) அந்த ஆசங்கையை நீக்குகின்றார்.

(எகூ) மாயையினால் சாதிக்கத்தகுந்த விசேடத்தை நீரறியவில்லை யென்பதாம்.

(உரை) மாயாகாரியங்களால் உள்ளிருக்குஞ் சரீரம் வெளியிலிருக்குஞ் சரீரங்களின் வழியாகச் செய்யப்படும் விசேடத்தை நீ ரறியவில்லை. ஆகையால் அநித்தியத்தன்மை முதலிய தோஷங்கள் கிடையாவென்க. (எகூ)

(அ—கை) அநித்தியத்தன்மை முதலிய தோஷங்கள் இல்லை யென்பது எவ்வாறென்று கூறுகின்றார்.

(அ0) சொரூபத்தோற்றத்தை யடைதலால் விகாரத்தன்மை அநித்தியத்தன்மை கிடையாவென்பதாம்.

(உரை) நையாயிகர் முதலாயினோரைப் போல் ஆன்மாவைச் சடப்பொருளாக நாங்கள் கொள்ளவில்லை. ஆனால் அறியுஞ் சுபாவத்தை யுடையவனாகவே கொள்கின்றோம். அவனுடைய அந்தச் சுபாவமானது சரீர முதலியவற்றின் சேர்க்கையின்றித் தோன்றாமையின், அஞ்ஞானமான யாதோ ஒன்றால் கட்டுப்பட்டவனென்று நம்மால் அந்த ஆன்மா நிச்சயிக்கப்படுகின்றான். யாதோ ஒன்றென்ற அது மலமென்றே கூறப்போகின்றோம். ஆகவே மாயாகாரியங்களான கலை முதலியவற்றால் மலத்தினுடைய ஏகதேச மறைப்பு நீக்கத்தில் ஏகதேசமாக சொரூபத்தோற்றம் ஆன்மாவிற்குண்டாகின்றது. மலபரிபாகம் வந்த பின்னரோவெனின், தீக்கை யென்னும் பெயருடைய சிவசத்தியினால் எல்லா விடயங்களின் தோற்றமும் உண்டாகின்றது. ஆகையால் இவனுக்கு விகாரத்தன்மையும் அநித்தியத்தன்மையுங் கிடையாவென்க. (எஅ)

(எஅஇ) (இவனுக்கு) போக்கியப் பொருள்களின் சேர்க்கையினால் உண்டான அராகமும் இவன் சுத்தனாயிருக்கிறபடியால் இவனிடத்தில் தோன்றுகின்றது. பரிணாமமென்னுங் காரணத்தாலன்று என்பதாம்.

(உரை) ஆகையால், போக்கியப் பொருள்களின் சம்பந்தத்தாலுண்டான அராகமென்னும் சுகதுக்க மோகரூபமாகிய பிரகாசமும், இவன் படிகம்போலப் பிரகாசரூபமா யிருத்தலால் இவனிடத்தில் தோன்றுகின்றது. முன் கூறப்பட்ட பரிணாமமென்னுங் காரணத்தாலன்று. அந்தப் பொருள்களினுடைய சம்பந்தமும் இவன் அந்தப் பொருள்களுக்கு வேறாயிருந்து அவை இவனுக்கு விஷயமாதலே யென்று முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. (எஅஇ)

(அ—கை) ஆகவே போக்கியமான சரீரத்திற்கு அடிக்கடி பரிணாமமேற்படினும் போக்தாவான ஆன்மாவிற்குப் பரிணாமத் தன்மை கிடையாதென்று கூறுகின்றார்.

(எகூஇ) சரீரம் பரிணாமத்தன்மை யடைவதால் ஆன்மா பரிணாமி என்று கூறலாகாது. கூறின் புத்திமுதலியவைபோல்

பரிணாமத்தன்மையை யடைவதுபற்றி ஆன்மாவிற்கு அசேதனத் தன்மையும் போக்கியத்தன்மையும் வந்துவிடுமென்பதாம்.

(உரை) ஆன்மாவிற்கும் பரிணாமத்தன்மையை ஒப்புக் கொள்ளும் விஷயத்தில் புத்தி முதலியனபோல் போக்கியத்தன் மையும் அசேதனத்தன்மையும் நேரிடுமென்பதுபொருள். (எகூஇ)

(அ—கை) இவ்விடயத்தில் பிறருடைய மதத்தைக் கூறி மறுக்கின்றார்.

(அ௦இ) குணமான ஞானம் சமவாய சம்பந்தத்துடன் கூடி உண்டாகின்றது. அந்த ஞானமே புருடனுக்குச் சைதன்னிய மாகும். வேறன்றென்பது பொருந்தாதென்பதாம்.

(உரை) ஆன்மா சடசுபாவமுடையவன். அவனுக்கு மனத் தின் கூட்டத்தால் குணமாக ஞானம் சமவாய சம்பந்தத்துடன் தோன்றுகின்றது. தோன்றிய அந்த ஞானமே அவனுக்குச் சைதன்யம். இயல்பாக அறியுந்தன்மை கிடையாது. இவ்வாறு நையாயிகர் கூறுகின்றனர். அது பொருந்தாது. ஆன்மாவிற்குச் சடத்தன்மையுண்டென்று கூறின் கடம் முதலிய சடப்பொரு ளில் ஞானத்திற்குச் சமவாய சம்பந்தம் பொருந்தாதவாறுபோல் ஆன்மாவிற்கு ஞானத்துடன் சமவாய சம்பந்தம் பொருந்தாது. (அ௦இ)

(அ—கை) ஞானத்துடன் சமவாய சம்பந்தத்தைக் கன் மமே நியமனஞ் செய்வதாயிருக்கின்றது; கன்மத்துடன் பற்றுக் கோடுடைய புருடனிடத்திலேயே சமவாய சம்பந்தத்துடன் ஞானம் உண்டாகின்றமையாலும், கன்மத்தைப் பற்றுக்கோடாக உடைத்தாகாத கடம் முதலியவற்றில் உண்டாகாமையாலுமென் பார்க்குக் கூறுகின்றார்.

(அகஇ) அறியாமையை யுடையவனான மனிதனிடத்தி லேயே ஞானமுண்டாகின்றது; ஏனைய கடம் முதலியவற்றில் ஞானமுண்டாகிறதில்லை யென்னுமிந்த விடயத்தில் கன்மம் நிய மனம் செய்வதென்பது பொருந்தாது. அந்தக் கன்மம் வேறிடத் திலிருக்கின்றமையாலென்பதாம்.

(உரை) உழுதல் முதலியன பூமியினிடத்திலிருக்குமாறு போல, கன்மமும் பிரகிருதியினிடத்திலிருக்கும். ஆன்மாவினிடத்திலிருப்பதாக ஆகாது. ஆகுமெனில் ஆன்மாவிற்கு விகாரத்தன்மை வந்துவிடுமென்று முன்னரே கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே கன்மமும் இவ்விடத்தில் நியமனஞ் செய்வதாக ஆகாது. (அகஇ)

(அ—கை) ஆகவே சைதன்யத்தின் சமவாயத்தால் ஆன்மா ஞானசுபாவனுகவே சித்தித்தானென்று கூறுகின்றார்.

(அஉஇ) மோகத்தன்மையினின்றும் மோகமானது எவ்வாறு வேறில்லையோ அவ்வாறே சைதன்யத்தினின்றும் ஆன்மா வேறில்லை யென்பதாம்.

(உரை) சைதன்யரூபமான ஞானமானது ஆன்மாவின் தருமமானபடியால் தருமத்திற்கு நாசமுண்டானபொழுது தருமத்தினின்றும் வேறுபடாமையினுல் தருமிக்கும் நாசமுண்டாகுமென்பது கொண்டு எப்பொழுதும் ஞான சுபாவனுகவே ஆன்மாவை ஒப்புக்கொள்ளல் வேண்டும். அந்த ஆன்மா மலத்தால் மறைக்கப்பட்டிருத்தலால் மனம் புத்தி முதலியன ஆன்மாவினறிவை ஏகதேசத்தில் விளக்குகின்றவையாகச் சித்தித்தனவென்பது கூறப்பட்டது. (அஉஇ)

(அ—கை) இந்த ஆன்மாவிற்குப் போகக் கிரியையில் உபகாரஞ் செய்வதற்குத் துணையாகச்சித்தித்த கிரியையிற் செலுத்துதல், காரணம், ஆசையையுண்டுபண்ணுதல் என்னும் இவை ரூபமான கலை வித்தை அராகமென்னும் மூன்று சட்டைகளும் பிரகிருதியைச் சாதித்த பின்னர்க் கூறப்படப்போகின்றனவென்று கூறுகின்றார்.

(அா இ) போகக்கிரியையில் கருத்தாவான இவனுக்குத் துணையாயுள்ள கிரியையிற் செலுத்துதல், காரணம், போக்கியப் பொருளில் ஆசையை யுண்டுபண்ணுதலாகிய மூன்றும் பிரகிருதியைச் சாதித்த பின்னர்க் கூறப்படப் போகின்றனவென்பதாம். (அா இ)

(அ—கை) இவ்வாறு சம்பந்தம் பற்றிப் போக்தாவைச் சாதித்துவிட்டு எடுத்துக்கொண்ட புத்தியினின்றே அகங்கார முண்டாகின்றதென்று கூறுகின்றார்.

(அசஇ) யாதொரு காரணத்தால் புத்தியினுடைய கூர்மை முதலிய வியாபாரங்களில் காரியத்தை யுண்டுபண்ணுங் குணங்கள் காணப்படுகின்றனவோ, அந்தக் காரணத்தால் புத்தியினுடைய மற்றொரு பாகமானது குணத்துடன் கூடி அகங்காரத்தை யுண்டுபண்ணிற்றென்பதாம்.

(உரை) அந்தப் புத்தியினுடைய கூர்மை முதலிய வியாபாரங்களில் முன்னர்க் கூறியவாறே ஒன்றோடொன்றெதிர்த்துப் பற்றியிருத்தலாலும், சமமாகப்பற்றி யிருத்தலாலும், காரியத்தை யுண்டுபண்ணுங் குணங்கள் காணப்படுகின்றன. இவ்வாறே சாங்கியரும் "குணங்கள் ஒன்றோடொன்றெதிர்த்துப் பற்றியிருத்தலாலும், சமமாகப் பற்றியிருத்தலாலும் பிரவிருத்திகளையுடையன" என்று கூறுகின்றனர். ஆதலால் நிச்சயிப்பதற்கு ஏதுவான புத்தியினுடைய மற்றொரு பாகம் குணத்துடன் சேர்ந்து அகங்காரத்தை யுண்டுபண்ணிற்று. "ஒன்று தனிமையாயிருந்து ஒன்றை யுண்டுபண்ணாது" என்னும் நியாயத்தால் குணங்கள் ஒன்றோடொன்று சேர்ந்தே காரியங்களை யுண்டுபண்ணுகின்றனவாக ஆகின்றன. அவ்வாறே எல்லாப் பொருள்களினிடத்தும் குணங்கள் சேர்ந்திருக்கின்றன. இது சத்துவ சம்பந்தம் என்னும் வியவகாரங்கள் சத்துவ குணம் அதிகமாயிருப்பது பற்றியேயாம்.

(அசஇ)

(அ—கை) புத்தியானது நேரே குணத்தின் காரியமாயிருத்தலினாலேயே அந்தப்புத்தியினிடத்தில் குணத்தின் சேர்க்கை காணப்படுகின்றது. கடமுதலியவற்றில் மண்ணின் சொரூபம் சம்பந்திப்பதுபோலுமென்று கூறுகின்றார்.

(அருஇ) புத்தியானது குணதத்துவத்தின் முதலாவது விகாரமாகும். ஆகையால் அதனிடத்தில் உண்டாதல், ஒன்றோடொன்றெதிர்த்தலாகிய இவற்றுடன் நியமமாகக் குணங்களிருத்தல் பொருந்துகின்றதென்பதாம்.

(உரை) புத்தியினிடத்தில் குணங்கள் நியமமாக ஒன்றோ டொன்றெதிர்த்துக்கொண்டு தோன்றிச் சித்திமுதலியவற்றை யுண்டுபண்ணுகின்றனவென்று முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. (அ௫இ)

(அ—கை) இவ்வாறயின் அகங்காரத்திற்கும் குணத்தின் சேர்க்கையிருத்தலால் குணங்களினின்றே அகங்காரந்தோன்றின தாகக்கொள்ள வந்துவிடுமென்பார்க்குக் கூறுகின்றார்.

(அ௬இ) அகங்காரத்திலும் இந்த நியாயத்தைக்கொள்ளக் கூடாது. ஒன்றில் நின்று ஒன்று தோன்றுதலால் தன்மாத்திரை களிடத்தும் குணத்தின் சேர்க்கை சம்பந்திக்கின்றதென்பதாம்.

(உரை) அகங்காரமுதல் பூதமீறாக உள்ள அனைத்தும் ஒன் றில்நின்று ஒன்றுதோன்றுதலால் பாரம்பரையாக குணத்தின் காரி யமாயிருக்கின்றன. அகங்காரமாத்திரம் அன்று. தன்மாத்திரைக ளிடத்தும் என்ற உம்மையால் இந்திரியங்கள் பூதங்களென்னு மிவற்றினிடத்தும் குணத்தின்சேர்க்கை சம்பந்திக்கின்றது. கடங் கபாலங்களில் மண்ணின் சொரூபம் சம்பந்திப்பதுபோலும். ஆகவே இவற்றிற்குக் குணத்தின் சேர்க்கை இருப்பதுகொண்டு குணங்களினின்றும் பாரம்பரையாக உற்பத்தியிருப்பினும் நேரே உற்பத்தியில்லாமையால் மேலேகூறிய நியாயம் அகங்காரத்திற்கு வந்துவிடுமென்னுங்குற்றமில்லை. (அ௬இ)

(அ—கை) இனி அந்தக்குணங்கள் இவை யென்பதும் எந்தவியாபாரங்களால் அவை சித்திக்கின்றன வென்பதும் கூறு கின்றார்.

(அ௭இ) புருடனுக்குப் போக்கியப் பொருளை எவை தோற்றுவித்தனவோ, புத்திக்குக் காரணங்களான அத்தகைய சத்துவம் ரஜஸ் தமசுஎன்னும் குணங்கள், பிரகாசம் வியாபாரம் நியமமென்னும் வியாபாரங்களால் சித்திக்கின்றன வென்பதாம்.

(உரை) மேலே கூறியவாறு புத்திமுதலியவற்றின் வாயிலா கப் புருடனுக்குப் பாவங்களும் பிரத்தியயங்களுமான போக்கியப்

பொருளைச் சிருட்டியின் ஆரம்பத்தில் எவை தோற்றுவித்தன வோ, இப்பொழுதும் தோற்றுவிக்கின்றனவோ, அவை குணங் களாகும். அவை புத்திக்குக் காரணங்களாகும். அந்தக்குணங் கள் ஒன்றினின்றும் மற்றொன்று பிரிக்கப்படாமையின் ஒரே தத்துவமாகும். அவ்வாறே "ஒன்றினின்று மற்றொன்று பிரிக் கப்படாமையின் குணங்கள் மூன்றாயினும் தத்துவம் ஒன்றே" என்று கேட்கப்படுகின்றது. ஆகவே புத்திக்குக் காரணமாயிருக் குந்தன்மையால் பிரகாசம் தொழில் நியமமென்னும் வியாபாரங் களால் சத்துவ முதலிய குணங்கள் சித்திக்கின்றன. பிரகாச முதலிய இவை முக்கியமாயிருப்பதுபற்றிக் காட்டப்பட்டன. சலியாதிருக்குந்தன்மை, ஊக்கம், குரூரத்தன்மை, குரூரத்தன்மை இரமித்தலின்மை, மந்தமாயிருக்குந்தன்மை யென்னும் இவையும் குணத்தின் காரியங்களாக ஆகமங்களில் படிக்கப்பட்டிருக்கின்றன. (௭௰இ)

(அ—கை) குணங்களே பிரகிருதியென்னும் பெயருடன் நித்தியமாயிருக்கின்றனவென்று சாங்கியர் கூறுவது பொருந்தா தெனக்கூறுகின்றார்.

(அஅஇ) சடத்தன்மையும் அநேகத்தன்மையும் குணங் களுக்கிருத்தலால் அந்தக்குணங்களுக்குக் கடம் முதலியன போல் காரணத்தை முன்னிட்டிருக்குந்தன்மை சித்தித்திருப் பதை யறிந்துகொள்கவென்பதாம்.

(உரை) யாதொரு காரணத்தால் இந்தக் குணங்களுக்கு அநேகத்தன்மை இருக்கின்றதோ, அந்தக்காரணத்தால் அநேகத் தன்மையும் சடத்தன்மையு மிருப்பதுகொண்டு கடமுதலியன போல் காரியத்தன்மை சித்திக்கின்றது. (அஅஇ)

(அ—கை) இந்தக்குணங்களுக்கு முதற்காரணமிதுவென்று கூறுகின்றார்.

(அகூஇ) எதனிடத்தில் குணங்கள் சூக்கும ரூபமாகவும் பிரிவுபடாததாகவுமிருந்து கொண்டு தோன்றுகின்றனவோ, அத் தகையதாயும் சிவஞானலேவப்பட்டதாயுமுள்ள பிரகிருதியே குணங் களுக்கு முதற்காரணமாகுமென்பதாம்.

(உரை) எதனிடத்தில் சூக்குமரூபமாகவும் பிரிவுபடாத தாகவு மிருந்துகொண்டு குணங்கள் சிவனுடைய ஏவுதலால் தத் தம் வியாபாரத்தின் பிரிவுகளுடன் தூலங்களாகத் தோன்றுகின் றனவோ, அதுவே பிரகிருதியாகும். சிவனுலேவப்பட்டது என்ற தனுல் இந்தப் பிரகிருதி சடமாயிருத்தலால் இதற்குச் சுதந்திர மாகப் பிரவிருத்தி கிடையாதென்பது அறிவிக்கப்பட்டது. இந் தப் பிரகிருதி ஒவ்வொரு மனிதனிடத்தும் சூக்குமதேக ரூபமா யும் அநேகத் தன்மையுடனும் இருத்தலால் இதற்குக் காரியத் தன்மை யுண்டெனக் கூறப்போகின்ருேம். (அகூஇ)

(அ—கை) இனி, கலை முதலிய ஐந்து சட்டைகளுடன் கூடிய புருடனுக்குப் போக்திருத்தன்மை யிருத்தலால் பும் சத்துவமலம் இருப்பதுகொண்டு தீக்கையில் அம்மலத்தைச் சுத்திசெய்யும் பொருட்டு ஆகமங்களில் பிரகிருதி தத்துவத்திற்கு மேல் புருடதத்துவத்தைக் கூறியிருப்பினும், அந்தப் புருடதத் துவம் வியாபகமாயும் சேதனமாயுமிருத்தலால் போக்திருத் தன்மையுடன் கூடியிருப்பது கொண்டு அத்துவரூபமாயும் போக சாதனமாயும் ஆகாமையின் அதனை யிவ்விடத்தில் விலக்கி புருட னுக்கு ஆசையையுண்டு பண்ணுவதாக முன்னர்க் கூறப்பட்ட அராகதத்துவத்தைச் சாதிக்கின்ருர்.

(கூ௦இ) போக்கியப் பொருள்களின் சமீபத்தை யடைந்து அப்பொருள்களில் பற்றுதலானது நிகழ்கின்றது. புருடனுக்கு அந்தப் பற்றுதல் சித்திப்பதின் பொருட்டுப் போகத்தில் ஆசை யை யுண்டுபண்ணும் அராகத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென் பதாம்.

(உரை) சம்சார நிலையில் போக்கியப்பொருளைப் பார்த்து அதனிடத்தில் புருடனுக்குப் பற்றுதல் நிகழ்கின்றது. அந்தப் பற்றுதல் காரணமின்றி நிகழ்கிறதில்லை. காரணமின்றி நிகழுமா யின் முத்தியிலும் பற்றுதலிருக்கவேண்டும். ஆகையால் அந்தப் புருடனுக்குப் பற்றுதல் சித்திப்பதின்பொருட்டுப் போகத்தி லாசையை யுண்டுபண்ணும் அராகத்தை ஒப்புக்கொள்ள வேண் டும். (கூ௦இ)

(அ—கை) இவ்விடத்தில் பிறருடைய கருத்தைக் கூறு கின்றார்.

(கூகஇ) சத்துவ ரஜஸ் தமோ குணங்களுடன் கூடினதா யும் புத்தியிலிருப்பதாயுமுள்ள போக்கியமே புருடனுக்கு விட யத்திலாசையை யுண்டுபண்ணும். ஆகையால் அந்தப் போக்கி யத்தின் வேருக அராகத்தை யொப்புக்கொள்வது பிரயோசன மில்லை யென்பதாம். (கூகஇ)

(கூஉஇ) புருடனுடைய புத்தியில் போக்கியப் பொருள் இருக்கின்றது. அந்தப்பொருளில் புருடனுக்கு ஆசையை யுண்டு பண்ணுவது எதுவோ அதையே அராகமாக ஒப்புக்கொள்ள வேண்டும். அந்த அராகம் போக்கியப் பொருளினும் வேறு. வைராக்கியமின்மையை யிலக்கணமாகவுடைய புத்திதருமமாகிய ரூபத்தை அராகமாக வொப்புக்கொண்டால் இந்தக் குற்றம் நேருமென்பதாம்.

(உரை) சாத்துவிகமுதலிய போகசாதனங்களான விடயங் களின் சொரூபத்தை நிச்சயிக்கும் வாயிலாகப் புத்தியிலுண்டான தாயும், சுகதுக்கமோக ரூபமாகப் பரிணமத்தை யடைந்ததாயு முள்ள சத்துவமுதலிய மூன்று குணங்களே நேரே போக்கியமா யிருத்தலால் அந்தப் போக்கியப் பொருளில் புருடனுக்கு எது ஆசையை யுண்டுபண்ணுகிறதோ, அதனை, விடயம் குணம் முத லியன ரூபமாகப் புத்தியிலுண்டானதாயும், போக்கியரூபமாயு மிருக்கும் சத்துவமுதலிய முக்குணங்களின் வேருன அராகமாக ஒப்புக்கொள்ள வேண்டும். போக்கியப் பொருளே ஆசையை யுண்டுபண்ணுகிறதென்று கூறின், ஆசையற்றவனுக ஒருவனும் ஆகமாட்டான். இவ்வாறே தத்துவ சங்கிரகத்திலும் "போக்கி யப்பொருள்களால் ஆசையுண்டாகுமெனில் ஆசையற்றவனுக ஒருவனுமாகமாட்டான்" என்று கூறப்பட்டிருக்கின்றது. அவ் வாறயின் அவைராக்கியத்தை இலக்கணமாகவுடைய புத்தி தரு மமே அராகமாக இருக்கட்டுமென்று கூறுவார்க்கு ரூபத்திலும் இந்தக் குற்றம் நேருமென்று கூறுகின்றார். இதன் கருத்தாவது, அவைராக்கியத்தை இலக்கணமாகவுடைய ரூபமானது வாசனுரூப மாயிருப்பதால் ஆசையென்னும் காரியத்தைச்செய்யாது. செய்யு

மெனின், புத்தியினிடத்தில் அநேக வாசனைகளிருத்தலால் ஒரே காலத்தில் மாறுபட்ட அநேக ஞானங்கள் புருடனுக்குத்தோன்றி அவற்றிற்கு நாசமுண்டாகும். போக்கிய நிலையை அடைந்தாயும் தூலரூபமாயுமுள்ள பிரத்தியயரூபமாக அராகத்தை ஒப்புக்கொண்டால் முன்போல் வைராக்கியமுடையாரில்லாமற்போய் விடுவர். ஆகையால் புத்தி தருமங்களினும் வேறான அராகத்தை யொப்புக்கொள்ளவேண்டும். கன்மமே ஆசையை யுண்டுபுண்ணுகின்றதெனின், அதுவும் பொருந்தாது. கன்மமானது உழுதல் முதலியனபோல் பலனை யுண்டுபண்ணி ஒழிவையடைகின்றமையால் மற்றக் காரியங்களுக்கு ஏதுவாவதிற் பிரமாணமில்லை. அன்றியும் அநேக தத்துவங்களினுண்மையுமில்லாமற்போய்விடும். (சுஉஇ)

(அ—கை) இனி வித்தையுண்டென்று சித்திப்பதைக் கூறுகின்றார்.

(சுஙஇ) புத்திபோத ரூபமான கன்மத்தில் காரணமின்றிக் கருத்தாவினுடைய கிரியை காணப்படுகிறதில்லை. அது கொண்டு புத்தியின் போதத்தை விளக்கும் வித்தை சித்தித்ததென்பதாம்.

(உரை) மேலே கூறியவாறு இந்திரியங்களுக்கு விடயங்களைப் புத்தியின் சமீபத்தில் சேர்க்கும் மூலமாக உபயோகமிருத்தலால் அந்தப் புத்தி போதரூபமான அறிதற்றொழிலில் புருடனுக்கு யாதானுமோர் கரணமிருத்தல் வேண்டும். எது காரணமாகின்றதோ அதுவே வித்தையாகும். (சுஙஇ)

(அ—கை) இந்த வித்தை விஷயத்தில் பிறருடைய அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்.

(சுசஇ) அந்தப் புருடனுக்குத் தன்னையும் ஏனையவற்றையும் விளக்கக்கூடிய தீபம்போலுள்ள புத்தியானது காரணமாக இருக்கின்றது. ஆகையால் வித்தையால் பிரயோசனமில்லையென்பதாம்.

(உரை) புத்தியானது பிரகாசரூபமாயிருத்தலால் தீபம்போல் விஷயரூபமான தன்னையும் விளக்குகின்றதென்பது கொண்டு வேறு காணஞ் சித்திக்கிறதில்லை. (சுசஇ)

(அ—கை) வித்தை விடயமாகப் பிறர் கூறிய கூற்றை மறுக்கின்றார்.

(கூ௫இ) தூண் முதலிய பொருள்களை யறியும் விஷயத்தில் புருடனுக்குத் தீபமானது சாதனமாயிருக்கின்றது. தீபத்தையறியும் விஷயத்திலோ கண் சாதனமாயிருக்கின்றது. இவ்வாறே புத்தியிலும் ஒப்புக்கொள்ள வேண்டுமென்பதாம்.

(உரை) புத்தியானது அறியப்படுவதாயிருத்தலால் செயப்படு பொருளாயிருத்தல்பற்றி அந்தப் புத்திக்குச் சாதனத்தின் விருப்பமான திருக்கிறதென்பது கருத்து. இவ்வாறே தத்துவ சங்கிரகத்திலும் "புத்தியானது சூரியன் போல் பிரகாச ரூபமாயிருப்பினும் தான் செயப்படு பொருளாயிருத்தலால் வேறான சாதனத்தைக் கொண்டே தன்னையறிவதற்குச் சக்தியுள்ளதாக ஆகின்றது என்று கூறப்பட்டிருக்கின்றது. (கூ௫இ)

(அ—கை) இதனையே விளக்கிக்கூறுகின்றார்.

(கூ௬இ. கூ௭இ) புத்தியானது முக்குண ரூபமாயிருத்தலால் விடய சொரூபமான தன்னை விவேகத்தினால் விளக்குதற்குச் சக்தியுள்ளதாக ஆகாது. எதனாலெனின், புத்தியானது தான் தனிமையாக வில்லாமையாலென்க. குணத்திலும் வேறான வித்தையானது தான் தனிமையாக இருந்துகொண்டு விவேகத்தினால் புருடனுக்கு அறியப்படுவதை யறிவித்தற்குச் சக்தியுள்ளதாக ஆகின்றது. இவ்விடயத்தில் பொறாமை கூடாதென்பதாம்.

(உரை) அந்தப்புத்தியானது முக்குணரூபமாயிருத்தலால் போக்கிய சொரூபத்தின் தோற்றமாயிருந்து செயப்படு பொருளாயிருப்பது கொண்டு தன்னைத்தான் விளக்கமுடியாது; தீப முதலியன போலும். வித்தையோவெனில், புத்தியைக் கடந்திருக்கின்றமையால் போக்கியப்பொருளிலும் வேறாய்த் தான் தனிமையாயிருந்து கொண்டு புருடனுக்கு அறியவேண்டிய பொருள்களை வேறு சாதனங்களின் துணையின்றி அறிவிக்கின்றது.

(கூ௬இ—கூ௭இ)

(அ—கை) இனிக்கலையின் தொழிலைக் கூறுகின்றார்.

(கூஅஇ) போக்கியஞ் சித்திப்பதின் பொருட்டுக் கன்மமுதலிய காரகசமூகங்களை ஏவுகின்றவனும் சுதந்திரனுமுள்ள புருடன் கருத்தாவாகின்றான். கலையோவெனில் அப்புருடனைத் தொழிற்படுத்துகின்றதென்பதாம்.

(உரை) போக்திருத்தன்மை யிருப்பது கொண்டு போகத்திற்காகப் புத்தி முதலிய காரகக் கூட்டங்களை ஏவுகின்றமையால் புருடன் கருத்தாவென்று கூறப்பட்டான். இவ்வாறே "காரகங்களைத் தொழிற்படச்செய்வதிலும் தொழிற்படாதிருக்கச் செய்வதிலும் எவன் சமர்த்தனாகின்றானோ, அவன் தொழிற்பட்டாலும் தொழிற்படாதிருந்தாலும் கருத்திரு காரகனாவன்" என்று பிறருங் கூறுகின்றனர். அந்தப் புருடனுக்குப் போகக் கிரியையில் பின்னர்க் கூறப்போகின்றவாறு சாமர்த்தியத்தை விருத்தி செய்வதால் தொழிற்பாட்டைச் செய்விக்கின்ற கலையுண்டென்பது நூல்களிற் கூறப்படுகின்றது. (கூஅஇ)

(அ—கை) சாங்கியர் புருடனுக்குக் கருத்திருத்தன்மை கிடையாதென்று கூறுகின்றார். அது பொருந்தாதென்று கூறுகின்றார்.

(கூகூஇ) புருடனுக்குக் கருத்திருத்தன்மை யில்லையென்று கொண்டால் போக்தாவென்னும் சொல் பயனற்றுப்போய்விடும். பிரகிருதியின் வியாபாரமும் பயனில்லாமற் போய்விடுமென்பதாம்.

(உரை) போகமானது கிரியையானபடியால் போக்திருத்தன்மையினாலேயே புருடனுக்குக் கருத்திருத்தன்மை சித்திக்கின்றது. அந்தப் புருடனிடத்தில் கருத்திருத்தன்மை யில்லையென்று கொண்டால் அதனுடைய போகத்திற்காக வுண்டான பிரகிருதியின் தொழிற்பாடும் பயனற்றுப் போய்விடும். கருத்திருத்தன்மையில்லாதவனிடத்தில் கரணமுதலியவற்றின் சம்பந்தமானது வீணாகுமாகையாலென்க. (கூகூஇ)

(கooஇ) (அன்றியும்) கன்மேந்திரிய முதலியன உளி முதலியனபோல் கிரியைக்குச் சாதனமாயிருக்குந்தன்மையால்

கருத்தாவுடன் கூடியிருக்கின்றன. அது கொண்டு புருடனை வியாபகனை கருத்தாவாக அறிந்துகொள்ளல் வேண்டு மென்பதாம்.

(உரை) ஆன்மாவை வியாபகனாக ஒப்புக்கொள்ள வில்லையாயின் ஆகாசம் முதலியனபோல் ஆன்மா வடிவமற்றவனாகையால் வேறுதேசத்திற்குச்செல்லுதல் சம்பவியாது. அது கொண்டு தெற்குத் தேசத்திலுள்ளவனுக்கு காச்மீர முதலிய வடக்குத்தேசங்களிற் காணப்படும் பலத்தின் அநுபவம் பொருந்தாது. இந்த அநுபவம் வியாபகத்தன்மையின்றிப் பொருந்தாதாகையால் ஆன்மாவை வியாபகனாக ஒப்புக்கொள்ள வேண்டும். இவ்வாறே பாராக்கியம் முதலிய நூல்களில் "கலையானது புருடனுக்குக் கருத்திரு சத்தியை விளக்குகின்றது. ஆகையால் கலை, புருடனுக்குத் தொழிற்பாட்டைச் செய்கின்றதாக ஆகின்றது. பின்னர் புருடன் கலையுடன் கூடிக்கொண்டு போகத்தில் கருத்திருகாரகனாக ஆகின்றான்" என்று கூறப்பட்டிருக்கின்றது. இந்தக் கருத்தாவான புருடனுடைய கருத்திரு சத்தியென்பது சத்தி ஒன்றானமையால் ஞானக்கிரியா சத்தியாகும். அந்தச் சத்தி பின்னர்க் கூறப்படுமாறு மலத்தால் மறைக்கப்பட்டமையால் விடயங்களில் தொழிற்படுகிறதில்லை. ஆகையால் தீபம் போல் பிரகாசரூபமான கலையானது ஏக தேசத்தில் மலத்தை விலக்கிப் புருடனுடைய கருத்திருசக்தியைத் தோற்றுவிக்கின்றது. இந்தக்காரணத்தால் அந்தக் கலையானது ஏவுதற்றொழிலைச் செய்கிற கருத்தாவென்று கூறப்படுகின்றது. அந்த அணுவான புருடன் கலையுடன் கூடி அதிக வேற்றுமையின்றிப் பிரகாசித்துக்கொண்டு போகக்கிரியையில் கருத்திரு காரகனாகக் கூறப்படுகின்றான். புருடன் போக்தாவானபடியால் அவன் கருத்தா. கலையோவெனின், அந்தப்புருடனை யேவுகின்றமையால் காரகமென்று கூறப்படுகின்றது. இவ்வாறே மிருகேந்திரத்திலும் "ஒன்றுடனொன்று வேறு படாதவாறு போல் இவ்விரண்டுமிருந்துகொண்டு ஆன்மாவிற்குப் போகக்கிரியையைச் செய்யும் விஷயத்திற் கருத்தாவாகவும் காரகமாகவுமிருக்கின்றன" என்று கூறப்பட்டிருக்கின்றது. (௧0௦இ).

(௧0௧இ—௧0௨இ) (இவ்வாறின்றி) தோற்றத்தைச் செய்யும் கலையைத் துணையாகக்கொள்ளாது ஆன்மாவிற்குக் கருத்திருத் தன்மையை ஒப்புக்கொள்ளும் விஷயத்தில் கலையின் சேர்க்கைக்கு முன்னரே ஆன்மாவிற்குச் சர்வ கருத்திருத் தன்மையுண்டாக வேண்டும். சர்வ கருத்திருத்தன்மையின் சம்பந்தத்தால் ஈசுவரன்போல் ஆன்மா சர்வஞ்ஞனாகவேண்டும். ஆகவே தன்னுடைய நுக்கத்தின் பொருட்டு ஆன்மாவிற்குக் கருத்திருத்தன்மையுண்டென்பது பொருந்தாதென்பதாம்.

(உரை) ஆன்மா நின்மலனானமையால் கலையைத் துணையாகக்கொள்ளாது இவனுக்குக் கருத்திருத்தன்மையை ஒப்புக்கொண்டால், பரமசிவன்போல் கலை முதலிய பாச ரூபமான சரீர சம்பந்தமின்றியே சர்வ கருத்திருத் தன்மையும், அறிவில்லாதவனுக்குச் செய்யமுடியாதாகையால் சர்வஞ்ஞத் தன்மையும் வந்துவிடும். மறைப்பின்றிச் சிவனால் அதிட்டிக்கப்படாதவனாயும் சுதந்திரனுமுள்ள இந்த ஆன்மாவிற்குத் தன்னுடைய நுக்கத்தின் பொருட்டே சரீர முதலியவற்றிற்குக் கருத்தாவாயிருக்குந் தன்மையும் பொருந்துகிறதில்லை. அவ்வாறின்றிச் சுகத்தை யுண்டுபண்ணுதல் முதலியவற்றில் இவனுக்குப் பிறிதொன்றைத் துணையாகக் கொள்ளுதல் காணப்படுகின்றமையால் பெத்தத் தன்மையும் மலத்துடன் கூடியிருக்குந் தன்மையும் இருக்கின்றன வென்பது நிச்சயிக்கப்படுகின்றது. மலத்துடன் கூடியிருப்பது கொண்டே இவனுக்குச் சர்வ கருத்திருத்தன்மை யின்மையும் சர்வஞ்ஞத் தன்மையின்மையும் சம்சார நிலையில் காணப்படுகின்றன. (௧0௧இ—௧0௨இ)

(அ—கை) ஆகையால் இந்தப் புருடன் மலத்தால் மறைக்கப்பட்டிருக்கின்றானென்பதுகொண்டு போகத்திலுள்ள கிஞ்சிஞ்ஞத் தன்மைக்கும் கருத்திருத்தன்மைக்கும் கலையின் உபகாரத்தை விரும்புதலானது இவனுக்குச் சித்தித்ததென்று கூறுகின்றார்.

(௧0௩இ) பசு, காளை முதலியனபோல் இவன் கட்டுப்பட்டவனாயிருக்கின்றமையால் இந்தப் புருடனுக்குச் சர்வ கருத்

திருத்தன்மை கிடையாது. ஆகையால் கலையின் உதவியைக் கொண்டே போகத்தில் கருத்திருத்தன்மை இவனுக்கிருக்கின்றதென்பதாம். (கOகூ இ)

(அ—கை) இவ்வாறு கலையைச் சாதித்த பின்னர் அதனினின்றும் வித்யாத ஆராகம் பிரகிருதி யென்னும் இவையுண்டாகின்றனவென்று கூறுகின்றார்.

(கOசு) கலையின் ஒரு பாகத்தினின்றும் வித்தையாராகமென்னுமிவை ஒன்றன்பின் ஒன்றாகவும் பிரகிருதி தத்துவம் தனியாகவும் தோன்றுகின்றனவென்பதாம்.

(உரை) ஆராகம் வித்தையென்னுமிவை ஒன்றன்பின் ஒன்றாகவே தோன்றுகின்றன. பிரகிருதியானது தனியாகத் தோன்றுகின்றது. ரௌரவத்தில் "கலாதத்துவத்தினின்றும் ஆராகம் வித்தையென்னுமிரண்டும் சேர்ந்தே தோன்றுகின்றன. அவ்வியத்தம் தனிமையாய்த் தோன்றிற்று" என்று கூறப்பட்டிருக்கின்றது. இவ்விடத்தில் கன்மத்தின் பலபோகமானது காலம், போக்தா வென்னும் இவற்றின் நியமமின்றி உண்டாகாதாகையால், காலம் நியதியென்னும் இரண்டு தத்துவங்களும் ஆகமங்களிற் படிக்கப்படினும் அருத்தத்தாற் சித்தித்தமையால் இந்நூலாசிரியரால் கொள்ளப்படவில்லை. எவ்வாறெனின், அரசனுடைய ஆணையில்லையாயின் உழுதற்றொழிலின் பலன்கள் திருடராலபகரிக்கப்படுமாறுபோல,சோதிட்டோம முதலிய கன்மபலன்களின் விஷயத்திலும் போக்தாவை நியமஞ்செய்யும் விஷயத்தில் யாதானுமொன்றிருக்கவேண்டுமென்பது கொண்டு நியதி தத்துவஞ் சித்தித்தது. கன்மமே புருடனைக் கட்டுப்படுத்துகிறதென்று கூறலாகாது. பலத்தை யுண்டுபண்ணுதலிலேயே கன்மத்தின் காரியம் சித்திக்கின்றமையாலென்க. இது முன்னரும் கூறப்பட்டிருக்கின்றது. ஈசுவர சக்தியும் மற்றத் தத்துவங்களால் மறைக்கப்பட்டே போக விடயத்தில் காரியத்தைச் செய்யும். இன்றேல் எல்லாத் தத்துவங்களும் சித்திக்காமற் போய்விடும். அன்றியும் நீண்டகாலம் சுருங்கின காலமென்னும் அறிவு வழியாக நீண்டநேரமுண்ணுகிறான் என்பது முதலியன போக்கிய முதலிய

வற்றையறிவிக்கின்றமையால் காலதத்துவமும் சித்தித்தது. இந்தக்கால தத்துவம் இறந்தகால முதலியவற்றின் ரூபமாக அநேகமாயும் அசேதனமாயுமிருத்தலால் நையாயிகர் முதலியோரால் ஒப்புக்கொள்ளப்பட்டவாறுபோல் நித்தியமன்று. இவ்வாறே மிருகேந்திரத்திலும் "நொடி கணம் நாழிகையென்பது முதலான வியவகாரத்திற்கு நிமித்தமான கால தத்துவம் மாயையினின்றுந் தோன்றித் தான் தோன்றின காலமுதல் சங்கார காலம் வரை நியதி தத்துவத்தால் நியமித்து அடக்கப்பட்ட ஆன்மாவைப் போகத்தில் பிரவிருத்திக்கச் செய்கின்றமையால் காலமென்னும் பெயர் பெற்றிருக்கின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது. (க0௪இ)

(அ—கை) இவ்வாறு சூக்கும தேக ரூபமான தத்துவக் கூட்டத்தைக் கூறிவிட்டு இனி அந்தச் சூக்கும தேகம் ஒவ்வொரு புருடனிடத்தும் இன்றியமையாதிருக்குமென்று கூறுகின்றார்.

(க0௫இ) போகத்திற்குச் சாதனங்களான பிருதிவிமுதல் கலையீறான தத்துவக்கூட்டம் ஒவ்வொரு புருடனிடத்தும் கட்டுப்பட்டிருப்பதாக வித்துவான்களறிந்துகொள்ள வேண்டுமென்பதாம்.

(உரை) இவ்வாறே தத்துவ சங்கிரகத்திலும் "பூமிமுதல் கலையீறான தத்துவக்கூட்டம் ஒவ்வொரு உயிர்களிடத்தும் இன்றியமையாத சூக்கும உடம்பாகும்; இந்தச் சூக்கும உடம்பு கன்மவசத்தால் உலக சம்பந்தங்களான தூல சரீரங்களிற் சஞ்சரிக்கின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது. (க0௫இ)

(அ—கை) சூக்கும தேகம் ஒன்றாயின் அனைவருக்கும் வெவ்வேறாகக் காணப்படுகின்ற போகம் பொருந்தாதெனக் கூறுகின்றார்.

(க0௬) சூக்கும தேகங்கள் பலவுள்ளனவென்று கொள்ளவில்லையாயின் வெவ்வேறாகக் காணப்படுகின்ற சுகம் முதலியன பொருந்ாதென்பதாம். (க0௬)

(அ—கை) சூக்கும தேகமொன்றாயினும் கன்மங்களின் பேதத்தினாலேயே அவற்றின் பலமான போகங்களின் பேதமும் உண்டாகின்றது என்று கூறின் அது பொருந்தாதென்று கூறுகின்றார்.

(க0சு இ) கன்மங்களின் பேதத்தால் போகங்களின் பேதமும் போகங்களின் பேதத்தால் கன்மங்களின் பேதமும் சித்திக்கின்றனவென்பதாம்.

(உரை) கன்மங்களின் பேதத்தினாலேயே போகங்களின் பேதஞ் சித்திக்கின்றது ; போகங்களின் பேதஞ் சித்தித்த பின்னர் கன்மங்களின் பேதம் அநுமானஞ் செய்யப்படுகின்றதென்பது ஒன்றையொன்று பற்றுதலென்னும் குற்றத்திற்கிடனாகுமென்பது பொருள். (க0சு இ)

(அ—கை) கருத்தாவின் பேதத்தினாலேயே கன்மங்களின் பேதம் சித்தித்துவிட்டது. கன்மங்களின் பேதத்தால் போகங்களின் பேதஞ் சித்திக்கின்றது. ஆகையால் ஒன்றையொன்று பற்றுதலென்னும் குற்றங்கிடையாதென்று கூறின் அது பொருந்தாதென்று கூறுகின்றார்.

(க0எ இ) ஒரே காலத்தில் எல்லாக் கருத்தாக்களுடனும் சம்பந்தித்துக் கன்மத்தைச் செய்யும் அந்தச்சூக்கும சரீரமானது எவ்வாறு ஒவ்வொரு கருத்தாவினிடத்தும் வேறு வேறான கன்மங்களைச் செய்யுமென்பதாம்.

(உரை) ஆன்மாக்கள் மலத்தால் மறைக்கப்பட்டிருக்கின்றமையால் கலை முதலிய சூக்கும தேகத்தின் சம்பந்தமின்றிக் கன்மங்களைச் செய்வது பொருந்தாதாகையால், ஒரே காலத்தில் எல்லாக் கருத்தாக்களுடனும் சம்பந்தித்துக் கன்மங்களைச் செய்யும் அந்தச் சூக்கும தேக ரூபமான தத்துவம் ஒன்றாயிருந்துகொண்டு எவ்வாறு வேறு வேறாயும் விசித்திரமாயுமுள்ள கன்மங்களைச் செய்யும். ஒரு நாளுஞ் செய்யாது. ஒவ்வொரு புருடனிடத்தும் காரியங்களைச் செய்வதில் இச்சையானது வேறு

வேருயிருக்கின்றமையால் கன்மத்தின் பேதஞ் சித்திக்கின்ற தென்று கூறலாகாது. எதனாலெனின், அந்த இச்சையும் சூக்கும தேகத்தின் சம்பந்தத்தினாலேயே உண்டாகின்றது. அந்தச் சூக்கும தேகம் ஒன்றென்று கொள்ளின் காரியத்தைச் செய்யும் இச்சையின் பேதம் பொருந்தாது. ஆகையால் காணப்படும் போகத்தின் வேற்றுமை வேறு வழியாகப் பொருந்தாதது கொண்டு ஒவ்வொரு புருடனிடத்தும் சூக்கும சரீரம் வெவ் வேருக இருக்கின்றதென்று ஒப்புக்கொள்ள வேண்டும். (க௦எஇ)

(அ—கை) ஆன்மா வெவ்வேருயின் சூக்கும சரீரமும் வெவ்வேருகும். அந்த ஆன்மாவோ ஒன்றுதானென்று வேதாந் திகள் கூறுகின்றனர். அது பொருந்ாதென்க் கூறுகின்ருர்.

(க௦அ) இந்தக் காரணங்கொண்டே ஆன்மாக்களனேக மென்று அறியப்படுகின்றதென்பதாம்.

(உரை) ஆன்மா ஒன்ருயின் பலவிதமான சுகதுக்கங்களும் பலவிதமான ஜனனமரணங்களும் பொருந்ாதென்பது கொண்டு பலவிதமான போகங்களுண்டாகையால் ஆன்மாக்கள் பலவென் பது சித்தித்தது. இந்த அத்வைத மதமானது மிருகேந்திர விருத்தி தீபிகையில் எம்மால் விரிவாய் நிராகரிக்கப் பட்டிருக் கின்றது. (க௦அ)

(அ—கை) இனி, சூக்குமதேக ரூபமான இந்தத் தத்துவக் கூட்டம் ஆன்மாவைப்போல் வியாபகமா? அல்லது வியாபக மில்லையா? என்று ஆசங்கிப்பார்க்கு விடை கூறுகின்ருர்.

(க௦அஇ) ஒரே காலத்தில் வியாபாரம் நிகழாதது கொண்டு அதற்கு வியாபகத்தன்மை யில்லையென்பது சித்தித்ததென் பதாம்

(உரை) ஞானக்கிரியை யென்னும் இவற்றின் தோற்ற ரூபமான அந்தச் சூக்கும தேகத்தின் காரியமானது எவ்விடத் தும் ஒரேகாலத்தி லுண்டாகாமையின் அந்தச் சூக்கும தேகத் திற்கு வியாபகத்தன்மை யில்லையென்பது சித்தித்தது. (க௦அஇ)

(அ—கை) எந்த விடத்தில் பலத்தை யுண்டுபண்ணக் கூடியதாயும் துணையாயுமிருக்கும் கன்மமிருக்கின்றதோ அந்த விடத்திலேயே இந்தச் சூக்கும சரீரம் ஆன்மாவிற்குச் சைதன்னியத்தைத் தோற்றுவிக்கும் பொருட்டுத் தோற்றுவித்தல் ரூபமான காரியத்தைச் செய்கின்றது. அதுபற்றியே இந்தச் சூக்கும சரீரத்தின் காரியம் எவ்விடத்தும் ஒரே காலத்திலுண்டாகிறதில்லை. இவ்வாறன்றி வியாபகத்தன்மை யில்லாமையினால் ஒரே காலத்திற் காரியம் நிகழவில்லை யென்றல் கூடாதெனின், அதுவும் பொருந்தாது. எதனாலெனின், அந்தச் சூக்குமசரீரம் காரியமாயிருத்தலின் அநித்தியமாதலால் கடம் முதலியனபோல் வியாபகமாயிருத்தல் கூடாதாகையாலென்க. இந்தக் கருத்துக்கொண்டு கூறுகின்றார்.

(கoகூஇ) கன்மமிருக்கு மிடத்து ஞானக்கிரியை யென்னு மிவற்றின் தோற்றம் உண்டாகின்றதென்று கூறுதல் கூடாது. ஒரேகாலத்தில் சூக்குமதேகத்தின் காரியங்களுண்டாகாமையின் அந்தச் சூக்குமதேகத்திற்கு வியாபகத்தன்மை கிடையாதென்பதாம். (கoகூஇ)

(அ—கை) சிறிது பாகத்தில் நிகழும் இந்தச் சைதன்னியத் தோற்றமானது தோற்றுவிக்கும் சூக்குமதேகம் வியாபகமாயில்லாமைபற்றி நிகழ்ந்ததா? அல்லது ஆன்மா வியாபகமாயில்லாமைபற்றி நிகழ்ந்ததா? வென்பார்க்கு விடைகூறுகின்றார்.

(ககoஇ) முத்தியில் சிவனைப்போல் எல்லாவற்றையும் அறியுஞ் சுபாவமுள்ளவனாதலின் ஆன்மாவியாபகன். சம்சார நிலையில் வியாபகத்தன்மை யின்மையும் முத்தியில் வியாபகத்தன்மை யுண்மையுங்கூறின் விகாரத்தன்மை முதலிய தருமங்களையுடையவனாக ஆன்மா ஆய்விடுவன். சுருதியுடன் முரண்படுமென்பதாம்.

(உரை) ஆன்மாவிற்கு வியாபகத்தன்மை யில்லையென்று கூறின் வேறு தேசங்களிலுண்டாகும் பலனை யனுபவித்தல் கூடாதென்று முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. அன்றியும் சிவனைப் போல் சர்வஞ்ஞத்தன்மை சர்வகருத்திருத்தன்மை யென்னு

மிவை ஆன்மாவிற்கு முத்திநிலையிலிருக்கின்றமையால் வியாபகத் தன்மை யுண்டென்பதை நிச்சயமா யொப்புக்கொள்ளல் வேண்டும். சம்சாரநிலையில் வியாபகத்தன்மையின்மையும், முத்தியில் வியாபகத்தன்மை யுண்மையும் உண்டென்று கூறின் பரிணமத் தன்மையும் அசேதனத் தன்மையுமாகிய குற்றங்கள் ஆன்மாவிற்கு நேரும். நித்தியத்தன்மையும் வியாபகத்தன்மையும் ஆன்மாவிற்கு உண்டென்று கூறும் சுருதியுடன் முரண்படும். இவ்வாறே மிருகேந்திரத்திலும் "ஞானக்கிரியா ரூபமாயிருப்பதே சைதன்யம். இது ஆன்மாவினிடத்து எப்பொழுதும் எவ்விடத்துமிருக்கின்றது. முத்தியில் இந்த ஆன்மாவின் ஞானக்கிரியாசத்திகள் எங்கும் வியாபகமாயிருப்பதாக நூல்களிற் கூறப்படுகின்றன. அன்றியும் ஆன்மாவிற்கு வியாபகத்தன்மையில்லை யென்பது கிடையாது. ஆன்மா க்ஷணிகமில்லை. ஒன்றில்லை. சடமாயுமில்லை" என்று கூறப்பட்டிருக்கின்றது. (௧௧௦இ)

(அ—கை) இவ்வாறு சூக்குமதேக ரூபமான சிறப்புத்தத்துவங்களின் தோற்றத்தைக் கூறிவிட்டு, இனி புவன ரூபமான பொதுத்தத்துவங்களின் தோற்றத்தைக் கூறுகின்றார்.

(௧௧௧) தத்துவங்களினுடைய ஏனைய பாகங்கள் சம்சாரியாகிய ஆன்மாவிற்குப் போகத்தானங்களாகுமென்பதாம்.

(உரை) சூக்குமதேக ரூபமான போகத்தினும் வேறாயுள்ள பலவிதமான புவனங்களின் ரூபமாகிய தத்துவங்களின் பாகங்கள் சம்சாரியாகிய ஆன்மாவிற்குப் போகத்தானங்களாகும். (௧௧௧)

(௧௧௧இ) (ஆகவே) அந்தத்தத்துவக் கூட்டம் அந்தந்தப் புவனங்களிற்றோன்றிய சரீரத்திற் பிரவேசித்து அந்தப்போகத்திற்குரிய பூமிகளில் பலத்தையுண்டுபண்ணு மென்பதாம்.

(உரை) சூக்கும தேக ரூபமான தத்துவக் கூட்டம் தான் செய்யவேண்டிய காரியத்திற்காகக் கன்மவசத்தால் போகபூமிகளுள் அந்தந்தப் புவனங்களிலுண்டான தேகங்களிற் பிரவேசித்துப் புருடனுக்கு ஏகதேசத்தில் ஞானக்கிரியைகளின் சாமர்த்தி

யத்தைத் தோற்றுவிக்கின்றது. இவ்வாறே தத்துவசங்கிரகத்திலும் " இந்தச் சூக்கும உடம்பே கன்மவசத்தால் உலகசம்பந்தங்களான தூலவுடம்புகளிற் சுற்றுகின்றது." என்று கூறப்பட்டிருக்கின்றது. மிருகேந்திரத்திலும்" "கன்மங்களை யனுபவித்து நீக்குவதாயும், சேதனஞன ஆன்மாவின் சேர்க்கையால் சேதனரூபமாயும், மாயாகருப்பத்திற் சுற்றுகிறதாயுமுள்ள இந்தச் சரீரமானது ஆன்மாவிற்குண்டென்று கூறப்பட்டது. இத்துடனமையாதெனக் கருதி ஆதாரம் தேகம் விஷயமென்னும் இவற்றின் விருத்தியின் பொருட்டுப் புவனங்களிலுள்ள தத்துவ பரம்பரையைக் கூறுகின்றேன்" என்று கூறப்பட்டிருக்கின்றது. (கககூ)

(அ—கை) அந்தப் புவனத் தோற்றத்தைச் சுருக்கமாகக் கூறுகின்றார்.

(ககஉ) தத்தம் புவனங்களிலிருக்கும் காலர், ஹாடகர், தேசிகரென்னு மிவர்களால் முதல் நடு விறுதிகளில் அதிட்டிக்கப்பட்டதாயும் நரகத்தை முதலாகவும் சத்தியலோகத்தை யிறுதியாகவும் உடையதாயுமுள்ள புவனங்களின் முறையானது பூதங்களிலிருக்கின்றதென்பதாம்.

(உரை) காலரென்பவர் காலாக்கினி உருத்திரர். ஆடகரென்பவர் பாதாளத்திற்கு அதிபதியாவர். தேசிகரென்பவர் எல்லாச் சாத்திரங்களையும் உபதேசஞ் செய்பவராகையால் உலகாசாரியர். இவர் சத்தியலோகத்திற்கு மேலிருக்கும் விட்டுணு லோகத்திற்கு மேலுள்ள உருத்திரலோகத்திலிருப்பவர். இவர் தான் அனந்தரின் சீடரான ஸ்ரீகண்டரென்பவர். இவருக்கே பிரமாண்டத் துளதிகாரமுண்டு. ஆகவே அவரவர் புவனங்களிலிருப்பவரான காலர், ஹாடகர், தேசிகரென்னு மிவர்களால் முதல் நடு விறுதிகளில் அதிட்டிக்கப்பட்டதாயும், நரகம் பாதாளம் பூமியாகிய உலகரூபமாயுமுள்ள புவனங்களின் முறையானது பிரமாண்டத்துள்ளிருக்கும் தூலபூதங்களிலிருக்கின்றது. (ககஉ)

(ககக) (ஆகவே) வீரபத்திரர் எட்டு எட்டாக ஐந்து புவனங்களுடன் தன் மாத்திரைகளினின்று முண்டான பூதங் களிலும், பூதங்களைத் தோற்றுவிக்கும் தன் மாத்திரைகளிலும், சித்த வருக்கங்களிலும் இருக்கின்றாரென்பதாம்.

(உகா) பிரமாண்டத்தைத் தரிப்பவரான சதவுருத்திரர் களை அதிட்டிக்கும் வீரபத்திரர், முன்னர்க் கூறப்பட்ட தூல பிருதிவிக்குக் காரணமாயும் தன்மாத்திரையினின்றும் உண்டான தாயுமுள்ள சூக்கும பிருதிவி தத்துவத்தில் இருக்கின்றார். அவ் வாறே தூலமான நீர் முதலியவற்றிற்குக் காரணமாயும் தன்மாத் திரையினின்றும் உண்டானதாயுமுள்ள சூக்குமமான நீர் முதலிய நான்கு பூதங்களிலும், சித்தவருக்க மென்னுஞ் சொல்லால் அந்தக்காரணங் கொள்ளப்படுமாதலால் தன்மாத்திரை முதற் கொண்டு அகங்காரமீறாகவுள்ள தத்துவங்களிலும் குஹ்யம், அதி குஹ்யம், குஹ்யதரம், பவித்ரம், ஸ்தாணு வென்னும் பெயருடன் எட்டு எட்டாக ஐந்து புவனங்களிருக்கின்றன. இவ்வாறே ஸ்ரீ நந்திகேசுவர காரிகையில் "பிரமன் தூல தத்துவங்களை யதிட்டித் திருக்கிறார். சூக்குமமான ஆதார தேகத்தை யனுபவித்தற் பொருட்டு சதவுருத்திரர் க்ஷேத்ரபதிகளான நாற்பதுபேர் ஆகிய இவர்கள் சூக்கும பூதங்களையும், தன்மாத்திரை, மனம், அகங் காரம் ஆகிய இவற்றையும், பைசாசம் முதலிய எண்மர் புத்தியை யும், சில யோகிகள் குணதத்துவத்தையும் அதிட்டித்திருக்கின்ற னர்; வாமதேவர் முதலாயினர் புருடதத்துவத்தையும், குரோதர் முதலாயினர் பிரகிருதி தத்துவத்தையும், மண்டலிகள் கலா தத்து வத்தையும் அதிட்டித்திருக்கின்றனர்" என்று கூறப்பட்டிருக் கின்றது. (ககக)

(அ—கை) அது பற்றியே இவ்வாறு நியாசஞ்செய்ய வேண்டுமெனக் கூறுகின்றார்.

(ககச, ககரு, ககசு) புத்திதத்துவத்தில் முறையே பைசாச முதலிய எட்டுப் புவனங்களையும், குணதத்துவத்தில் அகிருதம் முதலிய புவனங்களையும், குணத்தன்மையை யடையாததாயும் சுத்தமாயும் பிரகிருதியின் விகாரமாயுமிருக்கும் குணதத்துவத்

தின் மத்தகமான புருட தத்துவத்தில் வாமதேவர் முதலியோ ருக்கு இருப்பிடமான புவனங்களையும், பிரகிருதியில் குரோதேசு வரர்களின் புவனங்களையும் நியாசஞ்செய்ய வேண்டுமென்பதாம்.

(உரை) வாமதேவர் முதலிய பதின்மூன்று ருத்திரர்கள் பிரகிருதிக்கு அதிபர்களான குரோதர் முதலிய எண்மருடன் குண தத்துவத்தின் மத்தகத்திலுள்ள புவனங்களிலிருக்கின்றனர். பிரகிருதி சூக்கும ரூபமாயிருப்பதால் புவனங்களுக்கு ஆதாரமா யிருக்குந் தன்மை அந்தப் பிரகிருதிக்குப் பொருந்ாதென்று ஆகமத்தையறிந்தவர் கூறுகின்றனர். (கக௪, கக௫, கக௬)

(கக௬இ) (அவ்வாறே) கலாதத்துவத்தில் எவ்வெட்டாக எட்டு மண்டலங்களிருக்கின்றனவென்பதாம்.

(உரை) அராகம் வித்தை யென்னுமிவற்றுடன் கூடிய கலாதத்துவத்தில் எட்டு எட்டாக எட்டுப் புவனங்களுடைய மண்டலங்களிருக்கின்றன. இவ்வாறே மிருகேந்திரத்தில் “அரா கம் வித்தையென்னும் இவற்றை மத்தியிலுடைய கலாதத்துவத் திலிலுள்ள அறுபத்துநாலு புவனங்களில் மண்டலாதிபர்களிருக் கின்றனர்” என்று கூறப்பட்டிருக்கின்றது. காலம் நியதியென் னும் தத்துவங்களில் இரண்டு புவனங்களிருக்கின்றனவென்று அவ்விடத்திலேயே கூறப்பட்டிருக்கின்றது. அஃதாவது நியதி தத்துவத்தில் நியமனஞ் செய்யும் புவனமும் காலதத்துவத்தில் எண்ணைச் செய்யும் புவனமும் இருக்கின்றன வென்பதாம். இந்தப் புவனத்துவாவானது பத்ததி முதலிய நூல்களில் விரி வாய்க் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் இவ்விடத்து விரித் துக் கூறப்படவில்லை. சில புவனங்களில் சில புவனங்கள் அடங்கி யிருப்பதுகொண்டு இடையிலுள்ள புவனங்களின் எண்ணின் பேதம் காணப்படுகின்றது. (கக௬இ)

(அ—கை) இவ்வாறு புவனரூபமான தத்துவங்களின் தோற்றத்தைக்கூறிவிட்டு இனி மேலே கூறப்பட்ட கலை முதலிய வற்றின் ரூபமான உலகத்திற்கு முதற்காரணமான மாயையைச் சாதிக்கின்றார்.

(ககஎஇ) மகா மாயையானது உலகத்திற்குக் காரணமா யுள்ளது. காரியசத்திகளையும் அசேதனத் தன்மையையு முடை யது. இந்த மாயையினுடைய கலை முதலியவற்றின் றோற்றமா னது போகத்தையனுபவிக்கும் சம்சாரிகளுக்கு அந்தப் போகத் தை யுண்டுபண்ணுதற் பொருட்டு உண்டாகின்றதென்பதாம்.

(உரை) எண்ணிறந்த பிரவாக ரூபமான தனது காரியங் களை வியாபிக்கின்றமையால் மகத் என்னுஞ் சொல் உபயோகிக் கப்பட்டது. (இவ்வளவேயன்றி மகாமாயை யென்பது சுத்தமா யைக் குறிக்காது.) பிரளயத்தில் இந்த அசுத்த மாயையினிடத் தில் எல்லா அசுத்த உலகங்களும் ஒடுங்குகின்ற காரணம் பற்றி மாயையெனப்பட்டது. கலை முதலிய தத்துவங்கள் ஒவ்வொரு புருடனிடத்தும் வேறு வேறாக விருப்பதால் அநேகமாதலானும் புவனங்களுக்காதாரமாயிருத்தலானும் அந்தக் கலை முதலியவற் றின் ரூபமான உலகத்திற்கும் முதற்காரணமான இந்த அசுத்த மாயையானது காரியரூபமான எல்லாவற்றிற்கும் நோரகவும் பரம்பரையாகவும் முதற் காரணமாயிருக்கின்றது. அது பற்றி யே சத்காரியவாத முறையில் எல்லாக் காரியங்களும் சத்தி ரூப மாக மாயையினிடத்திலிருப்பது கொண்டு இந்த மாயை சூக்கும ரூபமான தனது காரிய சத்திகளின் கூட்ட ரூபமாக விருக் கின்றது. இது முதற் காரணமாயிருப்பது கொண்டே மண் முதலியனபோல் அசேதனமாயிருக்கின்றது. ஆகையால் கலை முதலிய போகங்களுக்கு மாயை சாதன மென்பது கூறப்பட் டது. (ககஎஇ)

(அ—கை) இந்த மாயையானது சத்திக் கூட்ட ரூபமா யிருக்கிறதென்று கூறுகின்றார்

(ககஅஇ) விசித்திரமாயும் அளவிறந்ததாயுமுள்ள காரி யங்கள் காணப்படுகின்றமையால் இந்த அசுத்த மாயை விசித்திர மாயும் அநேகமாயுமுள்ள சத்திகளுடன் கூடினதென்று அறியப் படுகின்றது என்பதாம்.

(உரை) விசித்திரமாயும் அளவிறந்ததாயுமுள்ள காரியங்களின் தோற்றங் காணப்படுகின்றமையால், இந்த அசுத்த மாயை விசித்திரமாயு மளவிறந்ததாயுமுள்ள காரிய சத்திகளின் கூட்ட ரூபமாக விருக்கின்றதென்றறியப்படுகின்றது. (௧௧அஇ)

அ—கை) இந்த அசுத்தமாயைக்கே அநேக காரியங்களை யுண்டு பண்ணக்கூடிய அநேக சத்திகளைத் தோற்றுவித்தல் கூடுமென்று சொல்லக்கூடாது. எதனாலெனின், இந்த . மாயையானது சத்தி ரூபமாயிருத்தலால் சத்திக்கு வேறு சத்தியைத் தோற்றுவித்தல் பொருந்தாமையாலென்க. முக்கிய காரணமாயிருப்பது கொண்டே இந்த மாயைக்கு நித்தியத்தன்மை சித்தித்தது. இன்றேல் வரம்பின்றியோட லென்னும் குற்றம் வந்துவிடுமென்னுமபிப்பிராயத்துடன் கூறுகின்றார்.

(௧௧௯இ) சடமாயும் அநேகமாயுமிருப்பது நாசமுடையதெனக் கண்டிருக்கின்றோம். இந்த அசுத்த மாயை யநேகமன்று. அநேக மன்றென்பதுகொண்டே சடமாயினும் இந்த மாயை அழிவற்றதாக ஆயிற்றென்பதாம். (௧௧௯இ)

(௧௨௦இ) (அன்றியும்) எல்லாவற்றையும் வியாபிக்கும் இந்த அசுத்த மாயை, ஆன்மாக்களனேகமாதலால் அவற்றின் போகத்தின் பொருட்டு எவ்விடத்தும் எல்லாக் காரியங்களையும் பிரவாக ரூபமான எல்லா மகிமைகளுடன் தோற்றுவிக்கின்றதென்பதாம்.

(உரை) இவ்வாறே பிரகஸ்பதி ஆசிரியரும் "எல்லாச் சித்தர்களுடைய வாக்குக்களும் நீண்ட காலம் கூறப்பட்டு நாசத்தையடையும். மாயை அளவற்ற சத்திகளுடன் கூடினதாகையால் பிரவாகங்களினளவு கூறப்படவில்லை" என்று கூறுகின்றனர். இந்த மாயை பால் தயிராவது போல் முற்றும் பரிணமத்தையடைகிறதில்லை. நெய்யிற் புழுவுண்டாதல் போல் ஏக தேசத்தில் பரிணமத்தை யடைகின்றதென்று அறிந்து கொள்க. (௧௨௦இ)

(௧௨௧இ) சிருட்டி, திதி, லயம் என்னுமிவை மாயையினிடத்திலிருக்கின்றன. புவனத்தை முடிவாக வுடைய விகாரமா

ணது தத்துவ முதலிய வற்றின் ரூபமாக தன்னிடத்திலேயே இருக்கின்றதென்பதாம்.

(உரை) இவ்வாறு மேலான முதற்காரணமாயிருப்பதால் மாயையினிடத்திலேயே உலகத்தின் சிருட்டி முதலியன இருக்கின்றன. புவன முதலிய விகாரமானது தத்துவ முதலிய சொரூபமாகத் தன்னிடமிருக்கின்றதென்பது கொண்டு தத்துவம், பாவம், பூதம், புவனமென்னும் இவை ரூபமான எல்லாக் காரிய வுலகங்களும் மாயையின் விகாரமென்றே அறிந்து கொள்ள வேண்டும். சுத்த ரூபமான தத்துவ முதலியனவும் அவற்றிற்கு முதற்காரணமான சுத்த மாயையும் ஆகமங்களிற் கூறப்படுகின்றனவே யெனின், அஃதுண்மையே. அவற்றை யடைதலானது வித்தியேசுவரர் முதலாயினோருக்கு உரியதாயிருத்தலால் அபாமூர்த்தியாகும். ஆகையால் போகத்திற்குச் சாதனங்களாக இவ்விடத்தில் அவை கூறப்படாமைபற்றி விரோத மின்மை காண்க. (கஉகஇ)

(கஉஉ) (இவ்விடத்தில்) சிருட்டி திதி யிரண்டுங் கூறப்பட்டன. இலயமானது சிருட்டிக்கெதிர் மறையாக உண்டாகின்றதென்பதாம்.

(உரை) ஒவ்வொரு தத்துவங்களுக்கும் தோற்றமுறை கூறினமையாலும் தொழிலைக்காட்டினமையாலும் சிருட்டியுந் திதியுங் கூறப்பட்டன. இலயமாவது சிருட்டிக்கெதிர் மறையாகத் தத்தங் காரணங்களில் ஒடுக்கத்தை யடைவதேயாகுமென்பது பொருள். (கஉஉ)

(கஉஉஇ) சம்சாரம் அநாதியானமையால் இந்தச்சிருட்டி முதலியவை யளவிடப்படவில்லை யென்பதாம்.

(உரை) இந்தச் சம்சாரம் அநாதியென்பது பொருள். சிருட்டி திதி இரண்டும் போகத்திற்குச் சாதனங்களானமையால் ஆன்மாக்களுக்கு உபகாரமாகின்றன. இலயம் ஈசுவரனால் எதற்காகச் செய்யப்படுகின்றதெனின், கூறுதும். புருடனுக்கு அள

வற்ற போகங்களை யிடைவிடாது உண்டுபண்ணினமையால் மாயை குறைந்த சத்தியையுடையதாக விருக்கின்றது. ஆகை யால் புருடர்களுக்குப் போகத்தைக் கொடுத்தமையால் சிரமத்தை யடைந்த பெண்ணினது குறைந்த சத்தியானது நித்திரையினால் எவ்வாறு நீங்கி அச்சத்திவலிமையை யடைகின்றதோ, அவ் வாறே மாயைக்குக் குறைந்த சத்தியை விருத்தி செய்தற் பொருட்டும், ஆன்மாக்களுக்குப் போகானுபவத்தாலுண்டான இளைப்பு நீங்குதற்பொருட்டும், கன்மம் பக்குவமாதற் பொருட் டும், சங்காரம் நிகழ்கின்றமையால் ஆன்மாவிற்கு உபகாரமில்லை யென்னுந் தோஷமில்லாமை காண்க. இவ்வாறே மிருகேந்திரத் திலும் "சம்சாரத்தினால் வருத்தமுற்ற ஆன்மாக்களுக்கு இளைப்பு நீக்குதற்பொருட்டு அனைவருக்கும் நன்மை புரியும் சிவபெருமான் தநுகாரணாதிகளை ஆன்மாக்களுடன்கூட மாயையில் ஒடுக்கி அந்த மாயையினையும் கடந்திருக்கின்றார். அந்த ஒடுக்க நிலையிலும் பக்குவத்திற்குத் தக்கவாறு அறிவிக்க வேண்டியவர்களை அறிவித் துக்கொண்டும், தடுக்கவேண்டியவர்களைத் தடுத்துக்கொண்டும், கன்மஞ் செய்தவர்களுடைய கன்மங்களைப் பக்குவமாகச் செய்து கொண்டும், மாயாசத்திகளைத் தோற்றுதற்குரியதாய்ச் செய்து கொண்டும், சித்தாயும் அசித்தாயுமுள்ள எல்லாப் பொருள்களை யும் முறையாகப் பார்த்துக்கொண்டு மிருக்கின்றார்" என்று கூறப் பட்டிருக்கின்றது. (கஉஉ இ)

(அ—கை) இவ்வாறு கூறப்பட்ட ஆன்மாக்களுடைய சாதனத்துடன் கூடின போகத்தை முடித்துக் காட்டுதற்காக அந்த ஆன்மாவிற்கே மலரூபமான பாசத்தின் சம்பந்தம் உண் டென்று கூறுகின்றார்.

(கஉரு இ) புருடர்களுடைய போக்கியமானது மாயையின் விகாரமாகும். இது சேதனமன்று. சேதனனை புருடன் சுதந்தனல்லாமையால் மாயையினின்று முண்டான சாதனங்களு டன் கூடியே அந்தப் போக்கியத்தை யனுபவிக்கின்றானென் பதாம்.

(உரை) மேலே கூறியவாறு சுக முதலியவற்றின் ரூபமாயும் புத்திபோத ரூபமாயுமிருக்கும் போக்கியமானது மாயையின் காரியமேயாகும். இவ்வாறன்றி ஆன்மாவினிடத்துக் குணரூபமாகவில்லை. ஏதனாலெனின், ஆன்மா அறிவுடைப் பொருளாகவிருக்கின்றான்; போக்கியமானது குணரூபமாக ஆன்மாவினிடத்தில் சமவாய சம்பந்தத்துடன் இருக்கின்றதென்று கூறின், பரிணாமத்தன்மை முதலிய குற்றம் ஆன்மாவிற்கு வந்துவிடுமாதலாலென்க. அந்தப் போக்கியத்தைச் சேதனனான ஆன்மாவே அனுபவிக்கின்றான். அந்தப் புருடனானவன் பின்னர்க் கூறப்படுமாறு சுத்தனல்லாமையாலும், மறைக்கப்பட்ட ஞானக்கிரியா சத்திகளையுடையவனாகையாலும், மாயையினின்று முண்டான கலை முதலிய தத்துவங்களுடன் கூடிக்கொண்டே போக்கியத்தை யறிவதற்குச் சத்தனாகவாகின்றான். ஏதனாலெனின், காரியமான கரணமின்றிச் சிற்றறிவு முதலியனவும் காணப்படாமையாலென்க. (௧௨௩-இ)

(அ—கை) இனி யாதுகாரணத்தால் இவன சுத்தனாகவிருக்கின்றானென்பதைப் பற்றிக் கூறுகின்றார்.

(௧௨௪) ஆன்மா விடயங்களையுடைத்தாயிருக்குந்தன்மை ரூபமான மலத்தினால் மறைக்கப்பட்ட சர்வ விடயமான ஞானக்கிரியா சத்திகளை உடைத்தாயிருக்கின்றமையால் அசுத்தனென்பதாம்.

(உரை) இந்த ஆன்மாவானவன் சிவனைப்போல் எல்லாவற்றையும் விடயமாகக்கொள்ளும் ஞானக்கிரியா சத்திகளுடன் கூடினவனாயினும் ஏகதேச விடயமான விஞ்ஞான முதலியவற்றிற்காகக் கலாதிகளைத் துணையாகக் கொள்கின்றான். முத்தனுக்குப் போக்திருத்தன்மையின்மையும் எல்லாவற்றையும் விடயமாகக் கொள்ளும் ஞானக்கிரியா சத்திகளுடன் கூடியிருக்குந் தன்மையுங் கேட்கப்படுகின்றது. அதுகொண்டு இந்த ஆன்மாவானவன் விடயங்களையுடைத்தாயிருக்கும் தன்மையாகிய போக்திருத்தன்மைக்கு மலம் ஏதுவானமையால் விடயங்களையுடைத்தாயிருக்குந் தன்மை ரூபமான மலத்தினால் சூழப்பட்ட

வனென்று நிச்சயிக்கப்படுகிறான். இவ்வாறே "மலத்தினால் போக்திருத்தன்மைக் கூறப்பட்டது" என்று கூறப்படுகின்றது. அதுகொண்டே இந்த ஆன்மா அசுத்தன். இவ்வாறே ஸ்ரீசுவாயம்புவத்தில் "புமானுக்கு அசுத்தியில்லையாயின் அவனுக்கிருக்கும் போகத்திலுள்ள பற்றுதலானது எதனாற் செய்யப்பட்டதாகும்" என்று கூறப்பட்டிருக்கின்றது. (கஉச)

(கஉசஇ) (ஆகவே) மாயையிலிருக்கும் கன்மரூபமான விருப்பத்தின் வழியாக இந்தப் புருடன் மாயையை யனுசரிக்கின்றானென்பதாம்.

(உரை) கன்மமானது உழுதல் முதலியவைபோல் ஆன்மாவிற்குச் சுத்தஞ் செய்வதாக வாகாமையால் சம்சார நிலையில் புத்தியையடைந்ததாயும், பிரளயத்தில் புத்தி நசித்தாலும் உலகத்திற்குப் பீஜமான மாயையில் இயங்கிக்கொண்டிருத்தலால் அதிலிருக்கிறதாயும், பரிபாகத்தால் போகத்தையுண்டுபண்ணுகிறதாயுமுள்ள கன்மரூபமான விருப்பத்தின் வழியாகப் போகசாதன முதலியவற்றின் ரூபமாகப் பரிணமித்தமாயையை யிந்தப் புருடனனுசரிக்கின்றான். (கஉசஇ)

(அ—கை) இவ்விடத்தில் கன்மமேயமையும் மலம் வேண்டா மென்னும் புறமதத்தைக் கூறுகின்றார்.

(கஉருஇ) சென்மாந்திரத்தில் செய்யப்பட்ட கன்மமானது சாதி முதலிய பலன்களை மனிதருக்குக் கொடுக்கக் கூடியது. புருடனுக்குக் கற்பிக்கப்பட்ட மலமானது அந்தக் கன்ம மிருக்கும் பொழுது அதிகப்படுகின்ற தென்பதாம்.

(உரை) காரியமான சரீரத்தின் பந்த மானது வித்து முளைகளின் நியாயத்தை யனுசரித்து அநாதியாயிருக்கின்றமையால் சாதி ஆயுள் போக மென்னு மிவற்றைக் கொடுக்கக்கூடிய கன்மங்களே தனது பலனான போகத்திற்காக ஆன்மாவிற்குச் சரீரச்சேர்க்கையைச் செய்யட்டும். மலஞ் செய்வதாகக்கொள்ள வேண்டாம். உம்மாலும் மலத்தை யொப்புக்கொண்டு விசித்திரமான போகங்

-கள் வேறு வழியாகப் பொருந்தாமையால் கன்மமு மொப்புக் கொள்ளப்படுகின்றது. படவே மிகையென்னுங் குற்றம் உண்டாகின்றமையால் கன்மமே அமையும். இன்றியமையாமற் கொள்ளத்தகுந்தது பிறிதொன்றுகொள்ள வேண்டுமென்பதைத் தடுக்குமென்று கூறுகின்றனர். (கஉ௫இ)

(அ—கை) மலம் வேண்டாமென்னும் புறமதத்தை மறுக்கின்றார்.

(கஉ௬இ) கன்மத்திற்கும் பிறப்பு முதலிய வற்றை யுண்டு பண்ணும் சத்தியானது மலத்தை யின்றி இல்லை. அஞ்ஞான மற்ற முத்தான் மாவிற்குப் பிறப்பு உண்டென்பது ஓரிடத்துங் காணப்படுகிறதில்லை யென்பதாம்.

(உரை) அஞ்ஞானத்திற்கு ஏதுவான மலமில்லாத முத்தான்மாவிற்குப் பிறப்புக் காணப்படாமையாலும், கன்மானுட்டானமுங் காணப்படாமையாலும், மலமுள்ளவனுக்கே கன்மத்தைச் சம்பாதித்தலும் அதன் போகமு முபயோகப்படுகின்றன.

(கஉ௬இ)

(அ—கை) இவ்வாறயின் மலமே பிறப்பு முதலியவற்றிற்கு ஏதுவாகட்டும்; கன்மத்தினாற் பயனென்னை யென்னும் புறமதத்தைக் கூறுகின்றார்.

(கஉ௭இ) விடயங்களை யுடைத்தா யிருக்குந்தன்மை ரூபமான மல மொன்றே ஆன்மாவிற்கமையும். கன்மத்தைக் கொள்ளுதலாற் பயனில்லை. பிறப்பு முதலியவற்றின் சம்பந்தத்தை மலத்தினாலேயே நிச்சயமாக அடைகின்றமையாலென்பதாம்.

(கஉ௭இ)

(அ—கை) கன்மம் வேண்டாமென்னும் புறமதத்தை மறுக்கின்றார்.

(கஉ௮இ) கன்மமில்லாத விஞ்ஞான கேவலர்களுக்கு மலமிருந்தும் பிறப்பு முதலியன காணப்படவில்லை. ஆகையால்

இவ்விடத்தில் மலமுங் கன்மமுமாகிய விரண்டும் பிறப்பு முதலிய வற்றிற்குக் காரணங்களாகும் என்பதாம்.

(உரை) மலமிருந்தும் கன்மமில்லாத விஞ்ஞான கேவலர் களுக்குப் பிறப்பு முதலியன காணப்படாமையால் மலங்கன்ம மிர ண்டும் மாயையின் சேர்க்கைக்குக் காரணமாகு மென்பது பொ ருள். (கஉஅஇ)

(அ—கை) சிருட்டிக்கு முன்னர் நிட்களத்தன்மையும் சே தனத்தன்மையும் ஆன்மாவிற்கிருப்பதால், சிவனுக்குப் போல் ஆன்மாவிற்கும் அஞ்ஞானத்தன்மை பொருந்துகிறதில்லை யென் னும் பிறர் கூற்றை மறுக்கின்றார்.

(கஉகூஇ) ஆன்மா, ஞானக்கிரியை யென்னுங் குணங்களை யுடையனாகையால் சிருட்டிக்கு முன்னர் நிட்களனாக விருக்கின் றான். அவ்வாறாகையால் அஞ்ஞான சம்பந்தம் ஆன்மாவிற்கில்லை. இவ்வாறு கூறுவது பொய் என்பதாம்.

(உரை) நிட்களனாயின் சிவனுக்குப் போல் கலை முதலிய தத்துவங்களின் சம்பந்தமும் ஆன்மாவிற்குப் பொருந்தாது. கலா சம்பந்தங் காணப்படுகின்றமையால் அச்சம்பந்தம் வேறு விதமாகப் பொருந்தாமைக் கொண்டு ஆன்மாவிற்கு மல முண் டென்பது ஒப்புக்கொள்ள வேண்டும். (கஉகூஇ)

(அ—கை) இன்னும் புறமதத்தையே கூறுகின்றார்.

(கநOஇ) ஆன்மா எங்குஞ் செல்லுகின்றமையால் எல்லா வற்றையும் அறியும் ஞானக்கிரியைகள் இவனுக்குண்டென்பது ஒப்புக்கொள்ள வேண்டும். ஆகையால் இந்த ஆன்மா சர்வஞ் ஞனும் சர்வ கருத்தாவாயுமிருந்து கொண்டு காரணமான கலா சம்பந்தமின்றி மகிட்சியுள்ளவனாக இருக்கிறான் என்பதாம். (கநOஇ)

(அ—கை) சிற்றறிவு முதலியவற்றிற்கும் கலாதி சம்பந்தம் வேண்டப் படுவதால் இவ்வாறு கூறுதல் பொருந்ாதென்று கூறுகின்றார்.

(கரு௧) கலை முதலிய துணைகள் இல்லாமையால் ஆன்மாவினுடைய ஞானக்கிரியா சத்திகள் விளங்கித் தொழிற் படுகிறதில்லை யென்பதாம். (கரு௧)

(அ—கை) மறைப்பில்லாத பொருளுக்கு இந்தக் கலா சம்பந்தம் பொருந்துகிறதில்லை யென்று கூறுகின்றார்.

(கரு௧இ) மறைப்பில்லாத சூரியனொளியானது பிறிதொரு ஒளியை யெதிர் பார்க்கிறதில்லை யென்பதாம். (கரு௧இ)

(கரு௨) (ஆகவே) மலமானது அநாதியாயும், அநாதியான சம்பந்தத்தையுடையதாயும், அனைவருக்கும் பொதுவாயும், நித்தியமாயுமிருக்கின்றதென்பதாம்.

(உரை) இந்த மலம் ஆன்மாக்களுக்கு அநாதியாயும், அநாதியான சம்பந்தத்தையுடையதாயும், அநாதியாயே மறைக்கிறதாயும், அனைவருக்கு மொன்றாயுமிருக்கிறது. ஆகையால் இந்த மலத்தை நித்தியமெனவு மொப்புக் கொள்ளவேண்டும். (கரு௨)

(அ—கை.) இவ்வாறாயின் மலம் நித்தியமானமையால் எக்காலத்தும் ஆன்மாக்களைவிட்டு நீங்காது. நீங்கினும் மலமொன்றாகையால் ஒரு புருடனுக்கு முத்தியுண்டாகும்பொழுது அனைவருக்கும் முத்தியுண்டாகவேண்டும். இவ்வா றாசங்கிப்பார்க்குக் கூறுகின்றார்.

(கரு௨இ.) ஒவ்வொரு புருடனிடத்தும் நியமமாயும், தத்தங்காலவெல்லையில் நீங்குஞ் சத்திகளையுடையதாயுமிருக்கின்றதென்பதாம்.

(உரை.) மலமானது ஒவ்வொரு புருடனிடத்தும் நிச்சயமாயும் அளவற்ற சத்திகளுடன் கூடினதாயுமிருக்கின்றமையால் ஒரு சத்திக்குப் பரிபாகவசத்தால் தடையேற்பட்டபொழுது அந்த ஆன்மாவிற்குத்தான் முத்தியடைதல் கூடும். ஏனையவற்

நிற்குக் கூடாது. இவ்வாறே "ஒவ்வொரு புருடனிடத்தும் இருக்கிறதாயும் தத்தங்காலத்தின் முடிவில் நசிக்குஞ் சத்திகளையுடையதாயுமிருக்கின்றது" என்று பிறருங்கூறுகின்றனர். (கஙஉ இ)

(அ—கை.) பிரகிருதி சம்பந்தமான மலமே விபரீத ஞானரூபமாயும், மகாமோகமென்னும் பெயருடனுமிருக்கின்றது. அந்தமலமிருப்பதுகொண்டே கலை முதலிய துணையை விரும்புதலும் கன்மானுட்டானமும் அந்தச் சத்திக்குப் பொருந்துகின்றதென்பார்க்குக் கூறுகின்றார்.

(கஙங இ.) மகாமோகமுண்டாவதற்கு முன் இந்த ஆன்மா நின்மலனாயிருக்கின்றான். அதனால் சிவனைப்போல் மறைப்பில்லாத புருடனானவன் பிரகிருதிசம்பந்தமான மலத்தை நீக்குதற்கு முடியாதவனாகவிருக்கின்றானென்பதாம்.

(உரை.) கலை முதலியவற்றின் சம்பந்தம் ஏற்பட்டபின்னரன் மகாமோகமுண்டாகின்றது. உன்மதத்தில் சிருட்டியினாரம்பத்தில் ஆன்மா நின்மலனாயிருக்கின்றமையால், சிவனைப்போல் மறைப்பில்லாத ஆன்மாவானவன், கலைமுதலியவற்றின் றுணையால் பிரகிருதி சம்பந்தமான அந்தமலத்தை நீக்குதற்கு முடியாதவனாகவிருக்கின்றான். ஆகையால் அநாதியான மலத்துடன் அநாதியாகவே ஆன்மாவிற்குச் சம்பந்தமுண்டென்பது ஒப்புக்கொள்ள வேண்டும். (கஙங இ)

(கஙச இ—கஙரு இ) ஆன்மாவிற்கும் மலத்திற்குமுள்ள சம்பந்தத்தை இடையில் உண்டானதாகக்கொள்ளின் அவ்வாறுண்டாதற்கும் ஒரு காரணஞ் சொல்லவேண்டும். அவ்வாறே மேலுஞ் சென்று முடிவின்மையென்னுங் குற்றத்திற்கிடனாம். ஆன்மாவிற்கும் மலத்திற்குமுள்ள சம்பந்தமானது ஏதுவின்றி யிடையே யுண்டாகிறதென்று சொல்லின் கலையின் சம்பந்தமும் ஏதுவின்றியே இடையில் உண்டாகவேண்டும். ஆகவே ஆன்மாக்களுக்கு முத்தியே இல்லாமற் போய்விடும். ஈசுவரனுக்கும் ஈசுவரத்தன்மை இல்லாமை நேரிடுமென்பதாம்,

(உரை.) மலத்தின் சேர்க்கையானது ஏதுவின்றியே இடையிலுண்டாவதென்று கொள்ளின், சரீரமுதலியவற்றின் சேர்க்கையும் ஏதுவின்றியே இடையிலுண்டாகின்றதென்று கொள்ளவேண்டுமாகையால், முத்தனுக்கும் மீண்டுஞ் சம்சாரச் சேர்க்கையுண்டாகி முத்தியில்லாமற் போய்விடும். ஈசுவரனுக்கும் மலத்தின் சேர்க்கையுண்டாகி ஈசுவரத் தன்மையில்லையாய்விடும். ஆகவே சம்சாரத்திற்கேதுவான மலசம்பந்தம் அநாதியாகவே ஆன்மாவிற்கு ஒப்புக்கொள்ளவேண்டுமென்க. (கநச இ—கநரு இ)

(அ—கை.) இவ்வாறு மலத்திற்கு ஒவ்வொருபுருடனிடத்தும் இருக்கும் அசாதாரணத்தன்மைபற்றி அநேகத்தன்மையை யொப்புக்கொள்ளின், சடமாயுமநேகமாயு மிருப்பதுபற்றிக் கடமுதலியவற்றிற்குப்போல் இதற்கு அநித்தியத்தன்மைவந்துவிடும். விடவே அநாதி யென்பதில்லையாய் முன்னர்க்கூறப்பட்ட முடிவின்மை முத்தியின்மையென்னும் குற்றங்கட் கிடனாமென்று கூறுகின்றார். அசாதாரணம்—சிறப்பு.

(கநசு இ) மலம் ஒவ்வொரு புருடனிடத்தும் இருப்பதாகக் கூறின் சடத்தன்மையும் அநேகத்தன்மையு மிருப்பதுபற்றித்தோன்றி யழிவதாக ஆகிவிடும். விடவே முன்னர்க்கூறப் பட்ட குற்றங்கள் நேரிடுமென்பதாம். (கநசு இ)

(அ—கை.) ஆன்மாவிற்கும் மலத்திற்குமுண்டான இந்தச் சம்பந்தம் அநாதியாயிருக்கின்றமையால் இதற்கு நாசங்கிடையாது. நாசமுண்டென்று கொள்ளின் எல்லாவற்றிற்கும் அநித்தியத்தன்மை வந்து விடுமென்று கூறுகின்றார்.

(கநஎ இ) அநாதியான மலத்துடன் அநாதியாகவே ஆன்மாவிற்குண்டான சம்பந்தத்தை யநித்தியமாகக் கொள்ளின் உற்பத்தியில்லாத அநாதியான மாயை, சிவன், ஆன்மாவென்னும் பொருள்களுக்கும் நாசமேற்படுமென்பதாம். (கநஎ இ)

(அ—கை) இவ்வாறு முன்னர் மேற்கொள்ளப்பட்ட மலத்திற்குண்டான அநாதித்தன்மையினையும், சாதாரணத்தன்மையி

ளையும், நசிக்காமலிருக்குந்தன்மையினையும் சாதித்துவிட்டு இனி அம்மலத்திற்கு அளவற்ற சத்தியுடன் கூடியிருக்குந்தன்மையினை யும் சாதிக்கின்றார்.

(௧௩-அ) ஆன்மாவின் குணத்தைத்தடுக்கும் இந்தமலத்தின் சத்திகள் ஒவ்வொரு புருடனிடத்தும் இன்றியமையாததாயிருக்கு மென்பதாம்.

(உரை) ஆன்மாவின் குணமென்பது ஆன்மாவின் ஞானக் கிரியாசத்திகள். இது முன்னரே கூறப்பட்டிருக்கின்றது.

(௧௩-அ)

(அ—கை) காணப்படும் போகவேறுபாடானது வேறுவழி யாகப் பொருந்தாமையால் அந்த மலசத்திகளுக்குப் பரிபாக காலத்தில் வேறுபாடானது சித்திக்கின்றதென்று கூறுகின்றார்.

(௧௩-௯) மறைத்துக்கொண்டிருக்கும் இந்த மலசத்திகள் கெடுதற்குக் காலம் நியதிகள் கிடையா. இவ்வாறு கூறவில்லை யாயின் எல்லா ஆன்மாக்களுக்கும் ஒரேகாலத்தில் முத்தி கிடைக் கவேண்டும். முத்தியோ அவ்வாறு கிடைக்கவில்லை. ஆகையால் அந்த மலசத்திகள் சூக்குமரூபமாக இருக்கின்றன வென்று ஒப் புக்கொள்ள வேண்டுமென்பதாம்.

(உரை) மலம் அநாதியாகவே மறைக்கின்றமையால் அந்த மலமே ஆன்மாவிற்கு உடன்றோன்றிய பாசமாகும். மாயை முத லியனவோ வெனின், "ஆன்மாவிற்கு உண்டாகும் மாயாகாரியங்க ளனைத்தும் மலமிருத்தலால் உண்டாகின்றன" என்பது முதலிய சுவாயம்புவ வாக்கியங்களால் இடையில் வந்தனவாகவே அறிந்து கொள்ளவேண்டும்.

(௧௩-௯)

(அ—கை) மதங்கமுதலிய நூல்களில் மோகம், மதம், அராகம், துக்கம், சோஷ மென்னும் இவை மலத்தின் காரியமாய் இருக்கின்றனவென்றும் இவையே உடன்தோன்றிய மலமாயிருக் கின்றனவென்றும் கூறப்படுகின்றதே என்பார்க்குக் கூறுகின்றார்.

(கசoஇ) மோகமுதலிய வைந்தையும் மலத்தின் காரியமாகக் கொள்ளக்கூடாது. கலை முதலியவற்றின் சம்பந்தமில்லாத ஆன்மாக்களிடத்தில் மலமிருந்தும் அதன் காரியங்களான மோக முதலியன எக்காலத்தும் காணப்படாமையாலென்பதாம்.

(உரை) விஞ்ஞானகலர் பிரளயாகலர்களுக்குக் கலை முதலியவற்றின் சம்பந்தமில்லாமையால் மலமிருந்தும் மோகம் முதலியன காணப்படவில்லை. சகலரிடத்தில் மோகம் முதலியன காணப்படுகின்றன. ஆகையால் ஞானக்கிரியைகளை மறைத்தல் மலத்தின் காரியமாதல்போல, மோகமுதலியன மலத்தின் காரியமென்பது கூடாது. மதங்கமுதலியவற்றில் கூறப்பட்டதன் கருத்தாவது—மாயையை முதற்காரணமாகக் கொண்டதாயும், ஆன்மாவல்லாத பொருள்களில் ஆன்மாபிமானஞ் செய்வதாயுமுள்ள இந்த மோகமுதலியன மலமிருக்கும் பொழுதே உண்டாகின்றமையாலும், கலை முதலியவற்றின் சேர்க்கையிருக்கும்பொழுதும் நின்மலர்களான மாயாகருப்பாதி காரிகள் முதலானவரிடத்தில் அந்த மோகமுதலியன காணப்படாமையாலும், துணைக்காரணமான அந்த மலத்துடன் தோன்றுகின்றனவென்பது கொண்டு சகசமலத்தை யேதுவாக வுடைத்தாயிருக்கின்றபடியால் சகசசப்தத்தாற் கூறப்படுகின்றன. மலத்தை உபாதானமாய்க் கொண்டிருக்குந் தன்மைபற்றி யிவற்றிற்குச் சகச மலத்தன்மை கூறப்படவில்லை. ஆகையால் விரோதமின்மைகாண்க. (கசoஇ)

(அ—கை) மோகமுதலியவற்றிற்கு மலம் முதற்காரணமாயிருப்பினும் இவை பிரளயகேவல நிலையில் வெளிப்பட்டுத் தோன்றவில்லை. பின்னர்க் கலை முதலியவற்றின் சம்பந்தத்தால் வெளிப்பட்டுத் தோன்றுகின்றன வென்று கொண்டால் குற்றமென்னை யென்பார்க்குக் கூறுகின்றார்.

(கசக—கசஉ) போக சாதனங்களின் சம்பந்தத்தால் வெளிப்பட்டுத் தோன்றுகின்றன வென்பது பொருத்தமன்று. உன்னால் குணங்களின் றொழில்களினின்றும் மோகம் முதலியன வேறாகக் கொள்ளப்படவில்லை யென்பதாம்.

(உரை) மதம் முதலியன, குணங்களின் றொழில்களினின்றும் வேறாக உன்னால் ஒப்புக்கொள்ளப்படாமையால் அவை போக சாதனங்களின் சம்பந்தத்தால் பின்னர் வெளிப்பட்டுத் தோன்றுகின்றன வென்று கூறுதல் பொருந்தாது. மதமுதலியவற்றிற்கு மலத்தை முதற்காரணமாகக் கொள்ளின் அந்த மலம் எக்காலத்தும் ஒரே ரூபமாயிருத்தலால் தோற்றந் தோற்றமின்மை யென்னும் பேதமுண்டாகாமைபற்றி ஞானக்கிரியைகளை மறைக்கும் அதன் காரியம் சங்கார நிலையிலும் இருத்தல்போல மதம் முதலியவையும் அந்தச் சங்கார நிலையிலறியப்படவேண்டும். அவையோ அந்நிலையிலறியப்படவில்லை. போக சாதனங்களின் சம்பந்தத்துக்குப் பின்னர் புருடர்களுடைய அந்தக்கரணத்தில் இருக்கின்றவையாகவே அறியப்படுகின்றன. ஆகையால் துணைக்காரணமான மலத்துடன் மாயாகாரியங்களை முதற்காரணங்களாகக்கொண்டு மத முதலியன தோன்றுவனவா யொப்புக்கொள்ள வேண்டும். (கசக—கசஉ)

(அ—கை) இனி இந்த மத முதலியன குண சொரூபமாகவே இருக்கின்றனவென்று கூறுகின்றார்.

(கசங) மதம் மோகமென்னு மிவை தாமசங்களாயும், பற்றுதல் சாத்துவிகமாயும், தாபம் மயக்கமென்னும் மிவை இராசதங்களாயுமிருக்கின்றன வென்பதாம்.

(உரை) ஆகவே அந்தக் கரணத்திலிருக்கும் குணங்களின் தொழில்களே இந்த மதம் முதலியனவாகும். இந்தக் குணங்களினும் வேறான மலத்தின் தொழில்களாக மத முதலிய பெயருடன் ஒன்றும் ஒரு நிலையிலும் ஆன்மாவினிடத்துக் காணப்படவில்லை. (கசங)

(அ—கை) ஆகையால் குணங்களினும் வேறாக மதமுதலியனவில்லை யென்று கூறுகின்றார்.

(கசங இ) இந்தக் குணங்களின் வேறாக மூலமாகிய மலத்தின் தொழில்களாக மதமுதலியன வில்லையென்பதாம். (கசங இ)

(கசசஇ) ஆகவே தடுக்குஞ் சத்திகளைத் தவிர ஒரு தருமமும் மலத்திற்குக் கிடையாது. கன்ம சமஸ்காரத்துடன் கூடின மலத்திற்குச் சம்சாரத்திற்கு ஏதுவாயிருக்குந் தன்மை சித்திக்கின்றதென்பதாம்.

(உரை) மலமாத்திரத்திற்கு ஞானக்கிரியைகளை மறைக்குந் தன்மையும், கன்ம வாசனையுடன் கூடியிருக்கும் மலத்திற்கு சம்சாரத்திற் கேதுவாயிருக்குந் தன்மையும் யுத்தியினால் சித்திக்கின்றன. பிறிதொரு காரியமுமில்லை யென்பது பொருள். (கசசஇ)

(அ—கை) இவ்வாறு மல சொரூபத்தைக் கூறி யிவ்விடயத்தை முடித்துக் காட்டுகின்றார்.

(கசரு) யாதொன்றின் சம்பந்தத்தால் ஆன்மா பசுவாயிருக்கின்றதோ அத்தகைய பசுவானது இவ்வாறு கூறப்பட்டதென்பதாம்.

(உரை) பசுவென்னுஞ் சொல் மலமென்னும் பொருளை அறிவிப்பதாக ரௌரவ முதலியவற்றில் காணப்படுகின்றது. இந்த மலம் தனிமையான ஒரு தத்துவமாதலில்லை. பசு தத்துவத்தினுள்ளேயே இது அடங்குகின்றது. எதனாலெனின், இம்மலத்தையின்றி ஆன்மாக்களுக்குப் பசுத்தன்மை பொருந்தாமையாலும், மலத்தினால் அநாதியாகவே மறைக்கப்பட்டிருக்கின்றமையாலுமென்க. அன்றியும் சிவபெருமானுடைய சிருட்டி முதலியவற்றால் ஆன்மாக்கள் போகத்தை யனுபவித்தலும், போக சாதனங்களான கலை முதலியவற்றைத் தோற்றுவித்தலும், அவற்றை விருத்தி செய்தலுமாகிய மாயையின் வியாபாரமும், போக்கியங்களை யனுபவித்தல் ரூபமான பசுக்களின் வியாபாரமும் இந்தப் பிரகரணத்திற் கூறப்பட்டவையாகும். இவற்றினுடைய இந்த வியாபாரங்கள் ஆன்மாவை மறைக்கும் மலத்தினாலேயே நிகழ்கின்றன. எதனாலெனின், மலமிருக்கும் பொழுதுதான் இவையனைத்தும் நிகழுமாதலாலென்க. (கசரு)

(அ—கை) மத முதலிய துன்பங்கள் புருடர்களிடத்தில் இருக்கின்றன வென்னு மிவ்விடயத்தை முடித்துவிட்டு அதிகார

பேதத்தினுல் இந்த மத முதலியவற்றின் வியாபார பேதங்களைக் கூறுகின்ருர்.

(கசகு) மாயாதத்துவத்திலிருப்பவருக்கு மத முதலிய துன்பங்கள் காரியத்தைச் செய்வனவல்ல. யோகிகளுக்கு இடையில் இவற்றின் வியாபாரஙகள் தடுக்கப்படுகின்றன. விடயப் பற்றுள்ளவருக்குப் பலவிதமாயும் கம்பீரத்தோடு கூடியும் காரியத்தைச் செய்கின்றன வென்பதாம்.

(உரை) மாயாதத்துவத்தி லொடுங்கிய பிரளயாகலருக்குக் குணமுதலிய தத்துவங்கள் நீங்கி மாயையினிடத்து ஒடுங்கியிருத்தலால் இந்தக் கிலேசங்கள் ஒரு காரியத்தையும் செய்வனவல்ல. யோகிகளுக்கோவெனின், கிலேசங்களிருப்பினும் யோகவலிமையால் இடையே தடுக்கப்படுகின்றன. விடயப்பற்றுள்ள சகலர்களான பசுக்களுக்கோ வெனின், பலவிதமான தனது வியாபாரங்களை யுடையனவாயிருக்கின்றன. மூலத்தில் பலவிதமென்னும் பொருள் குறித்த விசித்திரமென்னுஞ் சொல்லை விச்சின்னமென்று பாடபேதங் கொள்ளின், தோன்றுதல் அழிதல் ரூபமாயுமென்று பொருள் கொள்ளல் வேண்டும்.

இவ்வாறு முன்னர் மேற்கொள்ளப்பட்ட சாதனத்துடன் கூடிய போகம்மோக்ஷமிரண்டனுள் போகமானது இந்தக் காரிகையிற் கூறப்பட்டது. அதுபற்றியே போககாரிகை யென்னும் பெயருடன் இந்நூல் முற்றுப்பெற்றது மோக்ஷமோவெனில், சாதனத்துடன் கூட மோக்ஷகாரிகை யென்னும் வேறு பிரகரணத்தில் கூறப்போகின்ருர்.

ஸ்ரீமத் கேடகரின் புதல்வரான சத்தியோஜ்யோதி சிவாசாரியார் இந்தப் போக காரிகையால் சித்தாந்த சாத்திரத்தில் சித்தித்த போகத்தைச் சாதனங்களுடன் சுருக்கமாகவும் நன்ருகவுங் கூறினுர். அவருடைய வாக்குக்களை யாராய்ந்து அஞ்ஞானம், நீங்கினவராயும் ஆசிரிய சிரேட்டராயுமுள்ள அகோரசிவாசாரியால் இந்த விருத்தியுரை செய்யப்பெற்றது.

போககாரிகைமூலமும், விருத்தியுரையும்
முற்றுப்பெற்றன.



உ

சிவமயம்

ஸ்ரீபட்டராமகண்டராலியற்றப்பெற்ற

# நாதகாரிகை மூலமும்,

இதற்கு

ஸ்ரீ அகோரசிவாசாரியராலியற்றப்பெற்ற

# விருத்தியுரையும்.



(தமிழ் மொழிபெயர்ப்பு)

## உரைமங்கலம்.

நாதத்தைக்கடந்த சிவபெருமானை நமஸ்கரித்து நாதஞானஞ் சித்திப்பதின் பொருட்டு ஸ்ரீ பட்டராமகண்டராலியற்றப்பெற்ற நாதகாரிகைக்கு விருத்தியுரை செய்யத் தொடங்குகின்றேனென் பதாம்.

## நூல்மங்கலம்.

### மூலம்

(க) புத்தி, அஸ்மித்தன்மை, மனம், வித்தை, அராகம், கலை, மாயை, புருடன், சத்தியென்னுமிவற்றினும், தொனிகளினும் வேறாக நாதமென்பதொன்று அறியப்படுகின்றதென்பதாம்.

### உரை

அஸ்மித்தன்மையென்பது அகங்காரம். புத்தி முதல் மாயையீறாகவுள்ள தத்துவங்கள் தமது காரியங்களுக்காகச் சித்திக்கின்ற

மையானும், பிறிதொரு காரியத்திற்கு ஏதுவாவதில் பிரமாண மில்லாமையானும், புருடனும் அதன் சத்தியும் அவிகாரியான மையால் அவற்றிற்கு வாக்குடன் சமவாய சம்பந்தம் பொருந்தா மையானும், தூலமான தொனிகள் உற்பத்தி நாசங்களுடன் கூடியவையாகையால் வேறு காரணத்தை விரும்புகின்றமையா னும், தொனிகளினும் என்றவும்மையால் அந்தத் தொனிகளி னின்று முண்டான அக்கரங்கள் முறையே ஒன்றன்பின்னொன்றாய் உண்டாகின்றமையால் அவ்வக்கரங்களுக்கு அறிவிக்குந்தன்மை யுண்டென்பது பொருந்தாமையானும், அறிவிப்பதற்குக் காரண மாக நாதமொன்றுண்டென்பது பிரமாணத்தால் நிச்சயிக்கப்படு கின்றதென்க. (இது பொருளியல்புரைத்ததென்றும் மங்கலமா கையால் நூலாரம்பமாகவே கொள்க.) (க)

(அவதாரிகை) அக்கரங்களுக்கு அறிவிக்குந் தன்மையில்லை யென்பதைக் காட்டுகின்றார்.

(உ) செவியால் கொள்ளத்தருந்தவையாயும், உச்சரித்து நாசமடையத் தகுந்தவையாயும், ஒன்றன்பின் ஒன்றாக நிலைத் திருப்பவையாயுமுள்ள அக்கரங்கள் ஒன்றுக்கொன்று உபகாரஞ் செய்யக்கூடாதனவாயிருக்கின்றன. ஆகையால் சேர்க்கிராத அவ்வக்கரங்கள் பொருளையறிவிக்கமாட்டாவென்பதாம். (உ)

(அ—கை) பதங்களே பகுதி விகுதிகளென்னும் பிரிவுடன் பொருளை யறிவிப்பதற்குக் காரணங்களாகட்டும்; அல்லது கிரியை காரகமென்னும் இவற்றின் தொடர்ச்சியுடன் கூடிய வாக்கியமா வது பொருளையறிவிப்பதற்குக் காரணமாகட்டுமென்பார்க்குக் கூறுகின்றார்.

(உஇ) அக்கரங்களினும் வேறாக பதமாவது வாக்கியமாவது கேட்கப்படுகிறதில்லை யென்பதாம். (உஇ)

(அ—கை) பதம் வாக்கியமென்னுமிவற்றின் ஏகதேசமான அக்கரங்கள் சொல்லப்பொழுதில் நாசத்தையடைகின்றமையால் ஒன்றுக்கொன்று உபகாரஞ் செய்வனவல்லவென்பது முன்னர்க்

கூறப்பட்டது. ஆகையால் அக்கரங்களினும் வேறாக பதமாவது வாக்கியமாவது காணப்படாமையால் அந்தப்பத வாக்கியங்களுக்கும் பொருளையறிவிக்குந் தன்மை கிடையாதென்பது பிரத்தியட்சப் பிரமாணத்தால் சித்தித்தமையால் அநுமானத்தினாலும் அப்பத வாக்கியங்களுக்குப் பொருளையறிவிக்குந் தன்மையில்லையென்று கூறுகின்றார்.

(௩) யாதொன்று பிரத்தியட்சப் பிரமாணத்தால் மறுக்கப்பட்டதோ அதனையுண்டென்பது அநுமானத்தாலுங் கூடாதென்பதாம். (௩)

(அ—கை) இவ்விடயத்தையே ஆசங்கையை முன்னிட்டு விரித்துக்கூறுகின்றார்.

(௪) * கௌ: என்னும் பெயர் முதலிய பதமானது செவியால் கொள்ளத்தகுந்ததாயிருக்கின்றதே யெனின், அன்று எதனாலெனின், ககாரம் ஔகாரம் விசர்க்கமென்னுமிவற்றின் வேறாக கௌ: என்பதொன்றில்லாமையாலென்பதாம்.

(உரை) பெயர் முதலிய வென்றதனால் செம்மை முதலிய விசேடண பதங்களும், செல்லுதல் முதலிய கிரியாபதங்களும் கொள்ளப்படும். (௪)

(௫) (ஆகையால்) அந்த அக்கரங்கள் ஒரேகாலத்திலிருந்தலால் பின்னுள்ள வக்கரங்களினறிவு முன்னுள்ள வக்கரங்களின் அறிவைக்கொண்டு பொருளை நிச்சயிக்க வேண்டும். பின்னுள்ள விசர்க்கமென்னும் அக்கரத்தினால் மாத்திரம் குளம்பு கம்பளமென்னுமிவற்றையுடைய சித்தின் றோற்றமானது உண்டாகிறதில்லையென்பதாம்.

(உரை) சித்தின் தோற்றமென்பது பொருளினுடைய அறிவின் தோற்றமாகும். பின்னுள்ள விசர்க்கமென்னும் அக்கரத்தினால் மாத்திரம் அலைதாடி முதலியவற்றினறிவு உண்டாகுமாயின்,

* கௌ:—பசு.

அசுவ: புருஷ: என்பன முதலியவற்றிலும் பின்னுள்ள விசர்க்கத்தால் பசுவினறிவு உண்டாக வேண்டும். (௫)

(அ—கை) பின்னுள்ள அக்கரத்தால் மாத்திரம் பொருளினறிவு உண்டாகிறதில்லை. முன்னுள்ள அக் கரங்களாலுண்டான வாசனையுடன் கூடி பொருளினறிவு உண்டாகின்றது. அக்கரங்களுக்கு நொடிப்பொழுதில் நாசமுண்டாயினும் வேறு காலங்களில் நினைவுகாண்கின்றமையால் அக்கரங்களின் வாசனைக்கு நாசமில்லை யென்னும் ஆசங்கையைக் கூறுகின்றார்.

(௬) முன்னுள்ள அக்கரங்களால் உண்டான வாசனையைத் துணையாகவுடைய பின்னுள்ள அக்கரத்தால் பொருளினறிவு உண்டாவது உண்மைதான். முன்னுள்ள அக் கரங்களாலுண்டான வாசனையுடன் கூடாமல் பொருளினறிவு உண்டாகிறதில்லை யென்பதாம். (௬)

(அ—கை) இந்தக் கொள்கையை மறுக்கின்றார்.

(௭) இவ்வாறு கூறுவது பொருந்தாது. வாசனைகள் முன்னரனுபவிக்கப் பட்ட எந்தப்பொருள்களால் புத்தியில் ஏறியிருக்கின்றனவோ, அதே பொருள்களினறிவுக்குக் காரணங்களாகும். ஆகையால் பொருளினறிவு உண்டாகிறதில்லையென்பதாம்.

(உரை) வாசனைகளோவெனின், முன்னரனுபவிக்கப்பட்ட எந்தப்பொருள்களால் புத்தியினிடத்தில் ஏற்றப்பட்டிருக்கின்றனவோ, அந்தக் கடம் முதலியவற்றின் நினைவுக்குக் காரணங்களாக காணப்படுகின்றன. அநுபவிக்கப்படாத கடம் முதலியவற்றில் வாசனை காணப்படவில்லை. ஆகையால் இவ்விடத்தும் எந்த அக்கரங்களினால் வாசனைகள் புத்தியில் வைக்கப்பட்டனவோ அந்த வாசனைகள் அந்த அக்கரங்களினறிவுக்குக் காரணங்களாகுமென்பது பொருந்தும். இவ்வளவேயன்றி அக்கரங்களின் வாசனைகள் பொருளினறிவுக்குக் காரணமாகுமென்பது பொருந்தாது. ஆகையால் பதத்திற்காவது வாக்கியத்திற்காவது பொ

ருளை யறிவிக்குந்தன்மை சம்பவிக்கிறதில்லை. இவ்வாறே "எந்தச் சமஸ்காரங்கள் எந்தப் பொருளின் வடிவத்தினுடைய தோற்றத்தினால் பாவனை செய்யப்பட்டனவோ, அந்தப் பொருளின் வடிவு விடயமான அறிவிற்கு அந்தச் சமஸ்காரங்கள் காரணங்களாக ஆகும். பொருளினறிவிற்குக் காரணமாவனவல்ல" என்று பிறருங் கூறுகின்றனர்.

நினைக்கப்படுவனவாயும் அநுபவிக்கப்படுவனவாயும் உள்ள அக்கரங்களின் கூட்ட ரூபமான பதம் பொருளை அறிவிக்கின்றதாக ஆமின்றதென்று கூறின், அது பொருந்தாது. நினைக்கப்படுந் தீபங்களுக்குப் பொருளை விளக்குதல் காணாமையாலென்க.

முன்னர்க் கூறப்பட்டவாறு அக்கரங்கள் பொருளையறிவிக்காமையாலும், பொருளை யறிவித்தல் வேறு வழியாகப் பொருந்தாமையாலும் அக்கரங்களால் தோன்றத் தகுந்ததாயும், அக்கரங்களுக்கு வேறாயும், வெளிப்படையாயில்லாததாயும், மயில் முட்டையின் நீர்போல் அநேக அக்கரங்களாகப் பிரகாசிக்கிறதாயும், முறையே பதரூபமாயும், பதத்தின் வேறான வாக்கியரூபமாயும், எல்லா உலகத்திற்கும் ஒரே முறையாகவேயா அல்லது ஒன்றன் பின் ஒன்றாகவோ பொருளையறிவிப்பதற்கு எதுவாயிருக்கின்றமையால் வியாபகமாயும், நித்தியமாயுமிருக்கும் ஸ்போடத்தைப் பொருளை யறிவிப்பதற்குக் காரணமாக ஒப்புக்கொள்ள வேண்டும். வையாகரணர்களும் அந்த ஸ்போடமே சொல்லுகிறவர்களுக்குப் பொருளை யறிவிக்கிறதென்று கூறுகின்றார். இது பொருந்தாது. எவ்வாறெனில், அவ்விடத்தில் அக்கரங்களினும் வேறாக ஸ்போடமுண்டென்று எந்த மதங் கூறப்பட்டதோ, அந்த மதம் பொருந்துகிறதில்லை. எதனாலெனின், அக்கரங்களினும் வேறாக அந்த ஸ்போடமானது அந்த அக்கரங்களை யறிவிக்கும் பதவாக்கியங்களினடுவே இருக்கிறதில்லையாகையாலென்க.

அந்த ஸ்போடமானது அக்கரங்களினும் வேறு? வேறன்று? வேறெனின், அறிவு ரூபமான அந்த ஸ்போடமானது அக்கரங்க

ளினும் வேறாக அறியப்படுகிறதில்லை. அறியப்படாமையெது போலுமெனின், முயற்கொம்பு முதலியனபோலுமென்க. இவ்வாறு பிரத்தியட்சத்தால் அக்கரங்களின் வேறாக ஸ்போடமில்லையென்பது சித்திக்கவே அநுமானத்தால் அக்கரங்களின் வேறென்றலும் பொருந்தாது. ஸ்போடமென்பது அறிவுரூபமாயில்லையென்று கூறக்கூடாது; ஞாபகமாயிருக்கின்றமையாலென்க. (ஞாபகம்—அறிவிப்பது.) அறிவிப்பதாகிய இந்திரிய முதலிய காரகங்களோவெனின், பிரத்தியக்ஷத்தாலறியப்படாமலிருக்கும் சத்தியினால் காரியத்தை யறிகின்றன; செய்கின்றன. எது போலுமெனின், சம்ஸ்காரமும் முளையும் பிரத்தியக்ஷத்தாலறியப்படாமலிருந்துகொண்டு காரியத்தைச் செய்கின்றவாறு போலுமென்க. ஞாபகமென்பது கண்சாடை முதலியவற்றிருப்பது போல் ஸ்போடத்திலில்லாமையால் அநுமானத்தினால் ஸ்போடத்தைச் சாதிக்கலாமெனின், ஞாபகத்திற்கு வரம்பின்றி யோட லென்னுங் குற்றம் நேரும். ஆகையால் ஞாபகமாயில்லாத ஸ்போடத்தை யொப்புக்கொள்ளக் கூடாது. கண் சாடை முதலியவற்றில் முன்னிலைச் சம்பந்தமிருப்பதுபோல் ஸ்போடத்திற்கில்லாமையால் ஞாபகமாயில்லாத இந்த ஸ்போடமானது இந்திரிய முதலியன போல் பிரத்தியக்ஷத்தால் அறியப்படாமலிருந்துகொண்டு அநுமானத்தாலறியப்படுமென்று விகற்பித்து கூறுதற்கு எவ்வாறு கூடும்.

இனி ஸ்போடமானது அக்கரங்களின் வேறன்றெனின் அவ்வாறு கூறுமிடத்தில் ஸ்போடமானது அக்கரங்களே யாகுமன்றி அக்கரங்களினும் வேறாக ஆகாது. அஸ்தம், கரம் என்னும் பதங்கள் கையென்னும் ஒரு பொருளைக் குறிப்பதற்குப் பிரதி பதங்களாயிருக்கின்றவாறு போல் அக்கரங்களென்பதும் ஸ்போட மென்பதும் பிரதி பதங்களாகும். ஆகவே, ஸ்போடமே அக்கரங்களென்று மேற்கொண்டதாக முடியும் ஓரே பொருளைக் கூறும் சொல்லின் பேதத்தால் பொருட்பேதங்கிடையாது. (ஆகையால்) அக்கரங்களால் பொருளினறிவு உண்டாகின்றதென்பது பொருந்துகின்றது.

அக்கரங்களால் ஸ்போடம் அறியப்படுகின்ற தென்பதும் பொருந்தாது. எதனாலெனின், ஸ்போடமானது அநேக அக்கரங்களால் தோற்றப்பட்டுப் பொருளினறிவுக்குக் காரணமாகின்றதா? அல்லது ஒவ்வொரு அக்கரத்தால் தோற்றப்பட்டுப் பொருளினறிவுக்குக் காரணமாகின்றதா? அநேக அக்கரங்களால் தோற்றப்பட்டுக் காரணமாகின்ற தெனின், அக்கரங்கள் உச்சரிக்கப் பட்டவுடன் நாசத்தையடைவதால், இறுதி யெழுத்தை உச்சரிக்கும் பொழுது முதலெழுத்துக்களில்லாமையால், இறுதி யெழுத்து மாத்திரத்தால் ஸ்போடத்தின் தோற்றமானது உண்டாகாதென்று முன்னர்க் கூறப்பட்ட குற்றம் நேரும். இவ்வாறன்றி முந்தின எழுத்துகளின் சமஸ்காரத்துடன் கூடின இறுதி யெழுத்தானது ஸ்போடத்தைத் தோற்றுவிக்கின்ற தென்று கொள்ளினும் அதே குற்றம் நேரிடும். ஆகையால், மிகவும் பிரசித்த மில்லாத ஸ்போடத்தை யெதற்காகக் கற்பிக்கவேண்டும்.

இனி ஒவ்வொரு அக்கரத்தால் ஸ்போடமானது தோற்றப் பட்டுப் பொருளினறிவிற்குக் காரணமாகின்றது என்ற இரண்டாவது பக்கத்தைக் கொள்ளின், முதலாவதாயிருக்கும் ககார முதலிய ஒரெழுத்தால் ககனம், கவயம், கோவென்பது முதலிய அநேக ஸ்போடங்கள் தோற்று மாதலால் அந்த ஸ்போடங்களில் ஒன்றுக்கொன்று வேற்றுமை யில்லாமையால் அநேக பொருள்களினறிவு உண்டாகி விடும். அன்றியும் ஸ்போடமானது வியாபகமென்று கொள்ளின் ஒரு புருடனாலுச்சரிக்கப்பட்ட அக்கரங்களால் ஸ்போடமானது தோற்றப்பட்டவுடன் ஸ்போடத்தில் வேற்றுமையின்மையால் வேறு தேசத்திலுள்ளவர்கட்கும் பொருளினறிவு உண்டாக வேண்டும்.

அவ்வாறே ஸ்போடம் நித்தியமென்று கொள்ளின், இருப்பில் வேற்றுமையின்மையால் வேறு காலத்திலும் பொருளினறிவு உண்டாக வேண்டும். அவ்விதமோ உண்டாகிறதில்லை.

ஆகையால் வியாபகமாயும் நித்தியமாயும் இருப்பதாகிய ஒன்றும் (அக்கரங்களையின்றி) ஒரு பொருளையும் அறிவிக்காது.

இவ்வாறிருக்க ஸ்போடத்தைக் குறித்துக் கேட்க வேண்டியதில்லை. (எ)

(அ—கை) இன்னுமொரு முறையாக பிறருடைய அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்.

(அ) புத்தியில் ஏறின பதங்களுடன் கூடினதாயும் ஒன்றன்பின் ஒன்றாக உண்டான நூல சத்தக் கூட்டத்திற்குக் காரணமாயுமிருக்கும் அறிவானது குற்றமின்றி ஒன்றன் பின் ஒன்றாக வாசகமாக இருக்கட்டு மென்பதாம்.

(உரை) குளம்பு கம்பள முதலியவற்றை யிலக்கணமாகவுடைய பொருளை நன்றாக புத்தியினால் நிச்சயித்து, அதன் பின்னர் அதற்கனுகுணமாக பசு முதலிய பதத்தைச் சிந்தையினாலனு சந்தானஞ்செய்து, அதன் பின்னர்த் நூல சத்தத்தையுச்சரிக்கின்றான். ஆகவே புத்தியில் ஏறின பசு முதலிய பதங்களுடன் கூடினதாயும், சொல்லுதற்காக விரும்பப்பட்ட அந்தப் பசு முதலிய பொருள்களின் முறையாக அந்தந்தப் பொருள்களின் சொரூபமாக வுண்டாகிறதாயும், அந்தந்தத் நூல சத்தத்தையுச்சரிப்பதற்குக் காரணமாயுமிருக்கும் அந்த அந்தப் புத்தி விருத்தி ரூபமாகவே உள்ள அறிவானது இந்தப் பசு முதலிய பொருள்களுக்கு முறையாகக் குற்றமின்றி வாசகமாக இருக்கட்டும். (அ)

(அ—கை) புத்தி விருத்தி ரூபமான அறிவு, வாசகமென்னும் இந்தக் கொள்கையினையும் மறுக்கின்றார்

(௯) இவ்வாறே ஆராய்ச்சி ஞானத்திற்கும் வாசகத்தன்மை யிருக்கட்டும். ஆகவே, (1) வாச்சியங்களினின்றும் (2) வாசகங்கள் வேற்றுமையை யடைகிறதில்லை. எதனாலெனில் அலைதாடி முதலியவற்றின் ரூபமான எல்லாப் பொருள்களும் வேற்றுமையின்றி புத்தியில் சம்பந்தித்திருக்கின்ற படியாலென்க.

1. வாச்சியம்— பொருள். 2. வாசகம்— சொல்.

(உரை) உள்ளிருக்கும் ஆராய்ச்சி ஞானத்திற்கும் வாசகத் தன்மையைக் கொண்டால் வாச்சிய வாசகங்களுக்கு வேற்றுமை யில்லாமற்போய்விடும்; இரண்டற்கும் அலை தாதி முதலிய ஒரே சொரூபமாதலால் அந்த அலைதாதிமுதலிய ரூபமான எல்லாப் பொருளும் வெளியிலிருக்கும் சொரூபத்திற்கு வேறுபடாமல் புத்தியில் சம்பந்தித்திருக்கின்றமையால் என்க. (௯)

(அ—கை.) இதே விடயத்தில் பூர்வபட்சியினுடைய ஆசங்கையைக் கூறுகின்றார்.

(௧0) ஆராய்ச்சி ரூபமாயிருப்பதுகொண்டே வாச்சியத்தினின்றும் வாசகத்திற்கு வேற்றுமை இருக்கின்றது. ஞானவேற்றுமைகளால் சொரூபவேற்றுமைகள் ஆராய்ச்சிசெய்வதற்கு யோக்கியமாகவாகின்றன. சொரூப வேற்றுமைகளே வாச்சியங்களென்பதாம்.

(உரை) வெளியிலுள்ள சொரூபம் வாச்சியம். புத்தியிலுள்ள சொரூபம் வாசகம். வாச்சிய வாசகங்களுக்கு இதுவே வேற்றுமையாகும். புத்தியிலிருக்குஞ் சொரூபம் வெளியிலிருக்குஞ் சொரூபத்தை ஆராய்ச்சி செய்யும் ரூபமாயிருத்தலால் வாசகமெனப்பட்டது. ஆகவே வாசகங்களான ஆராய்ச்சி ஞானங்களின் வேற்றுமையால் பசு முதலிய வெளியிலிருக்குஞ் சொரூப பேதங்கள் ஆராய்ச்சி செய்பத்தக்கவைபாய் வாச்சியங்களாக இருக்கின்றன. வாச்சிய வாசகங்களுக்குள்ள வேற்றுமை இதுவாகும். (௧0)

(அ—கை.) பூர்வபட்சியினுடைய ஆசங்கைக்கு விடை கூறுகின்றார்,

(௧௧) இது உண்மை. ஆயின் உருவம், இரதம், கந்தம், சத்த முதலிய பொருள்கள் எதனால் ஆராய்ச்சி செய்யுந் தன்மையையுடையனவாயிருக்கின்றனவோ, அதுவே உள்ளோசை ரூபமான நாதமாகச் சித்தித்தது. விடயத்தன்மையாகச் சித்திக்கவில்லை என்பதாம்.

(உரை) நீ சொல்லுவது உண்மை. ஆராய்ச்சி ரூபமான அறிவு, வாச்சியத்தினும் வேறாயும் உள்ளேயிருப்பதாயுமிருக்கின்றது. அந்த அறிவு காரணமின்றியுண்டாகிறதில்லை. எதனாலெனின், எப்பொழுதாவது ஒரு சமயத்திலுண்டாகின்றமையாலென்க. புத்தியானது கண்முதலியவற்றால் அறியப்பட்ட வெளியிலிருக்கும் பொருளை நிச்சயிக்கிறதாகக் கண்டிருக்கின்றோம். கண்முதலியவற்றாலறியப்படாத பொருளை நிச்சயிக்கிறதில்லை. எதனாலெனின், எல்லாப்பொருள்களையும் நிச்சயிக்கட்டுமென்னும் அதிப்பிரசங்கம் நேரிடுகின்றமையாலென்க. அதுபோல், புத்தியானது யாதானுமொன்றால் அறியப்பட்ட உள்ளேயிருக்கும் பொருளிற்றான் ஆராய்ச்சியைச் செய்கின்றது. இன்றேல் எக்காலத்தும் எல்லாப் பொருள்களையும் ஆராய்ச்சி செய்யவேண்டும். ஆகையால் உருவம் இரதமுதலிய பொருள்கள் எதனால் கூறுபவனுடைய புத்திக்கு ஆராய்ச்சிசெய்வதற்கு உரியனவாந்தன்மையை யடைகின்றனவோ, அதுவே இவ்விடத்து நாதமாயிருக்கின்றது. அது உள்ளோசை ரூபமாகவிருக்கின்றது, அஃதாவது நாதத்தின் காரியமாக விந்துவின் வடிவம் இருக்கின்றது. அந்த நாதம் ஆராய்ச்சியறிவிற்குக் காரணமாயிருந்துகொண்டு வாசகமாகச் சித்தித்ததாகும். விடயாகாரமாகப் பரிணமித்த தூல சத்தம் அவ்வாறு சித்திக்காது. சொல்லுபவனிடத்திலுள்ள நாதம் கேட்பவனுக்குப்பொருளினறிவை யெவ்வாறு உண்டுபண்ணுகிறதெனின், சொல்லுபவனால் உச்சரிக்கப்பட்ட தூல சத்தங்களால் கேட்பவனிடத்தில் உள்ளநாதந் தோற்றப்பட்டு அவனுக்குப் பொருளினறிவையுண்டுபண்ணுகின்றதென்பது இந்நூலின் முடிவில் கூறப்படுமென்க.

(௧௧)

(அ—கை.) இன்னுமிதனையே கூறுகின்றார்.

(௧௨) இந்த நாதமானது சொல் பொருள் ஆகிய அனைத்தையும் அறியும்படி செய்துகொண்டு வாசகமாயிருக்கின்றது. சத்தாயும் அசத்தாயுமிருக்கும் எல்லாப்பொருள்களும் நாதத்தினால் ஆராய்ச்சி செய்யப்படுவனவாகக் காணப்படுகின்றமையாலென்பதாம்.

(உ—ரை.) இவ்வாறே உலகத்தில் நாதத்தின் சம்பந்தமின்றி ஒருவித அறிவும் உண்டாகிறதில்லை. எல்லா அறிவும் நாதத்துடன் கூடியே உண்டாகின்றதென்று கூறப்படுகின்றது. இவ்வாறாயின் ஸ்ரீ பாஷ்யத்தில் "முந்தின எழுத்துக்களாலுண்டான சமஸ்காரத்துடன் கூடின இறுதி யெழுத்து வாசகமாயிருக்கின்றது" என்று கூறியது எவ்வாறு பொருந்துமெனின், அந்த இறுதியெழுத்து நாதத்தைத் தோற்றுவிப்பதுபற்றியுபசாரமாக வாசகமாய்க் கூறப்பட்டதென்க. (கஉ)

(அ—கை.) இவ்வாறு நாதத்திற்கு வாசகத்தன்மையைச் சாதித்துவிட்டு இனிமுன்னர் மேற்கொள்ளப்பட்ட புத்திமுதலியவற்றிற்கு அறிவிக்குந்தன்மை யில்லையென்பதைக் கூறுகின்றார்.

(கங) இந்தக்காரணத்தால் வாசகத் தன்மையானது புத்தியின் சொரூபமாக இருக்கிறதில்லை. மனம் அகங்காரம் என்னுமிவற்றின் காரியமாகவுங் கூறக்கூடாது. எதனாலெனில் புத்தி மனம் அகங்காரங்களின் காரிய ரூபமான நிச்சயம், கவனம், சம்ரம்பங்களினும், காரணரூபமான சரீர இந்திரியங்களாகிய விகாரத்தினும் வேறாகவே நாதமிருக்கின்றமையால் என்க. இவ்வாறே அவ்வியத்தத்தினும் வேறாகவிருக்கின்றதென்பதாம்.

(உ—ரை.) இந்த வாசகத்தன்மை இந்தக்காரணத்தால் புத்தியின் சொரூபமாயில்லையென்று கூறப்பட்டது. மனம் அகங்காரங்களின் சொரூபமாகவுமில்லை. இவ்வாறே அவ்வியத்தத்திற்கும் வேறாகவே நாதம் இருக்கின்றது. அவ்வியத்தத்திற்கு அறிவிக்குந் தன்மைகிடையாது. எதனாலெனின், குணத்திற்குக் காரணமாகச் சித்திக்கின்றமையாலும் அறிவித்தலென்னுங் காரியத்திற்குக் காரணமாவதில் பிரமாணமின்மையாலுமென்க. (கங)

(கச) (இந்தநாதம்) யாதொரு காரணத்தால் அறிபவர்களிடம் பொருளினறிவிற்குக் கலப்பின்மை காணப்படுகின்றதோ, அந்தக் காரணத்தால் ஒவ்வொரு புருஷனிடமும் வாக்கியம் பதமென்னுமிவற்றில் வாசகத்தன்மையுடன் வெவ்வேறுருபமாயிருந்து அவ்வியத்தமாயிருக்கின்றமையால் சூக்குமமாயும், வாசகமாயிருக்கின்றமையால் தூலமாயுமிருக்கின்றதென்பதாம்.

(உரை.) அறிபவர்களிடத்தில் கடத்தினறிவிற்கு ஆடையறிவின் கலப்பின்மை காணப்படுகின்றமையால், ஒவ்வொரு புருடனிடத்தும் வாக்கியம் பதமென்னு மிவற்றில் வாசகமாக வெவ்வேறு ரூபமாயிருக்கும் இந்த நாதம் வெளிப்படையாய்த் தோன்ருது அவ்வியத்தமாயிருக்கின்றமையால் சூக்குமமாயும், வெளிப்படையாய்த் தோன்றி வாசகமாயிருக்கின்றமையால் தூலமாயுமிருக்கின்றதென்க. (கச)

(அ—கை) இவ்வாறு நாதசொரூபத்தைக் கூறிவிட்டு இனியதற்குக் காரணமான மகாமாயையைக் கூறுகின்ருர்.

(கரு) அவ்வாறே இடையர் பெண்கள் குழந்தைகள் ஆகிய இவர்களாலும் நாதம் வெவ்வேறுகவே இருக்கின்றது என்று அறியப்படுகின்றது. ஆதலால் அந்த நாதங்கள் தோன்றுதலழிதல் ரூபமான தருமத்துடனிருக்கின்றன வென்பதாம்.

(உரை) இவ்விடத்தில் ஒரு புருடனுடைய ஆராய்ச்சிக் காலத்தில் அனைவருக்கும் அந்த ஆராய்ச்சியுண்டாகாமையின், ஒருவருக்கொருவர் வேறு வேருன சுபாவத்தையுடையராயும், காரணங்களாயுமிருக்கும் ஆன்மாக்களிடத்து ஒவ்வொரு நிலையினும் வேறுவேருகவே நாதங்களறியப்படுகின்றன. பொருள் விடயமான அறிவு நாதமின்றி வேறொன்றுலுண்டாகாமையாலும் சாஸ்திரத்தாலும் அந்த நாதங்கள் வேறு வேருக இருக்கின்றன வென்பது அறியப்படுகின்றது. இவ்வாறே "இடையர், பெண்கள், குழந்தைகள், மிலேச்சர், பிராகிருதச் சொற்களையுச்சரிப்பவர், நீரினுள்ளிருக்கும் பிராணிகள் ஆகிய இவையனைத்தும் எப்பொழுதும் பேசுகின்றன" என்று கூறப்பட்டிருக்கின்றது. இதனுல் தோன்றுதலழிதலென்னும் தர்மங்களையுடையனவாயிருக்கின்றன. அஃதாவது இந்த நாதங்களுக்குக் காரியத்தன்மை சித்தித்ததென்பது பொருள். காரியத்தன்மையிருப்பது கொண்டு இவற்றிற்கு முதற்காரணமாக ஒன்றைக்கொள்ளல் வேண்டும். இவ்வாறு முதற்காரணமாகச் சித்தித்த பொருளானது † நாதம் சுவரம், சுமங்கலை, மாலினி, மகாமாயை, சமனை,

† நாதமென்பதற்குப் பரநாதமென்பது பொருள்.

அநாகதம், விந்து, அகோஷாவாக்கு, பிரமம், குண்டலினி தத்துவம், வித்தியாதத்துவம் என்றிவ்வாறாக அந்தந்த ஆகமங்களில் கூறப்பட்டிருக்கின்றது. (கரு)

(அ—கை) இனி பிறருடைய அபிப்பிராயத்தை அநுவாதஞ் செய்து மறுக்கின்றார்.

(கசு) சத்தங்களின் இருப்பை யறிந்த சிலர் இது கிரியா சத்தியின் நிலையென்று கூறுகின்றனர். புருடனிடம் வாக்கானது சமவாய சம்பந்தத்துடன் இல்லாமையால் இவ்விடத்தில் கிரியா சத்தியினும் வேறாகக் கூறப்பட்டதென்பதாம்.

(உரை) ஒவ்வொரு புருடனிடத்தும் வாக்கு சமவாய சம்பந்தத்தினுலில்லாமையால் அந்த வாக்கானது நாத முதலியவற்றின் முறையாகச் சத்தங்களை யுண்டுபண்ணுதல் பொருந்தாது. பொருந்துமெனின், சமவாய சம்பத்தத்திலிருப்பதற்குப் பரிணமத்தன்மை வந்துவிடும். ஆகையால் சமவாய சம்பந்தத்திலிருக்கும் கிரியாசத்தியி னவஸ்த்தையாக இந்த வாக்கைக் கொள்ளக் கூடாதென்க. (கசு)

(அ—கை) இதனையே விரித்துக் கூறுகின்றார்.

(கள—களஇ) புருடன் விகாரமில்லாதவன். அவனுடைய சத்தியும் விகாரமில்லாதது. ஆகையால் அவ்விரண்டும் அநேக விதமாக இருப்பதற்கு உரியனவாக ஆவனவல்ல. ஆகுமெனின், விகாரமுடையன வெனப் பட்டுச்சேதனத் தன்மையின்றிச் சடத்தன்மையுடையன வெனப்படும். ஆகையால் புருடன் அவனுடைய சத்தியென்னும் இரண்டின் வேறான குண்டலீதத்துவமானது நாதத்திற்கு முதற்காரணமாகச் சித்தித்ததென்பதாம்.

(உரை) புருடனிடத்தில் சமவாய சம்பந்தமாயில்லாமையால் ஒவ்வொரு புருடனிலும் அவனுடைய சத்தியிலும் வேறான குண்டலீ தத்துவமானது நாதத்திற்குக் காரணமாகச் சித்தித்தது. (கள.களஇ)

(அ—கை) இவ்வாறயின் பரிணாமத்தை யுடைய அசுத்த மாயையே நாதத்திற்கு முதற்காரணமாக இருக்கட்டுமென்பார்க்குக் கூறுகின்றார்.

(கஅ) மகா மாயையானது சடமாயிருப்பினும் சுத்தமாயிருத்தலால், அசுத்த மாயையினும்வேறாயும், அசுத்தமாயைக்கு மேலிருப்பதாயு முள்ள அந்தச் சுத்தமாயையே நாதத்திற்கு முதற்காரணமாகக் கூறப்பட்டதென்பதாம்.

(உரை) இவ்வாறே அசுத்தமாயைக்குமேல் மகாமாயை யுண்டென்று நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது. (கஅ)

(அ—கை) இந்தச் சுத்தமாயையானது சுத்தாத்துவாவிற்கு முதற்காரணமா யிருக்கின்றதென்பது ஆகமப்பிரமாணத்தால் சித்தித்துள்ளதெனக் கூறுகின்றார்.

(கசு) வித்தியேசுவரர்களுக்குப் போகத்தைக் கொடுக்கக் கூடிய சுத்த வித்தியா தத்துவமும், புவனமும், அத்துவாவாக ஆகமங்களில் கூறப்பட்டிருக்கிறது. வித்தியேசுவரர்களுடைய அபாமுத்தியின் பொருட்டுச் சுத்தாத்துவாவிற்கு முதற்காரணமாகச் சுத்தமாயையாகின்ற தென்பதாம். (கசு)

(கசுஇ) வாக்குப்பிரமத்தில் தேர்ச்சி யடைந்தவன் சித்பிரமத்தை யடைவானென்று கூறுகின்றனர் என்பதாம்.

(உரை) இவ்வாறே "சத்தப் பிரமத்தில் தேர்ச்சியடைந்தவன் மேலான பிரமத்தை யடைகின்றான்" என்று பிறருங்கூறுகின்றனர். (கசுஇ)

(உ०) (அன்றியும்) சித்தி, பரமுத்தி, கிரியை யென்னு மிம்மூன்றும் நாதஞானத்தால் சித்தித்திருக்கின்றன வென்று கூறுகின்றனரென்பதாம்.

(உரை) வடமொழி மூலத்தில் கூறுகின்றானென்பதில்லை. உரையிற் சேர்க்கப் பட்டிருக்கின்றது. இவ்வாறாயினும், நாத ஞானத்தினாலேயே பர முத்தி சித்திக்கும்பொழுது தீக்ஷை முத்தியைக் கொடுக்கு மென்று சுவாயம்புவம் முதலிய ஆகமங்களில் எவ்வாறு கூறப்பட்டதெனின், நாத ஞானமும் தீக்ஷைக்கு அங்கமாக விருந்து கொண்டு முத்திக்குச் சாதனமாயிருக்கின்றது பற்றி யென்க. தீக்ஷையில்லாத தனிமையான நாத ஞானத்திற்கு முத்திக்குச் சாதனமாயிருக்குந் தன்மை கிடையாதென்று பின்னர்க் கூறப்போகிறோம். (உ௦)

(அ—கை) அன்றியும் தூலமாயும், பாச ரூபமாயும், மாயா காரியமாயு மிருக்கும் சத்தத்திற்குச் சிவன் முதலிய சுத்தப் பொருள்களை யறிவிக்குந் தன்மை கிடையாது. ஆகையால் மந்திர தந்திர ரூபமாயும் சுத்தமாயுமிருக்குஞ் சத்தத்திற்குங் காரணமாக இந்த மகா மாயை சித்தித்ததென்று கூறுகின்றார்.

(உ௦வ) மந்திர முதலியவற்றிற்குக் காரணமாயிருப்பதால் என்பதாம்.

(உரை) ஆகவே தணல் போன்ற இந்தச் சத்தங்களில் தோன்றுகின்ற அக்கினி போன்ற சூக்குமமானமந்திர சத்தங்கள் காரியத்தைச் செய்கின்றவையாக ஆகின்றன வென்று ஸ்ரீ மதங்கம் முதலியவற்றில் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் முன்னர்க் கூறப்பட்ட நாதம் அந்த மகாமாயையின் காரியமாயிருக்கின்றது. (உ௦வ)

(உக) மகா மாயையின் காரியமான இந்த நாதமானது இச்சை ஞானம் கிரியை யென்னும் மூன்றினின்றும் வேறு பட்டிருப்பதால் அராகம் வித்தை கலை யென்னுஞ் சட்டைகளின்றும் வேறு பட்டிருக்கின்றதென்பதாம்.

(உ௨ர) அராகம் வித்தை கலை யென்னுமிவை தமது காரியங்களுக்காக உண்டாயிருக்கின்றமையானும், பிறிதொரு காரியத்தை யுண்டு பண்ணு மென்பதற்குப் பிரமாண மின்மையா

னும், உண்டுபண்ணு மென்னில் அநேக தத்துவங்கள் வேண்டு வதின்றாய் முடியுமாதலானும், இந்த நாதம் அராகம் முதலிய வற்றின் வேறு என்க. (உக)

(உஉ) மகா மாயையினின்று முண்டான நாதந்தான் உண்மையான வாசக மென்பது பொருந்தும். தூலமாயுள்ள மந்திர தந்திர ரூபமான சத்தங்கள் நாதத்தினால் தொழிற் படுகின்றமை யாலெனபதாம்.

(உ௩) தூலமான சத்தத்திற்கோ வெனில், நாதத்தைத் தோற்றுவிக்கின்றமையால் வாசகத் தன்மை யுண்டென்பது முன்னர்க் கூறப்பட்டது. (உஉ)

(அ—கை) இதனையே முடித்துக் காட்டுகின்றார்.

(உ௩) அந்த வாக்குச் சத்தியானது ஒவ்வொரு புருடனிடத்தும் வேறு வேறாயிருந்து கொண்டு வாசகமாயிருக்கின்றமையால் உள்ளே வாசகக் கூட்டத்தைத் தோற்று வித்து வெளியிலுந் தோற்றுவிக்கின்றது என்பதாம். (உ௩)

(உச) தூலமான சத்தங்களால் தோன்றுவதாயும், நாத ரூபமாயுமுள்ள சூக்குமத்தொனிகள், பொருளினால் வேறு பட்ட அறிவை யுண்டு பண்ணி சனங்களுடைய தொழிலை விருத்தி செய்கின்றன வென்பதாம்.

(உரை) இந்த முறையாக மந்திர சத்தங்களும் சிவன் முதலிய பொருள்களை அறிவிக்கின்றன வென்பது கூறப்பட்டதாகும். (உச)

(உரு) இவ்வாறு நாராயண கண்டரின் புதல்வரான ஸ்ரீ பட்டராம கண்டர் காச்மீர தேசத்தில் இருபத்தைந்து சுலோகங்களுடன் இந்த நாத காரிகை யென்னும் நூலைச் செய்தாரென்பதாம். (உரு)

சிரேஷ்டர்களான ஆசிரியர்களால் பிரார்த்திக்கப்பட்ட அகோர சிவாசாரியாரால் இந்த நாத காரிகைக்குப் பாஜன்யை யென்னும் வியாக்கியானஞ் செய்யப் பட்டது,

நாதகாரிகை மூலமும்

விருத்தியுரையும்

முற்றுப்பெற்றன.

சிவபெருமான் றிருவடிவாழ்க.





உ

சிவமயம்

ஸ்ரீ ஸத்யோஜ்யோதி சிவாசாரியரால் செய்யப்பெற்ற

# மோக்ஷகாரிகை மூலமும்,

இதற்கு

ஸ்ரீ பட்டராமகண்டரால் செய்யப்பெற்ற

# விருத்தியுரையும்.

(தமிழ் மொழிபெயர்ப்பு)

## உரைமங்கலம்.

(க-உ) சித்தாந்த சாத்திரத்திற்கு முடிவான பொருளுடன் வழிகாட்டியவராயும், ஆசிரியராலும் பூசிக்கத் தகுந்தவராயுமுள்ள ஸத்யோஜோதி சிவாசாரியரையும், பிரகஸ்பதி சிவாசாரியரையும், போகமோக்ஷங்களைத் தருபவரான சங்கரரையும், போகமோக்ஷங்களின் பொருட்டு வணங்கி, மோக்ஷகாரிகைக்குச் சுருக்கமாக உரை செய்கின்றேன் என்பதாம். (க-உ)

## நூல்

(அவதாரிகை) இரௌரவாகமத்தினால் சித்தித்தனவாயுள்ள சாதனத்துடன் கூடின போகமோக்ஷமிரண்டனையும் கூறுகின்றேனென்ற மேற்கோளில், போககாரிகையில் "சுக, துக்க, மோகரூபமான புத்தியின் சொரூபத்தால் சம்மந்திக்கப்பட்ட சைதன்னியத்தோற்றமே போக்தாவின் போகம்" என்பது முதலியவற்றால் போகமும், போக்தாக்களான பசுக்கள் சுதந்திரமில்லாதவரென்பதும், அந்தப்பசுக்களுடைய போகத்திற்குச் சாதனமாயும்,

காரியம், காரண முதலியவற்றின் ரூபமாயும், உள்ள பூமி முதல் கலையீறான உலகமும், உலகத்திற்கு முதற்காரணமான மாயையும் ஆகிய இவை கூறப்பட்டன. இந்த நூலில் இப்பொழுது போகம் சித்திப்பதின் பொருட்டுள்ள அந்தப் போகசாதனம் தானாகவே தொழிற்படுகின்றதா? அல்லது, கருத்தாவினால் ஏவப்பட்டுத் தொழிற்படுகின்றதா? என்னுங் கேள்வியில், போக காரிகையிற் கூறப்பட்ட போகசாதனத்தின் வேறான சாதனமான கருத்தாவினிலக்கணம் கூறப்படுகின்றது.

## மூலம்.

(க-உ) மலசம்பந்தமற்றவராயும், எல்லாவற்றையுமறிபவரா யும், எல்லாவற்றையுஞ் செய்பவராயும், வியாபகராயும், சகளரா யும், நிஷ்களராயும், நாசமற்றவராயும், தனது இச்சையின் வழி காரியத்தைச் செய்பவராயும், அளவற்ற ஐசுவரியத்தையுடைய வராயுமுள்ள பரமசிவன் போகிகளினுடையபோகத்தின் பொருட் டுத் தனது சத்திகளால் மாயையைக் கலக்கி உலகத்தை விசித் திரமாகச் செய்கின்றார் என்பதாம்.

(உரை) மாயையை முதற்காரணமாகக் கொண்டதாயும், போகசாதனமாயும் அறியப்படாத கருத்தாவையுடையதாயும் உள்ள உலகம், விசேட ஞானக்கிரியைகளையுடைய கருத்தாவை யுடையது; வேறு வேறான காரியமாயிருத்தலால்; குயவன் முதலியோராற் செய்யப்பட்ட கடம் முதலியவற்றைப் போலும் என நிச்சயிக்கப்பட்டது.

பக்கமான உலகில் வேறு வேறான காரியமாயிருத்தலால் என்னும் ஏது இல்லை. ஆதலால், ஏது சித்திக்காமையாகிய அசித் தம் என்னுங் குற்றம் உண்டாகாதோ வெனின்; உண்டாகாது. யாது யாது அவயவங்களுடன் கூடியிருக்கின்றதோ, அது அது காரியமா யிருக்குமென்னும் * வியாத்தியால் இவ்வுலகத்திற்குக் காரியத்தன்மை சித்திக்கின்றமையாலென்க.

---

* இது அடித்ததன்று—உடனிகழ்ச்சி.

அறியப்படாத கருத்தாவையுடைய வனத்திலுள்ள பூக்கள் முதலியயாவுமே பக்கமாயிருக்கின்றமையால் வியபிசாரம் கிடையாது. வியபிசாரமாவது:—துணி பொருளில்லாதவிடத்தும் ஏது விருத்தல். வனத்திலுள்ள பூக்கள் முதலியன ஒருவனாலுண்டு பண்ணப்படாமையின் அவற்றில் கருத்தாவையுடையது என்னுந் துணி பொருளில்லை, வேறு வேறான அவயவங்களுடன் காரியமாயிருத்தல் என்னும் ஏது இருக்கின்றதென்பது பூருவ பக்கம். வனத்திலுள்ள பூக்கள் முதலியயாவுஞ் சேர்ந்து பக்கமாயிருக்கின்றமையால் அந்தக் குற்றமில்லையென்பதாம்.

வனத்திலுள்ள பூக்கள் முதலிய யாவும் பக்கமாயிருப்பது கொண்டே விபரீத வியாத்தி யில்லாமையால் விருத்த மென்னுங் குற்றமுமில்லை. விருத்தமாவது:— கருத்தா உண்டென்று சாதித்தற்குரிய ஏதுவே கருத்தா இல்லை யென்று சாதிப்பதாகும்.

திருட்டாந்தத்தில் குயவன் அஞ்ஞானத்தோடு கூடினவனாதலால், உலக கருத்தாவும் அஞ்ஞான முடையனெனப்பட்டு எல்லாமறிபவன் என்னும் நம்முடைய எண்ணங் கெடுமோ வெனின்; கெடாது. எதனாலெனின், குயவனும் மல சம்பந்த மில்லாதவனாகவே யிருக்கின்றான்; அவனுக்கும் தன் காரியத்தைச் செய்யும் விஷயத்தில் அஞ்ஞான சம்பந்த மில்லாமையா லென்க. அவனிடத்தில் அஞ்ஞானமாவது, மயக்கமாவது இருப்பின் குடத்தைச் செய்ய மாட்டான். அஞ்ஞான மிருப்பின், செங்கல்லைக் கொண்டு சில அவயவங்களற்ற குட முதலியவற்றைக் காரியத்திற்கு உபயோகப் படாதவாறு செய்வன். ஆகையால், எல்லா அவயவங்களோடும் கூடிய குடத்தைப் பார்த்துக் குயவன் நல்ல அறிவுடன் கூடினவனென்று அநுமானஞ் செய்யப் படுகின்றான். அஞ்ஞான முடையவனையும், மயக்க முடையவனையும் இருப்பவனாகக் குயவனை நாம் அநுமானஞ் செய்கிறதில்லை. அவ்வாறே, ஈசுவரனும் உலக ரூபமான தனது காரியத்தால் அநுமானஞ் செய்யப்பட்டு மல சம்பந்த மில்லாதவனாகவே அநுமானஞ் செய்யப் படுகிறான். ஆகையால், ஈசுவரன் முற்றறிவுடையவன் என்னும் நம்முடைய எண்ணத்திற்குக் கேடு நேரிடாதென்க.

குயவனுக்குத் தனது காரிய விஷயத்தில் அஞ்ஞான மில்லை யாயினும், வேறு விஷயத்தில் அஞ்ஞான மிருக்கின்றதே யெனின்; இருக்கட்டும். குடம் செய்யும் விஷயத்தில் அஞ்ஞான மில்லை யென்பதை மாத்திரம் எடுத்துக் கொண்ட விஷயத்தில் திருஷ்டாந்தமாகக் கொள்ளவேண்டும். இவ்வாறே, ஈசுவரனுக்கும் தனது காரியத்தினும் வேறான விஷயத்தில் அஞ்ஞான முண்டெனச் கொள்ளலாகாது. எதனாலெனின், அவனுக்குக் காரிய மாயும், போக மோக்ஷங்களுக்குச் சாதனமாயு மிருக்கும் உலகத்தினும் வேறாக ஒரு காரியமுமில்லாமையாலென்க. வேறொன்று மில்லையென்று எவ்வாறு கூறுவது; இருக்கிறதென்றே கூறுவோமே யெனில்; இருக்கட்டும். இருக்குமாயின், அது போக சாதனமாயிருப்பின் காரியம் கரண முதலியன போல் காரியமாகவே யாகும். போக சாதனமாயில்லையாயின், அது பயனற்றிருத்தலால் அதை யறியாதிருத்தல் முயற்கொம்பை யறியாதிருப்பது அலங்காரமாவது போல் அலங்கார மாகும். இவ்வாறே "எவனொருவன் தள்ளக் கூடியவை கொள்ளக் கூடியவை யென்று ஒப்புக் கொள்ளக் கூடிய ;பதார்த்தங்களை அறிகின்றனோ, அவனே பிரமாணமாக ஒப்புக்கொள்ளப்படுவன். இவ்வாறன்றி, இவ்விரண்டினுளகப்படாத எல்லாவற்றையுமறிபவன் பிரமாணமாகக் கொள்ளப்படான்" என்று பிறருங் கூறுகின்றனர். ஆகையால், உலகத்தினின்றும் வேறாக ஒன்று மில்லாமையால் உலக கருத்தா சர்வஞ்ஞனாகவும், சர்வ கருத்தாவாகவு மிருக்கின்றான். குயவனுக்கும் தனது காரியத்தில் சர்வஞ்ஞத் தன்மையும், சர்வகர்த்திருத்தன்மையும் சித்திக்கின்றன. அவனுக்கு ஒரு அம்சத்திலாவது குடத்தைச் செய்யும் விஷயத்தில் அஞ்ஞானமாவது சத்தியின்மையாவது இருக்குமாயின் குடமுண்டாகாது. அவ்வாறே, ஈசுவரன் குயவனைப்போல் தனது காரியத்தில் வியாபகமாயிருப்பதால் (எவ்விடத்தும்) வியாபகனாய் இருக்கின்றான்; காரியம் (எவ்விடத்தும்) வியாபகமாயிருக்கின்றமையாலென்க.

குயவனும் தனது காரியமான பெருத்த வயிறு முதலிய கடத்தின் அவயவங்களில் வியாபியாமலிருப்பானாகில், மலைக்குக் குய

வன் கருத்தாவாகமாட்டாதவாறு போலக் கடத்திற்கும் கருத்தா வாகமாட்டான்.

ஈசுவரனுக்குக் காரியமிருத்தலால் சரீரமுமிருக்கவேண்டு மெனின், இந்தச் சங்கை பொருந்தாது. குயவன் முதலியவர் களுக்கும் தனது தேகத்தைத் தொழிற்படுத்துங் காரியம் வேறொரு தேகத்தைக்கொண்டு நிகழுகிறதாகக் காணப்படுகிற தில்லை. அதுபோல், தனது சரீர ரூபமான உலகத்தைத் தொழிற் படுத்துதற்கு வேறொரு சரீரம் ஈசுவரனுக்கு வேண்டியதில்லை.

குயவனுக்குத் தன் சரீரத்தின் றொழிற்பாடு இச்சையினால் நிகழ்கின்றதெனின், அஃதுண்மை. இச்சையினால் காரியங்கள் நிகழ்வது பற்றியே காரியக்கூட்டங்களனைத்தும் ஈசுவரனையே காரணமாகக்கொண்டு இருத்தலால் உலக கருத்தாவும் இச்சைக் குப் பின்னர் காரியத்தைச் செய்பவராக அநுமானஞ் செய்யப் படுகிறார் என்பது பற்றிக் குற்றமில்லை.

இச்சையும் மனத்தின் றொழிலாதலால் உலக கருத்தாவுக்கு அது எவ்வாறு பொருந்துமெனின், இந்தக் கேள்வி பொருந் தாது. நமக்கும் இச்சையானது மனத்தின்றொழிலன்று. ஞான சத்தி புத்தியினிடத்துத் தோன்றுமாறுபோல, மனத்தினிடத்துத் தோன்றும் கிரியாசத்தியே இச்சையென்று மந்திரவார்த்திகடீ கையில் நம்மால் கூறப்பட்டிருக்கின்றது. எவ்வாறெனின், "சத்தி ரூபமான அவருடைய மனத்திற்றோன்றுகின்ற கிரியாசத்தியே இச்சையாகும்" என்பதாம்.

ஆகையால், ஈசுவரன் மறைக்கப்படாத சத்தியையுடைய வனுயிருத்தலால், அவனுக்குத் துணை வேண்டியதில்லை. வேறு சரீரத்தைத் துணையாக வேண்டாது இச்சையினாலதிட்டிக்கப் பட்ட சரீரத்தின் றொழிற்பாட்டிற்குக் கருத்தாவாயிருக்குந் தன்மை இச்சைக்குக் காணப்பட்டிருக்கிறது. மண் முதலிய வற்றாலுண்டான வெளியிலுள்ள கட முதலியவற்றில் கருத்தா வாயிருக்குந்தன்மை காணப்படவில்லையேயெனின், அஃதுண்மை.

அதுபற்றியே உலகம் ஈசுவரனால் அதிட்டிக்கப்படுவதாயிருத்த லால் அவனுக்குச் சரீரம் போல் அநுமானஞ் செய்யப்படு கின்றது.

இந்தக்காரியம் காணப்படுதலால் ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்திகளின் நிறைவே ஈசுவரனுக்கு உண்டென அநுமானஞ் செய்யப்படுகின்றது. ஆகையால் கலை, அராகம், வித்தை முதலிய மாயா சரீர சம்பந்தம் ஈசுவரனுக்கில்லை. உண்டென்னில், ஈசு வரத் தன்மைக்குப் பிறழ்ச்சி நேரிடும். சகளராயும், நிட்களராயும் உலக கருத்தா விளங்குகின்றாரென்பது பின்னர் வெளிப்படை யாக விளங்கும். அன்றியும், அறியுந்தன்மை முதலிய சத்திகளின் சேர்க்கையால் ஆன்மாவைப்போல் நாசமற்றவராயுமிருக்கின்றார். ஆன்மாக்களுக்கு அநேகமாயிருக்குந்தன்மையும், வியாபகமா யிருக்குந் தன்மையும் போககாரிகையிற் சாதிக்கப்பட்டிருக்கின் றன. ஆகையால் ஈசுவரன் வியாபகராயுமிருக்கின்றார்.

கடம், ஆடை முதலிய அநேக காரியங்கள் அநேக கருத் தாக்களையின்றிச் சித்திக்காதவாறுபோல், பூமி முதல் கலையீறான அநேக தத்துவக்கூட்டங்கள் உலகமென்று சொல்லுதற்குரிய காரியங்களாயிருக்கின்றமையால், உலக கருத்தாக்களும் அநேகர் இருக்கவேண்டுமென்று ஊகிக்கலாமெனின்; உண்மை. பூமி முதல் கலையீறாகவுள்ள அனைத்தும் போகரூபமான ஒரே பிரயோ ஜனமுடையதாக ஆகாதாயின் நீ கூறியது பொருந்தும். அவ் வாறே, "கலையினால் சாமர்த்தியத்தையடைந்த சைதன்யத்தை யுடையவனும், வித்தையினாலறிவிக்கப்பட்ட விடயங்களையுடை யவனும்" என்பது முதலியஇடங்களில் கூறப்பட்டிருக்கின்றது. மேடை முதலியன வேறு வேறாயிருப்பினும் ஒரே பயனுடையன வாக இருந்து ஒரே கருத்தாவினால் செய்யப்பட்டிருக்குமாறு போலக் கலை முதலிய அனைத்தும் போகமென்னும் ஒரே பய னுடையனவாய் ஒரே கருத்தாவினால் தோற்றுவிக்கப்பட்டன வென நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது.

அந்த ஒரு கருத்தாவே எல்லா உலகங்களையும் தோற்று விக்கின்றமையால் அளவற்ற ஐசுவரியத்தை யுடையவன் என்

றும், பரோபகாரத்தின் பொருட்டே பிரவிருத்திக்கின்றமையால் பரம சிவனென்றும் மூலத்திற் கூறப்பட்டவாறும். எனவே, இத்தகைய தருமத்துடன் கூடியிருக்கின்றவன் சிவன் என்பது பிரமாணத்தினால் நிச்சயிக்கப்பட்ட தென்க. (க.உ.)

(அ—கை) இவ் விடயத்தில் சாங்கியர் கொள்கையைக் கூறுகின்றார்.

(ங) பலநிற முடைய நூலிலிருந்து பலநிறமுடைய ஆடை தோன்றுவதாகக் காணப் பெற்றிருக்கின்றது. சங்கரிடமிருந்துண்டாவதாகக் காணப்படுவதில்லை. இவவாறே, பலவேறு வகையான உலகமும் பலவேறு வகையான வித்திலின்றும் உண்டாயிற்றே யன்றிச் சங்கராிடமிருந்துண்டாவதில்லை என்பதாம்.

(உரை) ஆடைக்குக் கருத்தாவான சேணியனை மறைத்து நூலிலிருந்து ஆடையுண்டாவதாக நாங்கள் கூறவில்லை. அவ்வாறு கூறின், அநேக விரோதம் நேரிடுமாகையாலென்க. ஆனால் சேணியன் இருப்பினும் உலக கருத்தா சிவன் என்பதற்குக் கூறப்பட்ட காரியத்தன்மை யென்னும் ஏது ஆடை யென்னும் திருட்டாந்தத்திலிருந்தும் சேணியனிடமிருந்து தோன்றுமையால் வியாத்தி சித்திக்காமல் பிறழ்ச்சி நேரிடும். ஆடை நூலிலிருந்துண்டாவது போல், உலகம் மாயையிலிருந்துண்டாவ தென்பது பொருந்தும். முதற் காரணத்தையின்றிக் காரியம் உண்டாகாதாகையா லென்க. (ங)

(அ—கை) காரியமானதுகருத்தாவினிடமிருந்து தோன்றுகிறதில்லை யென்னுங் குற்றம் நேரிடாதெனக் கூறுகின்றார்.

(ச—ரு) சடமாகிய நூலென்னும் முதற் காரணமானது சேணியனுடைய ஞானக்கிரியைகளையின்றி ஆடைக்குக் காரணமாகக் காணப்படவில்லை. அது போல் சடமாயும், முதற்காரணமாயுமிருக்கும் மாயையானது ஈசுவரனுடைய ஞானக்கிரியைகளையின்றி உலகத்திற்குக் காரணமாக ஆகாது என்பதாம்.

(உரை) நூல் முதலியன முதற் காரணமாயிருப்பினும் ஆடை முதலியவற்றைச் செய்யும் விசேட ஞானக்கிரியைகளுடன் கூடின சேணியனையின்றித் தனது காரியத்தைத் தோற்றுவிப்பதாகக் காணப்படுவதில்லை. இதனால் காரியமனைத்தும் முதற் காரணத்தோடு கூடிய கருத்தாவினால் வியாபிக்கப் படுவனவாய்ச் சித்தித்தன. உலகமும் முதற்காரணத்தை யுடையதாயிருப்பதாலும், காரியமாயிருப்பதாலும் கருத்தாவை யுடையதென்பது சித்திக்கின்றது. (௪-௫)

(அ--கை) இனி மீமாம்சகமதத்தை யநுசரித்து உலகத்திற்குக் கருத்தா வுண்டென்று கூறுதல் சித்த சாதன மென்னும் குற்றமாகுமென்று கூறுகின்றார். சித்தசாதனம்—சித்தித்ததைச் சாதித்தல்.

(௬) பலவிதமான கன்மங்களினால் உலகமும் பலவிதமாக இருக்கும். கன்மத்தினாற்றான் புருடனுக்குப் பலனுண்டாகின்றது. ஆகையால், ஈசுவரன் செய்யக் கூடியது எது வென்று பிறரொருவர் கூறுகின்றனர் என்பதாம்.

(உரை) காரியமாயிருத்தலால் கருத்தாவை மாத்திரங் கொள்ளல் வேண்டும். தருமா தரும ரூபமான கன்மமே உழுதல் ரூபமான கன்மம்போல் காரியத்தை யுண்டுபண்ணுமென்பது உங்களாலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆகையால், வேறொரு கருத்தாவை எதற்காக அநுமானிக்க வேண்டும். (௬)

(எ) இது உண்மை. ஆயினும், இந்தக்கன்மமானது சடமாகக்காணப்பட்டிருக்கின்றது. ஆகையால் உழுதல் முதலியன போல அறிவுள்ள கருத்தாவைத் துணையாகக் கொண்டிருக்கின்றது என்பதாம்.

(உரை) உழுதல் முதலிய தொழில்கள் அறிவுடைய கருத்தாவையின்றிப் பலத்தையுண்டுபண்ண மாட்டா; புருடர்களின் பொருட்டுப் போகங்களைக் கொண்டுவந்து கொடுப்பதற்குச்

சாமர்த்தியமுடையனவாகவுமில்லை. * இவ்வாறே, தருமாதருமங்களும் கன்மமாயிருக்கின்றமையால் தன் பலனைக் கொடுப்பதற்காக விசேட ஞானத்துடன் கூடினவனும், அநுமானத்தினால் முன்னர்ச்சித்திக்காதவனுமுள்ள உலக கருத்தாவைச் சாதிக்கின்றமையால் சித்த சாதனமென்னுங் குற்றமில்லையென்க. (எ)

(அ—கை) காணப்படும் ஒன்றைக் கொள்ளுதல் பொருந்தும். காணப்படாத தொன்றைக் கொள்ளுதல் பொருந்தாது என்பார் கூற்றைக் கூறுகின்றார்.

(அ) அநேக சேதனர்களான புருடர்களுடன் கூடின மாயையே உலகத்தைத் தோற்றுவிக்கும். பரமேசுவரரால் என்ன பிரயோஜனம்? என்று சிலர் கூறுகின்றனர். அது சரியன்று என்பதாம்.

(உரை) உழுதல் முதலியன பலர் கூடிச் செய்யப்படுவனவாய்க் காணப்படுவதுபோல், அறிவுடைய புருடர்கள் பலர் கூடி மாயையினின்று கலை முதலிய காரியங்களைத் தோற்றுவித்தல் கூடுமாகையால், உலகம் அநேக கருத்தாக்களையுடையதாயிருக்கும். வேறு கருத்தா உண்டென்று சாதித்தல், காணப்படுவதை இழத்தல் காணப்படாததைக் கொள்ளுதல் என்னுங் குற்றங்கட்கிடனும். இவ்வாறு கூறும் பிறருடைய கூற்றுப் பொருந்தாதென்க.

பிரகுருதி, புருடன் என்னும் இரண்டின் பொதுவான சம்பந்தம் மாத்திரம் புருடர்களுககுக் கலை முதலிய காரியங்களைத் தோற்றுவிப்பதற்கு ஏதுவாயிருக்கின்றதா? அல்லது, போக்ய போக்திரு இலக்கணமான விசேட சம்பந்தம் புருடர்களுக்கு அக்காரியங்களைத்தோற்றுவிப்பதற்கு ஏதுவாயிருக்கின்றதா? (அ)

---

* உழுதற்றொழில் பலன் தருவதற்குமாத்திரம் உவமையாகும். தொழிலின் நிகழ்ச்சிக்கு உவமையாகாது. நிகழ்ச்சிக்கும் உவமையாகக்கொள்ளின், வினைசெய்த உயிரே வினையின் பலனைத் தோற்றுவிக்குமென்றாகிக் குற்றமாகுமென்க.

(௯) (அவற்றுள்) பிரகிருதி புருடன் என்னும் இவற்றின் சாமான்ய சம்பந்தமே உலகத்தைத் தோற்றுவிப்பதில் காரணமென்னில், எப்பொழுதுமே கலை முதலிய காரியங்களுண்டாக வேண்டும் என்பதாம்.

(உரை) பிரகிருதி, புருடன் என்னும் இவ்விரண்டும் வியாபகமாயிருக்கின்றமை பற்றி கைவல்ய நிலையிலும் அவ் விரண்டும் சேர்ந்திருத்தலால் சம்பந்தம் மாத்திரமிருப்பது கொண்டு கலை முதலிய காரியங்கள் எக்காலத்தும் உண்டாகும் நிமித்தமாக முத்தி என்பதில்லாமற் போய்விடும் என்க. (௯)

(அ—கை) இனி இரண்டாவது பக்ஷத்தைப் பற்றிக் கூறுகின்றார்.

(௧௦) பிரகிருதி, புருடன் என்னும் இரண்டின் போக்ய போக்திரு இலக்கணமான சம்பந்தம் கலை முதலிய காரியங்களை உண்டுபண்ணுதற்குக காரணமென்னில், காரணமின்றி ஒரு காரியமும் ஓரிடத்துங் காணப்படாமையால் போக்ய போகதிருசம்பந்தத்திற்குக் காரணமொன்று கூறவேண்டும் என்பதாம்.

(உரை) பிரகிருதியானது பிரகிருதி சொரூபமாகவே இருந்துகொண்டு போக்கியமாயிருக்கவில்லை. புருடனும் புருட சொரூபமாகவே இருந்துகொண்டு போக்தாவாயிருக்கவில்லை. இருப்பின், எக்காலத்தும் போக்தாவெனப்பட்டு முத்தியென்பதில்லையாய் முடியும். ஆகையால், கலை முதலிய காரியங்களின் வாயிலாக பிரகிருதி போக்கியமாயும், புருடன் போக்தாவாயும் ஆகின்றன. ஆகவே கலை முதலியவற்றின் உற்பத்தியாலுண்டானதாயும், சையோக ரூபமாயும், பிரகிருதி புருடர்களின் போக்கிய போக்திரு ரூபமான சம்பந்த விசேஷமாயுமிருக்கும் அந்தக்கலாதிகளின் சம்பந்தத்திற்குக் கருத்தா ஒருவன் வேண்டும். கருத்தாவின்றிக் காரியம் சம்பவிக்காதென்று கூறப்பட்டிருக்கின்றமையாலென்க. (௧௦)

(அ—கை) பிரகிருதிக்கும், புருடனுக்குமே இவ்விடத்தில் கருத்தாவாயிருக்குந் தன்மையைக் கொள்ளுவோம். வேறு ஒரு

கருத்தாவைக் கொள்ளுவதால் பயன் யாதெனின், இக்தக்கொள்கை பொருந்தாது என்று கூறுகின்றார்.

(க0இ) புருடன் தானாகவே சக்தனாகவில்லை. பிரகிருதியானது புருடனைக் குறித்துச் செல்கிறதில்லை என்பதாம்.

(உரை) புருடன் அசக்தனாயிருக்கின்றமையால், தானாகவே பிரகிருதியினின்றும் கலை முதலிய காரியங்களைத் தோற்றுவிப்பதற்குச் சாமர்த்தியமுடையவனாக ஆகமாட்டான். பிரகிருதி அறிவற்றதாயிருக்கின்றமையால், இத்தகைய காரியத்தைக் கன்மநிமித்தம் புருடனின் பொருட்டுச் செய்யவேண்டுமென்னும் ஞானமுடையதாக ஆகமாட்டாது. ஆகையால், போக்கியபோக்திரு சம்பந்த விஷயத்தில் கருத்திருத்தன்மை புருடனுக்கும் பிரகிருதிக்கும் கிடையாதென்க. ஆனால், சம்பந்தத்தை மாத்திரம் கொள்ளவேண்டும். (க0இ)

(கக) ஆகையால், போக்கிய போக்திருத்தன்மைகளின் சேர்க்கையிலும் அவற்றின் நீக்கத்திலும் பரமேசுவரரே காரணராவர் என்பதாம்.

(உரை) ஆகையால், போக மோக்ஷமென்னும் இவற்றின் சாதனங்கள் வேறு வழியாகக் காணப்படாமையால் சருவஞ்ஞராயும், சருவகருத்தராயும் உள்ள பரமேசுவரரே காரணராவர். வேறு எவரும் காரணராகாரென்று கூறவேண்டும் என்க. (கக)

(அ—கை) இனி, உலகாயத மதத்தை அநுசரித்துக் கூறுகின்றார்.

(கஉ) உலக பீஜமானது உலகத்தைத் தோற்றுவிக்கும் இயல்புடையதெனக் கொள்வோம். பரமசிவனைக் கொள்வதனால் பயன் யாது? நீவிரும் வெகுதூரஞ் சென்றும் இயல்பென்றுதான் சொல்லவேண்டும் என்பதாம்.

(உரை) பரமேசுவரர் உண்டெனக் கொண்டு அவருக்கு உலகத்தைத் தோற்றுவிக்கும் இயல்பையும் நீங்கள் ஒப்புக்

கொள்ளவேண்டும். அவ்வாறு கொள்வதினின்றும் இருவர் மதத்தினும் சித்தித்துள்ள முதற்காரணத்திற்கே உலகத்தைத் தோற்றுவிக்கும் இயல்பைக் கொள்ளுவது உத்தமம். இவ்வாறு, பிரகிருத்திக்கு இயல்பைக் கொள்ளுமிடத்தில் பரமேசுவரனையும், அவனது இயல்பையும் கொள்வதான அதிகமென்னுங் குற்ற முண்டாகாது. (கஉ)

(அ—கை) முதற்காரணமே உலகத்தைத் தோற்றுவிக்குமென்பது பொருந்தாது என்று கூறுகின்றார்.

(கஉ இ) (முதற்காரண ரூபமாயிருக்கும்) உலக கருத்தாவின் இயல்பானது விசேடத்துடன் கூடியதா? என்பதாம். (கஉ இ)

(அ—கை) இது என்ன கேள்வி? உலகத்தைத் தோற்றுவிப்பதே முதற்காரண ரூபமாயிருக்கும் கருத்தாவுக்கு இயல்பு எனில், பொருந்தாதென்று கூறுகின்றார்.

(கங) அந்தத் தொழிலானது அந்நியனால் ஏவப்பட்ட அந்த உலக கருத்தாவினுடையதா? அல்லது, சுதந்திரனை அந்த உலக கருத்தாவினுடையதா? என்பதாம்.

(உரை) உலக காரண ரூபமாயிருக்கும் அது அறிவுடைய கருத்தாவினால் ஏவப்பட்டு உலகத்தை தோற்றுவிக்கும் இயல்புடையதாயிருக்கின்றதா? அல்லது, சுதந்திரமாகவே அந்த இயல்புடையதா யிருக்கின்றதா? (கங)

(கங இ) (அவற்றுள்) சுதந்திரமாகவே உள்ளதென்று கூறில் அதற்குப் பிரமாணமில்லை யென்று முன்னரே சாதிக்கப்பட்டிருக்கின்றது என்பதாம்.

(உரை) சடத்திற்குக் கருத்தாவாயிருக்குந் தன்மை உண்டென்பதற்குக் பிரமாண மில்லை யென்பது முன்னரே சாதிக்கப் பட்டிருக்கின்றது. (கங இ)

(அ—கை) எவ்வாறு சாதிக்கப்பட்டிருக்கின்றதென்று காட்டுகின்றார்.

(௧௪) சடமான முதற்காரணமானது சுதந்திரமாக ஓரிடத்தும் காரியத்தைச் செய்கிறதாக ஆகாது என்பதாம். (௧௪)

(அ—கை) இரண்டாவது பக்கமாயின் அது பொருந்துமென்று கூறுகின்றார்.

(௧௪இ) அறிவுடைய புருடனது சத்தியினால் ஏவப்பட்ட அந்த முதற்காரணத்தின் தொழில் பிரமாணத்தாற் சாதிக்கப்பட்டிருக்கின்றதென்பதாம்.

(உரை) அறிவுடையவனது கிரியாசத்தியினால் ஏவப்பட்ட அந்த முதற்காரணத்தின் தொழில் பிரமாணத்தாற் சித்தித்திருக்கின்றமையால் ஒப்புக் கொள்ளப் படுகின்றது. (௧௪இ)

(௧௫) (ஆகவே) எந்த அறிவுடைய புருடன் முதற்காரணத்தை ஏவுகின்றானோ அந்த அறிவுடைய புருடனே ஈசுவரனென்று அறிந்து கொள்ள வேண்டும் என்பதாம்.

(உரை) அறிவுடைய எவன் தனது சக்தியினால் முதற் காரணத்தை ஏவுகின்றானோ அவனே ஈசுவரனாகச் சித்தித்தனன். ஆகையால், முதற் காரணத்திற்கே உலகத்தைத் தோற்று விக்கும் இயல்பு உண்டென்று சொல்லுதல் கூடாது. (௧௫)

(அ—கை) இவ்வாறாயின் கிரியா சத்தி மாத்திரம் இவ்விடத்தில் பிரகிருதி புருடர்களை ஏவுகிறதாக ஆகட்டும். ஈசுவரனால் பயன்யாது? அவனுக்கும் அந்தச் சக்தியையின்றிக் கருத்திருத்தன்மை சித்திக்கிறதில்லை. அவ்வாறே, "ஹே சண்டி தேவி! நீ கருத்தாவான ஈசுவரனுடைய கிரியா சத்தியாக இருக்கின்றமையாலும், ஈசுவரனுக்கு உன்னையின்றிக் கருத்திருத்தன்மையில்லாமையாலும் அத்தகைய உன்னை வணங்குகின்றேன்' என்று பெரியோருங் கூறுகின்றனர் என்று கூறுகின்றார்.

(கடு இ—கசு இ) பரா சக்தியான இச்சா சத்தியே நிச்சய மாய்க் காரணமாயிருக்கின்றது. ஈசுவரன் இல்லை. மாயையினி டத்துக் கலக்கத்தால் பகற்கால மாகிய சிருட்டி காலத்தில் அந் தச் சத்தி தொழிற் படுகின்றமையாலும், இராக்காலமாகிய பிர ளய காலத்தில் மாயையினிடத்துத் தொழிற் பாடின்றி யிருக் கின்றமையாலும், அந்த இச்சா சத்தியே நிச்சயமாயிருக்க ஈசு வரன் எதற்காக வேண்டு மென்பதாம்.

(உரை) அந்தச் சக்தியே மாயையினிடத்திலிருந்துகொண்டு அதனை ஏவிய பின்னர்க் கலக்கத்துடன் கூடிச் சாமர்த்திய ரூபமா யிருக்கும் அந்த மாயையினின்றும் உலகத்தைத் தோற்றுவிக்கும் பொருட்டுத் தொழிற்படுகின்றது. ஆகையால், இந்தச்சத்தியி னும் வேறாக ஈசுவரன் வேண்டுவதில்லை யென்க. (கடு இ-கசு இ)

(அ—கை) இந்தக்கூற்றுப் பொருந்தாதென்று கூறு கின்றார்.

(கஎ) கலக்கத்தைச் செய்தற்குக் காரணமாக ஈசுவரனை யின்றி வேறொன்றுமாகிறதில்லை என்பதாம்.

(உரை) சடத்திற்குத் தானாகவே தொழிற்படவும், தொ ழிற்படாமலிருக்கவும் சாமர்த்தியங் கிடையாதென்பது முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால், வேறு வழியாகப் பொருந் தாததுகொண்டு முற்றறிவுடன் கூடின பரமேசுவரனே மாயை யைத் தொழிற்படுத்தும் விஷயத்தில் கருத்தாவாவன் என்க. (கஎ)

(அ—கை) சத்தியே முற்றறிவுடையதாய் இருக்கட்டும் என்பார்க்குக் கூறுகின்றார்.

(கஎ இ) சத்தியே முற்றறிவுடைய தென்னில் பெயரில் வாதமே யொழியப் பொருளில் வாதமில்லை என்பதாம்.

(உரை) சத்தியே முற்றறிவுடையதாயின், பெயரில் வாத மிருக்கின்றது. பெயரின் பேதத்தால் பொருள் பேதத்தை யடையாது. ஆகையால் கூறியவாறு நீ கூறும் சக்தியே ஈசுவர னாக இருக்கட்டுமென்க. (கஎ இ)

(அ—கை) இனி முற்றறிவு முதலிய தருமங்களையுடைய ஈசுவரனே முதற்காரணம் என்று கூறும் வேதாந்திகள் கூற்றைக் கூறுகின்றார்.

(க௮இ-க௯இ) ஞானக்கிரியா சத்திகளையுடைய பரமாத்மாவான பரமேசுவரரிடமிருந்து போக்திருத்தன்மையையுடைய சேதனப் பிரபஞ்சமும், போக்கியத்தன்மையையுடைய அசேதனப் பிரபஞ்சமும் உண்டாகும். ஆகையால், அந்தப் பரமாத்மாவினும் வேறான உலகை கருத்தாவினால் யாதுபயன்? வியாபகனான பரமேசுவரன் ஒருவனையே போக்தாவான உயிராகவும் கொண்டிருக்கின்றோம் என்பதாம்.

(உரை) போக்திருத்தன்மையால் சேதனமென்றும், போக்யத்தன்மையால் அசேதனமென்றும் வேறுபட்ட உலகரூபமான காரியத்தால், முற்றறிவு, முற்றுத்தொழில்களுடன் கூடினதாயும், காரியத்தின் வழியாகப் போக்திருத்தன்மை, போக்கியத்தன்மை யென்னும் இயல்பினையுடையதாயும், ஒன்றாயும், துணை வேண்டாததாயும், பரமாத்மாவென்னும் பெயருடையதாயுமிருக்கும் ஈசுவர ரூபமான முதற்காரணத்தை அநுமானஞ் செய்து கொள்ளல் வேண்டும். வேண்டவே, இதனினும் வேறான ஈசுவரனைக் கூறுதல் பொருந்தாது. சேதனங்கள் நித்தியங்களென்று போககாரிகையில் முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றமையால் அவற்றிற்குக் காரியத்தன்மை உண்டென்பது சித்திக்காதெனின், இந்தக் கூற்றுப் பொருந்தாது. சேதனமானது பிறிதொரு சேதனத்துடன் கூடியிருத்தலால் அதற்குக் காரியத்தன்மை சம்பவிக்கலாம் அசேதனங்களுக்குச் சேதனத்துடன் சேர்க்கையிருப்பதுபோலச் சேதனங்களுக்கும் பிறிதொரு சேதனத்துடன் சேர்க்கையிருத்தலால் இவ்விரண்டிற்கும் முதற்காரணமாகச் சேதனம் சித்திக்கவே செய்யும். (க௮இ-க௯இ)

(அ—கை) இதுவும் பொருந்தாது எனக் கூறுகின்றார்.

(௨0இ) பரமான்மாவினிடமிருந்து சித்தாயும் சடமாயுமுள்ள உலகம் உண்டாகின்றதெனில், அந்தப் பரமான்மாவும் சித்தாயும் சடமாயும் ஆகும். காரியமானது காரணத்தின் தருமத்தைப் பொருந்தியிருக்குமாதலாலென்பதாம்.

(உரை) பரமான்மாவினிடமிருந்து சித்தாயுஞ்சடமாயுமுள்ள உலகம் தோன்றுகின்றதெனக் கூறுமிடத்து அந்தப் பரமான்மா சித்தும் சடமுமான இயல்பையுடையவனாக ஆகவேண்டும். முதற்காரணத்தின் சொரூபத்தை அநுசரித்தே சுவர்ணம், மண் முதலியவற்றாலுண்டான காரியங்களான கடம் முதலியவற்றின் சொரூபங்கள் சித்திக்கின்றவாறு போலும். (உ௦இ)

(உகஇ) (ஆகவே) மாறுபட்டவையாயும், ஒரே காலத்திலிருக்கின்றவையாயும், ஒரேபற்றுக்கோட்டையுடையனவாயுமுள்ள இரண்டு தருமங்கள் ஒன்றொன்று நாசத்தையடைந்து தமக்கே நாசத்தைச்செய்கின்றன என்பதாம்.

(உரை.) மாறுபட்ட இரண்டுதருமங்கள் ஒன்றையொன்று கெடுக்குமாகையால், கடத்தின் உண்மையும் அதன் இன்மையும் ஓரிடத்தில் ஒரே காலத்தில் இருக்கமாட்டாதவாறு போல, சித்துத்தன்மையும் சடத்தன்மையும் ஒரு பொருளினிடத்தில் ஒரே காலத்திலிருக்கமாட்டா. ஆனால், ஒரு பாகத்தில் சித்தாயும் மற்றொரு பாகத்தில் சடமாயும் பரமான்மா இருக்கின்றான் என்று கூறின், அவயவத்துடன் கூடிக் கடமுதலியன போல் காரியமாயிருத்தலால் முதற்காரணமாயிருக்குந் தன்மை பொருந்தாதாய் விடுமென்க. (உகஇ.)

(உஉ) (அன்றியும்) முதற் காரணத்தன்மையிருத்தலால் மண் போல் பரமான்மா சடப்பொருளாக ஆவன் என்பதாம்.

(உரை.) முதற்காரணங்களனைத்தும் சடமென்று மண் முதலியவற்றைக்கொண்டு நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. ஆகவே, பரமான்மாவுக்கு முதற்காரணமாயிருக்குந்தன்மை இருப்பின் சடத்தன்மைவந்துவிடும். சித்தாயிருக்கின்றானென்று கொள்ளின், முதற்காரணமாயிருக்குந்தன்மை கிடையாது என்க. (உஉ)

(உஉஇ) (அன்றியும்) சிற்சட ரூபமான முதற்காரணத்தினின்றும் உண்டான போக்தாக்களாகிய ஆன்மாக்கள் தோற்றுவிக்கத் தகுந்தவையாயிருத்தலால் கட முதலியனபோல் அசேதனங்களாக ஆகும் என்பதாம்.

(உரை) முதற்காரணத்திலிருந்து உண்டாகும் கடம் முதலியன சடங்களென்றுசித்தித்திருக்கின்றது. அதுபோல், பரமான்ம ரூபமான முதற் காரணத்திலிருந்து உண்டாகும் போக்தாக்களான ஆன்மாக்களும் அசேதனங்களென்று சித்தித்துவிடும். நீங்களோ தன்னையும் பிற பொருளையும் அறிகின்றமையால் சுயம் பிரகாசங்களாகவும் சேதனங்களாகவும் ஆன்மாக்களைக் கொண்டிருக்கின்றீர்கள். அவ்வாறாயின், முதற்காரணத்தினின்றும் உண்டாக மாட்டா. ஆகையால், பரமான்மாவைப் போல் ஆன்மாக்களையும் நித்தியங்களாகக் கொள்ளல் வேண்டும். ஆன்மாக்களுக்குப்பிறிதொரு சித்துப்பொருளுடன் சம்பந்தமிருத்தலால் சித்துப் பொருளைச் சம்பந்தித்திருக்கும் சடங்களுக்குப்போல் காரியத் தன்மையுண்டென்று கூறுவோமெனில், அவ்வாறு கூறலாகாது. எதனாலெனின், சித்துப்பொருள் பிறிதொரு சித்துப்பொருளைச் சம்பந்தித்து இராதாகையாலென்க. தனக்கே தான் கிரகிக்கத் தருந்த பொருளாக ஆகின்றதெனின், அவ்வாறாகாது. தன்னிடத்தில் தனக்குத்தொழிற்பாடு நிகழாதாகையாலென்க. ஆனால், ஞான ரூபமாக இருந்து கொண்டு எக்காலத்தும் ஆன்மாக்கள் பிரகாசிக்கின்றன என்று நம்மால் பரமோக்ஷ நிராசகாரிகையில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால், அவ்விடத்துக்கூறியிருப்பதை யறிந்து நிச்சயித்துக்கொள்க. (உஉ இ)

(உங இ) (ஆகவே) பரமான்மா சடமாயும் உண்டுபண்ணும் தருமத்துடனும் இருப்பின் மண் முதலியனபோல் தனது காரியத்தை உண்டுபண்ணுதற்பொருட்டு அறிவுடையவனது தொழிலை விரும்புவதாயிருக்கின்றது என்பதாம்.

(உரை) பரமான்மா முதற் காரணமாயிருத்தல் பற்றி அதற்குச்சடத்தன்மை கூறப்பட்டிருத்தலால் தனது காரியத்தை உண்டுபண்ணுதற் பொருட்டு மண் முதலியவற்றிற்குப் போல் புத்திமானான கருத்தாவினால் ஏவப்பட்டிருக்குந்தன்மையை அந்தப்பரமான்மாவிற்கு ஒப்புக்கொள்ளல் வேண்டும். ஆகையால், அத்துவிதம் பொருந்தாது. (உங இ)

(உசஇ) ஆகையால், முன்னர்க் கூறப்பட்ட குற்றங்களின் நிவிர்த்தியின் பொருட்டுப் போக்தாக்களான ஆன்மாக்களையும், உலகவித்தான மாயையினையும், சக்தியுடன் கூடின மகேசனையும் தனித்தனி ஒப்புக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

(உரை) ஆகையால் போக்தாக்களான ஆன்மாக்கள் ஒன்றிலிருந்தும் உண்டாகவில்லை. உலக வித்தான முதற்காரணம் சடம். முற்றறிவு முதலிய தருமங்களுடன் கூடின பரமசிவனே உலகத்திற்குக் கருத்தா. இவ்வாறு ஒவ்வொன்றையும் வேறு வேறாகவும் நித்தியமாகவும் ஒப்புக்கொள்ளல் வேண்டும். அவ்வாறே தத்துவத்திரய நிர்யணயத்திலும் சம்புவாகிய பரமசிவனும், புருடனும் நித்தியராயும், வியாபகராயும், கருத்திரு சத்தியுடன் கூடினவராயும் இருக்கின்றனர். மாயை நித்தியமாயும், வியாபகமாயும் சிவனுடைய கருத்திரு சத்தியால் அதிட்டிக்கப்பட்டதாயுமிருக்கின்றது. இம்மூன்று தத்துவங்களும் விகாரமான காரியங்களைத் தும் ஒடுங்குங் காலத்தும் ஒடுங்காது விளங்கிக் கொண்டிருக்கின்றன; என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே, முதற்காரணத்திலும் வேறாகப்பரமேசுவரன் சித்திக்கின்றதுபற்றி யாதொரு குற்றமுமில்லை என்க. (உசஇ)

(அ—கை) சிவ சத்திக்குப்பரிணாமங் கிடையாதாகையால் ஞானசத்தி கிரியாசத்தி என்ற பிரிவு எவ்வாறு பொருந்துமெனின், அப்பிரிவு உண்மையாக இல்லையெனக்கூறுகின்றார்.

(உரு) (எவ்வாறெனில்) பரமசிவனுடைய சக்தி ஒன்றே சர்வஞானக்கிரியா ரூபமாக இருக்கின்றது என்பதாம்.

(உரை) ஞான சத்தியின் வேறாகக் கிரியா சத்தியைக் கொண்டால் சடமாயும் வாமை முதலிய பிரிவால் பரிணாமத்தையுடையதாயும் ஆகும். அது கொண்டு இந்தக்கிரியா சத்திக்கு மாயைக்குப்போல் ஈசுவரனிடம் சமவாய சம்பந்தம் பொருந்தாது. இந்தக்கிரியாசத்தியோ பரிணாமத்தையடைகிறதில்லை. இந்தக் கிரியா சத்தியில்லையாயின், ஈசுவரன் கருத்தாவாக ஆகமாட்டான். கருத்தாவின்றியோ உலகத்தைத்தோற்றுவித்தல் பொருந்துகிற

தில்லை. ஆகவே, நிச்சயமாக ஞானக்கிரியா சத்திகளுக்கு ஒந்றுமையை ஒப்புக்கொள்ளல் வேண்டும். அறியப்படும் பொருள் செய்யப்படும் பொருள் என்னும் இவற்றிற்கு வேற்றுமையிருத்தலால் சத்தியினிடத்து எதனால் வேற்றுமை கிடையாதெனில், அறியப்படும் பொருள் செய்யப்படும் பொருள் என்னும் இவற்றிற்கும் வேற்றுமையில்லையாகையாலென்க. எவ்வாறெனின், * அறியப்படுந் தன்மையானது செய்யப்படுந் தன்மையினின்றும் வேறாகிறதில்லை. அந்த அறியப்படுந்தன்மையை அறிவுடைய ஒருவனால் பொருளுக்குள்ளது என்று கொள்ளாது பொருளின் இயல்பாகவே கொள்ளின், எல்லாப்பொருளும் எக்காலத்தும் அறியப்பட்டுக்கொண்டே யிருக்குமென்றாகி அனைவருக்கும் சருவஞ்ஞத்தன்மை வந்துவிடும். இனிச் செய்யப்படுந் தன்மையும் அறியப்படுந் தன்மையினின்று வேறாகிறதில்லை. ஆகவே, ஞானக்கிரியா சத்திகளுக்கு உண்மையில் வேற்றுமைகிடையாது. ஆனால், சொல்ரூபமான வேற்றுமைதானுண்டு. (உ௫)

(உ௫இ) (அவ்வாறே கிரியா சத்தியும்) தொழிற் பாட்டின் வேற்றுமையினால் வாமை முதலாக மூன்றுவிதமாய்க் கூறப்பட்டது என்பதாம்.

(உரை) வாமை முதலாகக் கூறப்படும் கிரியாசத்தியும் தொழிற்பாட்டின் பேதத்தால் வாமை, சேஷ்டை, ரௌத்திரி யென்று மூன்றுவிதமாக வேற்றுமையடைகின்றது. உண்மையில் கிரியா சத்தி ஒன்றுதான். இவ்வாறு கூறவில்லையாயின், அறியப்படும் பொருள்களின் வேற்றுமையால் ஒவ்வொரு பொருள்களையும் அறிகின்ற அறிவின்வேற்றுமைபற்றி ஒவ்வொரு பரமாணுவிடத்தும் அதனையறியும் முறையில் வேறு வேறான அறிவு உண்டாக வேண்டும். உண்டாகவே, அந்தச்சத்திகட்குப் பலவாயிருக்குந் தன்மைபற்றிச் சடத்தன்மை நேரிடும். இவ்வாறன்றி ஒரே ஞான சத்தியால் அநேக பொருள்களையறிவது

---

* அறியப்படாமல் செய்ய முடியாதாதலின் செய்யப்படுந்தன்மையின் வேறாக அறியப்படுந்தன்மையில்லை யென்பது கருத்து.

அநுபவசித்தம். அதுபோல, உத்தியோக ரூபமான கிரியா சத்திக்கு அநேக காரியங்களைச் செய்தல் குற்றமின்றிச் சித்தித்தது. காரியபேதம் பற்றிச்சத்திபேதமும் கூறப்பட்டது. (உரு)

(அ—கை) இவ்வாறாயின், தொழிற்பாட்டின் பேதம் எவ்வாறு உண்டாகுமென்பார்க்குக் கூறுகின்றார்.

(உகூ) பரமேசுவரர் அநாதியாகவே மலத்துடன் கூடிய பசுக்களைக்கிரியாசத்தியினால் கட்டுப்படுத்துகிறார். ஆகையால், மலத்துடன் கூடிய அவர்களைக் கன்மத்தை யநுசரித்து ஏவுகின்றார் என்பதாம்.

(உரை) முன்னரே பரமேசுவரர் அநாதியாகவே மலத்துடன் கூடிய பசுக்களைத்தமது கிரியாசத்தியால் கட்டுப்படுத்துகின்றார். ஆகையால், கட்டுப்பட்ட அப்பசுக்களைக் கன்மத்தின் பக்குவங்காரணமாக ஏவுகின்றார். (உகூ)

(அ—கை) ஆன்மாக்களோ வியாபகப்பொருள்கள். அவற்றை எவ்வாறு ஏவுதல் கூடும்? என்பார்க்கு அஃதுண்மை என்று அநுவதித்துக்கொண்டு விடைகூறுகின்றார்.

(உஎ) (ஆயினும்) பதியினாலேவைப்பட்ட ஆன்மாக்களுக்குப்போகசாதனங்களின் சம்பந்தத்திற்கு உரிமையான போக இச்சையானது மிகவும் உண்டாகின்றது என்பதாம்.

(உரை) விஞ்ஞான கேவலர்களின் வேறான ஆன்மாக்களுக்குக் கன்மங்காரணமாகக் காரியம், காரணமென்னுமிவற்றின் சம்பந்தத்தில் உரிமையை யுண்டுபண்ணுதலே ஈசுவரனுடைய ஏவுதலாகும். (உஎ)

(உஅ) சுத்தாசுத்த புவனங்களின் அதிகாரத்திலிருக்கும் வித்தியேசரான அநந்தேசுவரர் வாயிலாக உலக பீஜமாகிய மாயையைக் கலக்கி உலகத்தைத் தோற்றுவிக்கின்றார் என்பதாம்.

(உரை) சுத்தாசுத்த புவனங்களுக்கு அதிகாரியாயும், மந்திரேசுவரர்களுக்கு நாயகராயும் இருக்கும் அநந்தரை ஏவி மாயை

யினின்றும் உலகத்தைத் தோற்றுவிக்கின்றார். இவ்வாறே "வித்தி யேசுவரர்களுக்கு நாயகரான அநந்தர் இச்சையினால் உலகத்தைச் சிருட்டிக்கின்றார்" என்று பிறருங் கூறுகின்றார். (உ௮இ)

(உ௯இ) (பின்னர்) இச்சையையுடைய அந்தப் புருடர்களை இந்த உலகத்துடன் சேர்த்துப் போகத்திற்காகச் சாதன ரூபமான திதியை ஈசுவரன் செய்கின்றார் என்பதாம்.

(உரை) கன்மத்திற்கு ஏற்றவாறு காரியம், காரணமென்னு மிவற்றுடன் அந்தப் பசுக்களைச் சேர்த்து அவர்களுடைய போகத்திற்காகச் சாதன ரூபமான திதியை ஈசுவரன் செய்கின்றார். (உ௯இ)

(௩0—௩௧) (பின்னர்) திதியின் முடிவில் சம்சாரத்தினா லுண்டான இளைப்பு நீக்கத்தின்பொருட்டும், இடைவிடாது தொழிற்படும் பசுக்களுக்கும் மாயைக்கும் சத்தியையுண்டுபண்ணு தற்பொருட்டும், ஈசுவரன் எல்லாவற்றையும் ஒடுக்குகின்றார் என்பதாம். (௩0—௩௧)

(அ—கை) சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம் என்னுந் தொழிற்பாடுகள் வேறுவேறாகக் கூறப்பட்டன. இனி அநுக்கிரகத்தையுங் கூறுகின்றார்.

(௩௧இ) மலத்திற்கும் ஈசுவர சத்திக்கும் அதிகாரம் நீங்குங் காலத்தில் தீக்ஷையினால் விடுவிக்கின்றார் என்பதாம்.

(உரை) பின்னர்க் கூறப்படுமாறு மலத்திற்கும் ஈசுவர சத்திக்கும் ஆன்மாக்களைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் எப்பொழுது இல்லாமல் நீங்குகின்றதோ, அப்பொழுது ஈசுவரன், ஆன்மாக்களைத் தீக்ஷையினால் மலத்தினின்றும் நீக்குகின்றானென்பதாம். (௩௧இ)

(௩உஇ) வாமை, சேஷ்டை, ரௌத்திரி யென்று மூன்று விதமான கிரியா சத்தியானது தான் பிரிவுபடாமலிருப்பினும் தடை, சங்காரம், அநுக்கிரகமென்னும் தொழில்களால் பிரிவு பாட்டை யடைந்ததாக ஆகின்றது, என்பதாம்.

(உரை) சிருட்டி, திதி, திரோபவமென்னும் தொழில்கள் சம்சாரத்தில் ஆன்மாவைக் கட்டுப்படுத்துவதால், கட்டுப்படுத்துதல் வாமையென்னுங் கிரியாசத்தியின் றொழிலாகும். சங்காரம் சேஷ்டையின் றொழிலாகும். பாசத்தை யபகரித்தல் ரூபமான அநுக்கிரகம் ரௌத்திரியின் றொழிலாகும். இவ்வாறான இந்தத் தொழில்களால் கிரியா சக்தியானது அபின்னமாயிருப்பினும் பிரிவுபாட்டையுடையதாகக் கூறப்படுகின்றது. உண்மையில் ஒன்றுதான். வேறிடத்திலும் "சர்வ ஞானக்கிரியா ரூபமான சிவனது சத்தி ஒன்றுதான்" என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் குற்றமொன்றும் இல்லை. (௩௨இ)

(௩௩இ) இவ்வாறு ஈசுவரனுக்குச் சருவகருத்திருத்தன்மையுண்டென்பது சித்தித்தது. இதனால், சருவஞ்ஞத் தன்மையுடையவனாக ஆகின்றான் என்பதாம்.

(உரை) சேணியர் முதலாயினோர்க்கு ஞானமின்றிக் கருத்திருத்தன்மை காணப்படாமையால் ஈசுவரனுக்குச் சருவ கருத்திருத்தன்மையிருப்பதுகொண்டு சருவஞ்ஞத் தன்மை சித்திக்கின்றதென்று முன்னர்க் கூறப்பட்டது. (௩௩இ)

(௩௪இ—௩௫இ) (எவ்வாறெனில்) முதற்காரணம், நிமித்தம், பயன் என்னுமிவற்றுடன் கூடின ஆடையைச் சேணியன் அறிகின்றவாறுபோல, ஈசுவரனும் முதற்காரணம், நிமித்தம், பயன் என்னுமிவற்றுடன் கூடிக்கொண்டு எல்லாவற்றையும் உள்ளவாறு அறிகின்றான் என்பதாம்.

(உரை) சேணியன் நூல்களால் தேவதத்தன் பொருட்டுப் பொருள் வருவாய் காரணமாகத் தறி, தண்ட முதலியவற்றால் ஆடையைச் செய்கிறவனும் அந்த ஆடையைச் செய்யும் விஷயத்தில் முக்காலத்தும் மலம் நீங்கினவனும் இருக்கின்றவாறு போல, உலக கருத்தாவும் மாயையினால் பலவிதமான கன்ம நிமித்தம் பசுக்களுக்குப் போக மோக்ஷத்தின்பொருட்டு உலகத்தைத் தோற்றுவிக்கின்றவராயும், அவ்வாறு தோற்றுவிக்கும் விஷயத்

தில் முக்காலத்தும் மலமில்லாதவராயும் நிச்சயிக்கப்படுகின்றார் என்பதுகொண்டு அவருக்குச் சருவஞ்ஞத் தன்மை சித்திக்கின்றது. (௩௪இ—௩௫இ)

(௩௬இ—௩௭இ) இவ்வாறு எல்லாப் பொருள்களையும் தோற்றுவிக்கின்றமையால் பரமான்மாவான ஈசுவரனிடத்தில் இரண்டுவிதமான சத்திகள் இருக்கின்றன. அவை நித்தியமாகவும் இருக்கின்றன. அவை கலாசரீரம்போல் தோன்றுகின்றன. எந்தச் சக்தியுடன் கூடிக்கொண்டு ஈசுவரன் எல்லாவற்றையும் அறிகின்றானோ, எல்லாவற்றையுஞ் செய்கின்றானோ, அந்தச் சக்தியுடன் கூடியிருக்கும் காரணத்தால் தத்துவங்களை யறிந்தவர்களால் சகளரென்று கூறப்படுகின்றான் என்பதாம்.

(உரை) மேலே கூறியவாறு சர்வ ஞானக்கிரியா ரூபமான அதே சத்தியே நித்தியமாயிருந்து அநேக வடிவம்போற் றோன்றிக்கொண்டு ஈசுவரனுக்குச் சரீரமாக உபசரிக்கப்படுகின்றது. சத்தி சரீரமாயிருப்பதுபற்றி ஈசுவரன் சகளரென்று கூறப்படுகின்றான். (௩௬இ—௩௭இ)

(௩௮இ) இந்தப் பசுவானது கலாமயமான சரீரத்துடன் கூடுமாறுபோல, ஈசுவரன் எக்காலத்தும் கலாசரீரத்துடன் கூடமாட்டான். அதுபற்றி (சகளரென்று மேலே கூறப்பட்ட ஈசுவரனே நிட்களரென்று கூறப்படுகின்றான்) என்பதாம்.

(உரை) பசுக்களுக்குப்போலக் கலை முதலியவற்றின் ரூபமான சரீரம் இல்லாமையால் ஈசுவரன் நிட்களன் என்பது முன்னர்க் கூறப்பட்டது. (௩௮இ)

(அ—கை) இவ்விடத்தில் பிறருடைய ஆசங்கையைக் கூறுகின்றார்.

(௩௯இ) ஈசுவரனுக்கு நிட்களத்தன்மை யுண்டென்று கூறின், ஞானமும் கர்த்திருத்தன்மையும் சித்திக்கமாட்டா. எதனாலெனின், கலா சம்பந்தத்துடன் கூடிய சேதனர்களுக்கே அவை காணப்படுகின்றமையால் என்பதாம்.

(உரை) கலை முதலியவற்றின் சேர்க்கையினாற்றான் பசுக்களுக்கு ஞான முதலியன காணப்படுகின்றன என்பதுகொண்டு ஈசுவரனுக்குக் கலை முதலியன இல்லாமையால் ஞான முதலியன இல்லாமற் போய்விடுமென்க. (௩௯இ)

(அ—கை) ஈசுவரனுக்குக் கலை முதலியன இல்லாமை குற்றமன்றெனக் கூறுகின்றார்.

(௪0இ) பசுக்களுடைய ஞானக்கிரியைகள் மலத்தால் தடுக்கப்பட்டிருத்தலின் அறிவு விளக்கத்தின்பொருட்டுக் கலையின் சேர்க்கையை விரும்புகின்றன. ஈசுவரனுடைய ஞானக்கிரியைகள் கலையின சேர்க்கையை விரும்புகிறதில்லை; மலத்தின் தடையில்லாமையால் என்பதாம்.

(உரை) முன்னர்ப் போககாரிகையில் பசுக்களுடைய ஞானக் கிரியைகள் மலத்தால் தடுக்கப்பட்டிருத்தலால் கலை முதலிய துணைகளைக்கொண்டு விடயங்களிற் றொழிற்படுகின்றன என்று கூறப்பட்டிருக்கின்றது. பரமேசுவரன் அநாதியாகவே மலத்தால் மறைக்கப்படாமையால் அவருக்குத் துணைகளில் விருப்பங் கிடையாது. ஆகையால், அவருக்கு எல்லாப் பொருள்களின் சம்பந்தமான ஞானக்கிரியைகள் இருக்கின்றன என்க. (௪0இ)

(௪0ஐ) ஈசுவரனுக்கும் விருப்பத்துடன் கூடியவையாகவே யிருக்கின்றன என்பதாம்.

(உரை) அஞ்ஞானமிருக்கின்றமையால் பசுவுக்குப்போல ஈசுவரனுடைய ஞானக்கிரியைகளும் கலை முதலிய துணைகளை விரும்புகின்றன. (௪0ஐ)

(௪௧) (இவ்வாறாயின்) அப்பொழுது ஈசுவரன் பசுவாகவே ஆகின்றான் என்பதாம்.

(உரை) கலை முதலியவற்றின் சேர்க்கையால் தேவதத்தன் முதலாயினர்போல் ஈசுவரன் பசுவாக ஆய்விடுவன் என்க. (௪௧)

(அ—கை) ஈசுவரன் பசுவாக ஆகட்டும்; அதனால் கேடு என்னை என்பார்க்குக் கூறுகின்றார்.

(சகஇ) ஈசுவரனையின்றிக் காரியமில்லை. ஆகையால் வேறு ஈசுவரனைக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

(உரை) ஈசுவரனையின்றி உலக ரூபமான காரியம் உண்டாகிறதில்லையாகையால், வேறு ஈசுவரனைச் கொள்ளல் வேண்டும். அவனும் பசுவெனப்படின், அவனினும் வேறாக ஈசுவரன் ஒருவனைக் கொள்ளவேண்டுமென்றாகி அவ்வாறே மேலுஞ் சென்று வரம்பின்றி ஓடல் என்னுங் குற்றத்திற் கிடனாகுமென்க. (சகஇ)

(சஉ) கலை முதலியவற்றைத் தோற்றுவித்து அவற்றுடன் கூடி ஈசுவரன் காரியத்தைச் செய்கின்றான் என்பதாம்.

(உரை) கலை முதலிய தனது காரிய காரணங்களைத் தோற்றுவித்துப் பின்னர் அவற்றுடன் கூடி ஈசுவரன் எல்லாக் காரியங்களையும் செய்கின்றான் என்று கொள்வோமென்க. (சஉ)

(சஉஇ) (இவ்வாறாயின்) நிட்களனான ஈசுவரனுக்குஞானக் கிரியைகள் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றன. கலை முதலியவற்றால் என்ன பயன்? என்பதாம்.

(உரை) ஈசுவரன் கலை முதலியவற்றை விரும்பாது நிட்களனாகவே இருந்துகொண்டு தன்னிடமிருந்து காரிய காரணங்களையும் அவ்வாறே உலகத்தையுந் தோற்றுவிக்கின்றான். ஆகவே, அவனுக்குக் கலை முதலியவற்றைக் கூறவேண்டாம். இவ்விஷயம் நரேசுவர பரீக்ஷை யென்னும் நூலில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. (சஉஇ)

(சஙஇ) ஆகையால் கூறியது அமையும். போக மோக்ஷங்களைச் சாதித்துத் தருபவனாயும், மேலே கூறப்பட்ட இலக்கணம் வாய்ந்தவனாயுமுள்ள பரமசிவன் முத்தி விருப்பமுடைய முமுட்சுக்களால் வழிபடத்தகுந்தவன் என்பதாம்.

(உரை) ஆகையால் சருவஞ்ஞத்தவ முதலிய இலக்கணங் களையுடைய பரமேசுவரனே பசுக்களின் பொருட்டுப் போக மோக்ஷங்களைத் தருபவனுவன். மோக்ஷத்தை விரும்புகிறவர் எக்காலத்தும் பரமேசுவரனையே ஆராதிக்க வேண்டும். வேறொரு வரையும் ஆராதிக்கக்கூடாது. இவ்வாறு சாதனத்துடன் கூடின போகம் முடிந்தது. (சுநு இ)

(அ—கை) இனி, சாதனத்துடன் கூடிய மோக்ஷத்தைக் கூறுகின்முர்.

(சச இ-சு௱இ) மலம் முதலிய பாசங்களின் நாசமும் எல்லா ஞானக்கிரியைகளின் தோற்றமும் மோக்ஷமாகும். அதற்குக் காரணம் ஈசுவரன். அந்த ஈசுவரனுன பிரபுவுக்குத் தனது சத்தி காரணமாகும். பசுவாகிய ஆன்மா விடுவிக்கப்படுகிறவனுயிருத்த லால் செயப்படுபொருளாவன். மோக்ஷத்தைக் கொடுத்தல் நித்திய முத்தனுயிருத்தலால் கருத்தாவைச் சேர்ந்தது. பசு வாகிய செயப்படுபொருளைச் சேர்ந்ததன்று என்பதாம்.

(உரை) முன்னர்ப் போககாரிகையில் விஞ்ஞான கேவலர் கட்கு ஆணவமலமொன்றும், பிரளயகேவலர்கட்கு ஆணவம் கன்மமிரண்டும், சகலர்கட்கு ஆணவம் கன்மம் மாயை மூன்று மான பாசங்கள் உண்டென்பது கூறப்பட்டது. அவரவர்களுக் குரிய காலங்களில் அந்தப்பாசங்கள் தகுதிப்படி நாசமடைகின் றன. சர்வஞ்ஞத்தன்மை சர்வகர்த்திருத்தன்மைகளின் தோற் றமே ஆன்மாக்களுக்கு மோக்ஷமாகும். ஏனைய சமயிகளுக்குப் போல யாதானுமோர் பாச நீக்கமும், ஒன்றுமறியாமையும், கருத் திருத்தன்மையின்மையும், சங்கிராந்தியும் முத்தியாகாதென்று கூறப்போகின்ருேம். ஆத்மஞானத்திற்கு ஆத்மா கர்த்தாவாக ஆவதுபோல், மோக்ஷத்திற்கு ஆத்மா கர்த்தாவாகின்ருனில்லை ஆத்மாவானவன் ஈசுவரனுல் சமஸ்காரஞ் செய்யப்படுகின்றவனு யிருக்கின்றமைபற்றி, எக்காலத்தும் அவனுக்குச் செயப்படு பொருட்டன்மையே உள்ளதாகையாலென்க. மாயை முதலிய பாசமும் முத்திக்குக்கர்த்தாவாக ஆகிறதில்லை. ஆனுல், ஈசுவரனே கர்த்தாவாக ஆகின்ருன். அந்த ஈசுவரனுக்குத் தீக்ஷையாகிய

தனது சத்தியே காரணமாகும். முத்தியாவது பாசநீக்கமும் சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றின் றோற்றமுமாம். ஆகவே, விடுவிக்கப்படுகிற ஆன்மாவினிடமே முத்தியிருக்கின்றது. இவ்வாறன்றி, சாங்கியருடைய மதம்போல் மோக்ஷமானது விடுவிக்கிற பொருளிடமிருக்கும் தர்மமாக இருக்கவில்லை. விடுவிக்கிறவன் நித்திய முத்தனுயிருக்கின்றமையால், முத்தி, முத்தியின்மையென்னும் இரண்டற்கும் விசேடமில்லாமற்போய்விடுமாகையாலென்க. இவ்வாறே "பிரகிருதியானது புருடனுக்குப் போக்கியப் பொருளாயிருந்து சம்சாரத்தைக் கொடுக்கின்றது. அதன் நிவிர்த்தியுண்டாயின் மோக்ஷத்தைக் கொடுக்கிறதாக ஆகிறது. அதன் நிவிர்த்தி ரூபமான நாசமானது பிரகிருதியைச் சார்ந்ததேயன்றிப் புருடனைச் சார்ந்ததன்று. பிரகிருதியானது தானாகவே அறிகிறதில்லை." என்று சாங்கியர் கூறுகின்றனர். இவ்வாறு விசேடமுத்தி, சாமானிய முத்தியென்னும் எல்லா முத்திகளும் கூறப்பட்டன. முத்திக்குச் சாதனங்கள் பின்னர்க் கூறப்படும். (சசஇ-சரு இ)

(அ—கை) மோக்ஷசாதனங்களுள் புருடனே மோக்ஷத்தைச் செய்கின்றானென்று, ஞானமே மோக்ஷமென்று கூறும் தன்மைச்சார்ந்த சிலர் கூறுவதாகக் கூறுகின்றனர்.

(சகூஇ) எந்தக் காரணத்தால் போகம்போல் மோக்ஷமும் புருஷார்த்தமாயிருக்கின்றதோ அந்தக் காரணத்தால் ஆன்மா மோக்ஷத்தைச் செய்பவனாவன். விவேக முதலியன சாதனங்களாகச் சித்திக்கின்றன என்பதாம்.

(உரை) ஈசுவரன் உலககருத்தாவாக இருக்கட்டும். புருடர்கள் தன்னாற் செய்யப்பட்ட தருமாதருமங்களினால் சுபாசுபமான போகங்களை யநுபவிக்கின்றனர். அவ்வநுபவம் ஈசுவரனால் செய்யப்பட்ட தருமாதருமங்களாலன்று. புருடனிடமும்பரமேசுவரனுக்கு அதிட்டிக்குந் தன்மை யிருக்கின்றதே யெனில், இருக்கட்டும். ஆயினும், பரமேசுவரனுக்குக் கருத்திருத்தன்மையில்லை. ஆகையால், புருடர்கள் அஞ்ஞானத்தைச் செய்யும் மலத்தாற் கட்டுப்பட்டு மயக்கத்தால் சம்சாரத்தையும் அடைகின்றனர். அதற்கு மாறான அப்பியாசத்தால் பிரிதொன்றை

விரும்பாது தனக்கு ஞானமுதித்தவுடன் அஞ்ஞானம் நீங்கிச் சர்வஞ்ஞத் தன்மை முதலியன உண்டாதலால் ஆன்மாவே மோக்ஷத்தைச் செய்யட்டும். ஈசுவரன் செய்கிறதாகக் கொள்ள வேண்டாம். (சஅ இ)

(அ—கை) இந்தக் கூற்றுப்பொருத்தாதென்று கூறுகின்றார்.

(சஎ......ருஉ இ) ஆராய்ச்சியின்மையாலுண்டான அறியாமையானது ஆராய்ச்சி ஞானத்தால் நீங்கிவிடுகின்றது. காசமென்னும் கண் வியாதி முதலிய பொருள் காரணமாக நிகழ்ந்த அஞ்ஞானமானது ஆராய்ச்சி ஞானத்தால் நசிக்கிறதில்லை. அந்த அஞ்ஞானத்துக்குக் காரணமான பொருளின் நாசத்தினாலேயே அது நசிக்கின்றது. வேறெவ்விதத்தாலும் பொருள்காரணமாக நிகழ்ந்த அஞ்ஞானம் நாசத்தையடையாது. அந்த அஞ்ஞானத்திற்குக் காரணமாயிருப்பது எதுவோ, அதுவே மலமாகும். அஞ்ஞானமே மலமெனக் கொள்ளின், அது * துச்சமாக ஆவது, அல்லது ஆன்மாவின் தர்மமான உள்பொருளாகவாவது இருக்கவேண்டும். துச்சமாய்க்கொள்ளின் இந்த மலத்தை நீக்குதற்காகச் செய்யும் புருடனுடைய ஞான முதலியவற்றிற்கு ஒருவித பயனுமில்லாமற் போய்விடும். ஆன்ம தருமமாகக் கொள்ளின் அது எக்காலத்தும் நீங்காது. நீங்குமென்று கொள்ளின் ஆன்ம தர்மமாக ஆகாது. ஆகையால் ஆன்மாவின் ஞானத்தை அநாதியாகவே மறைத்துக்கொண்டிருப்பது மலமாகும். தீக்ஷையினாலேயே அந்த மலத்திற்கு நிவிர்த்தியுண்டாகின்றது. சிவன், மலம், மாயை என்னும் இவற்றிற்கு வசப்பட்டவனாக ஆன்மா இருக்கின்றான். இத்தகைய ஆன்மா இயல்பாகவே அவற்றின் வசப்பட்ட தன்னை எவ்வாறு விடுவித்துக்கொள்வான்? தன்னை விடுவித்துக்கொள்வதில் தனக்குச் சக்தி கிடையாது. இயல்பாகவே பாசங்களுக்கு வசப்படுகின்றமையால். ஆகையால் அவனை வரையும் தன் வசப்படுத்துகின்றவனான ஈசுவரனே மோக்ஷத்தைச் செய்கின்றவனாவன் என்பதாம்.

---

* துச்சம்—முயற்கோடுபோலும் பொய்.

(உரை) புருடர்களுக்குக் கலை முதலியவற்றால் மலம் சிறிது நீங்கி அவற்றின் சம்பந்தத்தால் ஞானக்கிரியைகள் சிறிது விளங்குவது கொண்டு, தர்மம், அதர்மம் முதலியவற்றைச் செய்யுந்தன்மை உண்டாகின்றது என்பது பொருந்தும். மலம் முதலியன நிவிர்த்தியடைந்த பின்னர் சாமர்த்தியமின்றிக்கிடந்த அறியுந் தன்மையான ஈசுவரத்தன்மை ஆன்மாக்களுக்கு முத்தியி லுண்டாகுமென்று கூறுவது பொருந்தாத கூற்று. கிளிஞ்சலில் வெள்ளி யென்பது போன்ற மயக்கங்களில் ஞானத்தினால் அஞ் ஞானம் நீங்கிவிடுகின்றது என்பது பிரமாணத்தினால் சித்தித் திருக்கின்றது. ஆன்மாக்களுக்கு அநாதியாகவுண்டான அஞ் ஞானமே மலமெனக் கொள்ளுகின்றனர். ஆகையால் ஞானத் தால் நீங்குகின்றது எனின், அது பொருந்தாது. அஞ்ஞானம் மலமாகாது. அஞ்ஞானத்திற்குக் காரணமெதுவோ அதுவே மலமாகும். மலமே அஞ்ஞானமெனக் கொள்ளின் அஞ்ஞான மானது துச்சமாக ஆவது, ஆன்மதருமமாக ஆவது ஆகவேண்டும். துச்சமெனக்கொள்ளின், அது ஒருவித காரியத்தையுஞ் செய்யா மையால் அதனைப் போக்கும் ஞானமுதலியவற்றிற்கு யாதொரு பயனுமில்லையாய் முடியும். ஆன்மாவின் தருமமாகக் கொள்ளின் நித்தியத்தன்மை வியாபகத்தன்மை யென்னும் ஆன்ம தருமங் களை நீக்கமுடியாதவாறுபோல, அஞ்ஞானத்தையும் நீக்கமுடி யாது. ஆகவே, முத்தியே யில்லாமற்போய்விடும். இந்த அஞ் ஞானமானது நீக்குதற்குரியது எனக்கொள்ளின் ஆன்ம தர்மமாக ஆகாது. ஆகையால், கண்ணினுடைய அறிவின்மைக்குப் படலம் முதலிய நோய்கள் காரணமாதல்போல, ஆன்மாவினறிவை அநா தியாகவே தடுப்பதற்கு ஏதுவாயிருப்பது பற்றி அஞ்ஞானத்திற் குக் காரணமாகப் பிறிதொரு பொருளைக்கொள்ளல் வேண்டும். அதுவே மலமாகும். கண்ணின் றொழிலை மறைத்தற்குக் காரண மான படலம் முதலிய திரவியங்களும் இவைபோன்ற வேறு திரவியங்களும் ஞானத்தால் நசிப்பனவல்ல. எதனாலெனின், திரவியங்களுக்கு ஞானம் விரோதியாக இல்லாமையாலென்க. அவ்வாறாயின், கிளிஞ்சலினுள்ள வெள்ளித்தோற்றமாகிய அஞ்ஞானமானது ஞானத்தினால் எவ்வாறு நசிக்கின்றதெனின்,

கூறுதும். அஞ்ஞானம் இரண்டுவிதமாகும். எவ்வாறெனின், முன்னர் அநுபவிக்கப்பட்ட பொருளின் தர்மம், சமமான பிறிதொன்றில் ஆராய்ச்சியின்மையால் நிச்சயரூபமாக நிகழ்வதொன்று. இதுவே கிளிஞ்சல் முதலியவற்றில் வெள்ளி முதலியவற்றின் தோற்றம். காசம், காமாலை முதலிய திரவியத்தால் நிகழ்வது மற்றொன்று. இதுவே இரண்டு சந்திரன் முதலிய தோற்றம். அவற்றுள் முன்னையது இது வெள்ளியன்று என்னும் நிச்சயமான ஆராய்ச்சி ஞானத்தால் நீங்கிவிடும். இரண்டாவதாகிய திரவியத்தாலுண்டான அஞ்ஞானமானது தனக்குக்காரணமாகிய திரவிய நாசத்தினாலேயே நாசத்தையடையும் ஞானத்தால் நாசத்தையடைகிறதில்லை. திரவியரூபமான மலத்தினாலேயே ஆன்மாக்களுக்கு அஞ்ஞானமுண்டாகிறதெனக் கூறப்பட்டிருக்கின்றது. வேறுவிதமாகக் கூறப்படவில்லை. காசம், காமாலை முதலிய திரவியங்களாலுண்டான அஞ்ஞானம் புத்தியினாலுண்டாகாமையினால் ஞானத்தால் நிவிர்த்தியடைகிறதில்லை. படல முதலிய நோய்கள் கண் வைத்தியனால் நீங்குமாறு போல ஈசுவரனாலேயே அந்த மலத்திற்கு நிவிர்த்தியுண்டாகின்றது. ஆகையால், மோக்ஷத்தை ஈசுவரன் செய்கின்றானேயல்லது ஆன்மா செய்யவில்லை யென்க. இவ்வாறே "சிவனிடமிருந்தே ஆன்மாக்களுக்கு மோக்ஷமுண்டாகின்றது" என வேறு நூல்களிலுங் கூறப்பட்டிருக்கின்றன. சுருதியும் "எவனை இந்த ஆன்மா ஆசிரயிக்கின்றதோ அவனால் மோக்ஷமானது அடையத்தகுந்தது" என்று கூறுகின்றது. ஆகையால், படலரூபமான திரவியம் கிரியையினால் விலக்கப்படுமாறு போல, மலரூபமான திரவியம் ஈசுவரனது கிரியையினால் விலக்கப்பட்டு மோக்ஷ முண்டாகின்றது. இவ்வாறே தீக்ஷையே பாசத்தை நீக்குகின்றது. மேலான சிவனது தானத்தையடையும்படியும் செய்கின்றது என்று கூறப்போகின்றோம். (சஎ......ருஉஇ)

(அ—கை) ஈசுவரனுக்கு மோக்ஷத்தைச் செய்யும் தன்மையைக் கொண்டு அப்பொழுதே பாசங்களுக்கு நிவிர்த்தியாகுந்தன்மையினையுங் கொள்ளல் வேண்டும். எதனாலெனின், பாச நீக்கந்தாலன்றி மோக்ஷம் சித்திக்காமையாலென்க. ஆகவே,

பாசங்களே தத்தமியல்பினின்று நீங்கிப் புருடர்களுடைய மோக்ஷத்திற்கு ஏதுவாக ஆகின்றன. ஈசுவரனுக்குக் கருத்திருத் தன்மையைக் கொள்வதால் பயனென்னையென்பார்க்கு அது பொருந்தாதென்று கூறுகின்றார்.

(ருரு) கயிறு முதலியன தானுகவே கட்டுண்டு நீங்குமா றில்லாதவாறுபோல, உயிர்களின் பாசங்களை விலக்குதற்குப் பாசங்களுக்கும் தனக்காகவே சத்தி கிடையாதென்பதாம்.

(உரை) சிவனுக்குத் தொழிற்படுவதிலும், தொழிற்படாம லிருப்பதிலும் தனக்காகவே சாமர்த்தியம் கிடையாதென்று கூறப் பட்டிருக்கின்றது. ஆகவே, பாசங்களைச் சிவன் நீக்குகின்றமை யால் சிவனே புருடர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பவனுவன். (ருரு)

(அ—கை) "காணப்படுவது சம்பவிக்கும்பொழுது காணப் படாததைக் கொள்வது பொருந்தாதென்னும் நியாயத்தால் பூர்வபக்ஷியின் ஆசங்கையைக் கூறுகின்றார்.

(ருசு) அறியுந்தன்மை கருத்திருத்தன்மை யென்னும் இவற்றின் அநேக விதமான தோற்றத்தைப் பாசங்கள் செய் கின்றன. இவற்றின் தோற்றமே மோக்ஷமாகும். ஆகவே, மோக்ஷம் பாசங்களால் செய்யப்படுவதாகுமென்பதாம்.

(உரை) சம்சார நிலையில் காரியம் காரணமென்னும் இவற் றின் சொரூபமாகவே காணப்படும் பாசங்கள், ஆன்மாக்களுக்கு அறியுந்தன்மை செய்யுந்தன்மை யென்னுமிவற்றின் அநேகவித மான தோற்றத்தைச் செய்கின்றன. மோக்ஷமாவது ஞானக் கிரியைகளின் தோற்றமாகும். ஆகவே, அத்தோற்றத்தைக் காணப்படும் சாமர்த்தியத்தையுடைய அந்தப் பாசங்களே செய் யும். ஆகையால் காணப்படாத ஈசுவரனை மோக்ஷத்தின் பொருட்டு ஏதற்காகக் கற்பிக்கவேண்டும். (ருசு)

(அ—கை) பாசங்கள் மோக்ஷத்தைச் செய்யுமென்பது பொருந்தாதெனக் கூறுகின்றார்.

(௫௫—௫௬இ) பாசங்களுக்குத் தனக்காகவே அறிவில்லாமையால், அவை ஈசனுலேவப்பட்டுப், பாசங்களின் சொரூபத்தால் ஆசையுடன் கூடினவையாயும், அவற்றின் தொழிற்பாட்டால் ஆசையையுடையவையாயும், ஒன்றன்பின் ஒன்ருகக் கூடினவையாயும், அழிவையுடையவையாயும், சிலவற்றை விடயமாகக் கொண்டவையாயுமுள்ள ஞானக்கிரியைகளின் தோற்றத்தைச் செய்கின்றன. பாசத்தாலுண்டாகும் ஞானக்கிரியைகளின் தோற்றத்திற்கும், பாசநீக்கத்தாலுண்டாகும் ஞானக்கிரியைகளின் தோற்றத்திற்கும் வேறுபாடிருக்கின்றமையால், மோக்ஷரூபமான தோற்றத்தைப் பாசங்கள் செய்யமுடியாவென்பதாம்.

(உரை) தீபம் முதலியன எவ்வாறு காணப்பட்ட பொருள்களை விளக்குஞ் சத்திகளுடன் கூடி விளக்குகின்றவையாய்ச் சித்தித்தனவோ, அவ்வாறே காணப்படாத ஏனைய விடயங்களிலும் அதே தீபமுதலியன அவ்வித சத்திகளுடன் கூடியவையாகவே அறியப்படுகின்றன. அதுபோல, காரியங் காரண முதலியவற்றின் ரூபமான துணைகள் கூறியவாறு ஈசுவரனுல் ஏவப்பட்டவையாயிருப்பினும், சரீர முதலியவற்றை ஆன்மாவெனக் கொள்வதற்கு ஏதுவாயிருத்தலால், சம்சாரிகளுடைய ஞானக்கிரியைகளின் தோற்றம் பாசத்தின் சொரூபத்தினுல் சம்பந்தித்ததாயும், பெண் முதலிய விடயங்களில் பற்றுடையதாயும், சில விடத்தில் சில சமயம் சிலவற்றை விடயமாக வுடையதாயும், விருப்பு வெறுப்புக்களால் கெடுக்கப்பட்டதாயும், காரியமாயிருத்தலால் சரீர முதலியவற்றிற்கு நாசமுண்டானபொழுது நசிக்கிறதாயும் உள்ளதாகக் காணப்பட்டனவென்பது கொண்டு, காணப்படாத அத்தகைய விடயத்திலேயே அந்தப் பாசத்திற்குத் துணையாயிருக்குந்தன்மை சித்திக்கின்றது. இவ்வாறன்றி, முத்தி மிகவும் வேற்றுமையுடையதாதலால், அந்த முத்தியிலும் ஞானக்கிரியைகளின் தோற்றத்தை பிரமாண்டத்தைத் தீபம் விளக்காதவாறு போலப் பாசங்கள் செய்யா. இதுபற்றியே மோக்ஷத்திலுள்ள ஞானக்கிரியைகளுக்கு விசேடங் கூறப்படுகின்றது. (௫௫—௫௬இ)

(ருஎஇ) பாசங்களைத் தோல்வியடையச் செய்யும் ஞானக் கிரியை யென்று பெயர்கொண்ட சத்தியானது சித்தர்களுக்கிருக் கின்றது. ஆகையால் பாசக்கூட்டங்களாலுண்டான சம்சார விடயமான ஆசையை இந்தச் சித்தன் அடைகின்றானில்லையென் பதாம்.

(உரை) சித்தனுக்கு (முத்தனுக்கு) எல்லாப்பாசங்களும் விலருகின்றமையால் ஈசுவரனது ஞானக்கிரியாசத்திகள் போல் இந்த சித்தனுடைய ஞானக்கிரியாசத்திகள் பாசங்களை நீக்கக் கூடியன. ஆகையால், பாசங்களால் தோன்றும் பசுவினுடைய ஞானக்கிரியா சத்திகள் போல் சித்தனுடைய ஞானக்கிரியாசத்தி கள் சரீர முதலியவற்றில் ஆன்மாவென்ற எண்ணத்தைச் செய் வனவல்ல என்க. (ருஎஇ)

(ருஅஇ) (அன்றியும்) தோன்றி நசிக்கும் பாசங்களுடன் சித்தனுடைய சத்தியைச் சேர்த்துப் பாசமாக வருக்கவில்லை. அதனால் சித்தனுடைய சத்தியானது பாசங்களின் சேட்டை களால் அநுசரிக்கப்படுகிறதில்லையென்பதாம்.

(உரை) சித்தனுடைய சத்தியானது பசுவினுடைய சத்தி போல் அராகம் முதலிய பாசச்சேட்டைகளால் அநுசரிக்கப்பட் டுச் சம்சாரவிடயங்களில் ஆசையுடையதாக இருக்கவில்லை. எதனு லெனின், பாசங்கள் நாசத்தையடைந்த பின்னரும் விகாரமற்ற சொரூபத்துடன் ஈசுவரனது சத்திபோல் இருக்கின்றமையா லென்க. (ருஅஇ)

(ருகூஇ) (அன்றியும்) சித்தனுடைய சத்தியானது எல்லா வற்றையும் விடயமாகக் கொண்டது. அதனுற்றான் அந்தச் சத்தி சிலவற்றை விடயமாகக் கொண்டதில்லை. அந்தச் சத்தி யானது அறியக்கூடிய விடயங்கள் செய்யக்கூடிய விடயங்க ளென்னு மிவற்றில் ஒரே காலத்தில்தொழிற் படுவதால் ஒன்றன் பின் ஒன்றாகத் தொழிற்படவில்லை யென்பதாம்.

(உரை) அந்தச்சித்தனுடைய சத்தியானது மறைப்பில்லா மையால் எக்காலத்தும் எவ்விடத்தும் எல்லாவற்றையும் அறியவும்

செய்யவுங் கூடியது. பசுவினுடைய சத்திபோல் ஒரு காலத்தில் ஓரிடத்தில் ஒன்றைவிடயமாகக்கொண்டிருக்கவில்லை (ருகூஇ)

(கூ0) அந்தச் சித்தனுடைய சத்தியானது, அதனின்மேம்பட்ட சத்தியில்லாமையால் மறுக்கப்படுகிறதில்லையென்பதாம்.

(உரை) வித்தியேசுவரர்களுடைய சத்தியின் தோற்றமானது, பாமுத்திரூபமான வேறொரு தோற்றத்தால் மறுக்கப்படுமாறு போல், சித்தனுடைய சத்தியானது மறுக்கப்படுகிறதில்லை. எதனாலெனின், சித்தனுடைய சத்தியானது சிவனுடைய சத்திபோலிருப்பதால், அதனின்மேம்பட்ட சத்தியில்லாமையாலென்க. (கூ0)

(கூ0இ) (அன்றியும்) அந்தச்சித்தனுடைய சத்தியானது சிவசாமியத்தை யடைந்திருத்தலால், (ஏனையவற்றை) அறிதல் செய்தல் என்னும்விடயங்களில் தொழிற்படுகிறதில்லை யென்பதாம்.

(உரை) ஈசுவரனுடைய இச்சையினால் வித்தியேசுவரர்களுடைய சத்தி தொழிற்படுமாறுபோல், சித்தனுடைய சக்திக்குக் காரியத்தில் தொழிற்படுதலும், தொழிற்படாதிருத்தலுமில்லை. எதனாலெனின், அந்தச் சத்தியானது சிவசாமியத்தை யடைந்திருத்தலால் ஈசுவரனால் ஏவப்படுதலின்றித்தானாகவே தொழிற்படும் சத்தியுடன் கூடியிருக்கின்றமையாலென்க (கூ0இ)

(கூகஇ) பாசங்கள் சித்தனுடைய சத்தியை விளக்கமாட்டா. சிவனுடைய இச்சையினால் அந்தப்பாசங்களின் பீஜங்கள் தகிக்கப்பட்டிருத்தலால் அந்தப்பாசங்களால் சித்தனுடைய சத்தியானது மீண்டுங் கெடுதலடைகிறதில்லை. அதனால் அவனுடைய சத்தி கசிக்காததாயிருக்கின்றதென்பதாம்.

(உரை) பின்னர்க்கூறப்படுமாறு காரிய காரணரூபமான பாசங்களால் பசுவினுடைய சத்தி தோன்றுமாறுபோல் சித்த

னுடைய சத்தியானது தோன்றுகிறதில்லை. கெடுக்கப்பட்ட பீஜங்களையுடைய பாசங்கள் சிவசத்தியினால் தோற்றப்பட்ட சித்தனுடைய சத்திக்கு மீண்டுங் கெடுதலைச் செய்கிறதில்லை. ஆகையால் பசுவினுடைய சத்திபோல் சித்தனுடைய சத்தியானது நசிக்கிறதில்லையென்க. (கூகஇ)

(அ—கை) சித்தனுடைய சத்திக்கு நேரிடும் நசிக்குந் தன்மையை வேறுவழியாகப்பரிகரிக்கின்றார்.

(கூஉ—கூ௩இ) துணையின் சன்னிதி யிருக்கும் வரை பொருள் விளக்கிக் கொண்டிருக்கின்றதென்னும் இந்த நியாயம் சித்தனுடைய சத்தியில் பொருத்தமடைகின்றதில்லையெனில், கூறுகின்றோம். விளக்கத்தைச்செய்து கொண்டிருக்கும் சிவசத்தியின் சன்னிதானத்தைச் சித்தனுடைய சத்தியானது எப்பொழுதும் தரித்துக் கொண்டிருக்கின்றது. ஆகையால் சித்தனுடைய சத்தி நாசமடைகின்றதில்லையென்பதாம்.

(உரை) சித்தர்களுக்கு ஈசுவரனாலதிட்டிக்கப்பட்டுத் தொழிற்படுதல் எவ்விதத்திலுங் கிடையாதென்பது முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே, சித்தனுடைய சத்தியானது துணையினாலதிட்டிக்கப்படாமையால் தீபமில்லாதபொழுது கடம் முதலியவற்றின் தோற்றம் இல்லாதவாறுபோல் தோற்றமின்றி நசிக்கக்கூடியதெனை முடியுமெனின், நசிக்காதென்று கூறுகின்றார். தீபம் பொருளின் மறைப்பைச் சிறிது நீக்குமாறுபோல் பரமேஸ்வரனை நாம் கொள்ளவில்லை. படலநோயைக் கண் வயித்தியன் முற்றும் நீக்குமாறுபோல முற்றும் மறைப்பின் நீக்கத்தைப் பரமேசுவரர், செய்து, சித்தாந்த ஞானத்தின் தோற்றத்தைச் செய்கிறதாயும், சிவனுயிருக்குஞ் சித்தனுக்குள்ள சமவாய சம்பந்தத்தால் சிவசம்பந்தமாயுமுள்ள தனக்குச் சமமான ஞானக்கிரியா சத்திகளைச் சித்தர்களுக்குத் தோற்றுவிக்கின்றார். ஆகையால், அந்தச் சித்த சத்தி வேறு துணைகளை யெதற்காக விரும்பும். சிவசத்திக்குத் தனக்காகவே சருவஞ்ஞத் தன்மை முதலிய சொரூபம் இருப்பது போல் இந்தச் சித்த

சத்திக்கு மிருக்கின்றது. இந்தக் காரணத்தானுஞ் சித்த சத்தி நசிக்காதென்று கொள்ளவேண்டும். பாசங்களால் மறைக்கப் படாமலிருப்பது மாத்திரங்கொண்டு இந்தச் சித்த சத்தி நசிக்கா மலிருக்கவில்லை. முத்திக்குக் காரியத்தன்மையாலுண்டாம் அநித்தியத்தன்மை கிடையாது; வியக்கியமாயிருத்தலால். வியங் கியம்- இருப்பது விளங்கித்தோன்றுதல். முன் இருந்த ஞான சத்தியே மறைப்பு நீக்கத்தால் விளங்கித்தோன்றி எல்லாவற்றை யும் விடயமாகக் கொண்டிருக்கின்றதென்க. அந்த ஞானசத்தி யின் சொரூபம் புதிதாக உண்டுபண்ணப்படவில்லை. இவ்வாறு எல்லாவற்றிற்கும் வேறான மோக்ஷம் கூறப்பட்டது. (கூஉ-கூ௩இ)

(கூ௪இ) பாசங்கள் நீங்கியும் சித்தனுடைய சத்தி யிருக் கின்றதுகொண்டு, அந்தச் சித்த சத்தியானது வேறாயிருக்கின்ற மையால், அந்தப் பாசங்கள் சித்தனுடைய சத்தியைத் தோற்றுவித்தற்குச் சாமர்த்திய முடையனவாகா என்பதாம்.

(உரை) முத்தியில் சித்தனுடைய சத்தியானது பாசங் களால் தோன்றும் பசு சத்தியினின்றும் மிகவும் வேறாயிருக்கின்ற மையாலும், பாசங்களில்லாவிடத்து இருத்தலாலும், அந்தச் சத்திக்குப் பாசங்களால் விளங்குந்தன்மை சித்திக்கிறதில்லை. சித் தனுடைய சத்தியைத் தோற்றுவிக்கும் ஈசுவரனே மோக்ஷத்திற் குக் காரணரென்பது முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. (கூ௪இ)

(அ—கை) யோகமாவது சித்தத்தின் தொழிற்பாட்டைத் தடுத்தலாகும். ஆகையால் யோக முதலியவற்றால் சுத்தஞ் செய்யப்பட்ட அந்தக்கரணமே ஆன்மாக்களின் மோக்ஷத்திற்குக் காரணமாகும்; ஈசுவரன் காரணன் ஆகானென்று சாங்கியர் கூறு கின்றனர். அது பொருந்தாதென்று கூறுகின்றார்.

(கூ௫இ) யோகமும், பிரகிருதி புருடவிவேக ஞானமும், தபசை முன்னிட்டுப் போகசாதனங்களான கன்மமும் ஆகிய இவை கூறியவாறு பாசங்களாயிருக்கின்றமையால் மோக்ஷத்திற் குச் சாதனங்களாக ஆகாவென்பதாம்.

(உரை) வாயுவைப்போல் மேலே கூறியவாறு சித்தஞ் சடமாகையால் அந்தச் சித்தம், யோகமுதலியவற்றால் சுத்தி

யடைந்த நம்மால் ஆன்மாவினிடமிருக்கும் மாயை விலக்கத்தக்கது; அவ்வாறு சத்தியடையாவிடில் அந்தமாயையை விலக்க முடியாதென்னும் அறிவின்றித்தானாகவே மாயையை விலக்குவதாயிருந்தால்எப்பொழுதுமே விலக்கவேண்டும். யாதானுமொரு சமயத்திற்றான் விலக்குமென்பது கூடாது. ஆகவே மோக்ஷமேயில்லையாகவேண்டும். அல்லது எக்காலத்தும் மோக்ஷமிருத்தல் வேண்டும். சாத்திரோபதேசத்தைப்பெற்று யோகமுதலியவற்றை யனுட்டிக்கின்றவன் யார்? ஆன்மா எனின், அந்த ஆன்மாவைக் கருத்திருத்தன்மை யில்லாதவனாக நீங்கள் கொண்டிருக்கின்றீர்கள். சித்தமெனின், அதுவோசடமென்க. (சுநிஇ)

(சுசுஇ) (அன்றியும்) உபாயங்கள் சாமர்த்தியமுடையனவாயினும் தனக்கே கெடுதலைச் செய்கின்றவையாக ஆகா. கத்தியின்முனை மிகவுங் கூர்மையாயிருப்பினும் தன்னையே சேதிக்கிறதாக ஆகாதவாறுபோலு மென்பதாம்.

(உரை) சித்தத்திற்கு, தனது தொழிற்பாட்டைத் தடை செய்வதற்காக யோக முதலியவற்றை யநுஷ்டித்தல் தனக்கே பொருந்துகிறதில்லை. எதனாலெனின். தன்னிடத்திலேயே தன்னைக் கெடுக்குங் கிரியை நிகழாதாகையாலென்க. இந்தக்காரணத்தைக் கொண்டும் பிரவிருத்தி நிவிருத்திகளுக்குக் காரணரான பரமேசுவரரே எவ்விடத்தும் மோக்ஷத்திற்குக் காரணராவர். பரமேசுவரர் யாதானுமொன்றை விரும்பி மோக்ஷத்தைச் செய்யாதவராகையால் அனைவருக்கும் ஒரே காலத்தில் ஏன் மோக்ஷத்தைச் செய்யவில்லையெனின், மோக்ஷத்திற்குக் காரணமாக மலபரிபாகத்தை ஈசுவரர் விரும்புகின்றமையால் இந்தக் கேள்வி பொருந்தாது. இன்றேல் மோக்ஷத்திற்கு நியமமில்லாமற் போய்விடும். இவ்வாறே "அந்த மலமானது தீக்ஷையினால் நசிக்குஞ் சமயத்தில் சத்தியானது மோக்ஷத்தின் பொருட்டுத் தோன்றுகின்றது" என்று நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது. மலமானது பரிபாகம் அடையக்கூடியதாயும் சடமாயுமிருத்தலால் சிலருக்குச் சிற்சில சமயத்தில் பரிபாகமடைகின்றது. ஆகையால் அனைவருக்கும் ஒரேகாலத்தில் ஈசுவரர் மோக்ஷத்தை யேன் கொடுக்கவில்லையென்னுங் கேள்வி பொருந்ாது. இவ்வாறே தத்துவத்திரய

நிர்ணயத்திலும் "மலமானது பக்குவமடையுங் காலத்து ஆன்மாக்களின் ஞானக்கிரியைகளை மறைப்பதினின்றும் நீங்குகின்றது. பரிபாக விசேடத்தின் சேர்க்கையால் அந்த மலம் ஒவ்வொரு ஆன்மாவிற்கும் ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு விதமாக நீங்குகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது. (கூகூ இ)

(௬எ இ—௬அ இ) (இவ்வாறாயின்) மறைக்குஞ்சத்தியின் அதிகாரத்தினுடைய காலமானது நீங்கினவுடன் தானுகவே பசுவினின்றும் மலம் நீங்குகின்றது. அப்பொழுது எஞ்சியபாசக் கூட்டமும் விலகுகின்றது. விலகியவுடன் எல்லாவற்றையும் விடயமாகக்கொண்ட சுத்தமான ஞானக்கிரியா சத்தியானது தானுகவே ஆன்மாவினிடத்துத் தோன்றுகின்றது. ஆகையால் ஈசுவரன் மோக்ஷத்தைச் செய்பவனுக ஆகமாட்டானென்பதாம்.

(உரை) புருடர்களுடைய ஞானம் முதலியவற்றின் வலிமையினுல் மறைக்குஞ் சத்தியையுடைய மலத்தின் பரிபாகம் ஏற்பட்டு, அதனுல் மலத்தினுடைய மறைக்குமதிகாரத்தின் நாசமேற்பட்டது கொண்டு, தானுகவே மலம் நீங்கியவுடன், அதனிமித்தமாக ஏனையபாசக் கூட்டங்களும் நீங்கியவுடன், புருடர்களுடைய ஞானக்கிரியா சத்தியானது சுத்தமாக இருக்கின்றமையால், முத்தியில் தானுகவே தோன்றும். ஆகையால் ஈசுவரனுக்குக் கருத்திருத்தன்மையைக் கொள்வதினுல் பயன் என்னை. (மலபரிபாக முதலியவற்றை விரும்பாது) சுதந்திரராக இருந்து மோக்ஷத்தைச் செய்பவராக ஈசுவரரைக் கொள்ளின் இந்தக் குற்றம் நேரிடாது. தனது இச்சையினுல் கட்டுப்படுத்துவதனுல் *அதிப்பிரசங்கமுமில்லை. வித்தியாதிபதியும் "பசுக்களுக்கு மோக்ஷத்தைச் செய்கின்றதாயும், சிவசம்பந்தமாயுமிருக்கும் இந்தச் சத்திபாதமானது சுதந்திரமாயிருக்கின்றது; யாதானுமொன்றை விரும்புகிறதாகக் கொள்ளின் பரமேசுவரர் அசத்தராவர்" என்று கூறுகின்றுரெனின், இந்தக் கூற்றுப் பொருந்தாது. எதனுலெனின், இவ்வாறு சம்பவியாமையாலென்க. (௬எ இ-௬அ இ)

* அதிப்பிரசங்கமாவது—அனைவருக்கும் ஒரேகாலத்தில் மோக்ஷத்தைக் கொடுக்கட்டுமென்பது.

(அ—கை) மலபரிபாகத்தை விரும்பாது தானாகவே ஈசுவரன் மோக்ஷத்திற்குக் கருத்தாவாதல் சம்பவியாமை யெவ்வா றென்பார்க்குக் கூறுகின்றார்.

(௯௩இ) நிதியைச் செய்யவேண்டிய சமயத்தில் சங்காரத்தையும், சங்காரத்தைச் செய்யவேண்டிய சமயத்தில் நிதியையும், கன்மத்தைச் செய்யாதவனுக்குப் போகத்தையும் ஈசுவரன் செய்கிறானில்லை யென்பதாம்.

(உரை) கன்மமுதலியவற்றை விரும்பாது ஈசுவரனுக்குச் சுதந்திரத்தன்மையைக் கொள்ளின் எக்காலத்தும் உலகத்துச் சிருட்டி சங்காரங்களையும், கன்மஞ் செய்யாதவனுக்குப் போகத்தையும், தீய கன்மங்கள் செய்தவனுக்கு மோக்ஷத்தையும், முத்தனுக்குச் சம்சாரத்தையும் அவர் செய்வர். ஆகவே, உலகம் உன்மத்தனுடைய சேட்டைபோல் சேட்டையையுடையதாய்ப் பொருத்தமில்லாததாக ஆகும். ஆகையால் போகத்தின் பொருட்டும், மோக்ஷத்தின் பொருட்டும், பாவங்களை நீக்குவதன் பொருட்டும் ஒருவனும் முயற்சிக்க மாட்டான். ஈசுவரர் உபதேசித்தருளிய சாத்திரங்களைத்தும் பயன் படாமல் உலாகாயதமதத்தை அநுட்டிக்க வேண்டியதாக உங்களுக்கு நேரிடும். இந்தக் குறையை நீக்கும் பொருட்டுக் கன்மமுதலியவற்றின் பரிபாகத்தை விரும்புகிறவனாகவே சர்வ கருத்தாவான ஈசுவரனைக் கொள்ளல்வேண்டும். கன்மமுதலியவற்றை விரும்புதலால் ஈசுவரனுக்குச் சுதந்திரத்தன்மை கெடாது. வேறு ஈசுவரருக்கு உட்பட்டிருந்தாற்றான் சுதந்திரத்தன்மை கெடும். இந்த ஈசுவரர் பரமேசுவரராயிருத்தலால் வேறு ஈசுவரருக்குட்பட்டிருக்கவில்லை. ஆகையால் ஈசுவரர் சுதந்திரராவார். நிதியிருக்கும்பொழுது சங்கார முதலியவற்றையும், கன்மஞ்செய்யாதவனுக்குக் காரணமின்றிப் போக முதலியவற்றையும் ஒரு காலத்தும் ஈசுவரன் செய்கிறதில்லை. ஆகையால் சத்நிபதிதமென்பது கன்மத்தை விரும்பவே செய்கின்றது. இவ்வாறாயின், மோக்ஷத்தின் பொருட்டுக் கன்மத்தின் ஒப்பை ஈசுவரர் விரும்புபவராக ஆவரெனின், அவ்வாறன்று. கன்மஞ் செய்யாதவருக்கு ஈசுவரர் போகத்தைச்

செய்யாதவாறுபோல மலபரிபாகமில்லாதவருக்கு மோக்ஷத்தையுஞ் செய்கிறதில்லை. எதனாலெனின், மோக்ஷமானது மலபரிபாகத்தை விரும்புகின்றமையாலென்க. இவ்வாறின்றேல், மலத்தைக் கொள்ளுதல் பயனற்றதாக முடியும். ஆன்மாக்களுக்குக் கன்மத்தினும் வேறாக மலம் ஒன்று உள்ளதென முன்னர்ப் போககாரிகையில் கூறப்பட்டிருக்கின்றது. எவ்வாறெனில், "மலபரிபாகம் ஆகாமல் கன்மநாச மேற்பட்டது கொண்டு அந்த ஆன்மாவிற்கு விஞ்ஞான கேவலத்தன்மையே சித்திக்கின்றது" என்பதாம். ஆகையால் சத்திபதிதலுக்கு மலபரிபாகமே இன்றியமையாத காரணமெனக் கூறவேண்டுமென்க. (சுசு இ)

(அ—கை) மலமானது பரிபாகத்தால் தானாகவே நீங்கிப் புருடர்களுடைய மோக்ஷத்திற்குக் காரணமாக ஆகும். ஆகையால் மோக்ஷத்திற்குச் சத்திநிபாதத்தைக் கொள்ளுதலால் பயனென்னை யென்பார்க்கு அது பொருந்ாதென்று கூறுகின்றார்.

(எ0இ—எக இ) சேதனசேதனங்கள் யாவும் ஈசுவரனுக்குட்பட்டவையென நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் ஈசுவரர் அந்த ஆன்மாக்களின் பிரவிருத்தியிலும் நிவிருத்தியிலுங் காரணராவார். அவர் சத்தியாகிய சூலத்தால் ஆன்மாக்களின் பாசக்கூட்டத்தைப் பிளந்து ,சர்வஞானக்கிரியாரூபமான இரண்டுவித சக்தியையுந் தோற்றுவிக்கின்றாரென்பதாம்.

(உரை) சடத்திற்குத்தானாகத் தொழிற்படுவதிலும், தொழிற் படாமலிருத்தலிலும் சமார்த்தியங் கிடையாதென்பது முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் பக்குவமான விடத்தும் மலமானது திரவியமாயிருத்தலால் படலமுதலிய நோய்கள் போல் புத்திமானான கருத்தாவால் நீக்கத் தகுந்தது. ஆதலின் ஈசுவரரே மலநிவிருத்தியைச் செய்து புருடர்களுக்குச் சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றைத் தோற்றுவித்து மோக்ஷத்திற்குக் காரணராக ஆகின்றார். வேறெவருமாகார் என்க. (எ0இ—எகஇ)

(அ—கை) எல்லா ஆன்மாக்களுக்கும் ஈசுவரர் நேராகவே மோக்ஷத்திற்குக் காரணராக இருக்கின்றாரா? அல்லது எவரை

யேனும் அதிட்டித்துக் காரணராக இருக்கின்றாரா? என்பார்க்கு இரௌரவ ஆகமத்தின் சித்தாந்தத்தால் சித்தித்த முறையைக் கூறுகின்றார்.

(எஉஇ) ஈசுவரர், சிருட்டியினாரம்பத்தில் சகளமான எட்டு அணுக்களைத் தனது இச்சையால் நிட்களர்களான அநந்தர் முதலிய மந்திரேசுவரர்களாக அநுக்கிரகிக்கின்றாரென்பதாம்.

(உரை) சிருட்டியினாரம்பத்திலேயே சகளமான எட்டு அணுக்களுக்குப் பரி பக்குவமான மல நீக்கத்தைச் செய்து எல்லா ஞானக்கிரியைகளின் தோற்ற ரூபமான மோக்ஷத்தை நேரே கொடுத்து, அநந்தர் முதலிய பெயரையுடைய வித்தியேசுவரர்களாகச் செய்கின்றார். ஆகையால் வித்தியேசுவரர்கள் அணுபக்கத்தைச் சார்ந்தவரேயன்றிச் சத்தி பக்கம் சம்பு பக்கங்களைச் சார்ந்தவரல்லரென்றறிந்து கொள்க. (எஉஇ)

(எஙஇ) (பின்னர்) சகளர்களான அணுக்களை ஏழுகோடியெண்ணுடன் கூட எல்லாவற்றையும் விடயங்களாகவுடைய ஞானக்கிரியா சக்திகளின் தோற்றத்தால் நிட்களர்களான மந்திரர்களாகச் செய்கின்றாரென்பதாம்.

(உரை) சகளர்களான அணுக்களை ஏழுகோடி யெண்ணுடன் பகவானானவர் அவ்வாறே நேராக அநுக்கிரகித்து மந்திரர்களாகச் செய்கின்றார். (எஙஇ)

(அ—கை) மந்திரர், மந்திரேசுவரராகிய இவர்கள் முத்தர்களாதலால் இவர்களுக்குச் சிவனுடன் ஒப்புமையுண்டோவென்று ஆசங்கிப்பார்க்கு ஒப்புமை கிடையாதென்று கூறுகின்றார்.

(எசஇ) உருத்திரருடைய சத்தியின் கீழ் மந்திரம் மந்திரேசுவரம் என்னும் பெயருடைய இரண்டு தத்துவங்களிருக்கின்றன. எதனாலெனில், உண்டாகின்றனவாயும், ஏவப்படுவனவாயுமிருக்கின்றமையாலென்பதாம்.

(உரை) உருத்திரரென்றது பரமேசுவரரைக் குறித்தது. சத்தியென்றது வாமை சியேஷ்டை இரௌத்திரிகளைக்குறித்தது. இந்தச் சத்திகளின் கீழ் வித்தியா வித்தியேசுவரர் ரூபமான இரண்டு தத்துவங்களிருப்பனவாக அறிந்துகொள்க. எதனாலெனின், "இந்த இரண்டு தத்துவங்களும் சிவனது இச்சையினால் ஏவப்பட்டன" என்று சாத்திரத்தில் கூறப்படுதலால் அந்தச் சிவசத்தியினால் உண்டுபண்ணப்பட்டுத் தமது அதிகாரத்தில் ஏவப்படுகின்றனவென்னும் பொருள் கிடைக்கின்றமையாலென்க. இவர்களிடம் ஏவப்படுந் தன்மையிருத்தலால் சர்வஞ்ஞத் தன்மையிருப்பினும் அதிகாரமலமிருப்பது கொண்டு பரமேசுவரரை நோக்கக் கிரியா சத்தியானது முறையே *அம்சத்தினால் குறைந்ததென்று அறியப்படுகின்றது. தத்துவ சங்கிரக முதலிய நூல்களிலும் "வித்தியா வித்தியேசத் தன்மையானது அபரமுத்தியாகும். பரமுத்தியானது சிவசாமியமாகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது. முத்தியினாலும் குறையிருத்தலால் இவர்களுக்குச் சத்தி தத்துவத்திற்குக் கீழிருக்குந் தன்மையிருக்கின்றது. தேசத்தினாற் கூறப்படும் மேன்மை தாழ்மைகள் இவர்களுக்குக் கிடையா. எதனாலெனின், ஆன்மாக்கள் வியாபகர்களாகையாலென்க. கௌரவத்தாலுண்டாகும் மேன்மை தாழ்மைகளே யிவர்களுக்குண்டு. (எச௯)

(எ௫௰) (கௌரவத்தால் மேன்மையாயிருப்பதுகொண்டே) இந்த இரண்டு தத்துவங்களும் நிட்களமாயும், அசுத்த மாயைக்கு மேல் அதிகாரத்தையுடையனவாயும் இருத்தலால், கிரியைகளைக் கூறுஞ் சாத்திரத்தில் தீக்ஷைக்காக வித்துவான்களால் அசுத்த மாயைக்குமேல் இந்த இரண்டு தத்துவங்களும் சுத்தியின் பொருட்டு ஆலோசிக்கப்படுகின்றன என்பதாம்.

(உரை) வியாபகங்களான இந்த இரண்டு தத்துவங்களும் அசுத்த மாயைக்குமேல் அதிகாரத்தையுடையனவாயிருத்தலாலும், கலை முதலிய காரிய காரணங்களினின்றும் நீங்கியிருத்தலா

---

* அம்சம்—இவ்விடத்தில் கருத்திருத்தன்மையைச் செய்வது.

லும், அத்துவாக்களைப்பற்றிக் கூறுஞ் சாத்திரத்தில் அசுத்த மாயைக்குமேல் சுத்தியின்பொருட்டு ஆலோசிக்கப்படவேண்டு மெனக் கூறப்பட்டிருக்கின்றது. (எடு இ)

(எசு இ) (அவ்வாறே) இரண்டாவதாக உண்டான மந்திரர் கள் அனைவரும் ஏவப்படுகின்றவராயும், பதித்தன்மையற்றவரா யும் ஆவர். முதலாவதாக உண்டான மந்திரேசுவரர்கள் ஏவுகிற வர்களாயும், பதிகளாயும், மந்திரர்களுக்குமேல் இருப்பவர்களா யும் ஆவரென்பதாம்.

(உரை) அநந்தர் முதலிய வித்தியேசுவரர்கள் மந்திரர்களுக் குப் பதிகளாயும், மந்திரர்களுக்கு முன் உண்டானவர்களாயும் இருத்தலால், அவர்களை மந்திரர்களுக்குமேல் இருப்பவர்களாக அறிந்துகொள்க. மந்திரர்கள் கீழே யிருத்தலாலும், மந்திரேசு வரர்களால் ஏவப்படுகின்றமையாலும் அவர்களுடைய கிரியா சத் திக்குக் குறைவு சித்தித்தது. (எசு இ)

(எஎ இ) (அதன் பின்னர்) பரமேசுவரர் கலைகளைத் தோற்று வித்து, அவற்றுடன் அணுக்களைச் சேர்த்து அவ்வணுக்களை மாயா கர்ப்பத்தில் அதிகாரத்தைச் செய்யும் மந்திரேசுவரர்களாக அநுக்கிரகிக்கின்றாரென்பதாம்.

(உரை) வித்தியேசுவரர்களை யதிட்டித்து அசுத்தமாயையி னின்றும் கலை முதலிய தத்துவம், புவனம், சரீரம், பொருள்க ளென்னும் இவற்றைத் தோற்றுவித்து, அவற்றுடன் அணுக்க ளைக் கன்மத்தை யனுசரித்துச் சேர்த்து, அந்த அணுக்களுள் மலபரிபாகமுடையவரை மாயா கருப்பத்தில் அதிகாரத்தைச் செய்யும் வித்தியேசுவரர்களாகப் பரமேசுவரர் நேரே யனுக்கிரகிக் கின்றனர். (எஎ இ)

(அ—கை) அவர்களின் பெயரையும் தொகையையும் கூறு கின்றார்.

(எஅ இ) மண்டலங்களுக்கதிபதிகளான எண்மரையும், அவ் வாறே எண்மரான குரோதேசர் முதலியோரையும், வீரபத்திரர்

முதலிய சத உருத்திரர்களையும், தனது இச்சையினாலனுக்கிரகிக்கின்றாரென்பதாம்.

(உரை) ஸ்ரீகண்டருடன் கூடின குரோதேசர், எண்மருக்குள் முதன்மையாயிருக்கின்றார். தத்துவ சங்கிரகத்திலும் "மண்டலேசுவரர், ஸ்ரீகண்டர், குரோதேசர்" என்று கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாறே நூற்றுப்பதினெட்டு ருத்திரர்களையு மனுக்கிரகிக்கின்றனர். (எ௮இ)

(எகூஇ) ஆன்மாக்களுக்கு அநுக்கிரகஞ் செய்தற் பொருட்டு மந்திரர்களையேவுகின்றவர்களாக இருப்பதுபற்றி இவர்கள் மந்திரேசுவரர்களாகின்றனர். மந்திரர்களுக்கு மேலிருப்பதுபற்றி மந்திரேசுவரத்தன்மை யிவர்கட்குக் கிடையாதென்பதாம்.

(உரை) இந்த மாயா கருப்பாதிகாரிகளான மந்திரேசுவரர்கள், மந்திரர் மந்திரேசுவரர்களுக்குப்பின்னர்த் தோன்றுகின்றமையாலும், மாயா கருப்பத்தில் அதிகாரமுடையராயிருத்தலாலும், இவர்கள் மந்திரர்களுக்குக் கீழேயிருப்பினும், ஆசிரியர் முதலாயினோரைப்போல் பசுக்களுக்கு அநுக்கிரகஞ் செய்தற் பொருட்டு மந்திரங்களைச் செலுத்துகின்றமையால், இவர்கள் மந்திரேசுவரர்களாகின்றனர். மந்திரர்களுக்குமேல் இவர்களில்லாமையால், மேலிருக்கும் அநந்தர் முதலியோருக்கு உண்டாம் மந்திரேசுவரத்தன்மை யிவர்களுக்குக் கிடையாது. (எகூஇ)

(௮0இ) அன்றியும் மந்திரர்கள், முதலாவது தோன்றினவர்களாயும் நிட்களராயுமிருக்கின்றனர். இந்த * மந்திரேசுவரர்களோ கூறப்பட்ட இலக்கணத்திற்கு மாறுபட்டவர். ஆகையால் இவர்கள் மந்திர தத்துவத்திற்குக் கீழே மாயா கருப்பத்தில் அதிகாரத்தைச் செலுத்துபவராக இருக்கின்றனரென்பதாம்.

---

* இவ்விடத்தில் மந்திரேசுவரரென்போர், குரோதேசர் முதலிய நூற்றுப் பதினெண்மராவர்.

(உரை) மந்திரர்களை நிட்களர்களாயும், இந்த மந்திரேசுவரர்களைச் சகளர்களாயும் கூறினதுபற்றி, இவர்கள் குறைந்த சத்தியையுடையவர்களாயிருத்தலால், கீழேயுள்ள மாயா கருப்பத்திலேயே இவர்களுக்கதிகாரமுண்டு. இவ்வாறு அதிகாரபேதமிருப்பது கொண்டு மந்திரர்கள் மந்திரேசுவரர்களாகிய இவர்கள் ஒருவருக்கொருவர் சத்தியினால் பேதத்தையடைகின்றனர். மலமறைத்தலாலுண்டாம் பேதம் இவர்களுக்குக் கிடையாது. இவ்வாறே . வார்த்திகக்காரரும் " இம்மூவரும் மேலான ரூபத்தினால் விசேடமற்றிருப்பினும் உற்பத்தித்தானத்தின் பெருமை சிறுமையின் பேதத்தால் ஒருவருக்கொருவர் விசேடத்தையடைகின்றனர் " என்று கூறியிருக்கின்றனர். (அ௦இ)

(அ—கை) இந்த வீரபத்திரர் முதலியவர் எந்த அத்துவாவில் இருக்கின்றனரென்பார்க்குக் கூறுகின்றார்.

(அகஇ) சிவசத்தியினுடன் கூடின இவர்கள் மாயாகருப்பத்திலதிகாரத்தையும், சகளத்தன்மையையும் உடையராயிருத்தலால், மாயாதத்துவத்திற்குக் கீழே யிருக்கின்றனரென்பதாம்.

(உரை) யாதொரு காரணத்தால் அவர்களுக்கு மாயா கருப்பத்திலதிகாரமும் சகளத்தன்மையும் கூறப்பட்டனவோ, அந்தக் காரணத்தால் பிரமன் முதலியவரைப் போல் மாயாதத்துவத்திற்குக் கீழிருக்கும் கலை முதலியவற்றினுள்ள புவனங்களில் இவர்களிருக்கின்றனர் என்க. (அகஇ)

(அ—கை) இந்த மந்திரேசுவரர் சகளராகையால், இவர்கள் பசுக்களைப்போல் கலை முதலியவற்றால் ஏகதேசமாய் விளங்கும் ஞானக்கிரியாசத்தியை யுடையராயிருத்தல்பற்றி, மாயா கருப்பத்தில் அதிகாரத்தைச் செய்யும் விடயத்தில் எவ்வாறு சிவசத்தியுடன் இவர்கள் கூடியிருக்கமுடியுமென்பார்க்குக் கூறுகின்றார்.

(அஉ—அங) கலைகளின் சேர்க்கை இவர்களுக்கிருப்பினும் பசுக்கள் கலைகளுக்கு வசப்படுவதுபோல் இவர்கள் வசப்படுவ

தில்லை. இவர்கள் முறையே கலைகளுக்கு மேலிருக்கின்றமை பற்றி இவர்களுக்குப் பசுக்கள் வசப்பட்டிருக்குமாறுபோல் கலைகளும் வசப்பட்டிருக்கின்றன வென்பதாம்.

(உரை) பசுக்களுங் கலைகளும் இந்த மந்திரேசுவரர்களால் ஏவப்படுகின்றமையால், இவர்களுக்கு வசப்பட்டிருக்கின்றன. அதனால் இவர்கள் கலை முதலியவற்றுடன் பொருந்தியிருப்பினும் அவற்றிற்கு வசப்படுகின்றனரில்லை. ஆகையால் இவர்களுக்குச் சர்வஞ்ஞத்தன்மையும் மாயா கருப்பத்திலதிகாரமுடைமையும் உண்டென்பது பற்றி யெவ்வித விரோதமுமில்லை என்க.

(அஉ-அரு)

(அசு) அநந்தர் முதலிய பரமந்திரேசுவரர்களுக்கும், குரோதர் முதலிய அபர மந்திரேசுவரர்களுக்கும், தனது சத்தி தோன்றிய பின்னர் அதிகாரமுண்டாகின்றதென்பதாம்.

(உரை) அநந்தர் முதலிய மந்திரேசுவரர்களுக்கும், குரோதர் வீரபத்திரர் முதலியோர்களுக்கும், எப்பொழுது ஈசுவரனால் பாசநீக்கங் காரணமாக உரிமையான ஞானக்கிரியா சத்தியானது தோற்றுவிக்கப்படுகிறதோ, அப்பொழுதே அந்த ஞானக்கிரியா சத்தியானது தனக்குரிமையான அதிகாரத்தைச் செய்கின்றது. வேறு காலத்தை யெதிர்பார்க்கிறதில்லையென்க. (அசு)

(ஆ-கை) மந்திரர்களின் ஞானக்கிரியாசத்தி வேறு காலத்தை யெதிர்பார்க்கிறதென்று கூறுகின்றார்.

(அஎ) மாயாபந்தத்தை நீக்குதற்பொருட்டு எழுகோடி மந்திரர்கள் தமக்குக் காரணரான சிவனிடமிருந்தும் வித்தியேசுவரர்களுக்குப் பின்னர் உண்டாயினர். இதற்குப் பிரமாணம் "வித்தியேசுவரர்களுக்குப் பின்னர் எழுகோடி மந்திரர்கள் உண்டாயினர்" என்று கூறு மாகமங்களாகுமென்பதாம்.

(உரை) மந்திரர்கள் வேறு காலத்தில் காரியத்தைச் செய்கின்றனரென்பது பேதம். (அஎ)

(அ—கை) மந்திரர்களின் அதிகாரம் நித்தியமோ வென்பார்க்கு இல்லையென்று கூறுகின்றார்.

(௮௬) தொழிற்பாட்டுக்குப் பரதந்திரர்களான மந்திரேசுவரர்களும் மந்திரர்களும் முத்தர்களாயினும், இவர்களுடைய அதிகாரம் அளவுக்குட்பட்டிருக்கின்றதென்பதாம்.

(உரை) இவர்கள் முத்தர்களாயினும் பசுக்களைப்போல் தமது தொழிற்பாட்டிற்குச் சுதந்திரமில்லாமையால் பின்னர்க் கூறப்படுமாறு இவர்களுடைய அதிகாரம் அளவுடன் கூடியேயிருக்கின்றது. (௮௬)

(அ—கை) இனி அநந்தர் முதலியோருள்ளும் ஒருவரைக் குறித்து மற்றொருவருக்குள்ள பிரதானத்தன்மை அப்பிரதானத்தன்மைகளைப் பற்றிக் கூறுகின்றார்.

(௮௭) சூக்குமர் முதலியோருக்கு நாயகரான அநந்தர், சூக்குமர் முதலியோருடன் கூடிச் சிவனாலதிட்டிக்கப்பட்டு உற்பத்தி, திதி, சங்காரம், திரோதானம், அநுக்கிரகமென்னுங் கிருத்தியங்களைச் செய்கின்றாரென்பதாம்.

(உரை) சிவனை நோக்கக் கிரியாசத்தி சிறிது குறைந்தவரான அநந்தர் சிவனாலதிட்டிக்கப்பட்டுச் சிருட்டி முதலிய ஐந்தொழில்களையும் செய்கின்றவாறுபோல, அநந்தரை நோக்கக் கிரியாசத்தி குறைந்த சூக்குமரும் ஐந்தொழில்களையுஞ் செய்கின்றார். சூக்குமர் முதலியோரை நோக்க அநந்தர் மேலானவரென்பதற்கு "அவர்களுள் அநந்தர் பரமேசுவரராவர்" என்னும் பொருளுடைய சுருதியே பிரமாணமாகும். அவ்வாறே சூக்குமரை நோக்க சிவோத்தமர் குறைந்த சத்தியை யுடையராவர். ஆகவே முன்னவரை நோக்கிப் பின்னவருக்குக் குறைந்த தன்மையை யறிந்துகொள்க. (௮௭)

(அ—கை) இனி மந்திரர்கள் எவ்வளவு காலம் அதிகாரஞ் செய்கின்றனர் என்பதைப்பற்றியும் மந்திரர்களுக்குள்ள வேற்றுமையைப் பற்றியுங் கூறுகின்றார்.

(அஅ—அகூ) மந்திரர்களின் முற்பாதியாயுள்ளோர், சிருட்டிக்குப் பின்னர் அதிகாரத்தின் விசித்திரத்தன்மையால் சிவனுல திட்டிக்கப்பட்டு, அச்சமயம் தமக்குக் காரணரான சிவன திச்சையினுல் அநுக்கிரகிக்க வேண்டுமென்று கொண்டு வரப்பட்ட அணுக்களுக்கு அநுக்கிரகஞ் செய்து, அதன்பின்னர் அதிகாரத்தைச் செலுத்தி, எக்காலத்தும் நழுவாத சிவ சாயுச்சியத்தையடைகின்றனரென்பதாம்.

(உரை) ஏழு கோடி மந்திரர்களுள் முன்னவர்களான மூன்றரைக்கோடி மந்திரர்கள் மலபரிபாகமுடையவர்கள். இவர்கள் பிறவிநோய் முதலியவற்றால் கேடுறுதற்குச் சம்சாரங் காரணமென்றறிந்து ஈசுவரனை நோக்கி நாங்கள் சம்சாரத்தின் சேர்க்கையையும் பசுக்களால் ஏவப்படுந்தன்மையையும் பொறுத்தற்கு முடியாதவர்களாயிருக்கின்றோமென்று அறிவித்துக் கொண்டனர். ஆகையால் ஈசுவரனுடைய ஏவலால் வித்தியேசுவரர்களுடைய ஆணையை நோக்காது சிவசத்தியால் கொண்டுவரப்பட்ட அணுக்களுக்கு, அச்சமயம் தாமே நேராகக் கருத்தாவாக இருந்து கொண்டும், ஈசுவரனை நோக்கத்தாம் கரணங்களாக இருந்து கொண்டும், ஈசனதிச்சையை யனுசரித்து அநுக்கிரகஞ் செய்தனர். பின்னர் விசித்திரமான அதிகாரத்தைச் செலுத்தி சிவசாமியமென்னும் பரமுத்தியையடைந்தனர். (அஅ—அகூ)

(அ—கை) இரண்டாவது பாதி மந்திரர்களைப்பற்றிக் கூறுகின்றார்.

(கூ0) எஞ்சியுள்ள பாதி மந்திரர்கள் தொழிற்பட்டு உயிர்கள் சித்தி முத்தியடைதற் பொருட்டுப் பரிவாரங்களாக அணுக்களையும், இருதய முதலிய அங்கங்களையும், சம்பரம் என்னும் சத்தங்களையும், மண்டலங்களையும் பரமசிவன் சிருட்டித்தா ரென்பதாம்.

(உரை) பின்னர் எஞ்சியுள்ள பாதி மந்திரர்கள் தொழிற்பட்டு அதனுல் உலகத்துள்ளார் இதமடையும் பொருட்டு அந்த மந்திரர்களுக்குப் பரிவாரங்களாக வேறு சில அணுக்களையும்,

இருதய முதலிய அங்கங்களையும், சத்தியின் சேர்க்கையையும், * சம்பாம் என்னும் சத்தங்களையும், மண்டலங்களையும், அஃதாவது நவநாப முதலிய பூஜா ஸ்தானங்களையும் பரமேசுவரர் செய்தருளினர். (கூ0)

(அ—கை) முற்பாதி மந்திரர்கள் அநுக்கிரகத்தைச் செய்வது போல் இந்தப் பிற்பாதி மந்திரர்களும் அநுக்கிரகத்தைச் செய்கின்றனரா என்பார்க்கு அவ்வாறில்லை யென்று கூறுகின்றார்.

(கூக) பரிவாரங்கள், அங்கங்கள், சம்பாம்என்னு மிவற்றுடன் கூடிய அந்த மந்திரர்கள், ஆசாரியரை யதிட்டித்த ஈசுவரனால் ஏவப்பட்டவர்களாய், பரிவார முதலியவற்றைவிட்டு மோக்ஷத்தை யடைகின்றன ரென்பதாம்.

(உரை) பரிவார முதலியவற்றுடன் கூடிய இவர்கள் தீக்ஷை முதலியவற்றில் ஆசாரியரை யதிட்டித்த ஈசனால் ஏவப்படுகின்றமையால் அநுக்கிரகஞ் செய்தற்குக் கரணங்களாகவே யிருக்கின்றனர். அநுக்கிரகத்தைச் செய்கிறவர்களாக ஆகாரென்க. (கூக)

(கூஉ) போகமோக்ஷங்களைக் கொடுக்கக்கூடிய எஞ்சிய மந்திரேசுவரர்கள், ஈசுவரனது சத்தியால் ஏவப்பட்டவர்களாய், தம்முடைய புவனத்திற்குக் கீழுள்ள ஆன்மாக்களுக்கு அவரவர்க்குத் தக்கவாறு அநுக்கிரகத்தைச் செய்கின்றனரென்பதாம்.

(உரை) எஞ்சியவர்களாய் முக்கியரல்லாத வித்தியேசுவரர்களான வீரபத்திரர் முதலாயினோர், சாத்திரங்களிற் கூறப்பட்ட தமது புவனங்களுக்குக் கீழுள்ள ஆன்மாக்களுக்கும், தமது புவனத்திலுள்ள பிரமன் விட்டுணு முதலிய சிலருக்கும் அநுக்கிரகத்தைச் செய்கின்றனர். அநந்தர் முதலியவர்களைப்போல் புவனங்களின் சிருட்டி முதலியவற்றைச் செய்யவில்லை. (கூஉ)

---

* சம்பாம்— மந்திரர்களை யறிவிக்கும் வாசகமந்திரம்.

(அ—கை.) மந்திரர் மந்திரேசுவர்களின் அதிகாரத்திற்கு எல்லை வரையறுக்கப்பட்டிருக்கிறதென்று கூறுகின்றார்.

(கூரு) இந்த உருத்திரர்களும், சூக்குமர் முதலியோரும், மந்திரர்களும் அநந்தருடன் தமது அதிகாரத்தின் முடிவில் சிவனது ஏவலால் சிவசாமியமான முத்தியை யடைகின்றனரென்பதாம்

(உரை.) சூக்குமர் முதலியவர்களும், மந்திரர்களும், அவர்களுக்கு நாயகர்களான வீரபத்திரர் முதலியவர்களும் ஆகிய அனைவரும் அநந்தர் எப்பொழுது ஒழிவையடைகின்றாரோ, அப்பொழுதே ஒன்றாகச் சிவசாமிய ரூபமான மோக்ஷத்தையடைகின்றனர். இவ்வாறே இரௌரவத்தில் "அநந்தர் ஒழிவை யடையுங் காலத்தில் சக்கிரவர்த்திகளாயும், மகான்களாயுமிருக்கும் அவர்களுக்குச் சருவ கருத்திருத் தன்மைக்குக் காரணமான மேலான ஸ்தானமானது விதிக்கப்பட்டிருக்கின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் ஒருவர்பின் ஒருவராக மோக்ஷத்தை யடைதலில்லை. இவ்வாறே வார்த்திகக்காரரும் "அநந்தருடைய அதிகாரம் நீங்கிய பின்னர் அந்த அநந்தருடைய ஸ்தானத்தைச் சூக்குமரடைந்து அந்த அதிகாரத்தைச் செலுத்துகின்றார். இவ்வாறு முறையே ஒருவர்பின் ஒருவராக முன்னுள்ளவர்களின் ஸ்தானத்தையடைந்து அதிகாரத்தைச் செலுத்துமுறையில் இறுதியில் சிகண்டியின் தானத்திலிருந்து அதிகாரத்தைச் செய்யும்படி உருத்திரர்களில் ஒருவரைப் பரமசிவன் நியமிக்கின்றார்" என்று கூறுகின்றனர். (கூரு)

(அ—கை.) இனி அநந்தர் எப்பொழுது ஒழிவையடைகின்றாரென்பதைப்பற்றிக் கூறுகின்றார்.

(கூசா.) அநந்தேசுவரர் சிருட்டிமுதலிய ஐந்தொழில்களையுஞ்செய்து அதன் பின்னர்ப் பாதந்திரத்தன்மையினின்றும் விடுபட்டு ஈசுவரசாமியத்தை யடைகின்றாரென்பதாம்.

(உரை.) அநந்தர் எப்பொழுது அசுத்த மாயாசம்பந்தங்களான சிருட்டி முதலிய ஐந்தொழில்களையும் செய்து † விட்டனரோ, அப்பொழுது மாயாகாரியங்களனைத்தும் ஒடுங்கினமையால் பிரயோசனத்தைச் செய்தவரான அநந்தர் மகாப் பிரளயத்தின் ஆரம்பத்திலேயே ஈசுவர சாமியமாகிய பரமுத்தியை யடைகின்றனர். (கூச)

(அ—கை) இவ்வாறயின் அநந்தர் முதலாயினோர் ஒடுங்கினமையால் மாயையினின்றும் வேறு சிருட்டி முதலியவற்றை ஈசுவரர் எவ்வாறு செய்கின்றாரென்பார்க்குக் கூறுகின்றார்.

(கூரு) இவ்வாறே சென்ற சிருட்டிகளிலும் புருடர்களுடைய பாசத்தைப் பகவான் நீக்கினார். இனி வருஞ் சிருட்டிகளிலும் நீக்கப்போகின்றாரென்பதாம்.

(உரை) ஒவ்வொரு சிருட்டிதோறும் முன்னர்க் கூறியவாறுபோல் அநந்தர் முதலாயினரைத் தோற்றுவித்தே புருடர்களுக்குப் போகத்தைச் செய்து பகவான் மோக்ஷத்தைக் கொடுக்கின்றாரென்பது பொருள். (கூரு)

(கூசு) (இவ்வாறே) ஈசுவரன் ஆசிரியரைப் பற்றுக்கோடாகக்கொண்டு சாதனங்களாகிய மந்திரங்களால் சாதிக்கக்கூடிய தீக்ஷாசத்தியினாலேயே தனது சத்தி பதிந்த புருடர்களுக்குப் பாசங்களை நீக்குகின்றாரென்பதாம்.

(உரை) பரமேசுவரரே ஆசிரியரைப் பற்றுக்கோடாகக் கொண்டு மந்திரர்கள் மந்திரேசுவரர்களாகிய இவர்களையொழிந்த ஏனைய மலபரிபாகமுடைய ஆன்மாக்களுக்கு மந்திரங்களால் சாதிக்கக்கூடிய தீக்ஷையினாலேயே பாசங்களை நீக்குகின்றார். ஞானத்தினால் நீக்கவில்லை. முன்னர்ச் சாதனத்துடன் கூடிய மோக்ஷத்தைக் கூறுகிறேனென்று மேற்கொள்ளப்பட்ட மோக்ஷமானது இவ்வாறு நிர்ணயஞ் செய்யப்பட்டது. (கூசு

† அநந்தர் செய்துவிட்டனரென்பதற்கு அநந்தருடைய தானத்தில் வரும் ஒவ்வொருவரும் செய்துவிட்டனரென்பது பொருளாகக்கொள்க.

(அ—கை) இவ்வாறுயின் மாயா மலத்தைக் கடந்த மலபரி பாகமுடைய அணுக்களுக்கு மோக்ஷமெவ்வாறுண்டாகின்ற தெனின், ஒவ்வொரு புவனந்தோறும் ஆசிரியரிருத்தலால் ஆசாரியரைப் பற்றுக்கோடாகக் கொண்ட ஈசுவரனே அவ்வணுக்களுக்குத் தீக்ஷையைச் செய்து மோக்ஷத்தைக் கொடுக்கின்ருரென்று கூறுகின்ருர்.

(கூஎ-கூஅ) மந்திரேசுவரரே முன்னவரான ஆசிரியராவர். அவர்க்குப் பின்னர் உருத்திரர் ஆசிரியராவர். அவர்க்குப் பின்னர் தேவர்கள் ஆசிரியராவர். அவர்களுக்குப் பின்னர் முனீசுவரர்கள் ஆசிரியராவர். மந்திரேசுவர்களால் உருத்திரர்களும், உருத்திரர்களால் தேவர்களும், தேவர்களால் மானுட இருடி சிரேஷ்டர்களும், மானுட இருடி சிரேஷ்டர்களால் மானுடர்களும், மானுடர்களால் ஏனையமானுடர்களும் உபதேசிக்கப்பட்டுமுறையே பின்னவர் முன்னவரை யாசிரியராகக்கொண்டவராவர். பிராமணர்களால் வருணங்கள் நிலைநிறுத்தப்பட்டன என்பதாம்.

(உரை) உருத்திரர்கள் என்னும் பதத்தால் இவ்விடத்தில் ஸ்ரீகண்டர் முதலாயினேரைக் கொள்ளல் வேண்டும். இவ்வாறு ஆசிரியர்கள் ஏற்படுகின்றமையால் அவரவர்களால் செய்யப்பட்ட தீக்ஷையினுல், மாயாமலத்தைக் கடந்தவராயும், சிவசத்தி பதிந்தவராயும் உள்ள ஆன்மாக்களுக்கு மோக்ஷம் ஏற்படுகின்றது.

(கூஎ—கூஅ)

(அ—கை.) பிராமணர்களால் வருணங்களின் தருமங்கள் நிலைநிறுத்தப்பட்டன என்று கூறப்பட்டதைச் சாதிக்கின்ருர்.

(கூகூ) தீக்ஷை, சாதகம் என்னுமிவற்றிற்கு நான்கு வருணத்தவரும் அதிகாரியாவர். ஆசிரியத்தன்மைக்குப் பிராமணரே உரியவராவரென்பதாம்.

(உரை.) சாதகம், தீக்ஷை முதலியவற்றிற்குப் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர்களாகிய இவர்கள் அதிகாரிகளாவ

ரெனக் கேட்கப்படுதலால், நான்கு வருணத்தவரும் அதிகாரியா வர். "இலக்குமியின் கிருபையையுடையவராயும், மிருதுவான இயல்பையுடையவராயுமுள்ள அந்தணரே ஆசிரியராவர்" என்று சுருதியிருத்தலால் ஆசிரியத்தன்மைக்கு அந்தணரே உரி யவராவரென்க. (௯௯)

(அ—கை.) பிராமணர்களுள்ளும் எல்லாப் பிராமணரும் ஆசிரியராகாரென்றும் ஆசிரியராதற்கு உரியராவாரிவரென்றுங் கூறுகின்றார்.

(௧00) தீக்ஷையைப் பெற்ற எவன், சிவபெருமானைச் சத்தி களுடன் கூடினவராயும், அதிட்டிப்பதற்குரிய புவனங்களையு டையவராயும், போக மோக்ஷங்களைச் செய்பவராயும் அறிகின்றா னோ, அவன் ஆசிரியனால் ஆசிரியத்தன்மையில் ஏவப்பட்டு ஆசிரி யனுவனென்பதாம்.

(உரை) பரமேசுவரனுக்கு ஞானக்கிரியைகள் சத்தியென் றும், அனுசிருதமுதல் காலாக்கினி உருத்திர புவனமீறாகவுள்ள தத்துவம், புவனம், பூதம், பொருளென்னும் இவையனைத்தும் அதிட்டேயங்களாய்ப் பரமேசுவரனுடையதேயென்றும், பசுக் களுக்குப் போக மோக்ஷங்களைச் செய்பவர் பரமேசுவரனே யென்றும், இவ்வாறு பரமேசுவரனை ஆகம சம்கிதைகளாலறிந்து, வியாகரணம் தருக்கமென்னும் இவற்றால் அவ்விடயத்தில் விப ரீத ஞானத்தை நீக்கி, நிச்சயமாகப் பரமேசுவரனைத் தீக்ஷை யுடைய எவன் அறிகின்றானோ, தீக்ஷையில் ‡ வேறு ஆன்மாவைப் பெறுதற்பொருட்டும், அருச்சனை செய்தற்பொருட்டும் பரமேசு வரனையே பாவனை செய்கின்றானோ, அத்தகைய பிராமணன் ஆசிரியனால் ஆசிரியத்தன்மையில் ஏவப்பட்டு ஆசிரியனுவன். ஏனையோர் ஆசிரியராகமாட்டார். இவ்வாறே "அறிவில்லாதவ னும், மயக்கமுள்ளவனும், ஐயமுள்ளவனும், அன்பில்லாதவனும், தத்துவஞானமில்லாதவனும், கிரியாமார்க்கத்தில் பயிற்சி இல்லாத வனும் ஆசிரியனாகக் கொள்ளப்படமாட்டான்" என்று கூறப்பட் டிருக்கின்றது. (௧00)

‡ வேறு ஆன்மா—சுத்தான்மா.

(அ—கை) தீக்ஷையையுடையவர்களால் ஈசுவரன்புத்திக்கு விடயமாக அறியப்படுகின்றனரா? அல்லது புத்திக்கு விடயமாகாது அறியப்படுகின்றனரா என்பவற்றுள் முதலாவது பக்கத்தைப்பற்றிக் கூறுகின்றார்.

(க0க) பசுசாத்திரத்தை மாத்திரமறிந்து பதியான சிவனது சாத்திரத்தை அறியாத சிலர், புத்தியின் போதத்தால் சிவன் அறியப்படுகின்றானென்று கொள்கின்றன ரென்பதாம்.

(உரை) புருடன், புத்திக்கு விடயமான பொருள்களையே யறிகின்றான். அவ்வாறின்றி நேரே அறிவதில்லை. எதனாலெனின், புத்தி முதலியவற்றிற்குப் பயனின்மை நேரிடுமாதலாலென்க. பரமேசுவரர் புத்தியினும் வேறாக இருப்பினும் புத்திக்கு விடயமாக இருந்துகொண்டே யறியப்படுகின்றார். இவ்வாறன்றித் தனிமையாக அறியப்படவில்லை. எவ்வாறெனில், ஈசுவரனது அநுக்கிரகத்தால் ஒருவனுடைய புத்தியானது இராஜஸ் தமோ மலங்களினின்று நீங்கி நின்மலமான சத்துவவிருத்தியுடன் கூடினதாக இருக்கின்றது. அந்தப் புத்தியில் பரமேசுவரன் பிரதிபிம்பம்போல் விளங்குகின்றான். ஆகையால் அந்தப் பிரதிபிம்பரூபமாக அறியப்படுபவனாயிருக்கின்றானென்று சாங்கியரையனுசரித்த சிலர் கூறுகின்றனர். (கOக)

(அ—கை) ஈசுவரன் புத்தியாலறியப்படுவனென்று கூறில் பிறழ்ச்சி நேரிடுமாகையால் அவ்வாறு கூறுதல் பொருந்தாதென்று கூறுகின்றார்.

(கOஉ) போக்கியமாயிருத்தலால் எந்தப் புத்திக்குப் போக்தாவான ஆன்மாவும் விடயமாகவில்லையோ, அத்தகைய இந்தப் புத்தியானது தானே பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஈசுவரனை எவ்வாறு அறிவிக்குமென்பதாம்.

(உரை) அறியப்படுவனவெல்லாம் புத்திக்கு விடயமாக வேண்டுமென்ற நியமங்கிடையாது. புத்தியை ஆன்மா அனுபவிக்கின்றமையால் அந்தப் புத்தியில் ஆன்மா விடயமாய் இல்லா

திருந்தும் அறியப்படுகின்றது. ஆகையால் அறியப்படுவன அனைத்தும் புத்திக்கு விடயமாக வேண்டுமென்ற உடனிகழ்ச்சி சித்திக்காமை காண்க. ஆகவே, பின்னர்க் கூறப்படுமாறு தானே பிரகாசிப்பவனான ஈசுவரன் எவ்வாறு புத்திக்கு விடயமாவன். (௧0உ)

• (அ—கை) புருடன் புத்திக்கு விடயமாயிருந்துகொண்டே யறியப்படுகின்றான். கபிலப் பிரமத்திற்கும் புத்திக்கு விடயமாகாமல் ஆன்மா அறியப்படவில்லை. ஆகவே கண்ணாடிபோன்ற புத்தியில் ஆன்மாவும் விடயங்களுமாகிய இவற்றின் பிரதிபிம்பச் சேர்க்கையே போகமாகையால் புத்தியினால் நிச்சயிக்கப்பட்டே அனைத்தும் அறியப்படுகின்றனவென்று சாங்கியர் கூறுவது பொருந்தாதென்று கூறுகின்றார்.

(௧0௩) இந்தப் புருடனானவன் எப்பொழுதும் புத்திவிருத்தியிற்றங்கியவனாக அனுபவிக்கப் படுகின்றானில்லை. புருடன் எந்தக் காலத்தில் புத்தி விருத்தியிலேறியவனாக அனுபவிக்கப்படுகின்றானோ அவ்வித காலமொன்றில்லை யென்பதாம்.

(உரை) புத்தியிற்றோன்றும்புருடப் பிரதிபிம்பத்தாலும்புருடன் அறிகின்றானில்லை. ஆகையால் பிரதி பிம்பத்தைக் கற்பித்தது பயனற்றதாகும். (௧0௩)

(௧0௪) (அன்றியும்) ஆன்ம போதத்துக்கும், ஆன்ம போதத்தை விடயமாகக்கொண்ட பிரகாசத்துக்கும், முற்பிற்பாடிருக்குமாயின் பிரகாசத்துக்கு விடயமாயிருத்தல், பிரகாசத்தைச் செய்தலென்னும் வேற்றுமை பொருந்தும். அவ்வித முற்பிற்பாடின்மையால், பிரகாசத்துக்கு விடயமாயிருத்தல் பிரகாசத்தைச் செய்தலென்பது பொருத்தமற்றதென்பதாம்.

(உரை) ஆன்மா பிரதி பிம்பரூபமாயிருந்தால் அதற்கு விடயத்தன்மையும் போக்கியத்தன்மையு மிருக்கவேண்டும். அதை விடயமாகக் கொண்டிருத்தலால் புத்திபோதத்துக்குப் போக்திருத்தன்மையும் நிகழவேண்டும். அவ்வாறு நீங்கள் கொள்ள

வில்லையாதலால் புத்தியால் விடயமாகச் செய்யப்பட்டுப் புருடனறியப்படுகின்றானென்று கூறுவது பொருத்தமற்றது. (௧௦௪)

(௧௦௫) (அன்றியும்) புத்தி போதத்திற்கு ஆன்மா விடயமாயின், ஆன்மாவிற்குப் போக்கியத்தன்மையும், அதுபற்றிப் பரிணாமித்தன்மையும் வந்துவிடும். இதற்கு விபரீதமாகப் புத்திக்குப் போக் திருத்தன்மையும் பரிணாம மின்மையுமிருத்தல் வேண்டும். ஆகவே உன் மதத்துக்கு விரோதப்படுமென்பதாம்.

(உரை) இவ்வாறு ஆன்மா புத்திக்கு விடயமாயின் போக்கியமாயிருத்தலால், விடயங்களுக்குப்போல் பரிணாமித்தன்மை ஆன்மாவிற்கு நேரிடும். புத்திக்கு ஆன்மாவை யறியுந்தன்மையிருப்பது கொண்டு போக்திருத்தன்மை யிருத்தலால் நித்தியத்தன்மை யுண்டென்று கொள்ளவரும். ஆகவே உன்னுடைய கொள்கையானது உன் மதத்திற்கு விரோதமாகும். ஆகையால் போக்தாவின் போதம் வேறு விதமாகப் பொருந்தாமையால், புருடன் புத்திக்கு விடயமாகாமலிருந்து கொண்டே தனது ஞானத்தாலறியப்படுகிறானென்று கொள்ளவேண்டும். இவ்வாறாயின் முன்னர்ப் போக காரிகையில் * "குண தத்துவம் பிரகிருதி புருடன் ஆகிய இவர்கள் விடயமான அறிவே சித்தி" யென்று கூறியிருத்தலால், சித்திமுதலியபுத்தி போதத்தால் புருடன் அறியப் படுபவனாகக் கூறப்பட்டதே யெனில், அவ்வாறு கூறப்படவில்லை. அவ்விடத்தில் அறிவிப்பவனாகவே கூறப்பட்டிருக்கின்றது. எவ்வாறெனில், "அப்பொழுது அறிபவனுடைய சொரூபத்தில் இருப்பு" என்னும் வாக்கியத்தால் குணதத்துவம், பிரகிருதி யென்னுமிவற்றை விடயமாகவுடைய புத்தி போதத்தில் மிகவுந் தனிமையாயிருக்கும் புருடன் அதனையறிவித்துக் கொண்டு தானே பிரகாசிக்கின்றான் என்று கூறப்பட்டிருக்குமாறு காண்க. (௧௦௫)

(அ—கை) இது நிற்க. சூரியன் முதலாயினரைப் புத்திக்கு விடயமாகக் கொண்டு அறியுமாறு போல் ஈசுவரனைப் புத்

---

* போககாரிகை. ௪. ௬௦

திக்கு விடயமாகக் கொண்டே அறிய வேண்டு மென்பார்க்கு அவ்வாறு சம்பவியாதாகையால் அது பொருந்தாதெனக் கூறுகின்றார்.

(௧௦௬) போத ரூபமான அந்தக் காணத்தின்றொழிலானது விலங்கு முதலியன போல் பாசமாயிருக்கின்றமையால் மகேசுவரனை யறிவிப்பதற்குஉரிமையுடையதாக ஆகாது. அளவற்ற ஈசுவரனுக்கு அளவுடையபுத்தியில் பிரதிபிம்பமானது கத்தியில் சூரியனுக்குப் போல் பொருத்த மற்றது. ஈசுவரனுடைய அம்சத்துக்குப் பிரதி பிம்பமெனின், அது மயக்கமே யாகு மென்பதாம்.

(உரை) நன்மையை வெகு தூரத்திலிருந்தே தடுப்பது எதுவோ அதுவே பாசமாகும். அப்பாசத்தின் தன்மையானது புத்தி முதலிய வற்றிற்கிருக்கின்றது. ஆகையால் சிவ ரூபமான மேலான பா முத்தியைப் புத்தி போதமெவ்வாறு அறிவிக்கும். புத்தி பாசமாயிருத்தலால் அளவிடுதற்கு முடியுமாறு விளங்கும். ஈசுவரனோ திக்குக்கால முதலியவற்றால் அளவிடப்படாதவன். கத்தி முதலியவற்றில் சூரியன் முதலாயினருடைய பிரதிபிம்பம் கூடாதவாறுபோல், அத்தகைய ஈசுவரனுடைய பிரதிபிம்பம் புத்தியில் விளங்குமென்பது எவ்வாறு கூடும். ஈசுவரனுடைய ஏகதேசமானது பிரதி பிம்பிக்கிறதென்று கொள்வோ மெனில், அது மயக்கமேயாகும். ஏதனாலெனின், பகவான் அவயவமில்லாதவனாகையால் ஏக தேசமாய்ப் பிரதி பிம்பிப்பனென்பது பொருந்தாததலினென்க. இதே விடயமானது எம்மால் பிறிதொரு இடத்திலும் கூறப்பட்டிருக்கின்றது. (௧௦௬)

(௧௦௭—௧௦௮) (அன்றியும்) தகிக்கப்படுவது, தோல்வியடையப்படுவது என்னுந் தருமங்களையுடைய பாசங்கள், தகித்தல் தோல்வியடையச் செய்தல் என்னும் இவற்றைச் செய்யும் ஈசுவரனை அறிவிக்கமாட்டா. தகிக்கப்படும் விறகுகளால் தகித்தலைச் செய்யும் அக்கினியானது அறியப்படுகிறதில்லை. தோல்வியடையப் படுங்கொள்ளிக் கட்டைகளால் சூரியன் தோல்வியடைகிறதில்லை யென்பதாம்.

(உரை) தகிக்கப்படுவதும், தோல்வியடையப்படுவதுமாகிய விறகு முதலியன, தகித்தல் தோல்வியடைதலென்னுமிவற்றைச் செய்யும் அக்கினி முதலியவற்றின் பிரதிபிம்பத்தை யேற்று அந்த அக்கினி முதலியவற்றிற்குப் பிரகாசத்தைச் செய்கிறதாகக் காணப்படவில்லை. புத்தியானது பகவானால் அறியப்படுவதாயும் தோல்வியடையப்படுவதாயுமிருக்கின்றது. ஆகையால் அந்தப் புத்தி ஈசுவரனையறிவிக்காது. (௧௦௭–௧௦௮)

(அ—கை) காசஞ்செய்யப்படுவனவாயினும், கண்ணாடி முதலியன பிரதிபிம்பத்தை யேற்றுப் பிரகாசத்தைச் செய்கின்றன. ஆகையால் இவ்விடத்தில் நீ சொன்ன யுத்திக்குக் குற்றமில்லை யென்பதை மனதில் வைத்துக்கொண்டு ஆகம விரோதம் நேரிடுமென்று கூறுகின்றார்.

(௧௦௯-௧௦௯இ) சிவசத்தியால் விளக்கஞ் செய்யப்பட்ட ஞானசத்தியையுடையவனும், அதுபற்றிச் சுத்தனுமிருக்கும் ஆன்மாவால், சிவபெருமான் தியானஞ் செய்யப்படுபவரென்று, இரௌரவ சூத்திரக்காரர் எமக்குக் கூறிப், பரமேசுவரர் பாசங்களுக்கு விடயமாகாரென்பதை யறிவித்துள்ளாரென்பதாம்.

(உரை) சிவசத்தியினால் விளக்கப்பட்ட நின்மலமான ஞானசத்தியைக் கொண்டே தீக்ஷை பெற்றவரால் சிவன் தியானஞ் செய்யப்படுகின்றானென்று இரௌரவ சூத்திரக்காரர் கூறியுள்ளார். பகவான் புத்தியினால் தியானஞ் செய்யப்படுபவரென்று அவர் கூறவில்லை. அவர் கூற்று வருமாறு:—"சாதகர்களுடைய சுத்தமான இந்த * ஆன்மதத்துவமானது சிவ சத்தியால் விளங்கினதாகவும், எல்லா மலங்களினின்றும் விடுபட்டதாகவும் கூறப்பட்டது. அந்தச் சிவசத்திகலையிலிருந்துகொண்டு அக்கலையில் ஒடுங்கிய தனது சொரூபத்தால் அக்கலையை வித்துவான் சிந்திக்க வேண்டும்" என்றவாறும். (௧௦௯-௧௦௯இ)

(௧௧௦) (ஆகவே) அணுக்களைப்பந்திக்கின்றவைகளால் சிவன் தியானஞ் செய்யப்படுபவனாகவாவது, அறியப்படுபவனாகவாவது ஆகின்றானில்லை யென்பதாம்.

* ஆன்ம தத்துவமென்பது ஆன்மாவென்னும் பொருள் குறித்தது.

(உரை) ஆகவே தீக்ஷிதர்கள் சிவனைப் புத்தி முதலியவற்றால் அறிவதற்கும், புத்தி முதலியவற்றிலிருத்தித் தியானிப்பதற்கும் முடியாவென்க. (௧௧௦)

(அ—கை) ஆயின் சிவன் எவ்வாறு அறியப்படுவன் என்பார்க்குக் கூறுகின்றார்.

(௧௧௧) மறைப்பு நீங்கிய ஆன்மாவானது, சிவசூரியனது சத்திரூபிய கிரணத்தால் விளக்கப்பட்ட அறிவாகிய கண்ணைக் கொண்டு, சத்தி முதலியவையுடன் கூடின சிவனையறிகின்றதென்பதாம்.

(உரை.) சூரியகிரணத்துடன் கூடிய கண்ணால் உயிர்கள் சூரியனை யறிகின்றவாறுபோல, பரமேசுவரருடைய அருளால் மறைப்பு நீங்கினதாயும் விளக்கம் அடைந்ததாயுமுள்ள ஞான சத்தியைக் கொண்டே, பரமேசுவரரால் அநுக்கிரகிக்கப்பட்டவர்களாயும் ஞான நிஷ்டர்களாயுமுள்ள பக்தர்கள் பரமேசுவரனை யறிகின்றனர். குடம் முதலியவற்றைப்போல் ஈசுவரனைச் செயப்படுபொருளாக அறிகின்றார்களாமெனில், அறிபவன் அறியப்படுபவனுகிய இருவரும் வியாபகர்களாயிருக்கின்றமையால் அவ்வாறறிதல் கூடாமையின் செயப்படுபொருளாக அறியவில்லையென்க. (௧௧௧)

(௧௧௨) (இவ்வாறே) பாசங்களால் அறியமுடியாத சிவனிடத்தில் யோக முதலிய சாதனங்களின் செழிலாலும், சத்தத்தாலும், சகலவருக்கத்து உயிர்கட்குச் சிவனைப்பற்றிய ஞானம் உண்டாகின்றது. அது எவ்வாறு உண்டாகுமென்பதாம்.

(உரை.) பகவான் பாசங்களுக்கு விடயமாகாதவனென்று கூறின், பகவானைச் சாத்திரத்தாலறிதல் தீக்ஷை பெற்றவர்கட்கு எவ்வாறு பொருந்தும். சத்தமானது ஆகாசம் வாயுவென்னுமிவற்றை ஏதுவாகக் கொண்டிருத்தலால் பாசமாயிருக்கின்றது. ஆகையால் அத்தகைய சத்தத்தினின்றும் (ஆகமத்தினின்றும்) பகவானைப்பற்றிய அறிவு எவ்வாறுண்டாகும். (௧௧௨)

(அ—கை.) இதற்கு விடைகூறுகின்றார்.

(கக௩) மந்திரதந்திர ரூபமான சத்தங்களிலும், கலைகளிலும், சிவன் தோன்றி ஞானமாகிய கண்ணை யுண்டுபண்ணுகின்றார். ஆகையால் சிறிதும் விரோதமில்லை யென்பதாம்.

(உரை) பகவானனவர் எவ்விடத்தும் எக்காலத்தும் அதிட்டித்திருத்தலால் அவர் எல்லாவற்றுடனும் கூடினவராகவேயிருக்கின்றார். லிங்கங்களிடத்தும், மண்டலங்களிடத்தும், ஆசிரியர்களிடத்தும், விசேடமாய் விளங்கித் தோன்றுபவராகக் கூறப்படுகின்றார். அதுகொண்டே பூசை நமஸ்காரம் முதலியன, லிங்கம், மண்டலம், ஆசிரியரென்னும் இவ்விடத்துச் செய்யப்பட்டு, செய்கிறவர்களுக்குப் பலனை யுண்டுபண்ணுவதற்குக் காரணங்களாக ஆகின்றன. இவ்விடங்களிலன்றி வேறிடங்களிற் செய்யப்பட்டுப் பலனை யுண்டுபண்ணுதற்குக் காரணங்களாக ஆவனவல்ல. இவ்வாறே "பாசரூபமான தூலமாகிய மந்திர தந்திர ரூபமாயுள்ள சத்தத்திலும், நாதம் விந்து முதலிய கலைகளிலும்,பகவான் தோன்றி அறிவை யுண்டுபண்ணிப் புருடர்கட்குத்தன்னைக்காட்டுகின்றார். ஆகையால் மந்திரங்களுக்கு உண்டான இந்த அறிவிக்குந் தன்மையானது கடமுதலியவற்றை அறிவிக்குஞ் சத்தங்களினும் வேறாகவே யிருக்கின்றது" என்று எம்மால் மந்திரவார்த்திகடீகையில் கூறப்பட்டிருக்கின்றது. (கக௩)

(கக௪) (எவ்வாறெனில்) உயிர்களைப் பந்திக்கும் சத்தமுதலியவற்றில், பந்தத்தைச் செய்தலினும் வேறான காரியத்தால் சிவன் தோன்றி விளங்குவதாக அறியப்படுகின்றான். சரீரத்தில் தேவதை தோன்றி யறியப்படுமாறு போலென்பதாம்.

(உரை) மனிதர்களுள் சிலருடைய சரீரமானது தேவதைகளாலதிட்டிக்கப்பட்டதென்பது, மூன்று காலங்களிலுமுள்ள பொருள்களை அறிவிப்பதால் குற்றமின்றி யறியப்படுகின்றது. அவ்வாறே மந்திரசத்தங்களை உச்சரித்தலானும், எழுத்து ரூபமான அக்கரங்களின் நியாசத்தானும், சத்தத்தினால் மாத்திரம் சம்பவிக்கக்கூடாத வசியம் முதலிய வேறு வேறான காரியங்கள்

காண்டலால், ஈசுவரர் பிரதிமை முதலியவற்றில் தோன்றுமாறு போல் மந்திர சத்த முதலியவற்றிலும் தோன்றுகிறாரென்பது அறியப்படுகின்றது. (ககச)

(அ—கை.) இவ்விடத்தில் ஓர் பூர்வபக்கத்தைக் கூறுகின்றார்.

(ககரு) அணுக்களைப் பக்திக்கும் பிரகாசமற்ற யாவற்றிலும் தன்னையும் பிறபொருளையும் பிரகாசிக்கச்செய்யும் ஈசுவரன் தோன்றுகிறார். இது எவ்வாறு பொருந்துமென்பதாம்.

(உரை.) சடப்பொருளில் (சிவமாகிய) சித்துருபத்தின் தோற்றம் பொருந்தாதென்பது பொருள். (ககரு)

(அ—கை.) சடத்தில் சித்தின் தோற்றம் குற்றமாகாதெனக் கூறுகின்றார்.

(ககசு) எரிக்கப்படுந் தயிலம் முதலியவற்றில் எரிக்குந் தீபம் தோன்றுமாறுபோல, சித்தாகிய ஆன்மாக்களின் உபகாரத்திற்காக, பிரகாசமற்ற பிரதிமை முதலியவற்றில் தன்னையும் பிறபொருளையும் பிரகாசிக்கச்செய்யும் ஈசுவரன் தோன்றுகிறார் என்பதாம்.

(உரை.) தீப உவமையை இவ்விடத்தில் உபலக்கணமாக வைத்துக்கொள்ளவேண்டும். ஆகவே, சடமான மனிதர் முதலியவர்களின் சரீரத்தில், தன்னையும் பிற பொருளையும் பிரகாசிக்கச்செய்கிறதாயும் வியாபகமாயுமிருக்கும் ஆன்மாவானது, அறிவுடைய இந்த மனிதர் முதலியவர்களின் உபகாரத்திற்காகக் கன்மத்திற்கேற்றவாறு தோன்றுமாறு போல, பரமேசுவரர் பிரதிமை முதலியவற்றிலும், சித்திரம் முதலியவற்றிலும், மந்திர சத்தங்களிலும், பசுக்களின் உபகாரத்திற்காக விசேடமாய் விளங்கித் தோன்றுகின்றார். ஆகையால் பிரகாசமற்றவைகளில் சிவன் எவ்வாறு தோன்ற முடியும் என்றுகூறலாகாது. தீக்ஷை பெற்றவர்களுக்கு இவ்வாறான ஞானத்தால் இந்தப்பாசம் நசிக்கின்றது. (ககஎ)

(அ-கை.) தீக்ஷைபெற்றவர் சிவசாமியத்தை யெப்பொழுது அடைகின்றனர் என்பார்க்குக் கூறுகின்றார்.

(கககூஇ) ஆசிரியரும் தீக்ஷைபெற்றவரும் சரீரம் நசிகருங் காலத்தில் சிவசாமியத்தை யடைகின்றன ரென்பதாம்.

(உரை.) பிராரத்தமல்லாத சஞ்சித ஆகாமிய கன்மங்கட்குத் தீக்ஷையினால் நாசமேற்படுகின்றது. பிராரத்த கன்மத்திற்குத் தீக்ஷையினால் நாசமேற்படுவதில்லை. இவ்வாறே "தீக்ஷை பெற்றவர்கள் சரீரம் நாசமாகுங் காலத்தில் சாந்தமாயும் மேலானதாயுமிருக்குந்தானத்தை யடைகின்றனர்" என்று கூறப்பட்டிருக்கின்றது. பிராரத்த கன்மத்திற்குச் சத்தியோ நிர்வாண தீக்ஷையினாற்றான் நாசமேற்படும். அவ்வித தீக்ஷை பெற்றவனுக்குப் போகத்தால் நாசமில்லையென்க. (கககூஇ)

(ககஎ) அவ்வாறே போகானுபவத்தின் முடிவில் சாதகன் நிச்சயமாகச் சித்தியையடைவனென்பதாம்.

(உரை.) அவ்வாறே பெரியோர்களும் "அநேகந் தேவப் பெண்களுடன் கூடி வெகுகாலம் போகங்களை யனுபவித்த பின்னர் விருப்பம் நீங்கிச் சிவபதமான மேலான ஐசுவரியத்தையடைகின்றனர்" என்று கூறுகின்றனர். இவ்வாறு சாதனத்துடன் கூடிய மோக்ஷங் கூறப்பட்டது. (ககஎ)

(அ—கை.) இனி இந்த மோக்ஷத்தை நிர்ணயிக்கும் முறையில் பிறருடைய மோக்ஷங்களை விலக்க எண்ணி அவற்றுள் மாவிரதரின் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்.

(ககஅ) சித்தர்கள் சிவசாமியத்தை யடைகின்றனரென்று கூறின் காரணர்கள் அநேகராவர். ஆகவே அவர்களனைவரும் சமமான அறிவையடையாதவர்களாகையால் காரியங்களுண்டாகாவென்பதாம்.

(உரை.) ஈசுவரனுக்குப் போல் முத்தர்களுக்குஞ் சர்வகருந்திருத்தன்மையிருப்பின் அந்த முத்தர்கள் வேறு வேறான

அறிவையுடையவர்களா யிருத்தலால், இது புதிதாக இருக்கட்டும் இது பழையதாக இருக்கட்டும் என்னும் வேறுபாடுபற்றி ஒரு காரியமும் உண்டாகாமற் போய்விடும். ஆகையால் முத்தர்களுக்குச் சர்வஞ்ஞத்தன்மை மாத்திரமுண்டு. சர்வகருத்திருத்தன்மை பரமேசுவரனுக்குத்தானுண்டு என்று ஒப்புக்கொள்ளல் வேண்டும். (௧௧அ)

(அ—கை.) இது ஒரு குறையாகாதென்று கூறுகின்றார்.

(௧௧௯) மனிதர்கள் விருப்பு வெறுப்புக்களுடன் கூடியிருத்தலால் அவர்களுக்குச் சமமான ஞானமில்லை. சித்தர்களுக்கோ சமமான ஞானமிருக்கின்றது. ஆகையால் சமமான ஞானமின்மையால் நிகழக்கூடிய வெவ்வேறான இச்சையானது அவர்களுக்குக் கிடையாதென்பதாம்.

(உரை.) பசுக்கள் விருப்புமுதலியவற்றுடன் கூடியிருத்தலால் அவர்களிடத்தில் வேறுவேறான இச்சையிருக்கின்றது. அதனால் அவர்களுக்குக் கொள்கையின் பேதமேற்படுகிறதென்பது பொருந்தும். (௧௧௯)

(அ—கை) சித்தர்களைப்பற்றிக் கூறுகின்றார்.

(௧உ௦-௧உ௧) சித்தர்களுக்கு விருப்பு முதலிய குற்றங்கள் கிடையா. அவர்களுடைய ஞானம் எல்லாவற்றையும் அறியும். ஆகையால் அவர்களுக்கு வேறு வேறான இச்சைகள் கிடையா. சித்தர்களைச் சிவனுடன் சமமான அதிகாரத்தை யுடையவர்களாக வித்துவான்கள் கூறுகின்றனர். ஆகையால் ஒரு காரியமும் உண்டாகாதென்று சொல்லக்கூடாதென்பதாம்.

(உரை) சித்தர்களாயிருக்கின்றமையால் விருப்பு முதலியன இல்லாதவர்களாயும், முறையாக எல்லா விடயங்களையும் அறிந்தவர்களாயும், சர்வகருத்திருத் தன்மையுடன் கூடியிருத்தலால் சிவனுடன் சமமான அதிகாரத்தையுடையவர்களாயும் இருக்கின்கின்றனர். ஆகையால் அவர்களுக்கு ஒருவரிடத்தும் விருப்பு வெறுப்பு ஏற்படாவாகையால் அபிப்பிராயபேதங் கிடையாது.

ஆகையால் ஒரு காரியமும் உண்டாகாதென்ற குறை இவ்விடத்தி லில்லை யென்க. (௧௨௦-௧௨௧)

(அ—கை) மகாவிரதரின் மதத்தில் முத்தி சித்திக்கா தென்று கூறுகின்றார்.

(௧௨௨) சர்வ கருத்திருத்தன்மை முத்தனுக்கு இல்லையாயின் அவன் சர்வஞ்ஞனவனென்பது உண்மையன்று. சர்வ கருத்திருத் தன்மையில்லாத குறையால் பசுவானது எவ்வாறு சர்வஞ்ஞனாகமாட்டாதோ அவ்வாறே முத்தன் சர்வஞ்ஞனாகமாட்டான் என்பதாம்.

(உரை) பரிபூரணமாயிருப்பதே முத்தியாகும். முத்தனுக் குச் சர்வகருத்திருத் தன்மையில்லையாயின் சர்வஞ்ஞத்தன்மை யும் பசுவுக்குப்போல் இல்லையாதல் வேண்டும். (௧௨௨)

(௧௨௩) * சித்தின் தோற்றமிருத்தலால் ஈசுவரனுக்குச் சர்வ கருத்திருத்தன்மை யிருக்கின்றதென்று எவ்வாறு கொள்கின் றோமோ, அவ்வாறே சித்தர்களுக்கும் சித்தின்றோற்றமிருத்த லால் சர்வகருத்திருத் தன்மையுண்டு. இன்றேல் சித்தனுக்குப் போல் ஈசுவரனுக்கும் சர்வகருத்திருத் தன்மையில்லையாதல் வேண்டும் என்பதாம்.

(உரை) சித்தின் தோற்றத்தால் ஈசுவரனுக்குச் சர்வகருத் திருத்தன்மையிருப்பதுபோல் சித்தருக்கு மிருக்கின்றது. இல்லை யென்று கூறின் ஈசுவரனுக்கும் சர்வ கருத்திருத்தன்மை யில்லை யென்றாகும். ஆகவே உலகம் உண்டாகாது. (௧௨௩)

(௧௨௩இ) (அன்றியும்) கருத்தாவின் ஞானக்கிரியா ரூப மான சத்தியில் ஞானசத்திற்குத் தோற்றமும் கிரியாசத் திற்குத் தோற்றமின்மையும் கூறுவது யுத்திக்குப் பொருத்த மில்லை யென்பதாம்.

(உரை) அந்தச் சத்தியானது ஞானக்கிரியாரூபமாக ஒன்று கவேயிருக்கின்றதென்று முன்னரே கூறப்பட்டிருக்கின்றது. அத்

* சித்தின் தோற்றமென்பது சருவஞ்ஞத்தன்மை.

தகைய சத்திக்கு ஞானம்சத்தில் தோற்றமும் கிரியாம்சத்தில் தோற்றமின்மையும் ஒப்புக்கொள்ளக்கூடாது. எதனாலெனின், அவயவமற்றிருத்தலாலென்க. ஈசுவரனுக்கும் சித்தின் தோற்றமிருத்தலால் சர்வகருத்திருத் தன்மை உண்டென்று எவ்வாறு கொள்கின்றோமோ, அவ்வாறே சித்தர்களுக்கும் சித்தின் தோற்றமிருத்தலால் சர்வகருத்திருத் தன்மையிருக்கின்றதென்று கூறிய நமது கூற்று, வித்தியேசுவரர்கள் விடயத்தில் பொருந்தாது; அவர்களிடம் சித்தின் தோற்றமிருந்தும் சர்வகருத்திருத்தன்மை காணமையால் என்று அவர் கூறுவாராயின், அது பொருந்தாது. எதனாலெனின், அவர்களுடைய சிற் சத்திக்கு எப்பொழுதும் தோற்றமில்லாமையாலென்க. (கஉ௩இ)

(அ—கை) இனி, புருடர்கட்குக் கருத்திருத்தன்மை முன்னருமில்லையென்ச் சாங்கியர்போற் கூறுவையாயின் அதுவும் பொருந்தாதெனக் கூறுகின்றார்.

(கஉ௪இ) சித்தருக்குச் சருவ கருத்திருத் தன்மை உண்டென்று போககாரிகையில் முன்னர்ச் சாதிக்கப்பட்டிருக்கின்றது. கருத்திருத்தன்மையில்லை யென்று கூறுவையாயின் நிட்களனை முத்தன் எல்லாவற்றையும் அறியும் ஞானக்கிரியா சத்திகளற்ற பசுவாக ஆய்விடுவன் என்பதாம்.

(உரை) முன்னர்ப் போக காரிகையில் சித்தருக்குக் கருத்திருத்தன்மை உண்டென்று சாதிக்கப்பட்டிருக்கின்றது. சத்தி ஒன்றாகையால் அந்தக் கருத்திருத்தன்மைக்குத் தோற்றமில்லையாயின் ஞானசத்தியும் தோன்றாதிருக்கவேண்டும். ஆகவே, எல்லாவற்றையும் விடயமாகக் கொள்ளும் ஞானக்கிரியா சத்திகளின்மையால் முத்தன் பசுவாகவே ஆய்விடுவன். (கஉ௪இ)

(அ—கை) இவ்விடத்தில் பிறருடைய கொள்கையைக் கூறுகின்றார்.

(கஉ௫இ) சித்தனிடமுள்ள ஞான சக்திக்கு எவ்வாறு தோற்றமிருக்கின்றதோ, அவ்வாறு கருத்திரு சக்திக்குந் தோற்ற

முண்டு. ஆனால் சருவகருத்தா இருக்கின்றானென்றெண்ணிச் சித்தன் செய்யவேண்டியவற்றைச் செய்யாமலிருக்கின்றானென் பதாம்.

(உரை) சித்தனிடத்துள்ள கருத்திருத் தன்மை ஞானம் போலன்று. எங்கும் சருவ கருத்தா இருக்கின்றமையால் நாம் எதற்காக அதிகமாகச் செய்யவேண்டுமென்றெண்ணிச் செய்ய வேண்டியவற்றைச் செய்யாமலிருக்கின்றான். (கஉ௫இ)

(அ—கை) இதனை மறுக்கின்றார்.

(கஉ௬இ) சித்தனிடத்துள்ள சருவ கருத்திருத் தன்மை யானது எல்லாக் காரியங்களையும் செய்யவில்லையென்பையாயின் சித்தனிடத்து விளங்கித் தோன்றும் கருத்திருத்தன்மைக்கும் பசுவினிடத்து விளங்கித்தோன்றாதிருக்கும் கருத்திருத்தன்மைக் கும் விசேடம் யாதென்பதாம்.

(உரை) சித்தனிடத்திலிருக்கும் கருத்திருத்தன்மை விளக் கமாயிருந்தும் காரியத்தைச் செய்கிறதில்லை என்பையாயின், பசு வினிடமிருக்கும் விளக்கமில்லாத கருத்திருத்தன்மையினும் சித் தனிடத்துள்ள கருத்திருத்தன்மைக்கு விசேடம் யாதென்று கூறுவாயாக. (கஉ௬இ)

(அ—கை) இதனை விளக்கிக் காட்டுகின்றார்.

(கஉ௭இ) எல்லாக் காரியங்களையும் செய்வதற்காக உண் டான தொழிற்பாடு விளக்கமெனப்படும். கிரியைக்கு விளக்க மென்பது, இதனினும் வேறாகக் கிடையாது. எல்லாவற்றையும் அறியும்பொருட்டுண்டான ஞானம், ஞானத்துக்கு விளக்கமெனப் படும் என்பதாம்.

(உரை) பசுவினிடத்துள்ள கருத்திருத்தன்மையினும் சித் தனிடத்துள்ள கருத்திருத்தன்மைக்கு விசேடமாவது, சித்த னிடத்துள்ள ஞானசக்திபோல் கருத்திரு சக்தியும் எவ்விடத்தும் தொழிற்பாடுடைமையேயாம். (கஉ௭இ)

(௧உ-அஇ) (இவ்வாறே) கிரியா சத்தியானது எல்லாக் காரியங்களையும் செய்கிறதாகக் கொள். அல்லது கிரியா சத்தியே இல்லையென்றாவது கொள். அல்லது ஞான சத்தியின் விளக்கமின்மையே மோக்ஷமென்றாவது கொள். அல்லது மோக்ஷமற்ற பரமசிவனிடத்துக் குற்றத்தையாவது கொள் என்பதாம்.

(உரை) சித்தனது கிரியா சத்தி விளக்கமாயிருக்கின்றதென்று கொள்ளின், அதனை எல்லாக் காரியங்களையுஞ் செய்வதாகவே ஒப்புக்கொள்ளவேண்டும். விளக்கமாயிருப்பினும் காரியத்தைச் செய்கிறதில்லையென்று கொள்ளின், பிரதி பிம்பத்திற்குள் உயிர்ச் சத்தியில்லாதவாறுபோல் கிரியா சத்தியில்லையென்றே சொல்லல் வேண்டும். கிரியா சத்தி விளங்கித் தோன்றவில்லை யென்று கொள்ளின், ஞானக்கிரியா சத்திகள் ஒன்றாகையால் ஞானசத்தியின் விளக்கமின்மை மோக்ஷமென்று சொல்லல்வேண்டும். கிரியா சத்தி விளங்காமலிருந்தும், ஞான சத்தி விளங்கித் தோன்றுகின்றதெனில், இடையே மோக்ஷமடையாத பரமசிவன் சர்வஞ்ஞனுயிருக்கின்றமையால் முத்தனிடத்துப்போல் அவனிடத்தில் கருத்திருத்தன்மையில்லையென்னுங் குறையைக் கொள்ளல்வேண்டும். இவ்வாறான பக்கம் நான்கனுள் யாதானுமொன்றைக் கொள்ளல் வேண்டும். இவ்விடத்து முதலாவது பக்கத்தில் ஒரு குறையுமில்லை. ஆகையால் சர்வஞ்ஞத் தன்மை சருவகருத்திருத் தன்மை ரூபமான சிவசாமியத்தையே முத்தியாக ஒப்புக்கொள்ளல் வேண்டுமென்க.

(௧உ-அஇ)

(அ—கை) இனி, சங்கிராந்தியைக் கூறும் பாசுபதர்கள், முத்தியில் ஈசுவரகுணங்கள் உயிரினிடத்து வந்து கூடுகின்றமை பற்றிச் சித்தர்களுக்குச் சிவசாமியமுண்டென்று கூறுகின்றமையால் அது பொருந்தாதெனக் கூறுகின்றார்.

(௧உ-கூஇ) சித்தனிடத்தில் ஈசுவர குணங்கள் வந்து கூடுகின்றன என்று கொள்ளின், ஈசுவரன் அநீசுவரத் தன்மையுள்ளவனாக ஆவன். குணங்களின் அம்சம் வந்து கூடுகின்றதெனக் கொள்ளின், குணம் அவயவத்துடன் கூடினதாக ஆகும் என்பதாம்.

(உரை) சித்தனிடத்து ஈசுவர குணங்கள்தான் வந்து கூடு கின்றன என்று கொள்ளின், ஈசுவரன் சர்வஞ்ஞத் தன்மை முத லிய குணங்கள் இல்லாதவனாக ஆவன். குணங்கள் அவயவங் களற்றிருத்தலால் குணங்களின் ஏகதேசம் வந்து கூடுகின்றன வென்பதும் பொருந்தாது. (௧௨௯இ)

(௧௩௦இ) (அன்றியும்) குணங்கள் தனது குணியைவிட்டு நீங்கி வேறு குணியை யடையாது. அடைகிறதென்னும் இந்த முடிவானது உலகில் வழங்கும் பொருள்களில் விரோதப்படுகின் றது என்பதாம்.

(உரை) குணங்கள் தமது குணியை விட்டு நீங்கி வேறு குணியை அடைகின்றன என்று ஒப்புக்கொள்ளுமிடத்தில் எல் லாப் பொருளும் எல்லாக்குணங்களையும் உடையனவாக ஆகிவிடும். ஆகவே, பிரித்தறியப்பட்ட நியமம் பொருந்தாது. முத்தன் பெத்தனாகவும் பெத்தன் முத்தனாகவும் ஆகிவிடுவன். ஆகையால் குணங்களின் சங்கிராந்தி (வந்து கூடுதல்) பொருந்தாமைபற்றி அதுகொண்டு சிவசாமியத்தை யொப்புக்கொள்ளலாகாது. (௧௩௦இ)

(அ—கை) வேதாந்திகள் ஆன்மா பரமசிவனிடத் தொடுங் குதலால் சிவசாமிய ரூபமான முத்தியைக் கூறுகின்றனர்; அது வும் பொருந்தாதெனக் கூறுகின்றார்.

(௧௩௧இ) எவ்வாறு பரமசிவன் முன்னர்க் கூறப்பட்ட குறையை யுடையவனாக இருக்கின்றானோ அவ்வாறே அவனிடம் ஒடுக்கமடைந்த சித்தனும் குற்றமுடையவனாக ஆவன். ஏதனா லெனில், சித்தன் சிவனைவிட வேறாயில்லாமையாலென்பதாம்.

(உரை) பரமசிவனை *உபாதான காரணமாகக் கொண்டால் அவனுக்கு அசேதனத்தன்மை முதலிய குறைகள் நேரிடுமென்று † முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. சித்தர்கள் பரமசிவனிடத்து ஒடுக்கத்தை யடைகின்றனரென்று கூறின், பரமசிவன் உபாதான

* உபாதானம்—முதல். † சுலோகம் ௨௨.

காரணமாக ஆவன். எதனாலெனின், உபாதானங்களிற்றான் ஒடுக்கம் ஏற்படுமாகையாலென்க. ஆகவே உபாதான காரணமான ஈசுவரனுக்கு அசேதனத் தன்மை முதலிய குறைகள் ஏற்படுமாறுபோல, ஈசுவரனின்றும் வேற்றுமையில்லாத சித்தருக்கும் அசேதனத்தன்மை முதலிய குறைகள் நேரும். ஆகையால் உங்களுடைய மோக்ஷம் அத்துவிதமேயாகும். (௧௯௧இ)

(௧௯௨இ) (அன்றியும்) ஒன்றாயிருக்கும் தன்மையை அறிதலே முத்திக்குச் சாதனமென்று கூறிய நமது கூற்று, தன் சொரூபத்தினாலேயே மறுக்கப்பட்டிருக்கின்றது. எதனாலெனின், விடுவிக்கப்படுகிறவன் விடுவிக்கிறவனென்னும் இவர்களுக்கு அபேதத்தன்மை இருக்கின்றமைபற்றி முத்தியே யுண்டாகிறதில்லையாகையாலென்பதாம்.

(உரை) *சசாதிய ‡விசாதிய பேதமற்ற பிரமம் ஒன்றே உண்மை. ஆகையால் பிரம ஞானமே முத்திக்குச் சாதனமென்று கூறும் இந்தக் கூற்று என்னுடைய தாயார் மலடியென்ற கூற்றுப்போல் தன் கூற்றாலேயே மறுக்கப்படுவதாயிருக்கின்றது. ஒன்றென்று கொள்ளுமிடத்தில் சாத்திய சாதனத் தன்மை சித்திக்கிறதில்லை. அவற்றைக்கொள்ளுமிடத்தில் அநேகத்தன்மை சித்திக்கின்றமையால் (ஒன்றென்பது பொருந்தாது.) (௧௯௨இ)

(௧௯௩இ) (அன்றியும்) பிரமாணமானது பிரமேயத்தினும் வேறாக இருந்தாற்றான் பிரசித்தியேற்படும். இன்றேல் ஏற்படாது. பிரமாணமற்ற அபேதம் அறிவாளர்களால் எதற்காகக் கூறப்படல் வேண்டுமென்பதாம்.

(உரை) பிரமம் ஒன்றே உண்மையென்பது உங்களுக்கு எந்தப் பிரமாணத்தால் சித்தித்ததோ, அந்தப் பிரமாணம் அசத்தியமாயின், சொப்பனத்திற் பார்க்கப்பட்டது அசத்தியமாவது போல், அசத்தியமான அந்தப் பிரமாணத்தால் சத்தியமான பிர

---

* சசாதியம்—சமமானது. ‡ விசாதியம்—வேற்றுமையானது.

மம் எவ்வாறு சித்தித்தது. குறித்த பிரமாணம் உண்மையாயின், பிரமாணம், அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு ஆகிய இவையனைத்தும் உண்மையாதலால் ஒன்றென்பது பொய்யாய் விடும். ஆகவே, அதனை யடைதல் மோக்ஷமென்பது எவ்வாறு பொருந்தும்? (௧௩௩இ)

(அ—கை) சாங்கியர் கொள்கையைக் கூறுகின்றார்.

(௧௩௪இ) சிலர் மனதிற்கு விருப்பமான யோக பலனையும், சம்சாரத்திலுள்ள போகங்களையும் விட்டு நீங்கி, எவ்வாறு சைதன்னியமில்லாத கைவல்யத்தையே மோக்ஷமாகக் கூறுகின் றனரென்பதாம்.

(உரை) சதாசிவசம்பந்தமான தேகமே யோகமாகும். அந்த யோக ரூபமான பலமாவது சர்வஞ்ஞத் தன்மை முதலிய வற்றின் ரூபமான மோக்ஷம். அந்த மோக்ஷத்தையும், பலவித மான விடயங்களை அறிதலையே பலனாக உடையனவாயும், அணிமா முதலிய எட்டு ஐசுவரியங்களால் சாதிக்கப்படுபவையாயுமிருக் கும் சம்சார போகங்களையும் விட்டு நீங்கிக் கைவல்லியத்தில் ஆசை கொண்டு பிரகிருதியின் பிரிவாலுண்டாம் ஆன்ம நாசத்திற்குச் சம மான அஞ்ஞானத் தன்மையையே தங்கட்கு மோக்ஷமாகச் சாங் கியர் கொண்டார். புருடார்த்தமாயில்லாத அதனிடத்தில் ஒரு வருக்கும் பிரவிருத்தி பொருந்துகிறதில்லை. (௧௩௪இ)

(௧௩௫இ) (எவ்வாறெனில்) ஓ சத்துக்களே! தனது சை தன்னியத்தை நாசஞ் செய்யும்பொருட்டு எந்த வித்துவான்கள் ஞானயோக அப்பியாசங்களில் முயற்சியை யிடைவிடாது செய் வார்கள் என்பதாம்.

(உரை) எந்த வித்துவான்கள்தான் தமது ஞானத்தின் நாசத்தின் பொருட்டுத் தினந்தோறும் ஞானம் யோகம் முதலிய அப்பியாசங்களில் முயற்சியைச் செய்வார்கள்? (௧௩௫இ)

(௧௩௬இ) (அன்றியும்) விவேகமாவது, குணங்களும் புருட னும் வேறு வேறான தருமத்தோடு கூடியிருத்தலால் அவற்றின்

சம்பந்தமான ஞானமாகும். ஆராய்ந்து பார்க்கில் இது பொருந்து கிறதில்லையென்பதாம்.

(உரை) சாங்கியர்கள் கொண்ட குணங்களையும் புருடனை யும் பகுத்தறியும் ஞானமானது, குணங்கள் புருடனுக்கு விவே கத்தைக் காட்டுகின்றனவா? அல்லது புருடன் தானாகவே அறி கின்றானா என்று ஆராய்ந்து பார்க்கில் பொருந்துகிறதில்லை யென்க. (௩௩௬இ)

(௩௩௭இ) (அவ்விரண்டனுள் முதலாவது பக்கத்தைக் கொள்ளுமிடத்தில்) குணங்கள், கருத்திருத்தன்மை காரியங் களுடன் கலந்திருக்குந் தன்மை என்னும் தர்மங்களையுடையவை யாக நாங்களிருக்கின்றோம்; புருடனாகிய நீ அவ்வாறில்லை யென்று புத்தியிலிருந்துகொண்டு புருடனுக்கு அறிவிக்கின்றன. (என்று அவர் கூறல்வேண்டும்) என்பதாம்.

(உரை) சிற்சத்தியானது பரிணாமத்தையடையாததாயும், கலப்பில்லாததாயும், அறிவிக்கப்பட்ட விடயங்களையறிகிற தாயும், சுத்தமாயும், அளவற்றதாயுமிருக்கின்றது. ஆகவே, புத்தியினால் அறிவிக்கப்பட்ட விடயங்களைத்தான் புருடனறி கின்றான். ஆகையால் புத்தியிலிருக்குங் குணங்கள், நாங்கள் கருத்திருத்தன்மை முதலிய குணங்களுடன் கூடியிருக்கின் றோம்; புருடனாகிய நீயோ அவ்வாறில்லையென்று புருடனுக்கு அறிவிக்கவேண்டுவது இன்றியமையாததாயிருக்கின்றது என்பது அவர் கொள்கை. (௩௩௭இ)

(அ—கை) இதனால் குற்றமென்னை யென்பார்க்குக் கூறு கின்றார்.

(௩௩௮இ) அவ்வாறு புருடனுக்கு அறிவிக்கப்பட்டதை யறியுந்தன்மையிருப்பின், புருடன் பொய்யை யறிபவனாவன். மோக்ஷமானது பொய்ஞ்ஞானத்தால் சாதிக்கப்படுவதென்பது மிகவும் பொருத்தமற்றதென்பதாம்.

(உரை) இவ்வாறே, புருடன் புத்தியிலிருக்கும் குணங்களைத்தான் அறிகின்றானென்று கொள்ளின், புத்தியானது அளவிலடங்கியதாகையால் அதில் அளவில்லாத குணங்கள் விடயமாக ஆகா. இவ்வாறே நம்மவர்களும் "கபிலப்பிரமத்திற்கும் குணங்கள் பிரத்தியக்ஷமில்லை" என்று கூறுகின்றனர். ஆகவே, ஏகதேசமான குணங்கள் புத்தியிலிருக்குமென்று கொள்ளல் வேண்டும். அவ்வாறு கொண்டால் அந்த ஏகதேச விடயமான ஞானம் தத்துவ ஞானமாகாது. எதுபோலெனில், நீலமலையென்பதில் ஏகதேசமான மலையென்னும் பதத்தால் மாத்திரம் இமயமலையைக் கொள்ளுதல் போலுமென்க. அவ்வாறு கொள்ளுதல் பொய்ஞ்ஞானமேயாகும். பொய்ஞ்ஞானத்தாலோ மோக்ஷமுண்டாகாது. எதனாலெனில், பொருந்தாமையாலென்க.

(௧௩௮இ)

(௧௩௯இ) இந்தக் குணங்கள் கருத்திருத்தன்மை † முதலிய தருமங்களையுடையனவாக இருக்கின்றன. நான் அவ்வாறில்லையென்ற இவ்வாறான ஞானத்தைப் புருடனுக்குக் கொள்ளுமிடத்தில், புத்தியால் அறியப்பட்டதையே புருடனறிகின்றானென்பது கெட்டுவிடுமென்பதாம்.

(உரை) புத்தியினாலறியப்பட்ட பொருளையே புருடன் அறிவானென்று கூறும் நமது கூற்று, தன்னினும் வேறாகக் குணங்களைப் புருடன் அறிகின்றானென்று கொள்ளுமிடத்தில் மறுக்கப்பட்டுப் போய்விடும். இதுவன்றி, புருடன் குணங்களை நேராக அறியவில்லை; குணங்கள் புத்தியில் ஏறித் தன்னைப் புருடனுக்கு அறிவிக்கவில்லை; முன்னர்க்கூறிய குறை நேரிடுமாகையால். ஆனால் ஞானம் புருடனென்னும் இவற்றிற்குள்ள வேற்றுமையை மாத்திரம் குணங்களறிவிக்கின்றன என்பையாயின் அதுவும் பொருந்தாது.

(௧௩௯இ)

(௧௪௦–௧௪௧) (எதனாலெனில்) குணங்கள் வேறு புருடன் வேறு என்பதைக் குணங்கள் அறிவிக்கமாட்டா. எதனாலெனில்,

† முதலிய என்பதால், காரியங்களுடன் கலந்திருத்தல் என்னும் தர்மமுங் கொள்ளத் தகுந்தது.

புத்தியின் இருப்பிடமான குணதத்துவத்தினும் வேறாகக் குணங்களில்லாமையால் என்க. ஆன்மாவும் குணங்களுக்கு விடயமாகிற தில்லை யென்று முன்னரே கூறப்பட்டிருக்கின்றதென்பதாம்.

(உரை) குணங்கள் தம்மைப் புருடனுக்கு அறிவிக்கவில்லையாயினும், குணங்களுக்கும் புருடனுக்குமுள்ள வேற்றுமையை யறிவிக்கின்றன என்று கூறுமிடத்தில், தன்னினும் வேறான குணங்களுக்கு வேற்றுமையை யறிவிக்கின்றன என்று கூறல் வேண்டும். புத்தியினிருப்பிடமான தன்னினும் வேறான குணங்கள் சித்திக்கவில்லை. அவற்றிற்கு ஆன்மாவும் விடயமாகாது. விடயமாகுமெனின், ஆன்மாவிற்குப் பரிணமத் தன்மையும் போக்கியத்தன்மையும் நேரிடுமென்று முன்னரே கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாறிருக்கக் குணங்கள் தமக்கு விடயமாகாத ஆன்மாவினிடத்தில் ஆன்மா வேறு குணங்கள் வேறு என்பதை எவ்வாறு அறிவிக்கும். (௧௪௦—௧௪௧)

(௧௪௧இ) ஆகையால் விவேக விடயமான ஞானம் பொருந்துகிறதில்லை யென்பதாம்.

(உரை) இவ்வாறு விவேக ஞானம் பொருந்தாமையால் கைவல்யத்தையடைதலான மோக்ஷம் எவ்வாறு பொருந்தும், பொருந்தாது. ஆகையால் சர்வஞ்ஞத் தன்மை முதலியவற்றின் ரூபமான மோக்ஷத்தையே நீ ஒப்புக்கொள்ளல் வேண்டும்.

(௧௪௧இ)

(அ—கை) சாத்தர் முதலாயினருடைய மதத்தின் முத்தியைப்பற்றிக் கூறுகின்றார்.

(௧௪௨இ) கூறப்பட்ட பசு பாச விடயத்தில் சாத்தியத் தன்மை சாதனத்தன்மைகள் இல்லாமையால் எதிரிகளுடைய மதங்கள் பாசரூபமாக இருக்கின்றன. ஆகையால் அந்த மதங்களை வித்துவான்கள் விலக்கவேண்டுமென்பதாம்.

(உரை) பிரமாணத்தால் சித்தித்தனவாயுள்ள கூறப்பட்ட பசு விடயத்தில் சாத்தியமான முத்தியையும், பாச விடயத்தில் பாச நீக்கத்தாலுண்டான அறிவென்னுஞ் சாதனத்தன்மையை

யுஞ் சாதித்துக் கொடுக்கிறதில்லை; அந்த மதங்களில் இவை கொள்ளப்படவில்லையாதலால். ஆகையால் மேலான முத்தியை விரும்புகிறவர்கள் அந்த மதங்களை விலக்கிவிடல் வேண்டும்.
(௧௪௨இ)

(௧௪௩இ) (ஆகையினாலேயே) பசு பாச முதலியவற்றின் விசேடத்தை அறிவிக்குஞ் சைவ சாத்திரம் மறுக்கப்படாமலிருக்கின்றது. சைவமானது ஏனைய மதங்களினும் விசேடமான பயனையுடைத்தாயிருத்தலால் எந்த வித்துவானுக்குத்தான் பிரியமாக ஆகிறதில்லை யென்பதாம்.

(உரை) ஏனைய சாத்திரங்களால் பசு பாச முதலியன அறவே அறியப்படவில்லை யென்பதில்லை. (உள்ளவாறறியப்படவில்லை யென்பது கருத்து.) ஆகையால் இந்தச் சைவ சாத்திரம் உள்ளவாறு விளக்குகின்றது. அதுபற்றியே ஏனைய சாத்திரங்களால் அறியப்படாத பொருளை அறிவிப்பதாயிருக்கின்றது. ஆதலால் பிரத்தியக்ஷம் அநுமானமென்னும் பிரமாணங்களுடன் ஒற்றுமைப்படுகின்றது. ஆகையால் இந்தச் சைவாகமரூபமான பிரமாணம் பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்கள் போல் எவருக்குத்தான் உடம்பாடாக ஆகாது. (௧௪௩இ)

(அ—கை) ஏனைய ஆகமங்களும் பிரமாணங்களாதலால் அவற்றுடன் விரோதப்படின் இந்தச் சைவாகமத்திற்கு எவ்வாறு பிராமாண்யம் சித்திக்கும் என்பார்க்குக் கூறுகின்றார்.

(௧௪௪இ) முத்தனுக்கு இந்தச் சைவசாத்திரத்தில் பாசங்கள் முற்றும் நீக்கப்படுபவையாய் இருக்கின்றமையால் பாச ஞானத்தை விளக்குஞ் சாத்திரங்களுடன் முரண்பாடாய் இந்தச் சைவ சாத்திரம் பிரவிருத்தித்தாலும் பிரமாணத்தன்மையை விடுகிறதில்லையென்பதாம்.

(உரை) இந்தச் சைவ சாத்திரத்தால் ஏனைய மதங்கள் நீக்கப்படவில்லை. ஆனால் பாசரூபங்களான அந்த மதங்களிலுள்ள பொருள்களை இது இவ்வாறன்று என்று ஞானத்தால் மறுப்பதற்காகவே இந்தச் சாத்திரம் தோன்றிற்று. ஆகவே, (சிப்பியைக்

கண்டு மயங்காது) இது வெள்ளியன்று சிப்பியே என்ற ஞான த்தை யொத்து இந்தச் சைவசாத்திரமிருத்தலால் ஏனைய மதங் களுடன்விரோதித்துப்பிராமாண்யத்தைக் கெடுத்துக்கொள்ளாது. (கசச இ)

(அ—கை) ஏனைய மதங்களுடன் சைவாகமம் விரோதப் படுகிறதில்லையென்று கூறுகின்றார்.

(கசரு) இந்தச் சைவசாத்திரமானது ஏனைய மதங்கள் விட யத்தில் அவற்றின் பிரமாணத் தன்மையைக் கெடுக்கிறதில்லை யென்பதாம்.

(உரை) இந்தச் சைவசாத்திர ரூபமான பிரமாணமானது ஏனைய மதங்கள் பொய்யான பொருளையுடையன என்று கூற வில்லை. அவ்வாறு கூறின் ஏனைய மதங்களுடன் விரோதப்படும் (என்பது கருத்து.) ஆனால் அம்மதங்கள் பிரத்தியக்ஷம் முதலிய வற்றைப்போல் சில பொருள்களை யறிவித்தாலும், தமக்குத் தக்கவாறு அடையத் தகுந்ததை அடையச் செய்கின்றது என் பதுபற்றி அவற்றிற்குப் பிராமாண்யமுண்டென்று சர்வாகமப் பிராமாண்யத்தில் எம்மால் கூறப்பட்டிருக்கின்றது. (கசரு)

(கசருஇ) (அன்றியும்) அந்த அன்னிய மதங்களில் கூறப் பட்டுள்ள வருணாச்சிரமத்தைச் சைவ சாத்திரம் ஒப்புக்கொண்டி ருக்கின்றதென்பதாம்.

(உரை) "வருணங்கள் ஆச்சிரமங்களென்னும் இவற்றின் ஒழுக்கங்களை மனத்தாலுங் கடத்தல் கூடாது ' எவன் எந்த ஆச் சிரமத்திலிருந்துகொண்டு சிவசாத்திரத்திற் கூறியவாறு தீக்ஷை செய்யப்பெற்றிருக்கின்றானோ அவன் அதே ஆச்சிரமத்திலிருந்து கொண்டு சிவதருமத்தைக் காக்கவேண்டும்" என்று பெரியோ ரும் கூறுகின்றனர். இந்தச் சைவ சாத்திரம் வேதத்தோடு முரண்படாமையால் உன்மதத்தையனுசரித்தும் இதற்குப் பாசண் டத்தன்மைகிடையாது. வேதத்தையறிந்தவர்களும் சிவாகம

விதிகளை அநுட்டித்திருக்கின்றனர். புராணம் இதிகாசம் முதலிய வற்றிலும் சுவேதர், உபமன்னியு முதலிய மகரிஷிகள் சைவாகம விதிகளை அநுட்டித்துள்ளாரெனக் கேட்கப்படுகின்றது. மகா பாரதத்தில் "இவர்களால் சிவலிங்கத்தில் பரமேசுவரன் பூசிக்கப் பட்டான். உன்னால் ஒவ்வொரு யுகத்திலும் பூசையில்" என்பது முதலிய வாக்கியங்களால் நரநாராயணர்கள் அசுவத்தாமா ஆகிய இவர்கள் சிவாகம முறையை அநுஷ்டித்ததாகவும், சுவர்ண கூத்திலும் பரமேசுவர ஆராதனையால் பகவானுன வாசுதே வர் அநுக்கிரகம் பெற்றதாகவும் காணப்படுகின்றன. அன்றியும் "ஓ கிருஷ்ணு! சிவாராதனத்தைத் தவிர வேறு பிரியம் எனக் கென்ன இருக்கின்றது. உன்முகத்தில் எல்லா உலகங்களும் உண் டாகப் போகின்றன. இவ்விடயத்தில் சந்தேகமில்லை" என்று கூறப்பட்டிருக்கின்றது. அன்றியும், இராமாயணம் கார்த்தவீரிய ஸ்மிருதி என்னும் இவற்றில் "பக்குவங்களான செங்கல்களால் சிவாலயத்தை எவன் கட்டுவிக்கின்றானே" என்பதனால் பிரதிட் டை முதலிய சிவதருமங்கள் கூறப்பட்டிருக்கின்றன. சிவ சூத் திரத்திலும் சிவாகமங்களின் மோக்ஷ சொரூபம் கூறப்பட்டிருக் கின்றது. பிருதுகேசுவரம், இராமேசுவரம் முதலிய க்ஷேத்திரங் கள் சைவாகம முறைப்படி பிரதிட்டை செய்தவையாகக் காணப் படுகின்றன. வேதத்தில் சுவேதாசுவதரம் முதலிய சாகைகளி லும், அதர்வ சிரசு முதலிய மந்திரங்களிலும், சைவாகம சம்பந்த மான ஞானங் காணப்படுகின்றது. ஆகையால் ஒருவித குறையு மில்லை. சிவாகமங்கள் மூலமற்றவையாயு மிருக்கவில்லை. சிற் சிலர்களால் மாத்திரம் அநுட்டிக்கப்படவுமில்லை. ஆகையால் உன்மதப்படியும் அப்பிராமாண்யமில்லையென்க. (கசரு)

(கசசு) (அன்றியும்) சைவசாத்திரத்திலுள்ள பொருள் கள் ஏனைய பிரமாணங்களால் மறுக்கப்படவில்லை. ஆகையால் அவற்றினும் அதிகமான பலத்தைக் கொடுக்கும் இந்தச் சைவ வைதிகர்களால் இன்றியமையாது கிரகித்துக்கொள்ளப்படல் வேண்டும் என்பதாம்.

(உரை) பிரத்தியக்ஷத்தாலாவது அநுமானத்தாலாவது இந்தச் சைவ சாத்திரம் மறுக்கப்படுகிறதில்லையென்பது முன்னரே போககாரிகையில் கூறப்பட்டிருக்கின்றது. "அக்கினியினால் நனைக்கவேண்டும்" என்பது முதலிய வாக்கியங்கள் பிரமாணமாகாதவாறு போல் இது ஆகிறதில்லை. ஆகவே இந்தச் சைவ சாத்திரம் முற்றும் விரோதமின்றிப் பரமுத்திக்குக் காரணமாயிருந்துகொண்டு வேதத்தையறிந்த வைதிகர்களாலும் பிறராலும் பிரமாணமாகக் கொள்ளத்தக்கதாக இருக்கின்றது. ஏனைய மதங்களால் இந்தச் சைவசாத்திரம் மறுக்கப்படுகிறதில்லை. (கசசு இ)

(கசஎ இ) (ஏதனுலெனில்) தோல்வியடையப்படுவதாயும், சாமான்யமாயுமிருக்கும் அந்த ஏனைய மதங்களால் இந்தச் சைவ சாத்திரம் மறுக்கப்படுகிறதில்லை. ஏனைய மதங்களின் வேறாயிருக்கின்றமையாலும், சைவ சாத்திரத்திற் கூறியவாறு ஏனைய மதங்களில் விடயங்களில்லாமையாலும் என்பதாம்.

(உரை) இரணியகருப்பன் முதலியோர் வேத முதலியவற்றிற்குக் கருத்தாக்களென்று பெரியோர் கூறுகின்றனர். ஆகையால் வேத முதலியவற்றிற்குக் கருத்தாக்கள் இல்லையென்று கூறலாகாது. கீதைகளிலும் "வேதாந்தத்தைச் செய்த நான் வேதத்தை யறிந்தவனாகவே யிருக்கின்றேன்" என்று கூறப்பட்டிருக்கின்றது. ஒன்றுக்கொன்று மாறுபட்ட பொருள்களை யுடையதாகச் சாத்திரங்களை உபதேசித்தமையால் அவர்கட்குச் சர்வஞ்ஞத் தன்மை கிடையாது. அவ்வாறே "பௌத்தர் சர்வஞ்ஞராக இருப்பின் கபிலர் ஏன் சர்வஞ்ஞராகமாட்டார்; இருவரும் சர்வஞ்ஞராக இருப்பின் கொள்கையில் வேற்றுமையானது எக்காரணங்கொண்டு நிகழ்ந்தது" என்று பிறருங்கூறுகின்றனர். சர்வஞ்ஞனல்லாத சாமான்ய கருத்தாக்களால் செய்யப்பட்ட மதங்களும் எல்லாப் பொருள்களையும் விடயமாகக் கொண்டன என்று சொல்லமுடியாது. சர்வஞ்ஞனால் செய்யப்பட்ட சாத்திரத்தால் அந்த மதங்கள் தோல்வியடையப்பட்டவையாயும் ஆகும். இவ்வாறாகவும் ஏனைய மதங்களைத் தோல்வியடையும்படி செய்கிறதாயும், சர்வஞ்ஞனால் செய்யப்

பட்டிருத்தலால் பின்னர்க் கூறப்படுமாறு எல்லா ஆகமப்பொருள்களையும் விளக்குகின்றமை பற்றி ஏனைய மதங்களினும் வேறுயுயிருக்கும் இந்தச் சைவசாத்திரம் ஏனைய மதங்களால் எவ்வாறு மறுக்கப்படும். இந்தச் சைவ சாத்திரம் எவ்வாறு பொருள்களைக் கொண்டிருக்கின்றதோ அவ்வாறு ஏனைய மதங்கள் கொள்ளவில்லை யென்க. (கசஎஇ)

(கசஅஇ-கசகூஇ) இந்தச் சைவசாத்திரமானது எவ்வாறு ஏனைய மதங்களின் விடயம் பயன் இவற்றை அனுவாதஞ் செய்து கொண்டு தனது விடயம் பயனிவற்றிலுள்ள விசேடத்தை விளக்கஞ் செய்கின்றதோ, அவ்வாறு ஏனைய மதங்கள் சைவசாத்திரத்தின் விடயம் பயன் இவற்றை அனுவாதஞ்செய்து கொண்டு தனது விடய பயன்களின் விசேடத்தை விளக்குவனவாயில்லை. ஆகையால் இந்தச் சைவ சாத்திரம் ஏனைய மதங்களுக்கு விடயமாக ஆகிறதில்லை யென்பதாம்.

(உரை) எவ்வாறு ஏனைய மதங்களின் விடயம் பயனிவற்றை விடயமாகக்கொண்டு, தன் விடயம் பயனிவற்றின் விசேடத்தை "பௌத்தர்கள் புத்தி தத்துவத்திலும், சைனர்கள் குணதத்துவத்திலும் இருக்கின்றனர்" என்பது முதலியவற்றால் அநுவதித்து எல்லாவற்றையும் விடயமாகக்கொண்டு விளங்குகின்றதோ, அவ்வாறு ஏனைய மதங்கள் சைவசாத்திரத்திற் கூறப்படும் பலன்களை விடயமாகக் கொள்வதற்கு முடியாமலிருக்கின்றன. ஆகையால் தமக்கு விடயமாகாத சைவசாத்திரம் அந்த அன்னிய மதங்களால் எவ்வாறு மறுக்கப்படும். (கசஅஇ-கசகூஇ)

(கடுOஇ) ஆகையால் சைவசாத்திரத்தால் ஏற்றுக்கொள்ளப்படுதலும், விலக்கப்படுதலும் ஏனைய மதங்களுக்கு நிச்சயிக்கப்பட்டிருக்கின்றன. சைவ ஞானத்திற்கு விடயமாயுள்ள பொருள் ஏனைய மதங்களுக்குச் சமமான தன்மையையுடைய ஞானத்திற்கு விஷயமாக ஆகிறதில்லை என்பதாம்.

(உரை) ஏனைய மதங்கள் சர்வஞ்ஞனல்லாதவர்களால் செய்யப்பட்டமை பற்றி வலிமையற்றிருக்கின்றமையால் சைவாகமத்

திற்கு விரோதப்படாமல் தத்தம் விடயங்களை யனுட்டிப்பதில் சைவ சித்தாந்தம் அநுமதி கொடுக்கின்றது. எதனாலெனின், வருணாச்சிரம ஆசாரங்களை மனத்தாலும் தாண்டக்கூடாது என்ற வாக்கியம் பிரமாணமாயிருக்கின்றமையாலென்க. சைவாகமத்துடன் எவ்விடத்தில் விரோதங் காணப்படுகின்றதோ, அவ்விடத்தில் விலக்கையே கொள்ளல்வேண்டும். (விலக்கவேண்டு மென்பதாம்.) எதனாலெனில், வைதிக சந்தியைச் செய்யினுஞ் சரி; செய்யவில்லையாயினும் சரி; சைவ சந்தியை ஆணையால் அநுட்டிக்கவேண்டும் என்றமையாலென்க. இவ்வாறன்றிச் சர்வஞ்ஞனல்லாதவரால் செய்யப்பட்ட ஏனைய மதங்களுடன் சமானமான தன்மையையுடைய ஞானத்திற்கு, சைவஞானத்திற்கு விடயமாகிய பொருள் எக்காலத்தும் விடயமாக ஆகிறதில்லை. (௧௫௦இ)

(அ-கை) இந்தச் சைவசாத்திரம் காரியத்தன்மையுடன் கூடி யிருக்கின்றமையால் இதற்கு அநித்தியத்தன்மை யுண்டென்று கூறலாகாதெனக் கூறுகின்றார்.

(௧௫௧இ) ஈசுவர சம்பந்தமான ஞானமானது ஈசுவரனுக்குக் குணமாக அநாதியாகவே சித்தித்திருக்கின்றது. அந்த ஞானம் நன்றாய் நிச்சயிப்பதா யிருக்கின்றதென்று கூறப்பட்டிருக்கின்றதென்பதாம்.

(உரை) ஆகமமானது, சொல் பொருள் என்னும் இவற்றின் ரூபமாயிருக்கின்றது. அவற்றுள், தந்திர (சொல்) ரூபமான ஆகமம் ஈசுவரனால் செய்யப்படினும், அதன் பொருளான ஞான முதலிய குணங்கள் பரமேசுவரனிடத்துச் சமவாய சம்பந்தத்தாலிருப்பது பற்றி நித்தியமா யிருக்கின்றமையால் சைவ சாத்திரத்திற்கு நித்தியத்தன்மையுண்டு. அதுபற்றியே சைவ சாத்திரம் பிரமாணமாகுமென்க. (௧௫௧இ)

(௧௫௨இ) (ஆகையினாலேயே) இந்தச் சைவசாத்திரமானது கெடுக்கப்படாத சத்தியையுடையதாயிருப்பது பற்றிப் பதியான ஈசுவரனுக்கு விரோதமாக ஆகிறதில்லை. இதே காரணத்தால் சைவ சாத்திரமானது அன்னிய மதங்களோடு சமமான பலன்

களையுடையதென்று கூறலாகாது. இவ்வாருகவே பயனற்றிருக்குந்தன்மை இதற்கு எவ்வாறு உண்டாகுமென்பதாம்.

(உரை) இந்தச் சைவ சாத்திரம் பயனற்றதாகவாவது, ஏனைய மதங்களோடு சமமான பலனையுடையதாகவாவது, விரோதிக்கப்படும் பலனையுடையதாகவாவது இருக்கவில்லை. ஆனல் இதற்குப் பிரமாணத் தன்மையுண்டென்பது முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. ஈசுவரன் கெடுக்கப்படாத சத்தியுடையவராய் இருக்கின்றமைபற்றி அனைவருக்கும் மேலானவராகையால் அவரால் சொல்லப்பட்டமைபற்றிப் பிராமாண்யம் உண்டென்க. ஏனைய மதங்களுடன் சமானமாக இந்தச் சைவ சாத்திரத்தைக் கொண்டாலும், இதனையும் ஏற்றுக்கொள்ளலாம் ஏனைய மதங்களையும் ஏற்றுக்கொள்ளலாமென்று கூறலாகாது. (கடுஉஇ)

(கடுஙஇ) (எதனுலெனின்,) இந்தச் சைவசாத்திரம் ஏனைய மதங்களுடன் சமமான பலனையுடையதாயிருப்பினும் இந்தச் சைவ மதத்தில் தீக்ஷையினுலேயே முத்தியுண்டாகின்றது. இலகுவான உபாயத்தால் புருடர்களுக்கு முத்தியைக் கொடுக்கின்றமையால் இந்தச் சைவ சாத்திரத்தையே கைக்கொள்ளல் வேண்டுமென்பதாம்.

(உரை) அறியப்பட்ட இலகுவான சாதனத்தை நீக்கிவிட்டு வருத்தத்திற்குக் காரணமாயும் மிகப் பெரிதாயுமிருக்கும் சாதனத்தைக் கொள்வதில் எவன்ருன் பிரியப்படுவன். அவ்வாறே "இங்கேயே தேன் கிடைக்குமாயின் எதற்காக மலைக்குச் செல்லல் வேண்டும்; தனக்கு விருப்பமான பொருள் கிடைத்த பின்னர் எவன்ருன் முயற்சியை மேற்கொள்வன்" என்று பிறருங் கூறுகின்றனர். (கடுஙஇ)

(கடுசஇ) எந்தச் சாத்திரத்தில் தொழிற்பாட்டினின்றும் விடுபட்ட சித்தியும், மேலானதாகிய முத்தியும், வேத பூஷணமாகிய சாதனமும் காணப்படுகின்றனவோ அந்தச் சாத்திரத்தை எவன்ருன் கொள்ளமாட்டானென்பதாம்.

(உரை) எந்தச் சாத்திரத்தில் எல்லாவற்றினும் மேலான பலன் காணப்படுகின்றதோ அந்தச் சாத்திரத்தை எவன்ருன் ஏனைய சாத்திரங்களையெல்லாம் தள்ளிவிட்டு மேற்கொள்ளமாட்டான். ஆகையால் இந்தச் சைவ சாத்திரமானது ஏனைய மதங்களுடன் சமமான பலனையுடையதாயிருப்பினும், இந்தச் சாத்திரத்தில் பிரவிருத்தியானது செய்யவுங் கூடும்; செய்யாது விடவுங் கூடுமென்று வேற்றுமைப்படுகிறதில்லை. (கஞ௪இ)

(அ—கை) இந்தச் சைவ சாத்திரம் பரமேசுவரனுல் செய்யப்பட்டதென்று யாது காரணத்தால் கூறப்படுகின்றதென்பார்க்குக் கூறுகின்ருர்.

(கஞ௫—கஞ௬—கஞ௭) பரமசிவனிடத்திலிருந்து பரம்பரையாய் வந்தவையாயும், சாதனத்துடன் கூடியவையாயுமிருக்கும் போக மோக்ஷங்கள், ஆத்ரேய மகரிஷியின் பொருட்டு குரு மகரிஷியினுலறிவிக்கப்பட்டன. ஈசுவர பத்தராயும், ஆசிரியராயும், ஸ்ரீமானுயும், எல்லா வித்தைகளுக்குங் கடலாயுமிருக்கும் உக்கிர ஜோதி சிவாசாரியரால் அநுக்கிரக்கப்பெற்ற சத்தியோசாத சிவாசாரியர் சிற்றறிவுடையார்க் கறிவித்தற்பொருட்டுச் சுருக்கமாக இந்த விடயங்களைத் தொகுத்து அருளிச் செய்தனரென்பதாம்.

(உரை) குரு பரம்பரையாக இடைவிடாது சிந்திக்கப்படுவதுகொண்டு இந்தச் சாத்திரம் பரமேசுவரனுல் செய்யப்பட்டமைபற்றி எல்லா மேன்மைகளுக்கும் காரணமென்றறியப்படுகின்றது. (கஞ௫—கஞ௬—கஞ௭)

இவ்வாறு நாராயண கண்டரின் புதல்வராகிய பட்டராம கண்டரால் சிடர்களின் நன்மையின் பொருட்டு மோக்ஷ காரிகைக்குச் சுருக்கமாக விருத்தியுரை செய்யப்பெற்றது.

மோக்ஷகாரிகை மூலமும்
விருத்தியுரையும்
முற்றுப்பெற்றன.

சிவபெருமான் திருவடி வாழ்க.

---



உ

சிவமயம்.

ஸ்ரீசத்தியோசோதி சிவாசாரியாலியற்றப்பெற்ற

# பரமோக்ஷ நிராச காரிகைமூலமும்,

இதற்கு

ஸ்ரீ பட்டராம கண்டராலியற்றப்பெற்ற

# விருத்தியுரையும்.



(தமிழ் மொழி பெயர்ப்பு.)

இரௌரவாகமத்திலுள்ள இரண்டரைச்சூத்திரங்களை ஆதாரமாகக்கொண்டு இந்நூல் செய்யப்படுகின்றமையால் முதற்கண் அந்த இரண்டரைச் சூத்திரங்களையும் கூறுகின்றார்.

## இரௌரவ சூத்திரம்.

சாங்கியர்கள் மயக்கத்தால் எந்தக்கதியை அடைந்திருக்கின்றனரோ, வேதாந்திகள் வைதிகமான எந்தக்கதியைக் கருதுகின்றனரோ, பாஞ்சராத்திரிகளுள் சிலரும், யோகிகளான பாதஞ்சலரைச்சார்ந்தவர்களும், பரமசிவனில் நின்றும் முத்தர்களுக்குப் பெருமைகூறும் மாகேசுவரர்களும், முத்தனிடத்தில் * ஞாதிருத்தன்மை மாத்திரமன்றிக் கருத்திருத்தன்மையில்லை என்று கூறும் இருதயப்பிரமாணமுதலிய நூல்களை இயற்றியவர்களும், ஆதித்தன், அக்கினிதேவன் என்னும் இவர்களது சாமியம் முத்தியெனக்கூறும் ஆக்கினேயநூலை இயற்றியவரும், மல நிவர்த்தி மாத்திரமே மோக்ஷமென்று கூறுகின்றவர்களும், முத்தியில் சிவ

---

* ஞாதிருத்தன்மை—அறிபவனுயிருக்குந்தன்மை.

குணங்களுக்குச் † சங்கிராந்தியைக்கூறும் ¶ சிகாசங்கிராந்தி வாதிகளான பாசுபதசைவர்களும், கருத்திருத்தன்மை உடைமை யே முத்தியெனக்கூறுகின்றவர்களும், இவர்போன்ற மற்றும் அநேகமோக்ஷவாதிகளும் மலமிருப்பதுபற்றி முத்தி சித்திக்காத வர்களாய் எந்தஎந்தக்கதியைக் கூறுகின்றனரோ அவை அனைத் தும் பொருத்தமற்றவையாகு மென்பதாம்.

## நூல்.

(அவதாரிகை) இதுவரை சிஷ்யனுடைய உச்சியில்பரமசிவன் தனது வலக்கையைவைத்துப் பரிசித்தலாகிய தீக்ஷையே பிரதா னமென்று கூறிவிட்டு, இப்பொழுது தீக்ஷையின் பயனாகிய அறிவிற்கு அகச்சமயங்களிலும், புறச்சமயங்களிலும் கூறப்பட்ட அநேகமுத்திகளை அறிவித்தற்பொருட்டு "சாங்கியர்கள் மயக்கத்தால் எந்தக்கதியை அடைந்திருக்கின்ற னரோ" என்பது முதலாகத்தொடங்கப்பட்ட இரௌரவாகமத் தின் இரண்டரைச்சூத்திரங்களுக்கு அநேக காரிகைகளால் விரி வான பொருளைக் கூறத்தொடங்குகின்றார்.

## மூலம்.

(க) தீக்ஷைஎன்னும் சமஸ்காரத்திற்கு இதுவரை அநேக சாதனங்கள் கூறப்பட்டன. அந்தமேலான தீக்ஷைஎன்னும் சம ஸ்காரத்திற்குப் பயன்மேலே கூறப்படப்போகின்றமையால், இப் பொழுது வெவ்வேறு ஆகமங்களில் கூறப்பட்டிருக்கும் அந்தத் தீக்ஷையின் பயன்களைக்கூறுகின்றேன் என்பதாம்.

(உரை) தீக்ஷைஎன்னும் சமஸ்காரத்திற்குப்பரமசிவனுடைய திருக்கைமுதலிய சாதனங்கள் முன்னர்க்கூறப்பட்டன. சம்பந் தம் இன்மையையும், பிறிதொரு சாதனத்தின் சேர்க்கையையும் விலக்கி தீக்ஷை ஒன்றே மோக்ஷத்திற்கு முக்கியகாரணமாயிருத் தலால், சிறந்ததான அந்தச்சமஸ்காரத்திற்குப் பந்தங்கள் அனை

---

† சங்கிராந்தி—நன்றாய்வந்து கூடுதல். ¶ சிகாசங்கிராந்திவாதி—சிவ சங்கிராந்திவாதி.

த்தும் நீங்குமிடத்துப் பின்னர்க்கூறப்படுமாறு சிவபெருமானது குணமான சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றின் விளக்கமென்னும் பயன்விடயத்தில் வெவ்வேறு சமயங்களிலுள்ள ஆகமங்களில் கூறப்பட்ட அநேக வேறுபாடுகள் கூறப்படுகின்றன. தீக்ஷையின் பயனான மோக்ஷத்திற்கு வேற்றுமையைக் கூறியதால் உண்டாம் பயனை ஆசிரியரே பிரகரணத்தின் முடிவில் கூறுகின்றார். அஃதாவது:— ஏனையசமயங்களிலுள்ள ஆகமங்களில் கூறப்பட்ட சாதனங்களில் சிஷ்யர்களுக்குப்பிரவிருத்தி உண்டாகாதிருத்தற் பொருட்டு என்பதாம். (க)

(அ—கை.) இனி முறையாகப் புறமதமோக்ஷங்களைக்கூறுகின்றார்.

(௩) கேவலத்தன்மையே முத்தியென்பது சாங்கியர்களின் கொள்கை. சத்துவமானபிரதானத்தை அநுபவிப்பதேமுத்தியென்பது சத்துவபுத்திவாதிகளின் கொள்கை. பரமான்மாவினிடத்து ஒடுக்கமேமுத்தியென்பது வேதாந்திகளுள் சிலர் கொள்கை. விகாரத்துடன் கூடிய அவ்வியாகிருதம் முதலியவற்றில் ஒடுக்கமேமுத்தியென்பது பாஞ்சராத்திரிகளின் கொள்கை என்பதாம்.

(உரை.) ஆன்மா, கைவல்யம் என்னும் கேவலத்தன்மை அற்றிருப்பதற்குச்சத்துவகுணம், ரஜோகுணம். தமோகுணம் என்னும் முக்குணரூபமான பிரகிருதியின் சேர்க்கையே காரணம். அந்தச் சேர்க்கையை ஆன்மாவிற்கும் பிரகிருதிக்கும் உள்ள சம்பந்தமாத்திரமாகக் கொள்ளுதல் கூடாது. எதனாலெனில், ஆன்மாவும் பிரகிருதியும் வியாபகப்பொருள்களாகையால் கைவல்யாவத்தையிலும் அவ்விதசம்பந்தம் இருக்குமென்றாகி ஆன்மாவிற்குத்தனித்திருக்கும் கைவல்யாவத்தையே இல்லையென்றாகுமாகையால் என்க. இவ்வாறன்றி அநாதியே தான் போக்தா, பிரகிருதி போக்யம் என்னும் பிரகிருதி புருடவிவேக அறிவின்மையே ஆன்மாவிற்கும், பிரகிருதிக்கும் உள்ள சம்பந்தம் என்று கொள்ளுதல் வேண்டும். எதனாலெனில், விவேக அறிவின்மையே ஆன்மாவிற்குப் போக்திருத்தன்மையாகையாலென்க. இவ்வாறே பெரியோர்களும் “ ஆன்மாவிற்குப் போகமானது விவேக அறிவின்மையே”

எனக்கூறியிருக்கின்றனர். விவேக அறிவின்மை போகமாவது எவ்வாறெனில், பிரகிருதியானது தமோகுணத்தின் சாமர்த்தியத்தால் உண்டாகிய துக்கரூபங்களான அறிவின்மை, அகங்காரம் என்னும் இவை முதலிய சத்திகளின் சேர்க்கையால், தமது விகாரரூபங்களான † மகத் தத்துவம் முதலியவற்றில் இவைதள்ளத்தகுந்தனவென்னும் அறிவு ஆன்மாவிற்கு உண்டாகாதவாறு தன்னைச் சாமர்த்தியமுள்ளதாகிபோல் போக்கியப்பொருளாகக் காட்டுகின்றது எனக. இவ்வாறு கொள்ளவில்லையாயின் இந்த அறிவின்மையினும் வேறாக ஆன்மாவிற்குப் பந்தம் ஒன்றில்லாமையால் போகம் நிகழாது. அவ்வாறு போகம் இல்லையாயின் வாசனரூபமான சமஸ்காரமும் ஆன்மாவிற்கு இல்லையென்றாகும். அந்தச் சமஸ்காரமே ஆன்மாவினது கைவல்யத்திற்குத் தடையாயிருக்கின்றது. ஆன்மஞானத்தினாலாவது, யோகத்தினாலாவது பிரகாசமாயும், விடயசம்பந்தம் அற்றதாயும் இருக்கும் தான் பிரகிருதியினும் வேறு என்னும் விவேகஞானம், எப்பொழுது உண்டாகின்றதோ, அப்பொழுது அந்தவிவேக அறிவானது அவிவேக அறிவிற்கு எதிரியாயிருப்பதுபற்றி அவிவேகம் நசிக்கவே, அந்த அவிவேகரூபமான பிருகிருதியின் சேர்க்கை விவேகமுடைய புருடனுக்கு இல்லை யாகுமாகையால், எல்லாவிதத்தினாலும் அந்த ஆன்மாவைக்குறித்துப் பிரகிருதி போக்கியமாகஆகிறதில்லை. அப்பொழுது அந்த ஆன்மாவிற்கு மேலான கைவல்லியம் உண்டாகின்றது. அதுவே முத்தியெனப்படுமென்று அந்தச்சாத்திரத்தை அறிந்தநிரீசுவரசாங்கியர்கள் கூறுகின்றனர்.

இனி, சத்துவம் என்னும் பிரதானத்தை எப்பொழுதும் அநுபவிப்பதே முத்தி என்று "சத்துவ புத்தி வாதிகளின் கொள்கை" யென்பதனால் வேறு மதத்தைக் கூறுகின்றார். அஃதாவது, ஆன்மா அநாதியாகவே பிரகிருதியுடன் சேர்ந்து போக்தாவாயிருக்கின்றது என்பது அனைவராலும் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஆன்மாவிற்குப் போக்தாவாயிருக்கும் தன்மை அநாதியென்று கொள்ளாது *உபாதி சம்பந்தத்தால் நிகழ்ந்ததென்று

† மகத்ததுவமென்பது சாங்கியநூலில் புத்தியைக்குறிக்கும்.
* உபாதி—சேர்க்கை.

கொள்ளின், அது பொருந்தாது. எதனாலெனில், ஆன்மாவிற்குப் போக்திருத்தன்மையே நிகழாதாகையால் என்க. அஃதெவ்வாறெனில், பிற பொருளின் சேர்க்கையாகிய உபாதியால் நிகழ்ந்த குணமானது நித்தியமான குணத்துடன்சேர்க்கையை அடையாதாகையால் என்க. உபாதியால் நிகழ்ந்த குணமும் நித்தியமாகுமெனில், உண்மையில் ஆன்மா எக்காலத்தும் போக்தாவாகயில்லை எனப்படும். படவே, பந்த மோக்ஷங்கள் எவருக்கு நிகழ்கின்றன என்னும் வினா நிகழும். ஆகையால் ஆன்மாவிற்குப் போக்தாவாக யிருக்குந் தன்மை எக்காலத்தும் இயல்பென்றே கொள்ளல்வேண்டும். கொள்ளவே, அநாதியாயும், நித்தியப் பொருளான ஆன்மாவின் இயல்பாயும் இருக்கும் இந்தப் போக்திருத் தன்மைக்கு எக்காலத்தும் நாசம் கூடாது. நாசம் உண்டென்று கொள்ளின், கேவலனான ஆன்மாவிற்கும் நாசம் நிகழும். ஆன்மாவிற்கோ எக்காலத்தும் நாசம் கூடாது. ஆகையால் முத்தியிலும் புருடனுக்கும், பிரகிருதிக்கும் முறையே, போக்தாவாக யிருக்கும் தன்மை, போக்கியமாக யிருக்கும் தன்மை என்னும் சம்பந்தம் உண்டென்றே கொள்ளல்வேண்டும். அவ்வாறாயின், பந்த மோக்ஷங்களுக்கு வேற்றுமை என்னை எனில், அநாதியான தீய கன்மத்தால் பந்த காலத்தில் துக்கம், மோகம் என்னும் இவற்றின் கலப்பாகவுள்ள சுக ரூபமான பிரகிருதி போக்கியமாக யிருந்தது. முத்திக்காலத்தில் துக்க மோகங்களுக்குக் காரணமான அந்தத் தீய கன்மம் நாசம் அடையவே, சுத்தமாயும், இடையீடில்லாததாயும், அளவில் அடங்காததாயும், சத்துவ குண ரூபமான சுகமாயுமிருக்கும் அந்தப் பிரகிருதியே போக்கியமாகயிருக்கிறது. ஆகையால், அந்த முத்தர்கள் ‡ சத்துவ புக்குக்களாகக் கூறப்படுகின்றனர் என அவ்வாகமத்தை அறிந்தவர்களின் || கட்டுப்பாடு.

இனி, "பரமான்மாவிடத்தில் ஒடுக்கமே முத்தி என்பது சிலர் கொள்கை" என்பதனால் வேறு நூலில் கூறப்படும் முத்தி

---

‡ சத்துவபுக்கு—சத்துவத்தை அநுபவிப்பவர்.

|| சட்டுப்பாடு—இங்கு இல்லாததொன்றை இருப்பதாக நிர்ணயித்தல்.

யைக் காட்டுகின்றார். அஃதாவது, "உலகமனைத்தும் பிரம்ம சொரூபம். இதில் ஒருவிதமான வேற்றுமையும் இல்லை" என்னும் சுருதிரூபமாயும், உள்பொருளாயுள்ள பரப்பிரம்மத்தை விடயமாகக்கொண்டு பிரமாணமாயும், புருடனால் செய்யப்படாமைபற்றிப் புறச் சமயிகள் கொள்ளும் ஆகமங்களினும் சிறந்ததாயும் இருக்கும் சாத்திரத்தால் அறியப்பட்டதாயும், சாத்திரங்களில் கூறப்பட்ட பரமானந்தம் முதலிய அநேக குணங்களை வடிவமாகக்கொண்டதாயும், வேறு பிரமாணத்திற்கு விடயமாக இல்லாததாயும், பிறிதொன்றால் வியாபிக்கப்படாததாயும் உள்ள சைதன்னிய ரூபமான பிரம்மமே உண்மையாக யிருக்கின்றது. அதனினும் வேறான பேதவடிவங்கள் அனைத்தும் அஞ்ஞானத்தால் நிகழ்ந்தன. ஆகையால் அவை அசத்தியமாகும். அது பற்றியே பெரியோர்களும் அவ்வாறு கூறுகின்றனர். ஆயின், பிரம்மம் ஒன்றுதான் உள்ளது என்னும் அறிவு பேதப்பொருள்களின் இருப்பிற்குப் பிரமாணமான பிரத்தியக்ஷத்தோடு முரண்படுதலால், "அக்கினியினால் ஸ்நானம் செய்கின்றான்" என்பது போலப் பிரமாணம் ஆகாதென்று கூறுதல் பொருந்தாது. எதனால் எனில், வேற்றுமை அறிவானது ஒரு பொருளினிடத்தில் பிறிதொரு பொருளினது தன்மை இன்மையின் நிச்சயமின்றி நிகழாது. (நீரினிடத்தில் மண்ணின் தன்மை இல்லை என்னும் நிச்சயமின்றி நீர் மண்ணாகாது என்னும் வேற்றுமை அறிவு நிகழாது.) ஆகவே பொருளை மாத்திரம் அறியும் பிரத்தியக்ஷத்தால் பொருளின் வேற்றுமை அறியப்படாதாகையால் என்க. ஆதலால் வேற்றுமை அறிவானது முயற்கொம்புபோல் அஞ்ஞான மாத்திரத்தால் கற்பிக்கப்பட்டு அசத்தியமேயாகும். இவ்வாறே பெரியோர்களும் பிரத்தியக்ஷமானது இது இன்னதாகுமென்று விதிக்குமே அன்றி இன்னதாகாதென ஒன்றையும் விலக்குகின்றதில்லை என்று கூறியிருக்கின்றனர்.

இவ்வாறாகவே, வேறு பிரமாணத்தைத் துணைக்கொள்ளாது தானே பிரமாணமாய்ச் சித்தித்தாயும், முன்னர்க்கூறியவாறு உண்மைப் பொருளாயுமிருக்கும் பரமான்மாவின் அம்சமாகச் சீவன்மா இருந்தும், அஞ்ஞானத்தால் கலக்கப்பட்டு மயக்க

முடையவனாக யிருத்தலால், உறங்குகின்ற புருடர்களுக்குச் சாதாரணமானகனவினுடைய அறிவுதொழில்கள் போல் உண்மை அறிவு உண்டாகாமை காரணமாகத் தோன்றுகின்ற சம்சாரம் என்னும் பெயருடைய வேற்றுமையாய்க் காணப்படும் உலக மானது இயல்பாகவே நீடித்ததாயிருக்கின்றது. "ஆன்மாவை அறிய வேண்டும்." என்னும் சாத்திரங்களில் கூறிய முறைப்படி சிறந்ததான உண்மை அறிவு ஒரு சமயம் ஆன்மாவிற்கு நிகழ்ந் தால், அப்பொழுது, அவ்வறிவிற்கு எதிரியாயும், மயக்கத்திற்குக் காரணமாயுமிருக்கும் அஞ்ஞானம் வேருடன் அறுக்கப்பட்டு அதனால் எல்லா மயக்கங்களும் நீங்கப்பெற்ற ஜீவான்மாவிற்கு, உறங்கி விழித்த புருடனுக்குப்போல் தனது உண்மையான சொரூப மாத்திரத்தின் நிலேருபமாகிய பரமான்ம அறிவானது விளங்குகின்றது. அப்பொழுது முன்னேய ஜீவ வடிவம் பரமான்ம வடிவத்தில் ஒடுக்கம் அடைகின்றது. இதுவே முத்தியாகுமெனச் சிலர் இறுமாப்படைகின்றனர்.

இவ்விடத்தில், ரௌரவ விருத்தியை இயற்றிய சத்தியோ சோதி சிவாசாரியரே இப்பிரகரணத்தையும் இயற்றியவராகலின் அவர் பிரம்மத்தின் பரிணமமே உலகம் எனக் கூறும் பரிணம வேதாந்தத்தை விலக்க எண்ணினரேயன்றி மாயாவாத வேதாந்த த்தைவிலக்க முன்வந்தவரில்லே. எதனாலெனில், பின்னர்"பரமான் மாவே முதற்காரணம்" என்று தொடக்கங் கொண்ட சமாதானக் கிரந்தத்தால் கூறப்பட்ட குற்றத்திற்குப் பரிணமவேதாந்தமே பற்றுக்கோடாயிருத்தலால் என்க. அஃதுண்மையே. மேலே கூறப்படுகின்ற சமாதானத்திற்குப்பரிணம வேதாந்தந்தான் பொருத்தமுடையதாயிருக்கின்றது. ஆயினும், இந்தப் பரிணம வாதமானது சிறந்த சில வேதாந்திகளால் கூறப்படவில்லே. இந்த மதத்திற்கு மறைகளும் பொருந்தவில்லே. இது பின்னர்க்கூறப் படும் குற்றத்திற்கு எவ்வாறு விடயமாகுமென்பதை இந் நூலில் கூறப்போகின்றேம்.

இனி, அவ்வியாகிருதம் முதலியவற்றில் ஒடுக்கமே முத்தி என்பதுபாஞ்ச ராத்திரிகளின் கொள்கை என்பதனால் பிறிதொரு

ஆகமத்திற் கூறப்படும் முத்தியைக் காட்டுகின்றார். அது வருமாறு:—அணுக்களான ஜீவர்கள் கன்மங்களோடு கூட எதனிடத்தில் நிலைத்திருக்கின்றனவோ அது அவ்வியாகிருதம் எனக் கூறப்படுகின்றது. இவ்விடயத்தில் சிலர் கூறுவதாவது—மண்ணால் சம்பந்திக்கப்பட்ட கடம் முதலியவை மண்ணின் காரியமாகக் காணப்படுமாறு போல, சுக முதலியவற்றால் சம்பந்திக்கப்பட்ட * காரியாகாரணங்களிலும் சுகதுக்க முதலிய ரூபமான பிரதானத்தின் காரியமாயிருக்கும் தன்மை கொள்ளப்பட்டிருக்கின்றது. அவ்வாறே புருடனுக்கும், பிரதானத்திற்கும் வேற்றுமையிருப்பினும் ஒரே தன்மையான சத்துப்பொருளின் தொடர்ச்சி இருப்பதுபற்றி அவற்றிற்குச் சத்துப்பொருளின் காரியமாயிருக்குந்தன்மை உண்டென்பது கொள்ளத்தக்கது. ஆனால் சுகதுக்கங்களின் சம்பந்தம் காரிய காரணங்களுக்கு இருத்தலால் அவை சுகதுக்க ரூபமான பிரதானத்தின் காரியங்களே ஆகும். அதுபோலப்புருடனும், பிரதானமும் சத்துப்பொருளின் காரியம் என்று கொள்ளுதல் பொருந்தாதெனின், காரியகாரணங்களாகிய உவமானத்திற்கும் புருடன் பிரதானம் என்னும் உவமேயத்திற்கும் பிறிதொன்றன் தொடர்ச்சிஇருப்பதென்னும் விடயத்தில் ஒருவித வேற்றுமையும் இல்லாமையால் பொருந்தும் என்க. ஆகவே புருடன், பிரதானம் என்னும் இவற்றிற்குக் காரணமான யாதொரு சத்துப்பொருள் உண்டோ அதுவே மகாவிபூதி என்னும் பெயருடைய பரப்பிரகிருதியாகும்.

இந்தப்பரப்பிரகிருதி சடப்பொருளுக்குக் காரணமாயிருத்தலால் இதுவும் சடப்பொருளாகும். இதுவே ஈசுவர வருக்கத்தில் சேர்ந்த வாசுதேவன், அநிருத்தன், பிரத்யும்நன், சங்கர்ஷணன் என்னும் நான்குவிதமாயும், ஈசுவரத்தன்மையில்லாத க்ஷேத்ரக்ஞன் என்னும் சிவரூபமாயும், சடமான அவித்யா ரூபமாயும் நேரே பரிணமிக்கின்றது. அந்த அவித்தையானது புத்தி,

---

* காரியம்—பூதங்கள் தன்மாத்திரைகளாலாகிய உடம்பு. கரணம்—இந்திரியங்கள்.

மனம் என்னும் இவற்றின் ரூபமாயும், பூதங்களின் சூக்கு நிலையாகிய தன்மாத்திரைகளாயும், தூல நிலையாகிய பஞ்ச பூதங்களாயும் பரிணமிக்கின்றது. பூதங்கள், இந்திரிய ரூபங்களாகப் பரிணமிக்கின்றன. இவ்வாறு நேராகவும், முறையாகவும் அந்தப் பிரகிருதியே பரிணமிக்கின்றமையால் அது பரப்பிரகிருதி எனப் படுகின்றது. இவ்வாறே "வாசுதேவனை பகவான் பரப்பிரகிருதி என்றும், மகாவிபூதி என்றும் கூறப்படுகின்றான். அந்தப் பரப்பிரகிருதியில் அணுக்களான ஆன்மாக்கள் அதன் காரியமாகவும், * அவ்வியாபக வியாபகமாயும் இருக்கின்றன." என்று பெரியோர்களும் கூறுகின்றனர். விகாரமடைதல் என்னும் குணமுடைய அந்தப்பரப்பிரகிருதியாகிய முதற்காரணத்திலிருந்தே அவித்தை, கன்மம் என்னும் இவற்றின் சேர்க்கையால் சீவான்மாக்கள் தோன்றுகின்றன. அவித்தை கன்மங்களின் நாசத்தால் காரிய வேற்றுமை இல்லாத அந்தப் பரமகாரணமான பரப்பிரகிருதியில் ஒடுக்கமே ஆன்மாக்களுக்கு மோக்ஷம் எனச் சிலருடைய கெட்ட கொள்கை.

அவ்வியாகிருதம் முதலியவற்றில் என்னும் தொடரில் உள்ள முதலிய என்னும் சொல்லால் பரப்பிரகிருதியில் ஒடுக்கத்தைக் கூறுகின்றவருக்குக் கீழுள்ளவர்களாயும், அகங்காரம் முதலிய தத்துவங்களில் ஒடுக்கமே முத்தி எனக்கூறுகின்றவர்களாயும் உள்ள தௌட்டிகர்கள் என்னுந் தன்னைப்புகழ்பவர் கொள்ளப் படுகின்றனர். இவ்வாறே வேறு நூல்களிலும் * ஆத்தியாத்மிகங்களான துஷ்டிகள் பிரகிருதி, உபாதானம், காலம், பாக்கியம் என நான்கென்றும், வெளியிலுள்ள விடயங்களின் நாசத்தால் விளைந்த துஷ்டிகள் சம்பாதனம், காத்தல், நாசம், போகம், இம்சை என்னும் ஐந்தின் குற்றத்தை உணர்ந்து அதனால் உண்டானவையாயும், ஐந்துவிதங்களாயும், விடயங்களைவிட்டு நீங்கின

* அவ்வியாபகமென்பதுதான் பாஞ்ச ராத்திரி மதத்திற்குப்பொருந்தும். கிடைத்த பிரதியிலிருந்தவாறு அவ்வியாபக வியாபகமென அச்சிட்டிருக்கின்றது.

* ஆத்தியாத்மிகம்—அகத்திலுள்ள புத்திசம்பந்தம்.

வையாயும் உள்ள துஷ்டிகள்ஐந்தென்றும், ஆகத் *துஷ்டிகள் ஒன்ப தாகின்றனவென்று கூறப்பட்டிருக்கின்றமை காண்க. (உ)

(௩) பரமசிவனுடைய பிரமத கணங்களுள் முதன்மையா யிருத்தல் முத்தியென்பது சிலர் கொள்கை. முத்திக்காலத்தில் ஆன்மா கருத்திருத்தன்மையின்றிச் சருவஞ்ஞத் தன்மை மாத்தி ரம் உடையவனாயிருக்கின்றானென்பது சிலர் கொள்கை. முத் திக்காலத்தில் ஆன்மாவிற்குக் கருத்திருத்தன்மையிருப்பினும், பரமசிவனால் ஏவப்படுபவனாகவே யிருக்கின்றானென்பது சிலர் கொள்கை. பிரகாசங்களுக்கு இருப்பிடமான சூரியன், அக்கினி என்னும் இவர்களுடைய சாமீபமே முத்தியென்பது சிலர் கொள்கை என்பதாம்.

(உரை) பரமசிவனுடைய பிரமத கணங்களுள் முதன்மை யாயிருத்தல் என்பதனால் வேறு மதத்தைக் கூறுகின்றார். அதா வது—சாலோக்கியம், சாமீப்பியம் முதலியவற்றை அடைதலே முத்தி என்பதாம். சாலோக்கியமாவது, பரமசிவனுடைய உல கமாகிய கைலாயத்தில் இருத்தல். சாமீப்பியமாவது, பரமசிவ னுடைய சமீபத்தில் இருத்தல். பௌட்காத்திலும் "சிவதீக்ஷை அல்லாத ஏனைய தீக்ஷைகளால் மோக்ஷம் அடையப்படமாட் டாது ; அந்தத் தீக்ஷைகளால் கணங்களுக்குப் பதியாயிருக்கும் தன்மை ரூபமான பதந்தான் அடையப்படு"மெனக் கூறப்பட்டி ருக்கின்றமை காண்க. இந்த மதமே இரௌரவ சூத்திரக்கார ரால் "யோகி" என்னும் சொல்லால் அறிவிக்கப்பட்டது.

முத்திக்காலத்தில் ஆன்மா கருத்திருத்தன்மை யின்றிச் சரு வஞ்ஞத்தன்மை மாத்திரம் உடையவனாயிருக்கின்றான் என்பத னால் பிறிதொரு மதத்தின் முத்தியைக் கூறுகின்றார். அதாவது:—

---

*துஷ்டி—அகங் கரித்தல். போககாரிகை, சுக-வது சுலோகம் பார்க்க.

சரீரம், இந்திரியம், புவனம் முதலிய காரியங்களின் தோற்றம் காணப்படுதலால் அந்தத் தோற்றத்திற்குக் கருத்தாவாகப் பரமசிவனைக்கொள்ளவில்லையாயின் அந்தத் தோற்றம் பொருத்தம் அடைகின்றதில்லை என்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தால், பரமசிவனுக்குக் கருத்திருத்தன்மை கொள்ளப்பட்டது. இவ்வாறாகவே, முத்தனைக் கருத்தாவாகக் கொள்ளாமைபற்றி ஒரு விதமான குற்றமும் நிகழ்கிறதில்லை. ஆகையால் முத்தான்மாவினிடத்துக் கருத்திருத்தன்மை கிடையாது. ஆனால் ஈசுவரனைப்போல் முத்தனுயிருத்தலால் அந்த முத்தனிடத்தும் கருத்திருத்தன்மை கொள்ளவேண்டுமெனில், அது பொருந்தாது; ஈசுவரனிடத்தில் முத்தத்தன்மையே இல்லாமையால் ஈசுவரனைப்போல் முத்தனுயிருத்தலால் என்னும் திருட்டாந்தம் பொருத்தமற்றதாகையால் என்க. பந்தமுடையவனுக்குத்தான் முக்தியேயன்றிப் பந்தமற்ற பரமசிவனுக்கு முத்தியில்லை. ஆகையால் பரமசிவனுக்கும் முத்தனுக்கும் மிகவும் வேற்றுமை இருக்கின்றது. வியாசாக்ஷிணி என்னும் நூலில் அவதூதர் என்னும் பெரியோரும், "பரமசிவன், முத்தர்கள் விடயத்தில் அதிகாரம் ஒழிந்தவனுயிருந்தும், மற்றவர்கள் விடயத்தில் ஒழியாத அதிகாரத்தை உடையவனுயிருக்கின்றான். முத்தனோவெனில், எக்காலத்தும் அதிகாரம் அற்றவனாகவே யிருக்கின்றான்" எனக் கூறியிருக்கின்றமை காண்க. சம்சார நிலையிலும், புருடனுக்குக் கருத்திருத்தன்மை கிடையாது. அந்த நிலையில், சாங்கியர் கூறியவாறுபோல் பிரகிருதிக்கே கருத்திருத்தன்மை உள்ளது. ஆகவே, முத்தியில் கருத்திருத்தன்மை இருக்கின்றதென்னும் விடயத்தில் பிரமாணமின்மையால் கருத்திருத்தன்மை இல்லை என்றே கொள்ளல் வேண்டும். அறிவோவெனில், புருடனுக்கு இயல்பாகவே உள்ளது. அந்த அறிவானது முத்தி நிலையில் மறைப்பு நீங்கினமையால் எல்லாப்பொருள்களையும் விடயமாகக்கொள்கின்றது. ஆகையால் முத்தி நிலையில் ஆன்மாவிற்குச் சருவஞ்ஞத்தன்மை மாத்திரமேயன்றிக் கருத்திருத்தன்மை

இல்லை எனச் சிலர் கூறுகின்றனர் என்க. இம்மதத்தினரே இரௌரவ ருத்திரக் காரரால் இருதயப்பிரமாணம் முதலிய நூல் களை இயற்றியவர் என்னும் சொல்லால் கூறப்பட்டனர்.

ஆன்மாவிற்கு முத்திக் காலத்தில் கருத்திருத்தன்மை இருப் பினும் அவன் பரமசிவனால் ஏவப்படுபவனாக யிருக்கின்றான். என் பதனால் மற்றொரு மதத்தைக் கூறுகின்றார். அதாவது:- ‖ஞாதி ருத்தன்மைபோல் கருத்திருத்தன்மையும் ஆன்மாவினுடைய இயல்பேயன்றிப் பிரகிருதிக்குக் கருத்திருத்தன்மை இயல் பாகாது; பிரகிருதியினிடத்துக் காரணத்தன்மை இருத்தலால் என்க. உலகத்தில் காரணத்தன்மை வேறு; கருத்திருத்தன்மை வேறு. காரணத்தன்மையாவது, சடப் பொருள்களிடத்தில் தனது சொரூபம் நசித்துப் பிறபொருளாகப் பரிணமித்தல் ரூப மாயுள்ளது. ஆகையால் பரிணாமம் உடைமையும்,காரணத்தன்மை உடைமையும் விட்டுப்பிரியாமல் இருக்கின்றன. இவ்வாறே பால் தயிராதல் முதலிய பரிணாமம் உடைய சடப்பொருள்களில், கார ணத்தன்மை பிரத்தியக்ஷத்தால் நிச்சயிக்கப் பட்டிருக்கின்றது. இவ்விதமான காரணத்தன்மையினின்றும் கருத்திருத்திருத்த ன்மை என்பது வேறாயிருக்கின்றது. அதாவது:- விரும்பப்படும் பயனை அடைவதிலும், விரும்பப்படாத பயனை விலக்குவதிலும் ஆசை உடைமையால், தன்னினும் † வேறான காரகங்களைத் தொழிற்படச்செய்வதிலும், தொழிற்படச் செய்யாதிருத்தலி லும் சுதந்திரமாயிருத்தலாகும்.

அந்தக் கருத்திருத்தன்மை முத்திநிலையில் சிவத்தன்மை யுடன் விட்டுப்பிரியாது உடனிகழ்ச்சி உடையதாய் சுயம் பிரகாச மாய்ச் சித்தித்ததாகும். இவ்வாறே மந்திரவார்த்திகம் என்னும் நூலில் நாம் கூறி யிருக்கின்றோம். தத்துவ சங்கிரகம் முதலிய நூல்களில் விருத்தி காரரான சத்தியோ ஜோதி சிவாசாரியரும் ஆன்மாக்களுக்குக் கருத்திருத்தன்மையை அநுமானத்தால் சாதி

‖ ஞாதிருத்தன்மை—அறிபவனாயிருக்கும் தன்மை.

† வேறானகாரகம்—காரணரூபமான சரீரமுதலியவை.

த்திருக்கின்றார். ஆனால் ஆன்மாக்களுக்குக் கருத்திருத்தன்மை இருப்பினும், ஸ்பந்தரூபமாயிருப்பது பற்றிப் பரிணாமம் உடைமை நிகழுமேயெனில், நிகழாது; கருத்திருத்தன்மையை ஸ்பந்தரூபமாய்க் கொள்ளவில்லை யாகையால் என்க. ஸ்பந்தம் என்பது கிரியை ஆகும். கருத்தாவினிடம் இருக்கும் கருத்திருத்தன்மை கிரியை ரூபமாயில்லை. கிரியாரூபமாய்க் கருத்தன்மையைக் கொண்டால், அந்தக்கிரியை வேறு கருத்தாவின்றி நிகழாதாகையால் அதன் நிகழ்ச்சிக்கு ஒரு கருத்தா வேண்டப்பட்டு அந்தக் கருத்தாவினிடம் இருக்கும் கருத்திருத்தன்மையையும் கிரியாரூபமாய்க்கொண்டு அதற்கும் வேறு கருத்தா வேண்டப்பட்டு இவ்வாறே வரம்பின்றி ஓடல் என்னும் அநவத்தையாகிய குற்றம் நிகழும், ஆகையால் கிரியையை நிகழ்ச்சிசெய்யும் தன்மைதான் கருத்திருத்தன்மையாகும். எதனாலெனில், கருத்தாவினுடைய சத்தியினாற்றான் காரிய காரணங்களான சரீரேந்திரியங்களுக்கு ஸ்பந்தரூபமான கிரியை காணப்படுகின்றமையால் என்க. ஆகையால் சடத்தன்மையை விட்டுப்பிரியாத கிரியை ரூபமான ஸ்பந்தமானது சைதன்னியத்தன்மையோடு விட்டுப்பிரியாத கருத்திருத்தன்மையை உடைய கருத்தாவினிடத்தில் இருக்கும் என்பது எவ்வாறு பொருந்தும் (பொருந்தாதென்க)

"* காரகத்தன்மையை ஸ்பந்த ரூபமாய்க்கொள்ளுதல் கூடாது. சிறந்த சத்தியின் சேர்க்கையே காரகத்தன்மையாகும்" என்று நம்மால் சடஸ்பந்தக் கிரியை என்னும் நூலில் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் ஆன்மாவினுடைய யாதொரு சத்தியிருக்கின்றதோ அந்தச் சத்தியே கருத்திருத்தன்மை யாகும். இரும்பை அசையச் செய்யும் காந்தத்திலிருக்கும் சத்திரூபமான கருத்திருத் தன்மைபோலும் என்க. இவ்வாறான கருத்திருத்தன்மை ஆன்மாக்களுக்கு அனாதியே சித்தித்திருக்கின்றது. ஆனால் இந்தக் கருத்திருத்தன்மை பரமசிவனுக்குள் அடங்கியதாய் அவனால் ஏவப்படுந் தகுதியுடையதாயிருக்கின்றது. அனாதியாயுள்ள பொருள்கள் நாசம் அடையா. ஆகையால் முத்தனு

* காரகத்தன்மை—கிரியையைச் செய்யுந்தன்மை.

யிருக்கும் சிவசொரூபமான ஆன்மாக்கள் சர்வஞ்ஞர்களாயும், சர்வகர்த்தாக்களாயும், பரமசிவனால் ஏவப்படும் தகுதியுடையவர்களாயும் இருக்கின்றனர் என்று சிலர் கூறுகின்றனர்.

பிரகாசங்களுக்கு இருப்பிடமான சூரியன், அக்கினி என்னும் இவர்களுடைய சாமியமே முத்தியென்பது சிலர் கொள்கை என்பதனால் வேறொருமதத்தின் முத்தியைக் கூறுகின்றார். சூரியன், அக்கினி என்னும் இவர்களுடைய சாமியமே முத்தி என்பது சௌரதந்திரம் முதலிய கிரந்தங்களிலும், மகோபநிடதம் முதலிய கிரந்தங்களிலும் கேட்கப்படுகின்றது. இம்மதம் இரௌரவ சூத்திரத்தில் ஆக்கினேயக் கிரந்தத்தை இயற்றியவர்கள் என்னும் சொல்லால் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. (௩)

(௪) ஆன்மா முத்தியில் பரமசிவனில் நின்றும் சிறந்த தன்மையை உடையவனாய் இருக்கின்றான். ஆகையால் பரமசிவனில் நின்றும் சிறந்த தன்மையே முத்தியென்பது சிலர் கொள்கை. மலநாசம்மாத்திரமே முத்தியெனபது சிலர் கொள்கை. சித்தனை புருடனே உலக கர்த்தாவாய் இருக்கின்றான்; மகேசுவரர் உதாசீனராயிருக்கின்றார் என்பது சிலர் கொள்கை. என்பதாம்.

(உரை) முத்தியில் ஆன்மா பரமசிவனில் நின்றும் சிறந்த தன்மையை உடையவனாய் இருக்கின்றான் என்னும் தொடக்கத்தால் வேறொருமதத்தின் முத்தியைக் கூறுகின்றார். அது வருமாறு:—பரமேசுவரனுக்கு இலயம், போகம், அதிகாரம் என்னும் இவையிருத்தல்பற்றி அதிகாரமலம் முதலியவற்றின் சேர்க்கையால் பசுத்தன்மை நீங்கவில்லை. பெரியோர்களும், அநுக்கிரகம், திரோபவம் என்னும் இரண்டு பாசங்கள் சதாசிவனிடத்தில் இருக்கின்றனவென்றும், முதலாவதானபசு சதாசிவன் என்றும் கூறியிருக்கின்றனர். ஆகையால் அந்தப் பரமசிவனுக்கு, இலயபோகாதிகார காசத்தை உடையவனும், அதுபற்றியே சகல பாசங்களும் ஒழிக்கவனும் ஒருவிதத்தாலும்பாதிச் சேர்க்கையற்றவனுமாயிருக்கும் முத்தான்மாவினின்றும் குறைந்திருக்கும் [illegible] படையாயிருக்கின்றது. ஆகையால் முத்தியிடத்தில் பரமசிவனில் நின்றும் சிறந்த தன்மை இருக்கின்றதென்பது சிலர் கொள்கை.

வேறு சிலர் இதுகாறும் கூறியவாற்றல் பாதஞ்சலர்களின் முத்தி அறிவிக்கப்பட்டதென்று கூறுகின்றனர். முன்னர் கேவலத்தன்மையே முத்தி என்னும் சொல்லால் சாங்கியமதம் அறிவிக்கப்பட்டவாறுபோல், பாதஞ்சலர் மதமும் அறிவிக்கப்பட்டதாகையால், பின்னரும் அந்தப் பாதஞ்சலர் மதத்தைக் கூறின் கூறியது கூறல் என்னும் குற்றத்தை நீக்கமுடியாததாகும் என்க. எதனால் எனில், சாங்கிய மதத்திலும், பாதஞ்சலர் மதத்திலும் பிரகிருதியுடன் சேர்க்கையின்மையே முத்திரூபம் ஆதலால், முத்திநிலையில் வேற்றுமை கிடையாதாதலின் என்க. இதுபற்றியே சாங்கியமும், யோகமும் ஒன்றென்று பெரியோர் கூறுகின்றனர். ஆனால், பாதஞ்சலர்களுக்கும், சாங்கியர்களுக்கும் உள்ள வேற்றுமை சாதனத்திற்றான் இருக்கின்றது. சாங்கியர் கூறுகின்ற முத்திக்குச் சாதனம் விவேகஞானமாகும். பாதஞ்சலர் கூறுகின்ற முத்திக்குச் சாதனம் யோகப்பயிற்சியாகும். மிக விரிந்தமையால் இம்மட்டில் நிற்க. இவ்வாறு சிறந்ததன்மை ரூபமான முத்தியே இரௌரவசூத்திரத்தில் "மகேசுவரர்களும்" என்னும் சொல்லால் குறிக்கப்பட்டிருக்கின்றது.

மலநாசமாத்திரமே முத்தியென்பது சிலர் கொள்கை என்றதனால், வேறொரு மதத்தின் முத்தியைக் கூறுகின்றார். அது வருமாறு:—மலநாசம் மாத்திரம் முத்தியேயன்றி மலநாசத்தால் நிகழ்ந்த சருவஞ்ஞத்தன்மை முதலியவற்றின் விளக்கம் முத்தியாகாது; முத்திக்கு முன் சர்வஞ்ஞத்தன்மை முதலியன விளக்கமில்லாதனவாய் ஆன்மாவினிடத்தில் இருந்தனவென்பதற்குப் பிரமாணமில்லை யாகையாலென்க. இருக்கின்ற பொருள் விளக்கமின்றி யிராது என்பது கருத்து.

முத்தனே உலகத்துக்குக் கருத்தாவாயிருக்கின்றான் என்னும் தொடக்கத்தால் மற்றொரு மதத்தின் முத்தியைக் கூறுகின்றார். இம்மதமே இரௌரவ சூத்திரத்தில் "கருத்திருத்தன்மையேமுத்தி எனக் கூறுகின்றவர்களும்" என்னும் சொல்லால் குறிக்கப்பட்டிருக்கின்றது. அது வருமாறு:—ஆன்மாக்களுக்கு அநுக்கிரகம் செய்தற்பொருட்டுப் பரமேசுவரன் உலகத்தைத் தோற்று

விக்கத் தொடங்கும்பொழுது, எல்லாவற்றிற்கும் கருத்தாவா யிருக்கும் தன்மை என்னும் பதத்தைப் பெற்றவனையும், தனக்குச் சமானனையும் இருக்கும் முத்தனைப்பார்த்து, தன்னிடத்திருக்கும் கருத்திருத்தன்மை வேற்றுமையடைந்து அவனிடத்திருக்கின்றமையால் அந்தக் கருத்திருத்தன்மை அநேகமாயிருக்கின்றது; கருத்தாக்களும் அநேகர்களாயிருக்கின்றனர்; ஆகையால் காரியங்கள் அனைத்திற்கும் ஒருவித நியமமின்மை என்னும் குற்றம் நிகழும்; நிகழவே, ஆன்மாக்களுக்கு அநுக்கிரகம் செய்தற்பொருட்டு உலகத்தைத் தோற்றுவிக்க முயன்ற நமக்கு அவ்வெண்ணம் பயன்பெறாது என்று கருதி தான் கருத்திருத்தன்மையினின்றும் நீங்கி * உதாசீனனாய் இருக்கின்றான். முத்தனுக்குப் பிற ஆன்மாக்களின் பொருட்டு உலகத்தைத் தோற்றுவிப்பதில் ஆசையில்லாவிடினும், பரமேசுவரனுடைய ஆணையை நாம் தள்ளக்கூடாதென்றெண்ணி, அனைவருக்கும் அநுக்கிரகரூபமான பயனை அளிக்கவேண்டுமாயின், அனைவருக்கும் கருத்தாவாயிருத்தல் அவசியம் வேண்டுமெனக் கருணையுடன் அனைவருக்கும் கருத்தாவாயிருக்கும் தன்மை ரூபமான பதத்தை ஏற்றுக்கொள்ளுகின்றான். இவ்வாறு பிரவாக நித்தியேசுவர வாதிகள் கூறுகின்றனர். (௪)

(௫) சிறந்த சரீர இந்திரியங்களுடன் கூடி நக்ஷத்திர புவனத்தில் இருப்பதே முத்தியென்பது சிலர் கொள்கை. ஞானம், கருத்திருத்தன்மை என்னும் இவற்றின் நாசமே முத்தியென்பது சிலர் கொள்கை. அனைத்தும் நாசமாதலே முத்தியென்பது சிலர் கொள்கை என்பதாம்.

(உரை) சிறந்த சரீர இந்திரியங்களுடன் கூடி நக்ஷத்திர புவனத்திலிருப்பதே முத்தியென்பதனால் பிறிதொரு மதத்தின் முத்தியைக் கூறுகின்றார். அது வருமாறு:—புருடன் சரீர இந்திரியங்களுடன் அநாதியே சேர்ந்தவனாய் சம்சாரத்தை அநுபவிக்கின்றான். அநாதியான பொருளுக்கு நாசம் பொருந்தாதாகையாலும், முத்தியில் சரீர இந்திரியங்கள் இல்லை என்பதற்

* உதாசீனம்—விருப்பு வெறுப்பின்மை.

குப் பிரமாணமின்மையாலும், சம்சார நிலையில் கன்மங்காரணமாய் உண்டான துக்கத்தைத் தரக்கூடியதாய்க் காணப்பட்ட சரீரேந்திரியங்கள் நீங்கும் காலத்துச் சிறந்ததாயும், சுகத்தைத்தரக் கூடியதாயும் இருக்கும் சரீரேந்திரியங்களைப் பற்றி நக்ஷத்திர மார்க்கத்தில் இருப்பதே ஆன்மாக்களுக்கு முத்தி யென்பது சிலர்களின் கெட்ட கொள்கையாம்.

ஞானம், கருத்திருத்தன்மை என்னும் இவற்றின் நாசமே முத்தி என்பது சிலர் கொள்கை என்பதனால் வேறொரு மதத்தின் முத்தியைக் கூறுகின்றார். அது வருமாறு:—முத்தியில் ஞானம் இல்லாமையால் அந்த ஞானத்தைத் தொடர்ந்த இச்சை, முயற்சிகளும் இல்லாதனவாகும். ஆகையால் இவற்றால் உண்டாகக்கூடிய கருத்திருத்தன்மை நசிக்கின்றது. ஆன்மாவின் குணங்கள் ஒன்பதும் இருப்பின் ஞானம் இருக்குமேயன்றித் தனியாக ஞானமிருப்பதில்லை. இவ்வாறே பெரியோர்களும் "ஞானம், சுகம், துக்கம், விருப்பு, வெறுப்பு, முயற்சி, சமஸ்காரம் என்னும் வாசனை, தருமம், அதருமம் என்னும் ஒன்பது குணங்களும் அறவே நீங்குதல் முத்தி" எனக் கூறியிருக்கின்றனர்." இவ்வாறு சிலர் கூறுகின்றனர்.

அனைத்தும் நாசமாதலே முத்தி என்பதனால், மற்றொரு மதத்தின் முத்தியைக் கூறுகின்றார். அது வருமாறு:—அறிவு, அறிபவன் ரூபமாயிருக்கின்றது. அறிபவனேனெனில், அறியப்படும் பொருள்களின் துணையின்றி அறிகின்றானில்லை. அறியப்படும் பொருள்களோவெனில், சிறுமை, பெருமை முதலிய வேற்றுமைகளால் எக்காலத்தும் ஒரு ரூபமாய் இருப்பவை இல்லை. ஆகையால், அவற்றைத் துணையாகக் கொண்ட அறிபவன் ரூபமான அறிவும் மயக்க அறிவாகும். இந்த அறிவு மயக்கத்தைக் கெடுக்கும் அறிவால் நசிக்கின்றது. ஆகவே, ஆன்ம ரூபமான அறிவே நசிக்கின்றமையால் அனைத்தும் நாசமாதலே முத்தியெனச் சிலர் கூறுகின்றனர். இவர்களே தீபம் போல் பிரகாசிக்கும் ஆன்மாவிற்கு நாசம் கூறுகின்றமைபற்றிப் பிரதீப நிர்வாண வாதிகள் எனப்படுவர்.

வேறு சிலர், பூமி முதலிய பூதங்களினுற்றான் அறிவு உண்டாகின்றது; பூதங்கள் நசிக்கும் காலத்து அவற்றைத் தொடர்ந்து அறிவும் நசிக்கின்றது. ஆகையால், சரீரத்தின் நாசத்தால் ஆன்மாவும் நாசமாகும் என மூடத்தன்மையால் கூறுகின்றனர். (௫)

(அ—கை) இவ்வாறு வெவ்வேறு ஆகமங்களிற் கூறப்பட்ட முத்திகளைக் காட்டிவிட்டு இனி அவற்றைக் கூட்டி முடிக்கின்றார்.

(கூ) மோகத்தால் மூடர்களான சில வாதிகளால், தங்கள் தங்கள் கொள்கையின்படி முத்தியானது கற்பனை செய்யப்பட்டிருக்கின்றது. உண்மைப்பொருளான பரமசிவனுடைய சாமிய ரூபமான முத்தியானது அவர்களால் அறியப்படவேயில்லை என்பதாம்.

(உரை) அஞ்ஞானத்தால் மூடப்பட்ட அறிவென்னும் கண்களையுடைய அந்தந்த வாதிகளால் பதிசாத்திரம் ஒன்றினுல் மாத்திரம் அறியத்தகுந்த உண்மைப் பொருளான பரமசிவனது சாமிய ரூபமான முத்தி என்னும் பயன் அறியப்படவில்லை. ஆகையால், அவர்களால் மேலே கூறப்பட்டவாறு போலி முத்திகள், தங்கள் தங்கள் கற்பனைகளால் கற்பிக்கப்பட்டவையாகும். (௬)

(அ—கை) இனி சமானதாந்திரிகர்கள் (சித்தாந்த பிரமாணமாகக் கொண்ட ஆகமங்களையே பிரமாணமாகக்கொண்டு, அதன் பொருளை விபரீதமாகக் கொண்டவர்கள்) கொள்ளும் முத்தியைக் கூறுகின்றார்.

(எ) சர்வஞ்ஞத்தன்மை முதலிய குணங்களின் விளக்க ரூபமான சாமியமே, சர்வஞ்ஞத்தன்மையின் உற்பத்தி சங்கிராந்தி சமாவேசம் என்னும் இம்மூன்று பக்கங்களினும் சிறந்ததாகக் கூறப்பட்டிருக்கின்றது. அது புத்திக்கும், வாக்குக்கும் விடயமாகாதது என்பதாம்.

(உரை) சர்வஞ்ஞத்தன்மை முதலிய குணங்களின் விளக்க ரூபமான பரமேசுவர சாமியானது, சர்வஞ்ஞத்தன்மை முதலிய வற்றின் உற்பத்தி, அவற்றின் சங்கிராந்தி, அவற்றின் சமாவேசம், என்னும் இவற்றினும் சிறந்ததாகக் கூறப்பட்டிருக்கின்றது. எவ்வாறெனில், பசுநிலையில் சர்வஞ்ஞத்தன்மை முதலிய குணங்களின்மையால், முத்தியில் பரமசிவசாமியத்தைக் கூறும் சுருதியானது, பசுவாகிய ஆன்மாவினிடத்துப் புதிதாகப் பரமசிவனுடைய சர்வஞ்ஞத்தன்மை முதலிய குணங்கள் போன்ற குணங்கள் உண்டாகின்றனவென்று கொண்டாற்றான் பொருந்துகின்றதென்னும் அர்த்தாபத்திப் பிரமாணத்தால் உற்பத்தி சாமியபக்கமானது சிலரால் கொள்ளப்பட்டிருக்கின்றது.

வேறு சிலர்களால், ஆடை முதலியவற்றில் கஸ்தூரியின் குணமான மணம் படிவதுபோல், பரமசிவனுடைய குணங்களான சர்வஞ்ஞத் தன்மை முதலியவை முத்தியில் பசுவினிடத்தில் சென்று பொருந்துகின்றதென்று சங்கிராந்தி சாமியபக்கம் கொள்ளப்பட்டிருக்கின்றது. இவ்வாறு சங்கிராந்தி வாதங்கொண்ட பாசுபதர்களே இரௌரவ சூத்திரத்தில் சிகா சங்கிராந்தி வாதிகளென்னும் சொல்லால் குறிப்பிடப்பட்டனர்.

வேறு சிலர், பரமசிவனுடைய சர்வஞ்ஞத்தன்மை முதலிய குணங்கள் அவனிடத்தில் இருந்துகொண்டே, பிசாசுகள் புருடனை பற்றுவதுபோல், முத்தனைப் பற்றுகின்றன என்று ஆவேச சாமிய பக்கம் கொள்ளுகின்றனர்.

இவ்வாறான பரமசிவ சாமிய பக்கங்களினும், பின்னர்க் கூறப்படும் * அபிவியத்தி சாமியபக்கமானது புத்திக்கும் வாக்குக்கும் எட்டாதது. ஆகையால் சிறந்ததாகக் கூறப்பட்டிருக்கின்றது என்க. (எ)

---

* அபிவியக்தி—பசுவினிடத்திலேயே விளங்காமலிருக்கும் சர்வஞ்ஞத்தன்மை முதலிய குணங்கள் முத்தியில் விளங்கித் தோன்றுதல்.

(அ—கை) இவ்வாறு வேறு வேறு மதங்களில் கூறப்படும் முத்திகளைக்கூறிவிட்டு, இனி பொருள் முறையைத் தொடர்ந்து அவற்றை விலக்குகின்றார்.

(அ) சத்துவமான பிரதானத்தை அநுபவித்துக்கொண்டிருப்பதே முத்தியாகும் என்பதும், சிறந்த தநுகரணங்களுடன் கூடி நக்ஷத்திர புவனத்திலிருப்பதே முத்தியாகும் என்பதும் அழிவுடையனவாகும். எதனாலெனில், அநுபவிப்பவனும், புவனத்தில் வசிப்பவனும், அழிகின்றவனாக உலகத்தில் காணப்படுகின்றமையால் என்பதாம்.

(உரை) பிரதானத்தை அநுபவித்தல், நக்ஷத்திர புவனத்தில் வசித்தல் என்னும் இரண்டு முத்திகளும் அழிவை அடைகின்றன. எதனால் எனில், உலகத்தில் அநுபவிக்கின்றவர்களாயும், புவனங்களில் வசிப்பவர்களாயும் இருக்கும் தேவதத்தன் முதலியோருக்கு அழிவு காணப்படுகின்றமையால் என்க. ஆனால் அநுபவிக்கும் தன்மையானது அறியும் தன்மையேயன்றி வேறில்லை; அந்த அறியும் தன்மையே ஆன்மாவினுடைய சொரூபம்; அது கன்மத்தின் பயனாகின்றதில்லை; ஆகையால், நாசம் அடைகின்றது என்பது எவ்வாறு பொருந்தும் என்பையாயின், அவ்வாறாயின் அந்த முத்திக்காலத்தில் ஆன்மா சர்வஞ்ஞனாயிருக்கின்றான் என்று கொண்டதாகும். விசேட காரணமின்மையால், பிரதானத்தை மாத்திரம் அறிந்துகொண்டு இருக்கின்றான் என்று எவ்வாறு கூறமுடியும். அறியுந் தன்மை வடிவினனாய்ச் சர்வஞ்ஞனாய் இருக்கின்றான் என்று கொள்ளின், அது நாம் கொண்ட மதமேயாகும். ஆகையால் முத்தியில் பிரதானத்தை அநுபவித்துக்கொண்டிருக்கின்றான் என்பது அழிவுடையதேயாகும். ஆயினும், இம்மதம் அழிவுடையதென்பது உண்மையே. புவனத்தில் வாசஞ் செய்தல் ரூபமான பயனும் அழிவுடையதென்பது பொருந்தாது. எதனால் எனில், நீர்ப்பிரவாகம்போல் அநாதியான புவனங்களின் சேர்க்கையானது எவ்வாறு நசிக்கும்? எக்காலத்தும் நசிக்கின்றதில்லை ஆகையால் என்க. இவ்வாறு கூறுதல் பொருந்தாது;

புவனங்கள் பிரவாகம்போல் அனாதியாயிருப்பதுபற்றித்தான் பிரவாக அனாதிகளான கன்மங்கள், அவற்றின் பயன்கள் என்னும் இவற்றினின்று ஆன்மா மீட்கத்தக்கவன் என்பது நமது உண்மையான இரகசியமாயிருக்கின்றது. (அ)

(கூ) பரமசிவனுடைய பிரமத கணங்களுள் முதன்மையாயிருப்பதே முத்தி யென்பதும், பிரகாசங்களுக்கு இருப்பிடமான சூரியன் அக்கினியென்னும் இவர்களுடைய சாமியமே முத்தி யென்பதும் பொருத்தமற்றவை; அவ்வித முத்தி பெற்ற ஆன்மாக்கள் நிறைந்த திருப்தியுடையவர்களாக வில்லாமையால் என்க இவ்வாறே முத்திக்காலத்தில் ஆன்மா கருத்திருத்தன்மையின்றிச் சர்வஞ்ஞத் தன்மை மாத்திரம் உடையவனாயிருக்கின்றானென்பதும், கருத்திருத்தன்மையிருப்பினும் பரமசிவனால் ஏவத்தகுந்தவனாகவேயிருக்கின்றானென்பதும், முன்னர்க்கூறப்பட்ட முத்திகள் போலப் பொருத்தமற்றவையேயாகும்; அவ்வித முத்தியைப்பெற்ற ஆன்மாக்கள் பரமசிவனுடைய சாமியம் பெறுதலைப் பற்றி நிறைந்த திருப்தியை உடையவர்களாயில்லாமையால் என்பதாம்.

(உரை) பரமேசுவரனுடைய மகாகணமாயிருத்தலென்னும் முத்தியும், பிரகாசங்களுக்கு இருப்பிடமான சூரியன் முதலாயினாரோடு சாமியமாதலென்னும் முத்தியும் மறுக்கத் தக்கவையாகும். பிரமத கணங்களுக்கு முதன்மையாயிருக்கும் புருடனுக்கு, அதனினும் மேற்பட்ட சிறந்த பதமிருத்தலால் அதனை யடைய வேண்டுமென்னும் எண்ணமிருப்பதுபற்றி அவனுடைய மனோரதம் (திருப்தி) முற்றுப்பெறவில்லையாகையால் அதனை எவ்வாறு முத்தியாகக் கூறமுடியும்? (முடியாதென்பதாம்.) இவ்வாறே அக்கினி சூரியன் என்னும் இவர்களுடைய சாமியமே முத்தி யென்பதினும் அறிந்துகொள்ளல் வேண்டும். அஃதாவது, நமது கண்களுக்குப் புலப்படுகின்ற சூரியன் அக்கினியென்னும் இவர்களுடைய சாமியத்தினும் மேற்பட்ட சிறந்த பதவியிருத்தலால், இவ்வித முத்தி பெற்ற ஆன்மாக்களின் மனோரதம் முற்றுப்பெறவில்லை யென்பது கருத்து. ஆனால், நம்மவர்க்குப் புலப்படாமல்

சர்வஞ்ஞனாய் சர்வ கருத்தாவாய் சூரியனும் அக்கினியும் இருக்கின்றனர்; அவர்களது சாமியமே முத்தியென்று கூறுகின்றோமெனில், அவ்வாறாயின், அவ்வித தேவதையின் சாமிய ரூபமான முத்தியானது, சூரியன் அக்கினியென்னும் பெயர் மாத்திரமேயன்றி நாம் கொண்ட முத்தியேயாகும்.

இனி, முத்திக்காலத்தில் ஆன்மா கருத்திருத் தன்மையின்றிச் சர்வஞ்ஞத்தன்மை மாத்திரம் உடையவனாயிருக்கின்றான் என்பதும், கருத்திருத்தன்மையிருப்பினும் ஏவத்தகுந்தவனாயிருக்கின்றான் என்பதும் முன்னர்க் கூறப்பட்ட முத்திகள்போல் பொருத்தமற்றவையேயாகும். இவ்வித முத்தி பெற்ற ஆன்மாக்கள் பரமசிவனுக்குச் சமமான கருத்திருத்தன்மையை யடையாதவர்களாயிருத்தலால், அந்தப் பதத்தையும் அடையவேண்டுமென்னும் ஆசையிருப்பதுபற்றி மனோரதம் நிறையாதவர்களாகவேயிருக்கின்றனர். ஆகையால் அவர்கள் முத்தி பெற்றவராயிருக்தும் பெறாதவரேயாவர். அன்றியும், முத்தி யென்பது தனது சொரூபத்தின் விளக்கமேயன்றி வேறன்று. புருடனுக்கு ஞாதிருத்தன்மைபோலவே கருத்திருத்தன்மையுஞ் சொரூபம் என்பது முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் அவ்வித சொரூபத்தை அடையவில்லையாயின் முத்தி எவ்வாறு நிகழக்கூடும்? இது நிற்க. ஆன்மாக்கள் அநாதியாய் மந்திரேசுவரர்களால் ஏவத்தகுந்தவர்களா யிருக்கின்றமையால், அநாதியான ஏவப்படுந்தன்மை எவ்வாறு நாசமடையுமெனில், பந்தத்துக்குக் காரணமாயிருக்கும் கலை முதலியவற்றைப்போல் ஏவப்படுந்தன் தன்மையும் பந்தத்துக்குக் காரணமாயிருத்தலால் நசிக்கின்றதென்க. அவ்வாறு அது நாசம் அடையவில்லையாயின் இம்முத்தனும் வித்தியேசுவரர் முதலியோரைப்போல் ஏவத்தகுந்தவனாக இருப்பதுபற்றி முத்திபெறாதவனாகவே ஆகின்றான். (௯)

(அ—கை) ஆன்மா முத்திக்காலத்தில் பரமசிவனினும் சிறந்தவனாயிருக்கின்றானென்பதை மறுக்கின்றார்.

(௧௦) முத்திக்காலத்தில் ஆன்மாவுக்குப் பரமசிவனினும் சிறந்த தன்மையிருக்கின்றதென்பதற்குப் பிரமாணமில்லை.

அன்றியும் அவ்வாறு கொள்ளின், இரண்டுவிதமாக அநவத்தை யென்னுங் குற்றம் நிகழும். அஃதாவது பரமேசுவரனிடத்துக் காரணமின்றி ஏவப்படுந்தன்மை நிகழ்கின்றது என்பதாம்.

(உரை) ஆன்மா முத்திக்காலத்தில் பரமசிவனினுஞ் சிறந்த தன்மையை உடையவனாயிருக்கின்றான் என்பதற்குப் பிரமாணமின்மையாவது, சர்வஞ்ஞத்தன்மை சர்வகருத்திருத்தன்மை ரூபமாயும், நிர்மலமாயும், மிகச் சிறந்ததாயுமிருக்கும் பரமசிவனுடைய குணங்களின் விளக்கத்தினும் சிறந்த நிலையொன்று பிரமாணங்களால் அறியப்படாமை யென்பதாம். அத்தகைய சிறந்த நிலை ஆன்மாவால் அடையப்பட்டிருந்தால் அந்த ஆன்மாவினிடத்து முத்திக்காலத்தில் சிறந்த தன்மை நிகழும். ஆனால், ஈசுவரனுக்கு இலயம் முதலிய நிலைகளின் சேர்க்கையிருத்தலால் குறைந்தவனாகவே அவனிருக்கின்றான் என்னில், அவ்வாறன்று. பரமசிவனுக்கு இலயம் முதலிய அவத்தைகளின் சேர்க்கையாவதுயாது? அது அவனினும் வேறு பொருளாகக் கொள்ளப்படவில்லையாயின், தேவதை ஒன்றாகையால் (பரமசிவனே, இலயசிவன் போகசிவன் அதிகார சிவனாகயிருக்கின்றானாகையால்) † தருமத்தின் பரிணமத்தால் நிலைக்கத்தகுந்த சடத்தன்மையென்னுங் குற்றம் நிகழுமென்று (ஒரு பொருளாகக் கொள்ளுதல் விலக்கப்பட்டிருக்கின்றது. இன்னும் விலக்கப்படப் போகின்றது.

இலயம் முதலிய அவத்தைகளைப் பரமசிவனுடைய * விவர்த்தமென்று கொள்வோமெனில், அவ்வாறாயின் அந்த அவத்தைகள் பொய்யாகின்றமையால் அவற்றின் ரூபனைகப் பரமசிவன் எவ்வாறு ஆவன் ?

சிவனிடத்திலிருக்கும் கிரியா சத்தியானது, எப்பொழுது செயப்படு பொருளை விடயமாகக்கொண்டு தொழிற்படாமலும்

---

† சடப்பொருள்களின் தருமந்தான் பரிணமிக்கும். சித்துப் பொருளின் தருமமானது பரிணமிக்காது.

* விவர்த்தம்—ஒன்று பிறிதொன்றாய்த் தோன்றல். கயிறு பாம்பாய்த் தோன்றுவது போல்வன.

சிவனினும் வேறாயில்லாமலும் அவனிடத்திலேயே சமவேதை யாயிருக்கின்றதோ, அப்பொழுது (ஆன்மாக்களுக்குச்) சிவபதத்தை விளக்கஞ் செய்வதாய் இலயமுடையவன் என்று சிவனைக் கூறுதற்கு உபாதியாயிருக்கின்றது.

அந்தக் கிரியா சத்தியே, எப்பொழுது காரியங்களைத் தோற்றுவிக்க முயன்று காரிய விகாரங்களை யடையாமலிருக்கின்றதோ, அப்பொழுது (ஆன்மாக்களுக்குச்) சதாசிவ பதத்தைத் தோற்றுவிப்பதாய்ப் போக முடையவனென்று சிவனைக் கூறுதற்கு உபாதியாயிருக்கின்றது.

அந்தக் கிரியா சத்தியே, எப்பொழுது எல்லாக் காரிய வருக்கங்களையுந் தோற்றுவிக்கின்றதோ, அப்பொழுது (ஆன்மாக்களுக்கு) ஈசுவர பதத்தை யறிவிப்பதாய் அதிகாரமுடையவனென்று சிவனைக் கூறுதற்கு உபாதியாயிருக்கின்றது.

ஆகையால், கிரியா சத்திக்கே அந்தந்தக் காரிய ரூபமான உபாதிகளின் வேறுபாடு மாத்திரத்தால் வேறுபாடிருக்கின்றதேயன்றி உண்மையில் பொருளினிடத்து வேற்றுமையில்லை. உண்மையான சாத்திரங்களையறிந்த பெரியோர்கள், விவர்த்த பரிணாம பக்கங்கள் எக்காலத்தும் பொருந்தமாகாவெனக் கூறியிருக்கின்றனர். ஆகையால், ஈசான முதலிய முகங்களிலிருந்து ஐந்துபிரவாக ரூபமாய்த்தோன்றிய இந்தச்சைவசாத்திரமானது ஆகமம்என்னும் பொருளில்ஒன்றாயிருத்தலால் அவற்றைத்தோற்றுவித்ததேவதைக்கு வேற்றுமைகிடையாது; அன்றி, படைத்தல் காத்தல்முதலிய ஐந்தொழில்களின் வேறுபாட்டால் வழிபடத் தகுந்த அந்தந்த வடிவ மாத்திரத்திற்குத்தான் வேற்றுமையிருக்கின்றது. இவ்வாறு கொள்ளவில்லையாயின், கௌளர் மகாவிரதர் முதலியவர்களுடைய சாத்திரங்கள் போல் சாத்திரத்தில் வேற்றுமை நிகழ்ந்து ஒன்றென்று கூறிய சுருதியுடன் முரணுமெனக்க.

இவ்வாறாகவே, சித்தனுக்கும் நம்மால் முன்னர்க் கூறப்பட்ட இலயம் முதலிய அவத்தைகளைக் கொள்ளாமையால் கருத்

திருத்தன்மையும் அவனுக்கு இல்லையாகுமாகையால், கருத்திருத் தன்மையில்லாத அவன் கருத்திருத் தன்மையினையுடைய சிவனி னுங் குறைந்தவனேயன்றிச் சிறந்தவனாக இருக்கமுடியாது.

இனி, பரமசிவனிடத்திலிருக்கும் ஈசுவரத் தன்மையாவது உபாதியற்ற சோதி ரூபமான சர்வஞ்ஞத் தன்மை முதலிய சத் தியேயாகும். இவ்வாறே பெரியோர்களும் "(சத்தியே!) யாதொரு உன்னையின்றிப் பரமசிவனும் சர்வஞ்ஞனாகயில்லையா, அத்தகைய உன்பொருட்டு நமஸ்காரம்" என்று கூறியிருக்கின்ற னர். அத்தகைய சிறந்த ஈசுவரத் தன்மை சிவனிடமிருந்து சித்தனாலடையப்படுகிறதாகக் கொள்ளப்படுகின்றது என்னில், அது பொருந்தாது. சத்திக்கும் சத்தியை உடைய சத்திமானுக் கும் பொருளில் வேற்றுமை கிடையாது. சொல் மாத்திரத்தில் வேற்றுமை கற்பிக்கப்பட்டிருக்கின்றது. சிவனிடமிருக்கும் சர் வஞ்ஞத் தன்மை அவனிலும் வேறாயில்லாதவாறுபோல, ஈசு வரத்தன்மையும் அவன் ரூபமாயிருக்கின்றமையால் சிவனுக்கும் ஈசுவரத்தன்மைக்கும் வேற்றுமை கூறுதல் பொருத்தமற்றது. சொல் வேற்றுமையானது ஒருவிதமான பாதகத்தையுஞ் செய் யாது.

இவ்வாறாகவே கிடைத்த பொருளாவது, சத்தியினிடமிருக் கும் சிறந்த சத்தித்தன்மையினும் மிகச் சிறந்த சத்தித்தன்மையே முத்தியெனப்படுகின்றது. படவே, தரதம என்னும் விகுதிகளா லறிவிக்கப்பட்ட சிறந்தது மிகச் சிறந்தது என்னும் வேறுபாட் டில் நிர்ணயமில்லாமையால் முத்தியில் * அநவத்தையென்னுங் குற்றம் நிகழும். சொல்மாத்திரத்தில் கற்பிக்கப்பட்ட வேற்று மையில் ஒருவித குற்றமும் நிகழ்கிறதில்லை. ஆகையால் ஈசுவர சாமியத்தையே முத்தியாகக் கொள்ளல் வேண்டும். ஈசுவரனி னும் சிறந்த தன்மை முத்தியென்பது கொள்ளத்தக்கதில்லை.

---

* அநவத்தையாவது—சத்தியினிடத்தில் சிறந்த தன்மை மிகச் சிறந்த தன்மையென்னும் வேறுபாடுகொண்டால், அதினினுஞ் சிறந்த தன்மை உண்டெனப்பட்டு அவ்வாறே மேலுஞ் சென்று வரம்பின்றியோடுதலாம்.

ஆனால், சதாசிவனிடத்தில் அநுக்கிரக திரோபவங்களுக்குக் கருத்தாவாயிருக்குந் தன்மை ரூபமான இரண்டு பாசங்கள் இருக்கின்றனவென்று கூறப்பட்டிருக்கின்றதேயெனில், அஃதுண்மை தான் ஆயினும் அந்தக் கருத்திருத்தன்மை சாதாரண கருத்திருத்தன்மைபோலின்றி விசேடமாயுள்ளது. ஆகையால் அது பாசரூபமாகிறதில்லை; உபாதி சம்பந்தமற்றதாகையாலென்க. அவனைப் பசுவாகக் கூறியதன் கருத்தென்னையெனில், அபிமானத்தால் நிகழ்ந்த வேற்றுமையைக் கற்பித்துப் பசுவினிடமிருக்கும் சத்தியை விளக்கஞ் செய்கின்றான் என்னும் பயனைக் கருதிக் கூறப்பட்டதென்க. இது எது போலுமெனில், யோகபீட சம்ஸ்திதாய என்னும் மந்திரத்தின் பாடியத்தில் யோகபீடமென்பதற்கு முன்பின் முரணுதவாறு சதாசிவபீடமென்று பொருள் கொண்டிருக்குமாறு போலுமென்க.

ஆகையால், எல்லாச் சாத்திரங்களுக்கும் முரண்பாடில்லாமல் பரமசிவனிடமிருக்கும் அநுக்கிரக திரோபவங்கள் உண்மையில் பாசங்களாகாவென்றும், அவற்றைப் பாசங்களாகக் கூறியது உபசாரம்பற்றி யென்றுங் கொள்ளல் வேண்டும். இவ்வாறு குருவழிபாடு செய்து அந்தக் குருவின் உபதேசம் பெறாது தனது கற்பனையால் சாத்திரப்பொருளை விபரீதமாகக்கொண்ட வாதிகளுடன் வாதஞ்செய்வதில் பயனில்லை. ஆகையால் இம்மட்டோடு இந்த வாதத்தை நிறுத்திக்கொள்வோம்.

சதாசிவனுக்குப் பசுத்தன்மையைக் கூறியதன் கருத்தை வேறுவிதமாகக் கூறுகின்றோம். அது வருமாறு:—சதாசிவன் முதலாவதான பசு எஃபது தீக்ஷையால் சுத்தி செய்தற்குரிய (அணு) சதாசிவன் என்னும் பொருளுடையது இவ்வாறு பொருள் கொண்டால் முன்னர்க் கூறியவாறு உபசாரமென்பது கொள்ளல்வேண்டாம். அஃதாவது, தீக்ஷையில் வித்தியாதத்துவசுத்தி செய்யப்பெற்ற ஆன்மாவுக்கு முறையே மலநாசம் நிகழ்ந்த பின்னர் கிரியாசத்தி ரூபமான சிவத்தன்மையின் விளக்கம் தூலம் சூக்குமம் பரம் என்னும் வேறுபாட்டுடன் நிகழ்ந்து, ஈசுவரதத்துவம் சதாசிவதத்துவம் சிவதத்துவம் என்னும் மூன்று

தத்துவங்களை யடைதற்குக் காரணமாகின்றது. அந்தச் சதாசிவனிடத்தில் ஏவப்படுந்தன்மை நீங்காமையால் வாசனா ரூபமாய் மலமிருப்பது பற்றிப் பசுத்தன்மை நீங்கவில்லை. ஆகையால் அந்தச் சதாசிவனிடத்தில் பசு என்னுஞ் சொல் உபசாரமென்பதின்றி உண்மையாகவே பிரவிருத்திக்கின்றது.

இதனையே விருத்திகாரரும் தீக்ஷையில் அவர்கள் எங்கிருக்கின்றனர் என்பது முதலான வாக்கியங்களால் தீக்ஷை செய்பவனான சதாசிவனிடத்தில் பரமசிவனில் நின்றும் உண்மையில் வேற்றுமை யில்லாமையால் அந்தச் சதாசிவனிடத்தில் பசுத்தன்மை உபசாரமென்று கூறுகின்றார்.

முத்தியில் சித்தனிடத்துப் பரமசிவனிலுஞ் சிறந்த தன்மையிருக்கின்றதெனக் கொள்ளின், இரண்டு விதமாக அநவத்தையென்னுங்குற்றம் நிகழுமென்று கூறி, பரமசிவனிடத்தில் காரணமின்றி ஏவப்படுந்தன்மை நிகழ்கின்றது என்பதனால் முதலாவதான அநவத்தையைக் காட்டுகின்றார். அஃதாவது சித்தன் சிறந்தவனாயிருக்கின்றமையால் பரமேசுவரத் தன்மையுடன் கூடியிருத்தலால், பரமசிவனுக்குக் காரணமின்றியே ஏவப்படுபவனாயிருக்குந் தன்மை நிகழ்கின்றது. இவ்வாறு கொள்ளவில்லையாயின் சித்தனைச் சிவனிலுஞ் சிறந்தவனாகக்கொண்டது பயனற்றதாகும். இத்தகைய சித்தனை பரமசிவனுக்கு வேறு சித்தன் வரும்பொழுது அநீசுவரத்தன்மை நிகழ்கின்றது. இவ்வாறே மேலுஞ் சென்று வரம்பின்றி யோடுதலென்னும் அநவத்தையாகிய குற்றம் நிகழ்கின்றது. (௧௦)

(அ-கை) இந்தப் பக்கத்தில் இரண்டு விதமாக அநவத்தை என்னும் குற்றம் நிகழுமெனக்கூறி அவற்றுள் முதலாவதான அநவத்தையைக் காட்டிவிட்டு இனி இரண்டாவதாய் நிகழக்கூடிய அநவத்தையைக் காட்டுகின்றார்.

(௧௧) சம்சாரிகளுக்கு நிமித்தனான சிவனாகவேண்டுமென்ற சங்கற்பமானது பயனற்றதாயிருக்கின்றது. நிர்மலத்தன்மை மாத்திரத்தால் பசுவானவன் பதியாக ஆகின்றானில்லை. ஆகவே இது எவ்வாறு மோக்ஷமாகும் என்பதாம்.

(உரை) மோக்ஷத்தில் ஆசை உடைய ஆன்மாக்களுக்கு ளாம் † ஈசுவரனாகவேண்டுமென்ற முடிவான பயனையுடைய யாதொரு சங்கற்பமுண்டோ, அந்தச் சங்கற்பமானது பயனற்றதாய் $ நிலையற்றதாக (அசவத்தைக் குற்றமுடையதாக) ஆகும். ஆகவே, உலகத்தில் ஒருவரும் சம்சாரத்திலிருந்து மோக்ஷமடைவதற்கு முயற்சிக்கமாட்டார்கள்.

நிர்மலத்தன்மை மாத்திரத்தால் பகவானவன் பதியாகின்றானில்லை என்பதனால், மல நாசம் மாத்திரம் முத்தி என்பவர் மதத்தை மறுக்கின்றார். பசு சிற்றறிவை உடையவனாயிருத்தலாலும், ஈசுவரன் பேரறிவை உடையவனாயிருத்தலாலும், பசுபதிகளின் விவேகத்தால் நிர்மலனான புருடனுக்கு மலம் இல்லாமை பற்றி ஞானசத்தியின் அனுபவம் நிகழாமையால், அறிவின்றிக் கற்போல் இருக்கக்கூடிய இந்த மோக்ஷம் புருடார்த்தமாகின்றதில்லை. பின்னர்க்கூறப்படுமாறு போல் ஆன்மாவிற்கு அறியுந்தன்மையே இயல்பானபடியால் முத்திக்காலத்தில் அறிவு இல்லையாயின் ஆன்மாவிற்கு நாசம் என்னும் குற்றம் நிகழ்கின்றதென்பது கருத்து. இதனையே எவர்களுக்கு முத்திக்காலத்தில் தானாகிய ஆத்மாவே நாசமடைகின்றதோ அவர்கள் மூடர்களுக்குள் முதன்மையாயிருக்கின்றனர் என்று பின்னர்க் கூறப்போகின்றார். (கக)

(அ-கை) இனி, சித்தனிடத்துத்தான் கருத்திருத்தன்மை இருக்கின்றது. பரமசிவன் உதாசீனனாயிருக்கின்றான் என்னும் மதத்தை மறுக்கின்றார்.

(கஉ) பரமசிவன் என்ன காரணத்தால் கருத்திருத்தன்மையற்றவனாயிருக்கின்றான்? காரணர்களின் கூட்டத்தாலுண்டாகிய

---

† ஈசவரனாக வேண்டுமென்பதை ஈசவரத் தன்மையில் சிறந்தவனாகவேண்டுமென்பதாய்க் கொள்ளல்வேண்டும்.

$ ஈசவரத்தன்மை ஒருவரிடத்தும் நிலையாமை பற்றி முதலாவதான அசவத்தையும், சங்கற்பம் பயனெய்தி நிலையாமைபற்றி இரண்டாவதான அசவத்தையும் காட்டியவாறும்.

அச்சத்தால் எனின், அனேக ஆன்மாக்களுக்கு ஒரே காலத்தில் மோக்ஷம் நிகழுகின்றமையால் அப்பொழுதும் அந்த அச்சம் இருக்கின்றதே? என்பதாம்.

(உரை) பரமசிவனிடத்தில் கருத்தாவாயிருக்குந்தன்மை சித்தனுக்கு முன்னரே யிருக்கின்றது. தன்னிடத்தில் இருக்கும் அந்தக்கருத்திருத் தன்மையைச் சித்தனொருவன் வந்தவுடன் ஏன் விரும்பிகின்றானில்லை? காரணர்களுடைய கூட்டத்தினாலுண்டாம் அச்சத்தால் விரும்புகின்றானில்லை; அஃதாவது, முத்திக்காலத்தில் சர்வஞ்ஞனுய்ச் சர்வ கருத்தாவா யிருக்கும் சித்தனுக்கும் கருத்திருத் தன்மை இருக்கின்றது; பரமசிவனுக்கும் கருத்திருத்தன்மை இருக்கின்றது, ஆகையால் அனேகரிடத்தில் கருத்திருத்தன்மை யிருத்தலால் கருத்தாக்களும் அனேகராகின்றனர். ஆகவே இது புதிதாயிருக்கட்டும் இது பழையதாயிருக்கட்டும். என்னும் புத்தி வேறுபாட்டால் படைத்தல் முதலிய காரியங்கள் முற்றுப்பெறு. இவ்விதமான குற்றம் நிகழுமே என்னும் அச்சத்தால் பரமசிவன் தனக்குக் கருத்திருத் தன்மையை விரும்புகின்றானில்லை என்று பூருவ பக்ஷி கூறில் முத்தியின் காரணங்களின் சாமர்த்தியம் மனதால் எண்ணுதற்கு முடியாதாகையால், எப்பொழுது அனேக ஆன்மாக்கள் ஒரேகாலத்தில் மோக்ஷமடைகின்றனரோ, அப்பொழுது அவர்களுக்குத் தனித்தனியே சர்வ கருத்திருத் தன்மையின் சேர்க்கை யிருத்தலால் அனைவருக்கும் கருத்திருத்தன்மை சமமாயிருப்பதுபற்றி வேற்றுமை கூறமுடியாது; முத்தர்களுள் எவராவது ஒருவருககுத்தான் கருத்திருத்தன்மை உண்டு என்ற நிர்ணயமின்மையால் முத்தர்களனைவருக்கும் கருத்திருத்தன்மை நிகழவே, அனேக காரணர்களை உடைத்தாயிருத்தலால் சிருட்டி முதலியவற்றில் குறை உண்டாகுமென்னும் அச்சம் பரமசிவனுக்கு நீங்கவில்லை என்று சித்தாந்திகூற, புருடர்களுககு விருப்பு வெறுப்பு முதலியவை இருக்கின்றமையால் புத்தியில் வேற்றுமை யிருக்கின்றது; முத்தியில் புத்தி வேற்றுமைக்குக் காரணமான விருப்பு வெறுப்புக்கள் இன்மையால் படைத்தல் முதலிய தொழில்களில் குறை நிகழுமென்னும் அச்சம் இல்லை என்று பூருவபக்ஷி சமாதானங் கூற

அவ்வாறாயின் நமது மதத்திற்கு வரப்பார்க்கின்றாய் என்று சித்தாந்தி கூறினார் என்க. *

(அ-கை) இனி, சித்தாந்தி பிரமாணமாகக் கொண்ட நூல்களையே பிரமாணமாகக் கொண்டு அந்த நூல்களுக்கு விபரீதப் பொருள் கொள்ளும் அகச்சமயவாதிகளின் முத்திகளை மறுக்கின்றார்.

(கஅ) ஆன்மாக்களிடத்தில் சர்வஞ்ஞத்தன்மை முதலிய குணங்களுக்கு உற்பத்தியைக் கொண்டால், அந்தக் குணங்களுக்கு அநித்தியத்தன்மை நிகழும். பாமசிவனுடைய சர்வஞ்ஞத் தன்மை முதலியவற்றின் ஆவேசமே புருடனிடத்தில் இருக்கின்றதெனில், புருடனுக்குச் சுதந்திரத் தன்மையின்றி அசுதந்திரத் தன்மை உண்டாகும். பரமசிவனது குணங்களான சர்வஞ்ஞத் தன்மை முதலியவை ஆன்மாவினிடத்தில் சங்கிரமிக்கின்றன (வந்து பொருந்துகின்றன) என்று கொண்டால் இவ்விடயத்தில் திருட்டாந்தம் கூறமுடியாது என்பதாம்.

(உ௦) முத்தியில் சர்வஞ்ஞத்தன்மை முதலிய சிவகுணங்களின் சாமியம் உற்பத்தியாகின்றதென்பது எவர்களால் கொள்ளப்படுகின்றதோ, அவர்கள் மதத்தில் உற்பத்தியை உடையது அழிவை உடையதாயிருக்குமென்பது கொள்ளப்படுதால் முத்திக்கு அழிவுடைமை நிகழுமென்க. பாமசிவனுடைய குணங்களின் ஆவேசமே முத்தி என்று கொண்டால், பேயால் ஆவேசிக்கப்பட்ட புருடன் அந்தப் பேய்க்கு எடங்கினவனாய்ச் சுதந்திரமின்றி யிருப்பதுபோல் சுதந்திரமின்மையே முத்தியில் சிவசாமியமாகுமென்க. பரமசிவனுடைய குணங்கள் ஆன்மாவினிடத்தில் வந்து பொருந்துகின்றமையால் சிவசாமியம் கூறும் மதத்தைத் திருட்டாந்தம் இன்மைபற்றி மறுக்கின்றார். எவ்வா

* விருப்பில்லாமை காரணமாக முத்தனிடத்தில் படைத்தல் முதலிய தொழில்கள் நிகழாவென்றும், அச்சமில்லாமை காரணமாகப் பரமசிவனிடத்தில் படைத்தல் முதலிய தொழில்கள் நிகழுமென்றும் சொன்ன வேண்டியவனாக ஆகின்றாய் என்பது கருதி நமது மதத்திற்கு வரப்போகின்றாய் என்றனர்.

றெனில், பரமசிவகுணங்களே முத்தியில் வந்து பொருந்துகின்றன என்னும் குணசங்கிராந்தியானது உங்களுக்குப் பிரத்தியக்ஷத்தால் சித்திக்கவில்லை. ஏதனுலெனில், பரமசிவ குணங்கள் இந்திரியங்களுக்கு விடயமாகாமையாலென்க. அனுமானப் பிரமாணத்தால் சாதிக்கின்றேமெனில், குணங்களுக்குச் சங்கிராந்தியைச் சாதிக்கும் அனுமானத்திற்குத் திருட்டாந்தமில்லாமையால் உடன் நிகழ்ச்சி என்னும் வியாத்தி யறிவற்ற அனுமானம் பொத்தமற்றதாகுமென்க. (௧௩)

(அ—கை) இந்த அனுமானத்திற்குச் சங்கிராந்தி வாதி கூறும் திருட்டாந்தத்தைக் கூறுகின்றார்.

(௧௪) குருவினிடத்திருக்கும் அறிவானது குருவினுடைய உபதேசத்தால் சீடனிடத்துச் சங்கிரமிப்பதாகக் காணப்படுகின்றது. சாத்திரங்களினும் தீக்ஷை முதலியவற்றில் விஞ்ஞானத்தின் சங்கிராந்தியானது விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் சங்கிராந்தி விடயத்தில் அனுமானப் பிரமாணமே சாதகமாயிருக்கின்றது என்பதாம்.

(உரை) குருவானவன் தனது அறிவு சீடனிடத்தில் சங்கிரமித்தற்பொருட்டு உபதேசம் செய்கின்றான். அந்த உபதேசத்தால் குருவினுடைய அறிவு சீடனிடத்தில் சங்கிரமிக்கின்றதாக உலகத்தில் காணப்படுகின்றது. சுவாயம்புவம் முதலிய சாத்திரங்களினும் "யாதொரு அதிகாரமானது உன்னிடத்தில் என்னால் வைக்கப்பட்டதோ, அந்த அதிகாரமானது வேறொருவரிடத்தில் வைக்கப்படும்வரை உன்னால் அனுட்டிக்கத்தகுந்தது" என்று கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாறான சங்கிராந்தியானது குணங்களுக்குச் சங்கிராந்தியைக் கொள்ளவில்லையாயின் பொருத்தமடைகிறதில்லை. ஆகையால் உங்களுடைய ஆகமங்களானும் பிரத்தியக்ஷத்தானும் திருட்டாந்தம் சித்தித்தது (இது பூருவபக்ஷியின் கூற்று.) (௧௪)

(அ—கை) இதற்குச் சித்தாந்தி கூறும் சமாதானத்தைக் கூறுகின்றார்.

(௧௫) சங்கிராந்தி யென்னும் சொல் ஒரேவிதமாயிருப்பினும் பொருளில் வேற்றுமை யிருக்கின்றது. குருவினுடைய உபதேசத்தால் சீடனுக்குக் குருவின் அறிவுபோன்ற வேறு அறிவு உண்டாகின்றது; அந்தக் குருவினுடைய அறிவானது குறைவை அடையாமலிருத்தலால் என்பதாம்.

(உரை) குருவினுடைய உபதேசமென்னும் நிமித்தத்தால் சீடனுடைய புத்தியில் குருவின் அறிவுபோன்ற வேறு விதமான அறிவே மிகச் சமமாக இருப்பதுபற்றிச் சங்கிரமித்ததுபோல் உண்டாகின்றது. இவ்வாறன்றிக் குருவினுடைய அறிவே நேரே சங்கிரமிக்கின்றதில்லை. எதனாலெனின், குருவினிடத்தில் அந்த அறிவு குறைவை யடையாமல் இருத்தலாலென்க. குருவினுடைய அறிவே சீடனிடத்துச் சங்கிரமிக்கின்றது என்று கொள்ளின், சீடனிடத்து அறிவு சங்கிரமித்தமையால் குருவினிடத்து அறிவின்மை நிகழவேண்டும். (௧௫)

(அ—கை) சுவாயம்புவம் முதலிய சாத்திரங்களிலும் குருவினுடைய ஆணையால் குருவைப்போல் வியாக்கியான முதலியவற்றில் சுதந்திரனாக இருப்பதே அதிகார சங்கிராந்தி என்னுஞ் சொல்லுக்குப் பொருளாகும். அவ்வாறே சுவாயம்புவ ஆகம விருத்தியில் ஆசாரியாபிஷேகப் பிரகாணத்தில் ஆசிரியர் கூறியிருக்கின்றனர். ஆகையால் சங்கிராந்தி வாதத்திற்கு இது திருட்டாந்தமாகாதெனக் கூறுகின்றார்.

(௧௬) சாத்திரங்களில் குருவினுடைய ஆணையால் குருவைப்போல் வியாக்கியான முதலியவற்றில் சுதந்திரத்தன்மையை மேற்கொள்வதே சங்கிராந்தி என்னும் சொல்லுக்குப் பொருள் ஆகும். இவ்விடயம் குருவால் அந்தச் சாத்திரத்திலேயே கூறப்பட்டிருக்கின்றது என்பதாம்.

(உரை) வெளிப்படை (௧௬)

(அ—கை) சங்கிராந்தி வாதியானவன் சுருதி மிருதிகளிலுள்ள திருட்டாந்த தாட்டாந்திகங்களின் மயக்கத்தால் ஒரு சமயம் எதிர்ப்பானாயின், அதனையும் முன்னர்க் கூறிய திருட்டாந்தங்களைப்போலவே மறுக்கவேண்டுமென்று கூறுகின்றார்.

(கஎ) அதுபோல் (முன்னர்க் கூறியவாறுபோல்) சாதுக்களை நிந்தனை செய்தலால் புருடர்களுக்குப் பாவம் உண்டாகின்றது; புண்ணியம் நசிக்கின்றது. சாதுக்களை நிந்தனை செய்யாது பொறுமையாய் இருப்பவனிடத்தில் இவை மாறுதலை அடைந்திருக்கின்றன. அஃதாவது புண்ணியம் உண்டாகின்றது; பாவம் நசிக்கின்றது என்பதாம்.

(உரை) இவ்விடயத்தில் மிருதிவாக்கியத்தைக் கூறுகின்றார். "பிராமணர்கள் சாதுக்களாகிய இவர்களை நிந்தனை செய்தலாலும், பாவச்செயல்களை கைக்கொள்ளுதலாலும், புருடர்களுக்குப் பாவம் சங்கிரமிக்கின்றது; தன்னிடமிருக்கும் புண்ணியம் நசிக்கின்றது என்றும், சாதுக்களையும் பிராமணர்களையும் நிந்தனை செய்யாது பொறுமை உடையவனும், புண்ணியவான்களுடன் சேர்ந்திருப்பவனுமுள்ள புருடனிடத்தில் புண்ணியம் சங்கிரமிக்கின்றது; பாவம் நீங்குகின்றது என்னும் சங்கிராந்திவாதி திருட்டாந்தங் கூறுவானாயின், அதுவும் முன்னர்க்கூறிய திருட்டாந்தங்கள் போலவே மறுக்கப்படுவதாகும். எவ்வாறெனில், இவ்விடத்திலும் புண்ணிய பாவங்கள் சங்கிரமிக்கின்றன என்பதற்குப் புதிதான புண்ணிய பாவங்களின் உற்பத்தியைப் பொருளாகக் கொள்ளல் வேண்டுமேயன்றி, அவற்றின் சங்கிரமணம் (பற்றுதல்) என்பதைப் பொருளாகக் கொள்ளுதல் கூடாது. அவ்வாறு கொண்டால் புண்ணியவான்களுடன் இருத்தல் மாத்திரத்தினாலேயே புண்ணியம் சங்கிரமிக்கின்றமையால் புண்ணியங்களைச் சம்பாதிக்க வேண்டுமென்னும் விதியானது பயனற்றதாக ஆகின்றது. பிராயச்சித்தங்களை விதித்ததும் வீணாகின்றது என்க. (கஎ)

(அ—கை) இன்னும் இவ்விடயத்தையே கூறுகின்றார்.

(கஅ) பாவிகளுடைய சேர்க்கையால் வேறு விதமான பாவம் உண்டாகின்றது. அவ்வாறே புண்ணியவான்களுடைய சேர்க்கையால் புண்ணியம் உண்டாகின்றது. இவ்வாறன்றி வேறு விதமாக (சங்கிரமிக்கின்றது என்பது) சொல்லப்படவில்லை என்பதாம்.

(உரை) வெளிப்படை. (கஅ)

(அ—கை) இனி, தீபமானது எரிககத்தக்க திரி முதலிய வற்றில் சங்கிரமிப்பதாய் (பற்றுவதாய்)க் காணப்படுகின்றதே என்று சங்கிராந்திவாதி கூறும் திருட்டாந்த ஆசங்கையை மறுக் கின்றார்.

(கக) தீபத்தினும் வேறான விறகு முதலியவற்றில் பிறி தொரு தீபத்தின் உற்பத்திதான் கொள்ளப்படுகிறதேயன்றி, தீபத்தினுடைய சங்கிராந்தி கொள்ளப்படுகிறதில்லை. இவ்வாறே புத்தர்களும் வைசேடிகர்களும் கொண்டிருக்கின்றனர் என்பதாம்.

(உரை) தீபத்தின் சுவாலை மாத்திரத்தினின்றும் மிகப் பெரி தான அக்கினி, காடு முதலியவற்றை எரிப்பதாகக் காணப்படுத லால் முந்திய தீபாக்கினியினும் வேறாய் மிகப் பெரியதான அக் கினியானது காடு முதலியவற்றில் உண்டாகின்றது என்றே பௌத்தர் முதலிய வாதிகளும் கொண்டிருக்கின்றனர். ஆகை யால், தீபாக்கினிக்காவது அதன் ஏகதேசத்திற்காவது சங்கிராந்தி கூறுவது பொருத்தமற்றது. இவ்வாறு கூறியவாற்றால் கஸ்தூரி யின் வாசனையானது ஆடையில் பற்றுகின்றது என்ற சங்கிராந்தி திருட்டாந்தமும் மறுக்கத்தகுந்தது என்க. (கக)

(அ—கை) சங்கிராந்திவாதி கூறும் வேறுதிருட்டாந்தத் தைக்கூறுகின்றார்.

(ககூஇ) புதிதாய்த் தோன்றிய பசுவினிடத்தில் பசுத் தன்மை என்னும் ஜாதியானது வேறு பசுவினிடத்திருந்து சங்கிர மிக்கின்றதாகக் காணப்படுகின்றது என்பதாம்.

(உரை) அப்பொழுது தோன்றிய பசுவினிடத்துப் பசுத் தன்மை என்னும் சாமானியம் (ஜாதி) அப்பொழுதுதான் அறியப் படுதலாலும், அதற்கு முன்னர் அறியப்படாமையாலும், அப் பொழுது தோன்றும் பொருளினிடத்தில் அத்தன்மை என்னும் சாமானியம் (ஜாதி) இல்லை, பிறபொருளினிடத்திலிருந்து அந்த ஜாதிக்குச்சங்கிராந்தி கொள்ளவில்லையாயின், அப்பொழுது தோன்றிய பசுவினிடத்துப் பசுத்தன்மையின் சேர்க்கை பொரு த்தமடையாதாகையால், நிச்சயமாகப் பசுத்தன்மைக்குச் சங்கி ராந்தி கொள்ளத் தகுந்தது என்க.

(அ—கை) இதற்குச் சித்தாந்தி கூறும் மறுமொழியைக் கூறுகின்றார்.

(உ0) பசுத்தன்மையை சாதியாகக் கொள்ளாமல் * சாதிருசியமாக எவன் கொண்டிருக்கின்றானோ, அவனைக்குறித்து நீ கூறியது பொருத்தமடைகின்றதில்லை என்பதாம்.

(உரை) சாதிக்குச் சங்கிராந்தி என்பது எங்களுக்கு உடன்பாடில்லை. எதனாலெனில், பொருளினும் வேறாக ஜாதி என்னுந் தன்மையை நாங்கள் கொள்ளாமையால் என்க. சாங்கியர்களுடைய கொள்கை போல், பொருட்டன்மைபற்றி ஒரேவிதமான அவயவப்பகுப்பின் சாதிருசியமே ஜாதியாகையால், அக்காலத்தில் தோன்றியபசுப் பொருளினிடத்தில் சங்கிராந்தி கூறுதல் பொருத்தமற்றது. அந்தப்பசுப்பொருளில் பிறிதொரு பசுப்பொருளின் சாதிருசியமானது உற்பத்தியாகின்றது என்றே கொள்ளுகின்றோம். ஆகையால், பொருளினும் வேறாக ஜாதியைக் கொள்ளாதவனைக் குறித்து நம்மால் கூறப்படும். சங்கிராந்தித் திருட்டாந்தம் பொருத்தமற்றதே யாகும். (உ0)

(அ—கை) பொருளினும் வேறாக ஜாதியை ஒத்துக்கொள்பவனைக்குறித்துக் கூறுகின்றார்,

(உக) தனது பற்றுக்கோடளவு வியாபகமாயிருக்கும் இந்த ஜாதியானது, யாதொரு காரணத்தால் வேறான பற்றுக்கோட்டிலேயும் தோன்றுகின்றதோ, அந்தக் காரணத்தால் ஜாதியானது சங்கிரமிக்கின்றது என்று கொள்ளுதல் கூடாது. அன்றியும், எதற்குச் செல்லுதல் கொள்ளப்படவில்லையோ, அதற்குச்சங்கிரமணம் (பற்றுதல்) எவ்வாறு பொருந்தும்? என்பதாம்.

(உரை) ஜாதியானது எங்கும் சென்று வியாபகமாய் இருக்கின்றது என்னும் பக்கத்தில் சங்கிராந்திவிடயமான ஆசங்கையே நிகழாதாகையால், பொருள் மாத்திரத்தில் வியாபகமாயிருக்கின்றது ஜாதி என்னும் மதத்தைத் தொடர்ந்து சமாதானம் கூறு

* சாதிருசியம்—சமானமான பொருள்களினிடத்திருக்கும் தன்மை.

கின்றார். அக்காலத்தில் தோன்றிய பிறிதொருபசுப்பொருளான பற்றுக்கோட்டிலும் பசுத்தன்மை என்னும் ஜாதி விளங்குகின் றது. ஜாதியென்பது அதனதன் பற்றுக்கோட்டால் விளக்கஞ் செய்யத்தக்கதாகையாலும், பற்றுக்கோடான வடிவம் ஜாதியை விளக்கஞ் செய்வது இயல்பாகையாலும் அதனைப்பிறிதொரு ஜாதியின் சங்கிராந்தியாக எவ்வாறு கூறமுடியும்? (ஜாதி தனமை என்பன ஒரு பொருட் சொற்கள். அது யாதானுமொரு பொருளைப்பற்றி அதனளவாகவியாபித்திருக்கும். அவ்வாறு இருப்பது எவ்வாறு; பிறிதொரு பொருளில் சென்று பற்றும்) அன்றியும் என்பதனால் வேறுவிதமாகவும் சமாதானங் கூறுகின் றார். அஃது வெளிப்படை (ஒரு பொருளைப்பற்றி யிருக்குந் தன்மையானது தனித்துச்செல்லாது. தனித்துச் செல்லமாட் டாத அதற்குச்சென்று பற்றுதல் எவ்வாறு கூடும்.) (உக)

(அ—கை) தனித்துச்செல்லமாட்டாத அமூர்த்தப்பொரு ளுக்குச்சங்கிராந்தியைக் கொண்டால் குற்றம் என்னை என்பார்க் குக் கூறுகின்றார். (மூர்த்தம்—வடிவம் அமூர்த்தம்—வடிவமில் லாது.)

(உகஇ) அமூர்த்தப் பொருளுக்கும் சங்கிராந்தி உண் டென்று கொள்ளுவதில் உலகானுபவமும் பிரமாணமில்லை. வித் துவான்களுடைய வசனமும் பிரமாணமில்லை என்பதாம்.

(உரை) ஜாதியைக் கிரியையற்றதாகவும் அமூர்த்தமாகவும் அவர்கள் (தார்க்கிகர்) கொண்டிருக்கின்றமையால், அதற்குச் சங்கிரமிக்கக்கூடிய யோக்கியதை எவ்வாறு நிகழும்? அமூர்த் தப் பொருளுக்குச் சங்கிரமணம் (பற்றுதல்) உண்டென்பது உல கானுபவத்திலும் இல்லை; வித்துவான்கள் கூற்றிலும் இல்லை. (உகஇ)

(அ—கை) இனி, தீபத்திற்கும் ஜாதிக்கும் சங்கிராந்தியை ஒத்துக்கொண்டு சமாதானங் கூறுகின்றார்.

(உஉ) ஜாதியிலும் தீபத்திலும் குணத்தன்மை இல்லை யாகையால், அவற்றைத் திருட்டாந்தமாகக் கூறியது பயனற்ற தாகும் என்பதாம்.

(உரை) சங்கிராந்தி சித்திப்பதின் பொருட்டு (தாட்டாந்திக மான சர்வஞ்ஞத் தன்மை முதலியவை குணங்களாகையால்) குணப்பொருளாயும் சங்கிரமிக்கக்கூடியதாயும் உள்ள திருட்டாந்தம் சங்கிராந்தி வாதியால் காட்டத்தக்கது. ஜாதிக்கும் தீபத்திற்கும் சங்கிராந்தியைக் கொள்ளினும், அவை குணங்களாகாமையால், அவற்றைத் திருட்டாந்தமாகக் கூறியது பயனற்றதாகுமென்பது கருத்து. (உஉ)

(அ—கை) சங்கிராந்தி வாதியால் கூறப்படும் பிறிதொரு திருட்டாந்தத்தையும் மறுக்கின்றார்.

(உ௩) கேதார தீர்த்தத்தின் சங்கிராந்தியானது பொருத்தமுடையதே; அது திரவியமாயிருத்தலால், சித்தனுடைய சத்திபோலும். திரவியத்திற்றான் சங்கிரமிக்கக்கூடிய சத்தி (உண்டென்பது) கூறப்பட்டிருக்கின்றது என்பதாம்.

(உரை) கேதாரமென்னும் பெயருடைய தீர்த்தத்திற்கு அந்தத் தீர்த்தத்தை உபயோகிக்கும் புருடனுடன் சார்ந்து உண்ணும் பிறிதொரு புருடனிடத்தில் திரவியமாயிருத்தல்பற்றிச் சங்கிராந்திப் பொருத்தமுடையதே ஆகும். இதற்குச் சித்தனுடைய சத்தியைத் திருட்டாந்தமாகக் கூறுகின்றார். சித்தனுடைய சத்தியோவெனில், சித்தனைவிட்டு மிகத் தூரதேசத்திலிருந்தும் அவனுடைய ஆணையால் அவனது கையையே வந்து பற்றுகின்றது; திரவியங்களினுடைய சத்திகள் மனத்தால் எண்ணத்தகாதவையாயிருக்கின்றமையால். அதுபற்றியே, மிக வியக்கத்தக்க சித்தனுடைய சத்தியென்னும் திருட்டாந்தத்தைக் கொண்டு திரவியத்திற்குச் சங்கிராந்தி உண்டென்பதை அனுமானத்தால் சாதிக்கின்றமையால், இவ்விடத்தில் கேதார தீர்த்தமென்னும் சொல்லுக்கு வயலிலுள்ள நீர் என்று பொருள்கொள்ளுதல் கூடாது; அந்த வயல் நீரின் சங்கிராந்தியானது பிரத்தியக்ஷத்தால் அறியப்படுதலால் என்க. இவ்வாறே பிரத்தியக்ஷத்தால் சித்தித்த பொருளில் அனுமானம் பிரமாணமாகின்றதில்லையென்று பெரியோர்களும் கூறியிருக்கின்றனர். (உஉ)

(அ—கை) இவ்வாறு சங்கிராந்தி வாதிக்கு ஒருவிதமான திருட்டாந்தமும் கூற முடியாதுபோகவே, இனி, சித்தாந்தத்தில் சித்தித்த பொருளையே திருட்டாந்தமாகக்கொண்டு அவன் செய்யும் பூருவபக்ஷத்தைக் கூறுகின்றார்.

(உச) குணமாயுள்ள சைதன்னியத்திற்கு அசித்தான சடப்பொருள்களிடத்து இருப்பு கொள்ளப்பட்டிருக்கின்றது, கொள்ளப்படவில்லையாயின், அந்தச் சடப்பொருளைச் செய்வதில் பிரவிருத்தி உண்டாகாது என்பதாம்.

(உரை) சேதன சத்தி (ஞான சத்தி) குணமாயிருந்தும் அதற்கும் சடப்பொருள்களிடத்து இருப்பு உங்களாலும் கொள்ளப்பட்டிருக்கின்றது. அவ்வாறு கொள்ளப்படவில்லையாயின், அறிவுக்கு விடயமாகாத சடப்பொருளில் இது செய்யத்தக்கதென்னும் பயனையுடைய பிரவிருத்தியானது உண்டாகாது. ஆகையால், காரியத்தைச் செய்யும் கருத்தாவினிடத்தும் காரியமாகிய செயப்படு பொருள்களினிடத்தும் ஞானக்கிரியைகளுக்கு இருப்புகொள்ளத் தக்கது என்பது பெறப்படும். சைதன்னியத்தால் சாரப்படாத (அறியப்படாத) சடப்பொருளுக்குத் தொழிற்படுதற்குச் சத்தியின்மையால், எல்லாப் பொருள்களுக்கும் அதனதன் சொரூப மாத்திரத்தில் இருப்பு இருப்பினும், ஒன்றுடன் ஒன்றின் சேர்க்கையறிவு (மண்ணுடன் கடத்தின் சேர்க்கையறிவு) இல்லையாயின், அந்தப் பொருள்கள் சொரூப மாத்திரத்தில் அறியப்பட்டிருந்தும், அவற்றிற்குக் காரியத்தன்மை ரூபமான விசேடம் இல்லை. உலகத்திலும் குயவனது சத்தியால் வியாபிக்கப்பட்ட மண் முதலிய காரணமான சடப்பொருளுக்கும் விசேடங் காணப்பட்டிருக்கின்றது. ஆகையால் சடப்பொருளிடத்தும் சிற்சத்தி நிச்சயமாக இருக்கின்றதென்று (சங்கிரமிக்கின்றதென்று) கொள்ளல் வேண்டும். (உச)

(அ—கை) இந்தத்திருட்டாந்தத்தால் சங்கிராந்தி வாதி கொண்ட பொருளைக் கூறுகின்றார்.

(உரு) இந்த யுத்தியால் சித்தனிடத்திலும் பரமசிவனது குணங்களுக்குப்பற்றுதல் உண்டென்பது கொள்ளப்படுகின்றது.

சித்தனிடத்தில் சித்தனுதற்கு முன்னில்லாமல் இப்பொழுது மிகுதியாக் காணப்படுதலால் என்பதாம்.

(உரை) இவ்வாறன யுத்தியால் சித்தனிடத்திலும் பரமேசுவரனுடைய குணங்களுக்கு இருப்பு (சங்கிராந்தி) கொள்ளத்தக்கது. சித்தனிடத்தில் முத்திக்கு முன்னர் இல்லாமல் என்பதனால்தானுகவே இவ்வித குணம் இருக்கின்றதாகக் காணப்படவில்லை என்று கூறுகின்றனர். முத்திய பசு நிலையில் அளவிலடங்கிய (சிறிதான) அறியுந்தன்மை கருத்திருத்தன்மை முதலிய குணக்கூட்டம் அவனுக்கு இருந்தது. பிந்திய முத்தி நிலையில் அந்தக்குணக் கூட்டம் பரவசிவனுடைய குணக் கூட்டத்திற்கு நிகராய் அளவிலடங்காததாய் இருக்கின்றதென்பது சாத்திரங்களில் கேட்கப்படுகின்றது. முன்னர் அளவிலடங்கிய அந்தக் குணக்கூட்டமே முத்தியில் அளவிலடங்காதிருக்கின்றது என்று கொள்வோமெனில், அதுபொருந்தாது ; அளவிலடங்கியது அளவிலடங்காததாக ஆகாது ; அன்றியும், அந்தக்குணக் கூட்டத்திற்குப் பரிணமிக்குந் தன்மையும் நிகழுமாகையால். இவ்வாறன்றி அறியுந்தன்மை முதலிய குணக்கூட்டம் முன்னரில்லாமல் முத்திக்காலத்தில் புதிதாய் உண்டாகின்றது என்று கொள்வதும் பொருத்தமற்றது. ஆகையால் பாரிசேடத்தால் ஈசுவரனுடைய அறியுந்தன்மை முதலிய அளவிலடங்காத குணக்கூட்டமே முத்தியில் ஆன்மாவினிடத்துச் சங்கிரமிக்கின்றது (பற்றுகின்றது) என்றுதான் கொள்ளல் வேண்டுமென்பது (சங்கிராந்திவாதியாகிய) பாசுபத சைவர்களின் கொள்கை, (உ௫(

(அ—கை) இவ்வாறு சங்கிராந்தி வாதியின் கூற்றைக்கூறி இனி அக்கூற்றை மறுக்கின்றார்.

(௩௬) குணம் மாத்திரம் தனிமையாய்த்தனது குணிப் பொருளைவிட்டுப்பிரிந்து வேறு பொருளில் இருக்கின்றதில்லை. அன்றி குணிப்பொருளுடன் கூடிய குணத்திற்குப் பிறபொருளில் இருப்பு உபசாரமாயிருக்கின்றது என்பதாம்.

(உரை) தனது குணிப்பொருளை விட்டுத் தனிமையாய் ஞானக்கிரியாரூபமான குணமானது, அறிவிற்கு விடயமாயும்

சடமாயும் இருக்கும் பிற பொருளில் இருக்கின்றதென்று கொள்வது பொருந்தமற்றது. சடப் பொருள்களிலும் ஞானக்கிரியைகள் உள்ளனவாக ஒத்துக்கொண்டால், அவற்றிற்கும் கருத்திருத்தன்மையும் ஞாதிருத்தன்மையும் நிகழும். நிகழவே எல்லாப்பொருள்களும் ஈசுவரனால் அறியப்படுகின்றமையால், எல்லாச் சடப்பொருள்களும் சேதனங்களாகவும் சர்வேசுவரர்களாகவும் ஆகும். ஆகையால், ஞானக்கிரியா ரூபமான குணமானது குணிப்பொருளிலேயே இருந்துகொண்டு விகாரத்துடன் (வேற்றுமையுடன்) கூடிய பிற பொருள்களில்தான் (குணம்) முக்கியமா இல்லாவிடினும் அந்த அசேதனப் பொருள்களினுடைய விகாரத்திற்கு காரியரூபமாய் வேற்றுமைப்படுதற்கு தான் (குணம்) காரணமாயிருப்பதுபற்றி அப்பொருள்களில் இருப்பதாக உபசாரமாய்க் கூறப்படுகிறது. முக்கியமாய்க் கூறப்படுகிறதில்லை. சத்தியுடன் கூடியிருக்குந் தன்மைதான் காரணத்தன்மை ஆகும். கருத்தா, சத்தியுடன் கூடியிருந்தால் காரியம் நிகழ்கின்றது; கூடவில்லையாயின் காரியம் நிகழ்கிறதில்லை என்னும் உடன்பாடு எதிர்மறைகளால், சத்தியுடன் கூடியிருக்குந் தன்மையானது கருத்தாவினிடத்திருக்கின்றது. அந்தச் சத்தியைச் சடப்பொருள்களில் இருப்பதாகக் கொள்வதில் பயனில்லை. கருத்தாவினுடைய கிரியையும் செயப்படும் பொருளில் இருப்பதில்லை. அன்றி, கருத்தாவினுடைய கிரியையின் வலிமையால் செயப்படு பொருளினிடத்தில் அசைதல் தோன்றுகின்றமை பற்றி அந்தச் செயப்படு பொருளாகிய சடப்பொருள் கிரியையுடன் கூடியிருக்கின்றதாக உபசாரமாய்க் கூறப்படுகின்றது. (௨௬)

(அ-கை) ஞானக்கிரியாரூபமான குணம் சடப்பொருள்களினிடத்து இல்லை என்னும் இவ்விடயத்திற்குத் திருட்டாந்தங் கூறுகின்றார்.

(௨௭) சூடு என்னும் தீயின் குணமானது தீயினிடமிருந்து கொண்டு எவ்வாறு தண்ணீரில் புலப்படுகின்றதோ, அவ்வாறே ஈசுவரனுடைய குணங்களான ஞானக்கிரியைகளும் அவனிடமிருந்துகொண்டு அசித்தான சடப்பொருள்களில் புலப்படுகின்றன என்பதாம்.

(உரை) சூடு என்பது * தீயின் சிறப்புக்குணமாகும். அந்தக் குணம் தண்ணீருக்குப் பொருந்தாது. அதற்குங் கொண்டால் ஐந்து பூதங்களுக்கும் கலப்பு என்னுங் குற்றம் நிகழும். பூமி முதலிய ஐந்து பூதங்களும் தரித்தல் முதலிய ஒவ்வொரு தொழில்களாலும், இன்றியமையாத ஒவ்வொரு குணங்களாலும் வேறுவேறாகப் பிரிக்கப்படுகின்றன. ஆகையால் சூடு தண்ணீரின் குணமாக ஆகாது. அது தீயிலேயே இருக்கின்றது. தீயின் சேர்க்கையால் தண்ணீரில் தோன்றுகின்றது. அந்தத் தண்ணீரில் தீயானது நமக்குப் புலப்படா திருந்துகொண்டு தனது குணமான சூட்டினால் தனது தொழிலான சுடுதலை எவ்வாறு செய்கின்றதோ, அவ்வாறே பரமசிவனுடைய குணமும் உணக்குப் (குணத்திற்குப்) பற்றுக்கோடான பரமசிவனிடம் இருந்துகொண்டே அசேதனங்களான பிறசடப் பொருள்களில் அனேகம் வேற்றுமைகளைச் செய்கின்றது. ஆகையால் சடப்பொருள்களில் பரமசிவனுடைய குணம் இருக்கின்றதென்பதில் பிரமாணம் இல்லை. (௨எ)

(௨அ) ஆவேச பக்கமும் அதிட்டான பக்கமும் சங்கிராந்தி பக்கத்தினும் சிறந்தனவாகும்; உற்பத்தியற்றது நாசமடையாதாகையால் என்பதாம்.

(உரை) ஆவேச பக்கமும், "கருத்திருத்தன்மை இருப்பினும் ஏவப்படுந்தன்மை இருக்கின்றதென்னுமிடத்து"க் கூறப்படும் அதிட்டான பக்கமும் சிறந்தனவாகும். உற்பத்தியற்றது நாசமடையாது என்பதனால் அந்த இரண்டு பக்கங்களிலும் குற்றமில்லை யென்று கூறுகின்றார். உற்பத்தி யுடையதுதான் நாசமடையும். (சங்கிராந்தி பக்கத்தில் உற்பத்தி கொள்ளப்படுமாகையால் அது நாசமடையும் என்பது கருத்து.) (௨அ)

(அ-கை) எதனாலெனில், (ஆவேச பக்கம் அதிட்டான பக்கம் சங்கிராந்தி பக்கம் என்னும் மூன்று பக்கங்களும் ஒன்றெனக் கருதி அதற்குக் காரணம்) கூறுகின்றார்.

---

* தீயின் பொதுக்குணம் செம்மை முதலியன.

(உகூ) அவ்விடத்திலும் பரமசிவன் தான் தனது குணத்தால் எல்லாவற்றையும் அறிகின்ருன்; செய்கின்ருன். சித்தனுனவன் செய்கின்ருனில்லை. சித்தனிடத்தில் அன்னியனுயிருக்குந் தன்மை அறியப்படுதலால் என்பதாம்.

(உரை) ஆவேச பக்கத்தில் மாத்திரமன்று சங்கிராந்தி பக்கத்திலும் பரமசிவன் சித்தனேடு கூடியிருந்தும் அவனே (பரமசிவனே) தனது குணங்களால் எல்லாவற்றையும் அறிகின்ருன்; எல்லாவற்றையும் செய்கின்ருன்; சித்தன் செய்கின்ருனில்லை. ஒருவனுடைய தொழிலால் பிறிதொருவன் அறிகின்றவனுகவோ செய்கின்றவனுகவோ உலகத்தில் காணப்படவில்லை யாகையால் என்க. (உகூ)

(௩௦) அந்தப் பரமசிவனுடைய குணத்தின் சேர்க்கையால் சித்தனும் சர்வஞ்ஞனுகவும் சர்வ கருத்தாவாகவும் ஆகின்ருன் (இது பூர்வ பக்ஷ கூற்று) எனில், அவ்வாருயின், சைதன்னியமற்ற சடப்பொருளுக்கும் சர்வஞ்ஞத் தன்மை நிகழக்கூடும் என்பதாம்.

(உரை) அந்தப் பரமசிவனுடைய குணத்தின் சேர்க்கையால் (சித்தனும்) எல்லாவற்றையும் அறியவும் செய்யவும் சமர்த்தனுகின்ருன் எனில், அது பொருந்தாது. சடப்பொருள்களான மாயை முதலியவற்றிற்கும் பரமசிவனுல் அறியப்படுந்தன்மை இருத்தலால் அவனது குணத்தின் சேர்க்கை இருப்பது பற்றி அவற்றிற்கும் சர்வஞ்ஞத்தன்மை நிகழவேண்டும்.

(௩௧) சம்சார நிலையில் ஞானக்கிரியைகள் ஆன்மாக்களுக்கு இல்லாமையால் என்று சங்கிராந்தி வாதத்திற்கு அனுகுணமாய் கூறப்பட்ட யாதொரு ஏது உண்டோ அது பொருந்தாது. ஞானக்கிரியைகள் அந்தச் சம்சார நிலையிலும் துணையின் தகுதிக்கேற்பத் தகுதியடைந்தனவாய் வெளிப்படையாய்க் காணப்பட்டிருத்தலால் என்பதாம்.

(உரை) சம்சாரநிலையில் ஆன்மாவுக்குச் சர்வஞ்ஞத்தன்மை முதலிய சாமர்த்தியம் இல்லையாகையால் என்று முன்னர்க் கூறப் பட்ட யாதொரு ஏது உண்டோ, அது பொருத்தமற்றது. அந்த ஆன்மாக்களுக்குச் சம்சார நிலையிலும் ஞானக்கிரியைகளைத் தோற்றுவிக்கும் காரிய காரணங்கள் (சரீர இந்திரியங்கள்) இருத் தலால் ஞானக்கிரியைகளும் காணப்படுகின்றன. ஆன்மாவைத் தோற்றுவிக்கத்தக்க சரீரம் எவ்விடத்தில் இருக்கின்றதோ, அவ் விடத்திலேயே ஆன்மா அறியப்படுவதுபற்றி, ஆன்மாவிற்கு வியாபகத்தன்மை அறியப்படுமாறுபோல, ஆன்மகுணங்களுக் கும் உள்பொருளாயிருக்குந் தன்மையும் வியாபகத்தன்மையும் சித்தித்தனவென்பது கருத்து. முன்னரே சித்தித்த கடமுத லியவற்றைத் தோற்றுவிக்கும் சூரியப் பிரகாசமும், முன்னரே சித்தித்த ஞானேந்திரியங்களின் சத்தியைத் தோற்றுவிக்கும் சித்தனுடைய அஞ்சனமும் (மையும்), முன்னரே சித்தித்த கன் மேந்திரியங்களின் சத்தியைத் தோற்றுவிக்கும் சிற்பத்தின் அறி வும் (தோற்றமும்,) சித்தத்தைவசப்படுத்தும் யோகாப்பியாசமும் ஆகிய இவற்றின் பெருமையால் பெருமையை அடைந்த அறிவுத் தன்மை கருத்திருத் தன்மைகளைக் கண்டிருக்கின்றோம். அவ் வாறே ஆன்மாவிற்குச் சர்வஞ்ஞத் தன்மையும் சர்வ கருத்திருத் தன்மையும் முன்னரே உள்ளனவாகும். (௯க)

(அ—கை) இதனால் கிடைத்த பொருள் என்னை என்பார்க் குக் கூறுகின்றார்.

(௯௨) முத்தியில் எல்லாப் பொருள்களையும் அறியும் ஈசுவர சம்பந்தமான சத்தியே துணையாயிருக்கின்றமையால் முத்தான் மாவுக்கு நிகழ்கின்ற ஈசுவர சமத்தன்மை யாரால் தடைசெய்யப் படும் என்பதாம்.

(உரை) முத்திக்காலத்தில் ஈசுவரரூபமான மிகச்சிறந்த துணை யின் சேர்க்கையால் ஆன்மாவிற்கும் ஈசுவரத்தன்மை சித்திப்பது பற்றி ஈசுவரனுக்கு நிகரான குணங்களின் விளக்கத்தையுடைய அந்த ஆன்மாவிற்கு ஈசுவர சமத்தன்மை உண்டாகின்றது. அது

எவரால் தடை செய்யப்படும். மறைத்தலைச் செய்யும் பொருளின் சேர்க்கையாலும், அப்பொருளின் சேர்க்கை இன்மையாலும், ஆன்மாவினுடைய குணங்களுக்கு விளக்கமும் விளக்கமின்மையும் நிகழ்வனவாகும். அன்றி, சொரூப வேற்றுமையால் நிகழ்வன அல்ல; பரிணமம் என்னும் குற்றம் நிகழுமாகையால், (ருஉ)

(அ—கை) இவ்வாறு தன்னுடைய பக்கத்தில் (சித்தாந்தி பக்கத்தில்) சங்கிராந்தி வாதியால் கூறப்பட்ட குற்றத்தைக் களைந்து சங்கிராந்தி வாதி பக்கத்தில் நிகழும் பிறிதொரு குற்றத்தைக் கூறுகின்றார்.

(ருரு) ஒரு பொருளினுடைய குணம் பிறிதொரு பொருளைப் பற்றுவதாயின், முன் பற்றுக்கோடான பொருளைவிட்டுத் தனித்துப் பற்றுகிறதாக உலகில் காணப்படவில்லை. அவ்வாறு பற்றுவதாயின், முன்பற்றுக்கோடாய் இருந்த பொருள் குணமற்றதாகும் என்பதாம்.

(உரை) * சூரியன் முதலியோருக்குச் சங்கிராந்தியானது முன்பற்றுக்கோட்டைவிட்டுத்தான் மற்றொரு பற்றுக்கோட்டில் காணப்பட்டு இருக்கின்றது. அதுபோல் இவ்விடத்திலும் பரமசிவனுடைய குணங்களுக்குச் சங்கிராந்தியைக்கொண்டால் அந்தக் குணங்களும் தமக்கு முன்பற்றுக்கோடாக இருந்த பரமசிவனை விட்டுப் பிறிதொருபற்றுக்கோட்டை அடையவேண்டும். அடையவே, முன்பற்றுக்கோடாக இருந்த பரமசிவன் சர்வஞ்ஞத் தன்மை முதலிய குணமற்றவனாக ஆவன். (ருரு)

(அ—கை) தீபப்பிரகாசமானது தனக்குப் பற்றுக்கோடான தீபத்திலிருந்துகொண்டே அந்தத் தீபத்திலும் பிறபொருளிலும் சங்கிரமிக்கின்றவாறுபோல, பரமசிவ குணங்களான சர்வஞ்ஞத் தன்மை முதலியனவும் சங்கிரமிக்கின்றன என்பார்க்குக் கூறுகின்றார்.

---

* சூரியன் ஒரு ராசியைவிட்டுத் தான் மற்றொரு இராசியைப் பற்றுகின்றமையால் சூரிய சங்கிராந்தி காணப்படுகின்றது. முதலிய என்றதனால் ஏனைய கிரகங்களைக் கொள்க.

(௩௪) ஒரு பற்றுக்கோட்டைவிட்டுப் பிறிதொரு பற்றுக்கோட்டை அடைவதே பரவுதல் (பற்றுதல்) என்று கொள்ளப்பட்டிருக்கின்றது. பரமசிவ குணத்திற்குப் பரிணாமம் இன்மையால் அதற்குப் பரவுதலைக் கொள்ளின் அனேக குற்றங்கள் நிகழும் என்பதாம்.

(உரை) தீபம் ஏற்றியபின்னர் தீபப்பிரகாசமானது தனக்குத் (பிரகாசத்துக்குத்) தடையான இருளை நாசம் செய்து ஒவ்வொரு இடங்களிலும் பரவுகின்றது என்பது, சலப்பிரவாகம் போல் ‡ பரிணமிக்குந் தன்மை இருப்பதுபற்றி அந்தப் பிரகாசத்திற்குப் பொருந்தமாயிருக்கின்றது. பரமேசுவர குணத்தையும் அவ்வாறு கொண்டால் பரிணாமமுடைய மண் முதலியன சடமாக உலகத்தில் காணப்பட்டிருத்தல் பற்றி அந்தக் குணத்திற்கும் பின்னர்க் கூறப்படுமாறு சடத்தன்மை முதலிய குற்றக் கூட்டம் நிகழுமென்க. (௩௪)

(௩௫) எவ்விதமாகவேனும் சங்கிராந்தியைக் கொள்ளினும் அந்தச் சங்கிராந்தியின் நிர்ணயமானது திரவியப் பொருள்களினிடத்து இருக்கின்றதாகத்தான் எல்லா அளவைகளாலும் சித்தமாயிருக்கின்றது. குணப்பொருள்களில் (சங்கிராந்தியானது) மாறுதலை அடைந்திருக்கின்றது என்பதாம்.

(உரை) இவ்வாறு விலக்கப்பட்ட யுத்திகளை உடையவனாக இருந்தும் சங்கிராந்தியைக் கொள்ளும் வாதி சங்கிராந்தியிலுண்டான ஆசை நீங்காதவனாக இருப்பின், அப்பொழுதும் குணங்களான ஐசுவரியம் முதலியவற்றால் நிகழுமென்று கூறப்படும் சங்கிராந்தியானது விரோதமுடையதே ஆகும். இவ்விடத்தில் திரவியப் பொருள்களுக்குத்தான் சங்கிராந்தி பொருத்தமாயிருக்கின்றது. உலகத்திலும் திரவியப் பொருள்களுக்குத்தான் சங்கி

‡ பரிணாமம் என்பது ஒரு நிலையைவிட்டுப் பிறிதொரு நிலையையடைதல். சங்கிராந்தி என்பது ஒன்றைப் பற்றுதல். பிரகாசத்தினிடத்தும் நீரினிடத்தும் ஒரு நிலையை விட்டுப் பிறிதொரு நிலையை அடைதலாகிய பரிணாமம் காணப்படுதலால் அவற்றிற்குப் பற்றுதலென்னும் சங்கிராந்தி பொருந்தும் என்பது காண்க.

ராந்தி பிரசித்தமாயிருக்கின்றது. குணங்களுக்குச் சங்கிராந்தி இல்லை. ஆகையால் ஈசுவர குணங்களுக்குத் திரவியத்தன்மை நிகழும் என்க. (௩௫)

(௩௬) சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றைச் சாதிப்பொருளாய்க் கொள்கின்றோம். அவ்வாறு கொள்ளின் இந்தக் குற்றம் நிகழாதெனில், அது பொருந்தாது. அந்தச் சாதியானது ஞான முதலிய குணங்களேயன்றி வேறன்று. திரவியமென்று கொள்ளின் ஞான முதலியவற்றிற்குப் பரமசிவன் பற்றுக்கோடென்று கூறியது மிகைபடக்கூறலென்னும் குற்றத்திற்கு இடனாகும் என்பதாம்.

(உரை) சர்வஞ்ஞத்தன்மை முதலிய குணங்கள் முத்தன் ஈசுவரன் முதலிய அனேக குணிப்பொருள்களில் இருத்தலால் அவற்றைக் குணசாதியாகக் கொள்கின்றோம். அந்தச் சாதிக்கு முத்தியடைந்த புருடனிடத்திலும் மல்லிகையின் குணசாதிக்குச் சங்கிராந்தி நிகழ்வதுபோல் நிகழ்கின்றது. நிகழவே, சங்கிராந்தியைக் கொள்வதில் யாதொரு குற்றமும் இல்லை என்ற சங்கிராந்திவாதியினுடைய கொள்கையை அந்தச் சாதியானது ஞான முதலிய குணங்களேயன்றி வேறன்று என்பதனால் மறுக்கின்றார். குணங்களுக்குச் சங்கிராந்தியானது உலகத்தில் காணப்படவில்லை. ஆகையால் இவ்வாறு கூறுதல் பொருந்தாதென்பது கருத்து. புதிய மல்லிகை முதலியவற்றின் குணங்கள் * பிறபொருளில் புதிதாய்த் தோன்றுகின்றனவேயன்றிச் சங்கிரமிக்கவில்லை. ஆயினும், இந்தச் சங்கிராந்தி வாதியானவன் சர்வஞ்ஞத்தன்மை முதலிய குணங்களுக்குப் பற்றுக்கோடான பரமசிவனென்னும் திரவியத்தின் ஒரு பாகத்திற்குச் சங்கிராந்தி என்று கொள்வானெனில், அதுவும் பொருந்தாதென்று, "திரவியமென்று கொள்ளின்" என்பதனாற் கூறுகின்றார். இவ்வாறு ஞானமுதலிய குணங்களுக்குத் திரவியத்தன்மையைக் கொள்ளின் அவற்றிற்குப்

* பிறபொருளில் மல்லிகை முதலியவற்றின் துளிகளின் சம்பந்தத்தால் மண முதலிய குணங்கள் புதிதாய்த் தோன்றுகின்றன என்பது கருத்து

யற்றுக்கோடாகப் பரமசிவனைக் கூறுவது மிகை என்னும் குற்ற முடைமையால் பிரமாணமற்றதாகின்றது. எவ்வாறெனில், ஈசுவரனுக்குப் பல வேறுவகைப்பட்ட அநேக திரவியப் பொருள்களின் கூட்டமாயிருக்குந் தன்மையையும், அவற்றிற்கு ஒவ்வொரு முத்தனிடத்துச் சங்கிராந்தியையும், அந்த முத்த னுக்கு ஞானமுதலிய குணங்களுக்குப் பற்றுக்கோடாயிருக்குந் தன்மையையும், இவ்வாறு அநேகங் கற்பிக்கவேண்டுமாதலின் (பிரமாணமற்றதாகுமென்க.) (கசு)

(அ-கை) சித்தாந்தியின் மோக்ஷத்தில் சங்கிராந்திவாதி கூறும் குற்றத்தைக் கூறுகின்றார்.

கஎ) இவ்வாறு குணங்களின் விளக்கமே மோக்ஷமென்று கொள்ளில், அந்த மோக்ஷமானது புருடனைக் கருத்தாவாக உடையதாயிருக்கின்றது. பரமசிவனால் செய்யப்பட்டதாக இல்லை. (இவ்வாறு சங்கிராந்திவாதி கூறுவன்) எனில், சங்கி ராந்தியைக் கொண்டால் மோக்ஷம் சம்புவான பரமசிவனைச் சார்ந் ததாக ஆகின்றது. புருடனைச் சார்ந்ததாக ஆகவில்லை. (இது சித்தாந்தி கூற்று) என்பதாம்.

(உரை) புருடனுடைய குணங்களே முத்திக் காலத்தில் விளக்கமடைகின்றன என்று கொள்ளில், "ஆன்மா அறியத் தகுந்தவன்" என்றவிடத்து ஆன்மாவுக்குக் கருத்திருத் தன்மை இருப்பதுபோல் உங்களாலும் மோக்ஷம் புருடனைக் கருத்தாவாக உடையது எனக் கொள்ளப்பட்டதாகின்றது; ஈசுவரன் கருத்தா வென கொள்ளப்பட்டதாகவில்லை. எதனாலெனில், புருடனிடத்து ஈசுவரசக்திக்குச் சம்பந்தம் இன்மையால் என்க. சம்பந்தம் இருப்பின் சங்கிராந்தியைக் கொண்டதாயிற்று. இவ்வாறு கூறும் சங்கிராந்தி வாதியைக் குறித்துச் "சங்கிராந்தியைக் கொண்டா" லென்பதனால் சித்தாந்தி கூறுவதாவது, உன் பக்கத்திலும் ஒரு வனும் முத்தனாகின்றானில்லை, எவ்வாறெனில், முன்னரே உள்ள பரமசிவ குணங்கள் புருடனிடத்துச் சங்கிரமிக்கின்றமைபற்றி மோக்ஷத்திற்குப் புருடனுடன் சம்பந்தமில்லை ஆகையால் என்க. (கஎ)

(அ—கை) என்பக்கத்தில் மோக்ஷத்திற்குப் பௌருடத்தன்மையும் சாம்பவத்தன்மையும் பொருத்தமடைகின்றனவென்று சித்தாந்தி கூற்றைக் கூறுகின்றார்.

(௩௮) பௌருடமென்பது புருடனைப் பற்றுக்கோடாக உடையது. சாம்பவமென்பது சம்புவான பரமசிவனால் செய்யப்பட்டது. இந்த இரண்டும் விளக்கம்கூறும் பக்கத்தில் பொருந்துகின்றன. சங்கிராந்தியில் எவ்வாறு பொருந்தும்? என்பதாம்.

(உரை) புருடன் என்னும் செயப்படுபொருளில் சமவாய சம்பந்தத்தால் இருத்தலாலும், பரமேசுவரனைக் கருத்தாவாகக் கொண்டிருத்தலாலும், எழுவாய் செய்யப்படுபொருள் என்னும் இரண்டு † காரகங்களின் சேர்க்கையால், மோக்ஷமானது பௌருடமென்றும் சாம்பவமென்றும் வேறுவேறாகக் கூறப்படுகின்றது. அன்னத்தினுடைய பாகம் தேவதத்தனுடைய பாகம் என்பவை போலும். (அன்னத்தினுடைய பாகம் என்பதில் அன்னம் செயப்படுபொருள். தேவதத்தனுடைய பாகம் என்பதில் தேவதத்தன் கருத்தா.) சங்கிராந்தியைக் கொள்ளவில்லையாயின் (புருடனுக்குக்) கருத்திருத்தன்மை பொருந்தவில்லை என்பது பொருத்தமற்றது. (௩௮)

(அ—கை) சித்தாந்தி பக்கமே சிரமமின்றிச் சாதித்தற்கு உரியதென்று கூறுகின்றார்.

(௩௯) விளக்கக்கூடிய துணைகளுடன் விளக்கமானது பிரசித்தமாயிருக்கின்றது. அந்த விளக்கத்தையே மோக்ஷத்திலும் கொள்ளுகின்றோம். அந்தவிடயத்தில் புதிதாக எங்களால் திருட்டாந்தம் ஒன்று கற்பிக்கப்படவில்லை என்பதாம்.

(உரை) ஆன்ம குணங்களுக்கு விளக்கமானது விளக்கக்கூடிய துணைகளுடன் சித்தமாயிருக்கின்றதென்பது முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. அதனையே மோக்ஷத்திலும் கொள்ளலாம். இது தான் திருட்டாந்தத்தை ஒட்டியிருக்கின்றது. நமது

† காரகம்—வினையை நிகழ்த்துவது.

(சங்கிராந்தி) பக்கத்திற் போல் திருட்டாந்தம் தேடிக்கொள்ள வேண்டியதாக இல்லை. (௩௯)

(அ—கை) சங்கிராந்தி வாதி கூற்றைக் கூறுகின்றார்.

(௪௦) ஆன்ம குணமானது முத்திக்கு முன்னரே அசுத்தமாகக் காணப்பட்டிருக்கின்றமையால், அக்குணத்தின் விளக்கம் முத்தியென்பது என்னுல் கொள்ளப்படுகிறதில்லை. நமது மதத்திலும் அசுத்தனுன ஆன்மா முத்தியில் சிறந்தவனுக எவ்வாறு கொள்ளப்பட்டிருக்கின்றான் என்பதாம்.

(உரை) தீபம் முதலியவற்றால் கடம் முதலியன விளக்கமடைவதுபோல், உள்பொருளானது அப்பொருளின் * பிரத்தியபிஞையால் விளங்குகின்றது. இவ்விடத்திலோ முத்திநிலைக்கு முன் புருடர்களுடைய குணமானது அசுத்தமாயும் சிற்சில பொருள்களை விடயமாகக் கொண்டதாயும் சித்தித்திருக்கின்றது. முத்திநிலையில் அதற்கு மாருக மிகப் பரிசுத்தமாயும், பரமேசுவரனுக்குச் சமமாயும் விளங்குவதாகக் கேட்கப்படுகின்றன. ஆகையால் சம்சார நிலையிலுள்ள குணத்துக்கும் முத்திநிலையிலுள்ள குணத்துக்கும் வேற்றுமை யிருப்பதால், முத்திநிலையிலுள்ள இந்தக் குணத்துக்கு முன்னரே அநுபவிக்கப்படுதல் இன்மையால் முத்தியில் விளக்கத்தை நாம் கொள்ளவில்லை யென்பது பூர்வ (சங்கிராந்திவாதி) பக்கம். நமது மதத்திலும் என்றற்றொடக்கத்தால் சித்தாந்தி கூறுகின்றார். அதாவது, நமது (சங்கிராந்தி) மதத்திலும் புருடன் அசுத்தனே. எதனுலெனின், பரமசிவனது குணங்களின் சங்கிராந்திக்கு உரியவனுயிருக்கின்றமையாலென்க. (௪௦)

(அ—கை) இந்த விடயத்தில் சங்கிராந்திவாதியின் அபிப்பிராயத்தைக் கூறி மறுக்கின்றார்.

* பிரத்தியபிஞையாவது, முன்னரே அநுபவிக்கப்பட்ட பொருள்களில், பின்னர் காட்சியால் நிகழும் அறிவு. அந்தத் தேவதத்தன் இவன் என்பது போல்வன.

(௪௧) அந்த ஆன்மாவானவன் தீக்ஷையால் சுத்தனாயிருக்கின்றானென்று (சங்கிராந்திவாதி) கூறின், ஆன்மாவினுடைய குணங்கள் சுத்தங்களாக ஏன் கொள்ளப்படவில்லை. தீக்ஷைக்குப் பின்னரும் ஆன்மாவானவன் அசுத்தமான குணங்களையே உடையவனாயிருக்கின்றான். ஆகையால் எல்லாவகையாலும் அவன் எவ்வாறு சுத்தனாயிருக்கின்றான் என்பதாம்,

(உரை) இந்த ஆன்மாவானவன் அசுத்தனாயிருந்தும் சுத்தஞ் செய்கின்ற தீக்ஷை முதலிய ஈசுவரனுடைய தொழிலால் சுத்தஞ் செய்யப்படுகின்றவனாக உங்களால் கொள்ளப்படுகின்றான். படவே, அவனது குணங்கள் ஏன் சுத்தங்களாய் எல்லாப் பொருள்களையும் விடயமாகக் கொண்டிருக்கவில்லை. சுத்தமான குணங்கள் ஆன்மாவினிடத்து முத்திக்கு முன்னர் இல்லையென்று கூறுதல் பொருந்தாது. * இருக்கின்றன. இருந்தும் அஞ்ஞானத்தால் மறைப்புண்டிருத்தலால் விளங்கவில்லை. அஞ்ஞான ரூபமான மறைப்பு இருள் நீங்குவதுபோல் நீக்கமடையும்பொழுது அக்குணங்கள் விளக்கமடைகின்றன. கலை முதலிய தத்துவங்களின் நீக்கத்தாலும், அவற்றின் சம்பந்தத்தாலும் குணங்களுக்கு நிகழ்ந்த சுத்தி அசுத்தி யென்னும் இவை அக்குணங்கள் என்றுஞ் சுத்தங்களாயிருந்தன வென்பதை மறுக்கமாட்டா. ஆகையால் குணங்கள் விளக்கமடைகின்றன என்னும் பக்கத்தைத் தள்ளுதல் பொருத்தமற்றது. அணுவானவன் என்றதற்றொடக்கத்தால் சங்கிராந்தி பக்கத்தில் எக்காலத்தும் சுத்தி நிகழ்கிறதில்லையென்று கூறுகின்றார். பசுநிலையில் ஆன்மா எவ்வித குணமுடையவனாயிருக்கின்றானோ, அவ்வித அசுத்தகுணமுடையவனாகவே முத்திநிலையிலும் இருக்கின்றான். முத்திநிலையில் அவனுடைய குணங்களுக்கு ஒருவிதமான விசேடமும் உங்களால் கொள்ளப்படவில்லை. ஆகையால் ஆன்மா எவ்வாறு சுத்தனாயிருக்கின்றான். பெத்தமுத்தியிரண்டினும் சுத்தனாகின்றானில்லை. (௪௧)

(அ—கை) ஆன்மாவுக்கும் ஆன்ம குணங்களுக்கும் சுத்தியைக் கொள்ளாவிடினும், ஈசுவர குணங்களின் சங்கிராந்திக்குப்

---

* சிவஞானம் அநாதியே பிரிப்பின்றி நிற்றலால் சுத்த குணங்கள் ஆன்மாவிற்கு முத்திக்கு முன்னரே உண்டென்பது கருத்து.

பற்றுக்கோடான திரவியம் (ஆன்மா) மாத்திரத்துக்கே சுத்தி எங்களால் கொள்ளப்பட்டிருக்கின்றதென்னும் விடயத்தில் பரிகாசமாக விடை கூறுகின்றார்.

(சஉ) நீங்கள் திரவியப்பொருளிலேயே பிரியமுள்ளவர்களாக அறியப்பட்டிருக்கின்றீர்கள். குணத்தில் பிரியமுள்ளவர்களாக அறியப்படவில்லை. கணப்பொழுதாவது புருடன் சிவனைச் சார்ந்தவனாகக் கூறப்பட்டானில்லை. உன் சாமர்த்தியம் நன்றாயிருக்கின்றது என்பதாம்.

(உரை) இவ்வாறு கூறியதன் கருத்தாவது—ஆன்மாவாகிய திரவியத்துக்குப் பரமசிவனது குண சங்கிராந்தியைக் கொண்டாலும், அப்பொழுது அசுத்தங்களான ஆன்மாவினது குணங்கள் இருக்கின்றனவா? இல்லையா? இல்லையெனில், அது பொருந்தாது. முத்தியில் ஆன்மா ஞானக்கிரியைகளற்றுப் பாடாணம் போலிருக்கின்றானென்னுங் கொள்கையை மறுக்கப்போகின்றோமாகையால். இருக்கின்றனவென்னில், அந்த ஞானக்கிரியைகள் முன்னர்ச் சம்சார நிலையில் இருந்தவாறுபோல் சிலவற்றை விடயங்களாகக் கொண்டிருக்கின்றனவா? அல்லது எல்லாவற்றையும் விடயங்களாகக் கொண்டிருக்கின்றனவா? சிலவற்றை விடயங்களாகக் கொண்டுள்ளனவென்னில், அப்பொழுது முத்தியிலும் ஆன்மா பசுவாய் அசுத்தனாயிருக்கின்றானென்று கூறினதாயிற்று. ஆனால் பரமசிவ குணங்களின் சங்கிராந்தியால் எல்லாவற்றையும் விடயமாகக் கொண்டிருக்கின்றனவென்னின், அப்பொழுது எங்கள் கொள்கையான குண சுத்தியே கூறப்பட்டதாயிற்று. ஆகவே, திரவியமான ஆன்மாவுக்கு மாத்திரம் சுத்தி நிகழ்வதில் பிரியமும், குணங்களுக்குச் சுத்தி நிகழ்வதில் அப்பிரியமும் உங்களுக்கு எவ்வாறு பொருந்தும்? பெரியோர்களுக்குக் குணங்களில் அன்பைச் செலுத்துவதுதான் நீதியாகும். இது பரிகாசம். "கணப்பொழுதாவது" என்றதொடரக்கத்தால் சங்கிராந்தி வாதியின் மீது பிறிதொரு குற்றத்தையுங் கூறுகின்றார். (எங்களால்) ஒருகணமாவது புருடன் பரமசிவனுடைய பரிணாமமாகக் கொள்ளப்படாமையால் முத்தியில் பரமசிவனுடன் ஐக்கிய

மாதலில்லையென்பதை மறந்துவிட்டீர்களா? முத்தியில் பரமசிவ குணங்களை சங்கிரமிக்கின்றமையால் பரமசிவனுடன் ஐக்கியம் (உங்களால்) கொள்ளப்பட்டதாயிற்றென்பது கருத்து. * (௪௨)

(அ—கை) பிரதீபநிர்வாண வாதிகளுடைய அறிபவன் ரூபமான ஆன்மாவாகிய அறிவுக்கும் நாசத்தைக் கொள்ளும் சர்வ நாச பக்கத்தை மறுக்கின்றார்.

(௪௩) இளமைப் பருவம் காளைப் பருவங்களில் அநுபவிக்கப்பட்ட பொருள்களைக் கிழவன் நிச்சயமாய் நினைக்கின்றான். ஆகையால் பிறப்பு இறப்புக்களின் நடுவில் புருடன் நிலைபெற்றவனாயிருக்கின்றான் என்பதாம்.

(உரை) இளமை முதலிய பருவங்களின் அநுபவத்தால் புருடன் அவற்றை நினைக்க உரியவனாகுமிடத்து அவனிடம் அவற்றின் நினைவு காணப்படுதலால் ஆன்மா இரண்டு பருவங்களிலும் நிலைபெற்றவனாகக் கொள்ளப்படுகிறான். உன்னுடைய கொள்கையின்படி கணந்தோறும் வெவ்வேறான ஆன்மாவே அநுபவிக்கின்றானென்று கொள்ளின், அப்பொழுது சைத்திரனால் அநுபவிக்கப்பட்ட பொருளில் மைத்திரனுக்கு நினைவு நிகழாதவாறுபோல் ஒரு ஆன்மாவால் நினைக்கப்பட்ட பொருளில் பிறிதொரு ஆன்மாவுக்கு நினைவு நிகழ்தல் கூடாது. உலகத்திலே ஒரு காலத்தில் அநுபவிக்கப்பட்ட பொருளில் பிறிதொரு காலத்தில் நினைவு காணப்படுகின்றது. ஆகையால் ஆன்மாவுக்கு நிலைத்தலைக்கொள்ளல் வேண்டும். (இனி பூர்வ பக்ஷி கூற்று) ஆன்மாவை நிலைத்த பொருளெனக் கூறுகின்ற உம்மாலும் (சித்தாந்திகளாலும்) அநுபவம் நினைவு என்னும்

---

* எது எதனில் நின்று பரிணமிக்குமோ அது அதனில் ஐக்கியத்தை யடையும். கடம் மண்ணில் நின்று பரிணமித்து மண்ணில் ஐக்கியத்தையடைவது போலும். சித்தாந்தத்தில் ஆன்மாவைச் சிவனுடைய பரிணாமமாகக் கொள்கிறதில்லை. ஆகையால் முத்தியில் ஐக்கியத்தையுங் கொள்கிறதில்லை. சங்கிராந்தி மதத்திலோ ஐக்கியங்கொள்ளப்பட்டதாயிற்று. இது பொருத்தமற்றதென்பதாம்.

இவற்றிற்கு வேற்றுமை கொள்ளப்பட்டிருக்கின்றது. உமக்கும் நினைவே அநுபவமாகாது. ஆயின் சித்தத்தின் தொழில்களனைத்தும் ஒன்றுதல் வேண்டும். (நினைவும் அநுபவமும் சித்தத்தின் தொழிலாதலால் இவ்விரண்டனையும் ஒன்றென்று கூறின், இச்சை முதலிய சித்தவிருத்தி யனைத்தையும் ஒன்றென்று கூறல் வேண்டும்). ஆகையால் நினைவும் அநுபவமும் வேறென்றே கொள்ளல் வேண்டும். அவ்விரண்டும் வேறு வேறாயிருந்தும் முன்னரே நிகழ்ந்த அநுபவ விருத்தியால் உண்டான சித்தத்தின் வாசனையால் இப்பொழுது கிழவனுக்கு முன் அநுபவத்தை விடயமாகக் கொண்டாவது, அல்லது அநுபவிக்கப்பட்ட பொருளை விடயமாகக் கொண்டாவது நினைவு நிகழ்கின்றது. வாசனையைச் சித்தத்திற்குக் கொள்ளாது ஆன்மாவிற்குக்கொள்ளக்கூடாது. கொள்ளின் ஆன்மாவிற்குப் பரிணாமம் என்னும் குற்றம் நிகழும். சைத்திரனுடைய சித்த விருத்திக்கும் மைத்திரனுடைய சித்த விருத்திக்கும் ஒன்றுக்கொன்று வாசனையை உண்டுபண்ணும் காரணத்தன்மை கிடையாது. ஒருவனுடைய சித்த விருத்தியில் நிகழ்ந்த அநுபவத்திற்குத்தான் வாசனையை உண்டுபண்ணும் தன்மை இருத்தலால், அவ்வாசனையி னாற்றான் நினைவு தோன்றுமென்பது நம்மால் (சித்தாந்திகளால்) கொள்ளப்பட்டிருக்கின்றது. அவ்வாறாகவும் நினைவிற்கும் அநுபவத்திற்கும் எவ்வாறு அபேதம் கூறமுடியும்.

சித்த விருத்தியினும் வேறாயுள்ள ஆன்மாவிற்குத்தான் † அபேதம் சாதிக்கப்படுகின்றதெனில்; அது, பொருந்தாது. சித்த விருத்தியினும் வேறாக ஆன்மா ஒன்று அறியப்படவில்லை. ஒரே அறிவே சந்தோஷம் துக்கம் முதலிய அநேக ரூபமாகக் காணப்படுகின்றதாகையால் என்க. சித்த விருத்தியான அறிவினும் வேறாக ஆன்மா அனுமானத்தினால் சித்திக்கின்றான். அந்த ஆன்மாவிற்கு அபேதம் கூறப்படுகின்றதெனில், அதுவும் பொருத்தமற்றது. அவ்வாறு அறியப்படாத அந்தப் பொருளோடு ஒரு பொருளுக்கும் உடன் நிகழ்ச்சியின்மையாலென்க.

† முன்னுள்ள ஆன்மாவே பின்னும் இருத்தல்பற்றி அபேதம்.

(அஃதாவது அந்த அனுமானத்திற்குத் திருட்டாந்தம் இல்லை என்றபடியாம்) ஆனால் சித்த ரூபமான அறிவினும் வேறாக ஆன்மாவைக் கொள்ளவில்லையாயின், நினைவு என்னும் தொழில் நிகழாதாகையால், நினைவுத் தொழில் நிகழ வேண்டுவது பற்றி அருத்தாபத்திப் பிரமாணத்தால் ஆன்மா கொள்ளப் படுகின்றான் எனில், அதுவும் பொருத்தமற்றது. எதனாலெனில், நினைவு என்னும்தொழில் நம்மால் மேலே கூறியவாறு (வாசனைபற்றி) நிகழ்கின்றதாகையால் என்க. அன்றியும் அந்த ஆன்மாவை அனுமானம் செய்பவன் எவன் என்று கூறல் வேண்டும். சித்தமென்று கூறமுடியாது. சித்தத்தைச் சடப்பொருளாகக் கொண்டிருத்தலால் என்க. சித்தம் சடமாயினும் சேதனத்தின் சேர்க்கையால் சேதனமாயிருக்கின்றது எனில், அது பொருந்தாது. சடப்பொருளுக்கு அறிவுப் பொருளின் சேர்க்கையால் அறிவு தோன்றுதலேயன்றிச் சடப் பொருளே அறிவுப் பொருளாக ஆகின்றதில்லை. ஆகுமெனில், (சித்தமே) பிரகாசத்தை செய்கின்றமையால் அதுவே ஆன்மாவாக ஆகின்றது. வேறு ஆன்மாவால் பயனில்லை. அனுமானம் செய்யப்பட்ட ஆன்மாவிற்கும் ஆன்மத்தன்மை பொருத்தமற்றது.

பிரகாசப்பொருளை ஆன்மாவாகவும் பிரகாசம் செய்யப்படும் பொருளை ஆன்மாவிற்கு வேறு பொருளாகவும் கொள்ளல் வேண்டும். எது தானாகவே பிரகாசிக்கின்றதோ அதுவே ஆன்மாவாகும். எது அதனால் பிரகாசம் செய்விக்கப்படுகின்றதோ அது அதற்கு வேறான பொருளாகும். ஆன்மப்பொருளுக்கும் பிற பொருளுக்கும் கலப்புக்கிடையாது. பிரகாசம் சித்திக்க வில்லையாயின் பிரகாசம் செய்விக்கப்படுவது சித்தியாது. ஆன்மா பிரகாசியாமலிருக்கும் பொழுது சித்தத்திற்குப் பிரகாசம் கொள்ளப்படவில்லையாகையால் என்க. இவ்வாறு ஆன்மப் பிரகாசம் இல்லாமை பற்றி உலகமனைத்திற்கும் குருட்டுத்தன்மை நிகழ்ந்துவிடும்.

இனி, ஆன்மா சித்திக்கவில்லையாயினும் சித்தத்திற்குப் பிரகாசம் உள்ளப்பாடுகின்றதெனில், தோற்றம் நாசமுடைய பிர

காச ரூபமான அந்தச்சித்த விருத்தியே ஆன்மாவாகக் கொள்ளப் படட்டும். மிகவும் * அசித்தமாயும் சித்தத்தினும் வேறாயும் உள்ள பிறிதொரு பொருளுக்கு நித்தியத்தன்மையைச் சாதித்த லால் பயன் என்னை! (இதுவரையும் பூர்வபக்கம்.)

(இனி, சித்தாந்தி கூற்று) அனுபவம் வேறு நினைவு வேறு என்பது உண்மையே. ஒரு சித்தவிருத்தியின் பிரவாகத்தில் நிகழ்ந்த அனுபவரூபமான விருத்தியின் சாமர்த்தியத்தால் உண்டு பண்ணப்பட்ட சித்தத்தின் வாசனையால் நினைவு உண்டாகின்றது; பிறனுடைய சித்தப்பிரவாகத்தின் வாசனையால் உண்டாகிறதில்லை என்பதும் உண்மையே. சித்தத்தினும் வேறாகச்சொயம் பிரகாசமான ஆன்மா ஒன்றில்லை என்பதும் உண்மையே. ஆயினும் அனுபவத்தை மறைத்து அனுபவமற்றதை நிலை நிறுத்துகின்றவர்களுடைய நிர்ணயமானது பொருத்தமற்றதாகும். அந்த அனுபவமே நிலை நிறுத்தப்படுவதாகும். எதனை மறைத்தால் எல்லாப் பொருள்களும் மறைக்கப்படுமென்பது நிச்சயமோ அந்தப்பொருள் மறைக்கப்படாத சொரூபமுடையது. அவ்வித மான சொரூபத்தை ஆராய வேண்டும். அது ஒவ்வொரு கணந் தோறும் முன் முன்னும், முற்கணம் பிற்கணங்களினும் வேறாயும், கணமாத்திர ரூபமான விளக்கமுடையதாயும் உள்ளதாகப் பிரகாசிக்கின்றதா? அல்லது எக்காலத்தும் ஒன்றாகவே பிரகாசிக் கின்றதா? அவற்றுள், எக்காலத்தும் நிலைத்த பிரகாச ரூபமாயும், எக்காலத்தும் அறியப்படும் பொருள் ரூபமான உபாதிகள் வெவ் வேறாயினும் தான் வேறாகாததாயும், பிராகபாவம் பிரத்துவம் சாபாவமற்றதாயும், (தோற்றம் நாசமற்றதாயும்) அனேக அளவை களால் அனேக விதங்களாய் நிகழ்ந்த சித்தவிருத்திகளின் தோற் றம் நாசங்களை அறிந்தும்தான் ஒன்றாயும், வெவ்வேறான விருத்தி ஞானங்களினும் குறையாத சோதிவடிவமாயும், சுழுத்தி முதலிய வற்றிலும் நாசமடையாத அறிவையுடையதாயும், எக்காலத்தும் சொயம்பிரகாசமாய் உணரப்படுதலால் ஆன்மாவெனக் கூறப் பட்டதாயும் உள்ள பொருளானது ஒவ்வொரு புருடர்களிடத் தும் சொயம் பிரகாசமாகச் சித்தித்திருக்கின்றது. ஆகையால்

* அசித்தம்—சித்திக்காதது.

வேறொன்றைச் சாதித்தலால் பயன் என்னை. அழிவற்றதாயும் ஒன்றாயுமிருக்கும் அந்த ஆன்ம அறிவையே பற்றிக்கொண்டு எல்லாப் புருடர்களாலும் பிற்காலங்களில் பயனைத்தரும் கன்மங்கள் செய்யப்படுகின்றன. ஆன்ம அறிவைக் கணிகமென்று கூறின், எல்லா அறிவுகளும் கணப்பொழுதுக்குப்பின் அழிகின்றமையால் மறுகணத்தில் இருப்பனவாகா ஆகையால் அறிவை முன்னிட்ட ஒரு விதமான செயலும் இல்லையாகும். ஆகவே, உலகத்தில் எவர் எதன் பொருட்டு எவ்விடத்தில் முயற்சிப்பார்கள். நான் இருக்கின்றேன்; இது என்னுடையது என்னும் அறிவைக்கொள்ளாத கணன்மவாதிக்கு ஒருவிடயத்திலும் பிரவிருத்தி பொருத்தமற்றது. இவ்வாறு கணன்மவாதங் கொண்டால் உலகம், இச்சையற்றதாயும், இது தள்ளத்தக்கது இது கொள்ளத்தக்கது என்னும் அறிவற்றதாயும், மயக்க அறிவு, விசாரம், போதம் முதலிய அறிவற்றதாயும், தோற்றமாத்திரமாய் இருப்பதாகும். இச்சை மயக்க முதலிய எல்லா அறிவுகளும் நிலைத்த பொருளான அறிபவனுடைய அறிவால் உண்டாகின்றமையால் மறைக்க முடியாததாயும், எல்லாச் செயல்களுக்கும் காரணமாயும், பிற்காலத்தில் நிகழ்கின்ற பயனைக் குறித்து முயற்சிக்குக் காரணமாயும் இருக்கின்ற ஆன்ம அறிவு எக்காலத்தும் விளங்கிக் கொண்டிருக்கின்றது. (இதுவரை சித்தாந்தி கூற்று.)

(இனி பூருவபக்ஷி கூற்று) அறிபவன் ஒருபமாயும், மாறாது ஒரே ரூபமாயும் இருக்கும் நிலைத்த அறிவுரூபப் பிரகாசம் எல்லாச் செயல்களுக்கும் காரணமாய் மறைக்க முடியாமலிருக்கின்றது என்பது உண்மையே ஆயினும் அந்தப்பிரகாசம் சொயம் பிரகாசமாகின்றதில்லை. அன்றி, அறிகின்ற கணிக அறிவுப்பிரவாகம் அனுபவிக்கப்படுங்கால் (ஆன்ம அறிவுடன்) அவற்றது ஒப்புமையைக்கண்டு மயங்கியவர்களால் ஆன்மப்பிரகாசத்தில் ஆரோபிக்கப்பட்டு விளங்குகின்றது. ஆகையால், கணிகமான அறிவின் பிரவாகந்தான் (ஆன்மப்பிரகாசமாக) ஒன்றாயிருக்கின்றது. இது மயக்க அறிவில்லை; விடயங்களின் வேறாய் * செயப்படுபொருளாய் ஐக்கியம் அறியப்படுகின்றமையால் என்க.

* செய்யப்படு பொருள்—கணிக அறிவு.

(இனிச்சித்தாந்தி கூற்று.) கணிக அறிவுப் பிரகாசத்தின் ஐக்கியமானது ஆத்மப்பிரகாசத்தில் ஆரோபிக்கப்பட்டது (கற்பிக்கப்பட்டது) எனில், அது பொருந்தாது. ஆரோபணம் செய்யும் கணிகான்மப்பொருள் கணப்பொழுதில் நசிக்கின்றமையால் எக்காலத்தும் விளங்குகிறதில்லையாகும். விளங்குமாயின், அதற்கு ஆன்மத்தன்மை பொருத்தமாகும். ஆரோபமானது *முன் பின் ஆராய்ச்சி ரூபமாகையால் நிலை பெற்ற அறிவால் உண்டுபண்ணத்தக்கது. ஆனால், கணிக அறிவு ரூபமான ஆன்மாவே ஒரே காலத்தில் முற்பிற்பாடான விரிவான விடயங்களை உடைத்தாயிருத்தலால் ஆரோபத்தைச் செய்கின்றதெனில், அது பொருந்தாது. (கணத்தில் அழிகின்றமைபற்றி) விடயச்சேர்க்கையற்றிருத்தலால், சுற்றப்படுகின்ற தீக்கட்டையின் தோற்றம் (விகற்பமாகாதவாறு) போல் விகற்பமுடையதாக ஆகின்றதில்லையாகையாலென்க. விடயச் சேர்க்கை இல்லாமை பற்றியே ஒரே காலத்தில் எல்லாப் பொருள்களையும் அறிகின்ற யோகியின் அறிவானது விகற்பமற்ற அறிவிற்கு ஒத்ததென்று கூறப்பட்டிருக்கின்றது. அந்தக்கணிக அறிவு விடயச் சேர்க்கையை உடையது என்று கூறின், அதுவும் பொருத்தமற்றது. எல்லா அறிவுகளும் கணிகமாகின்றமை பற்றி அவற்றிற்கு விடயங்களுடன் சேர்க்கையே பொருந்தாது ஆகையால் என்க. அதுபற்றியே முறையே தோன்றுகின்றனவாயும், அனேகமாயுமுள்ள கணிகங்களான விகற்ப அறிவுகளுக்கு ஆரோபத்தன்மை கூற முடியாது. கூறின் அவற்றிற்கு விகற்பத்தன்மை நீங்கிவிடும். அறிபவனான ஆன்மாவிற்கும் ஆரோபம் கூற முடியாது. விகற்பமற்ற ஆன்மாவினிடத்து ஆரோபத்தைச் செய்தல் ரூபமான விகற்பம் நிகழாமையால் என்க. அதுபற்றியே நானென்னும் அறிவிற்கு விடயமாகவும் ஆன்மா கொள்ளப்படவில்லை. அன்றி, நானென்னும் அறிவு ரூபப்பிரகாச வடிவமாய்க் கொள்ளப்படுகின்றான். அப்பொழுதும் நானென்னும் அறிவுப் பிரகாச ரூபனாய், நிலைத்த பொருளாய் அறியப்படுகின்றான். எக் காலத்

* முன்பின் ஆராய்ச்சி—முன்னர்க் கண்ட வெள்ளித்தோற்றம் பின்னர்இப்பியில் இருப்பதாக ஆராய்தல்.

தும் அறிபவனை ஆன்மப் பிரகாசத்திற்கு அழிவு கிடையா தென கூறப்பட்டிருக்கின்றது.

எந்தப்புருடனுக்கு * பிராகபாவம் இருக்கின்றதோ அந்தப் புருடனுக்குத்தான் தோற்றமுண்டு. எந்தப்புருடன் தோன்று கின்றானோ அவன் அழிகின்றான். நான் என்னும் அறிவிற்கோ எனில், முன் இன்மை ரூபமான பிராகபாவமும், பின் இன்மை ரூபமான பிரத்வம் சாபாவமும் கூறமுடியாது. அறிவானது கணந்தோறும் தோன்றுவதாய்க் கொண்டு நிலைத்திருக்கின்றது என்று கூறுதல் பொருந்தாது. அறிவின் தர்மம் சொயம் பிரகா சம் இல்லை என்பது பொருந்தாதென்று பின்னர்க் கூறப்போகின் றோம். ஆகையால் தூலசூக்குமப் பொருள்களுக்குப்போல், நிலைத்தபொருள் கணிகப்பொருள்களுக்கும் ஒன்றுக்கொன்று விரோதமிருத்தலால், மின்னல் முதலியவற்றில் கணிகத்தன்மை யும், தோன்றியவுடன் அழியுந்தன்மையும் அளவைகளால் நிச்ச யிக்கப்பட்டு, நிலைத்திருக்கும் தன்மையை விலக்குகின்றவாறு போல, ஆன்மாவாகிய தன்னிடத்தில் ஆரோபம் உடன் நிகழா தாகையால் உண்மையாகவே யிருக்கும் நிலைத்தலானது தோன்றி யழியும் தன்மையை விலக்குகின்றதென்பது பொருத்தமாகின் றது.

சொயம்பிரகாசமான பொருளுக்கு முரண்பாடு நிகழ்கின்ற தில்லையாகையால் மயக்க அறிவாகாது என்று கூறப்போகின் றோம். அளவையால் நிச்சயிக்கப்பட்டபொருளை முரண்பாடு இல்லாதபொழுது அறிஞர்கள் வேறாகக்கொள்ளார். ஆனால், நிலைத்தபொருளுக்கு ஒருகாரியத்தையும் செய்யமுடியாமல் இருத்தலே முரண்பாடாகக் கூறுகின்றோமெனில், அது பொருந் தாது. ஒன்றையும் செய்யாமை என்பதை விலக்கப்போகின்ற மையால் முரண்பாடு ஆகாதாகையால் என்க.

* பிராகபாவம்—காரியம் தோன்றுதற்கு முன்னுள்ள காரியத்தின் இன்மை.

ஆகையால், சொயம்பிரகாசமாயும், தனது சித்தத்தின் தோற்ற நாசங்களுக்குச் சாட்சியாயும், நிலைத்த பொருளாயும், அறிகின்றதாயும் இருக்கும் ஆன்மசொரூபத்தில், தன்னையறிதலாலுண்டான இயல்பாயுள்ள * கருத்திருத்தன்மையானது, மேலே கூறப்பட்டவாறு ஆன்மப் பிரகாச நிச்சயத்தைப் பயனாகக் கொண்டு, பிறனால் கூறப்பட்ட நிலைத்த பொருளான ஆன்மாவின் இன்மையைச் சாதிக்கின்ற ஏதுக் கூட்டங்களுக்கு எதிரியான ஏதுவாகக் கூறப்பட்டது. நினைவானது ஏதுவாகக் கூறப்படவில்லை. நினைவோவெனில், தனக்கு முன்னிகழ்ந்த அனுபவத்தினும் வேறாகவேயிருக்கின்றது. வேறாயினும் நினைப்பவன் வேற்றுமையை அடையவில்லை. அவனே முன் அனுபவித்தவனாக அறியப்படுகின்றமையால் நினைப்பவனும் அனுபவிப்பவனும் வேறாகாமல் ஒன்றாயிருத்தல்பற்றி அந்த ஒற்றுமையைக் கொண்டே உபசாரமாய் நினைவிற்கும் அனுபவத்திற்கும் ஒற்றுமை யிருக்கின்றதேயன்றி உண்மையில் ஒற்றுமையில்லை. இவ்வாறு அற்ப அறிவுடையவர்களாயும் இரங்கத்தக்கவர்களாயும் உள்ள மனிதர்களின் மனத்திற்கு மிக வருத்தத்தைத் தரக்கூடிய அதிருக்குமமான அனுபவ விசாரத்தை இம்மட்டில் நிறுத்துவோம். (சங)

(அ—கை) இவ்வாறு பிறப்பு இறப்புக்களின் நடுவில் புருடன் நிலைத்த பொருளாய் இருக்கின்றான் என்று கூறிவிட்டு, இனி ஐந்து பூதங்களினாற்றான் அறிவு உண்டாகின்றது என்று கூறுபவர்களின் கூற்றைப், பிறப்பிற்கு முன்னரும் அறிவின் இருப்பைச் சாதித்து மறுக்கின்றார்.

(சச) ஒரு புருடனுக்கு முன்னொரு பிறவியில் அனுபவிக்கப்பட்ட பொருளில், பின்னொரு பிறவியை அடைந்தபொழுது நினைவு நிகழ்கின்றது. உண்ணுதற்காகப் பாலைக் குறித்துக் குழவியானது தொடர்கின்றமைபற்றி அந்தக் குழவிக்கு முன் நினைவு இருக்கின்றது என்பதாம்.

---

* கருத்திருத்தன்மை—அநுபவித்தற்கும் அதனை நினைத்தற்கும் கருத்தாவாயிருக்குந்தன்மை.

(உரை) சரீரத்துடன் கூடித்தான் அறிவு தோன்றுகின்றதெனில், அன்று பிறந்த பசியுடைய குழவிக்கு உண்ணுதற்பொருட்டுப் பாலைப் பருகுவதில் முயற்சியும், பின்னர் அதனைக் கக்குதலும் நிகழா. காலடித்தல் முதலியவற்றையும் கொள்ளுதற்கு இது உபலக்கணமாய்க் கூறப்பட்டது. இவ்வாறே பெரியோர்களும் "இந்திரியச்சேட்டை, பெருமூச்சுவிடுதல், காலடித்தல் முதலியனவை முன்னறிவின்றி நிகழா" எனக் கூறியிருக்கின்றனர். இவ்வாறு உலகத்தில் பாலர்களுக்குப் பிரவிருத்தி காணப்படுகின்றது. அது முந்தின பிறவியில் அறிவு அவசியம் இருக்க வேண்டும் என்பதைக் குறிக்கின்றது. ஆனால், பாலர்கட்குக் கொட்டாவி முதலியவை சரீரத்தின் தர்மமாய் உயிரின் சாமர்த்தியத்தால் நிகழுமாறுபோல் இவையும் நிகழ்கின்றன எனில், அது பொருந்தாது. இவையனைத்தும் அறிவை முன்னிட்டு நிகழ்கின்றவையாகக் காணப்படுகின்றமையால் பாலர்கட்கும் அறிவின்றி இவை நிகழுமாறில்லை. கொட்டாவி முதலியவை, சிரசிலுள்ள உரோமமும் நகமும்போல, சரீர தர்மமாகையால் அறிவை விரும்புவனவல்ல. பாலை உட்கொள்ளுதலும் அதனைக் கக்குதலும் இச்சையாலுண்டான முயற்சி விசேடத்தால் சாதிக்கத்தகுந்தனவாகையால், அவற்றைச் சரீரத்தின் தர்மமாகக் கொள்ளுதல் கூடாது. அன்று பிறந்த பாலர்களும் தாயின் தனங்களிலிருந்து பாலை வாயைத்திறந்துகொண்டு முயற்சியுடன் பருகுகின்றனர். திருப்தி உண்டாகும் வரை கக்குகின்றார்களில்லை. கக்கினும் பிராணனுக்குத் தடை நேரிடாதவாறு கக்குகின்றனர். இவ்வாறு வேண்டுவதைக் கொள்ளுதற்கும் வேண்டாததை விலக்குதற்கும் காரணமான முயற்சி விசேடம் பாலர்களிடம் காணப்படுகின்றமையால், அவர்களுக்கு இது வேண்டுவது இது வேண்டாதது என்னும் நினைவு இருக்கின்றதென்றும், அந்த நினைவுக்குக் காரணமாய் முந்தின சென்மத்தில் அனுபவம் இருந்ததென்றும் அனுமானம் செய்கின்றோம். (௪௪)

(அ—கை) இவ்விடயத்தில் வேறு சில யுக்திகளையும் காட்டுகின்றார்.

(௬௫) மனிதருக்கு நம்பிக்கையை உண்டுபண்ணுகின்ற முந்தினபிறவியை அறிந்தவர்கள் உலகத்தில் காணப்படுகின்றனர். ஒருவனால் அனுபவிக்கப்பட்ட பொருளில் பிறனொருவனுக்கு நினைவு நிகழ்கின்றதில்லை என்பதாம்.

(உரை) சாதிஸ்மரர்கள் (கடந்த பிறப்பை நினைக்கின்றவர்கள்) உலகத்தில் கண்ணுக்குப் புலப்படுகின்றனரே. முந்தின பிறவியை விடயமாகக் கொண்ட நினைவு, பிரத்தியட்சமாய்க் காணப்பட்டும், அல்லது யுத்தியினால் நிச்சயிக்கப்பட்டும் இருத்தலால் கிடைத்த பொருள் என்னை என்பார்க்கு, "ஒருவனால் அனுபவிக்கப்பட்ட" என்றதற்றொடக்கத்தால் விடைகூறுகின்றார். அதாவது, அனுபவமும் நினைவும் (ஆன்மாவாகிய) ஒரே பற்றுக்கோட்டை உடையனவென முன்னரே கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் இந்தப் பிறவிக்கு முன்னரும் அறிபவனான ஆன்மா இருக்கின்றானென்பது சித்தித்தது என்க. (௬௫)

(அ—கை) இவ்வாறு முற்பிறவியிலும் அறிபவன் இருக்கின்றான் என்று சித்தித்ததால் பயன் என்னை என்பார்க்குக் கூறுகின்றார்.

(௬௬) இவ்வாறாகவே, புருடர்களுக்குப் பிறப்பு வரிசையானது அனாதியாகவே இருக்கின்றதென்பது புலப்பட்டது. அனாதியான பொருள் நாசமடையும் என்பதற்குப் பிரமாணம் கிடையாது என்பதாம்.

(உரை) ஒவ்வொரு பிறவியிலும் முன்னிகழ்ந்த பிறவியின் வாசனையை முன்னிட்டு முயற்சி காணப்படுதலால், பிறவிச்சேர்க்கை ஆன்மாவிற்கு அனாதியாகவே இருக்கின்றது என்பது சித்தித்தது. ஐந்து பூதங்களினாற்றான் பிறவிச்சேர்க்கை நிகழ்ந்ததென்பது இல்லை. (இதனால் அனாதியான பிறவிச்சேர்க்கையையுடைய ஆன்மா அனாதிப் பொருள் என்பது கருத்து.) ஆன்மா அனாதிப்பொருளாகச் சித்தித்திருக்கின்றமையால், ஆன்ம சொரூபத்திற்கும் நாசத்தைக் கூறுகின்ற சர்வநாசபக்கம் பொருத்தமற்றது என "அனாதியான பொருளுக்கு" என்பதனால் கூறுகின்றார். "அனாதியான பொருள் நாசமடையும் என்பதற்குப்

பிரமாணமில்லை'' என்பதனுல் (ஆன்மாவிற்கு) நாசம் இல்லை என்பது குறிக்கப்படுகின்றது. ஆகையால் அனுதியான பொருளுக்கு நாசம் கிடையாது என்பது கருத்து. எது எது உற்பத்தியுடையதோ அது அது அழிவை யுடையது ; கடம்போலும் என்னும் உட நிகழ்ச்சியால், உற்பத்தியுடன் கூடிய பொருள்களுக்கு நாசம் நிச்சயம் செய்யப்பட்டிருக்கின்றது. உற்பத்தியற்ற பொருள்களுக்கு நாசம் நிச்சயிக்கப்படவில்லை. உற்பத்தி இன்மை என்னும் தர்மமுடையது ஆன்மாவென்று கூறப்பட்டிருக்கின்றது. இஃது இருக்கட்டும்.

அனுதியான பொருளும் நாசமடைகின்றது என்பதற்கு ஒரு பயனைக் கருதிக் காரியத்தைச் செய்யுந்தன்மையாகிய அர்த்தக் கிரியா காரித்துவம் என்னும் பிரமாணம் இருக்கின்றது. அஃதாவது:—நித்தப்பொருளுக்கு ஒருவிதமான காரியத்தைச் செய்யும் தன்மை என்பது இயல்பு. அவ்வாறு அதனை இயல்பாகக் கொள்ளவில்லையாயின், அந்தப் பொருளுக்குப் பொருட்டன்மை சித்திக்காது. அவ்விதமான இயல்பு ஒன்றே ஆகும். அனேகமென்று கூறின், அனேக இயல்பினையுடைய பொருளுக்கும் அனேகத்தன்மை வந்துவிடும். வெவ்வேறுன உள் பொருள்களுக்கு (கணிகப் பொருள்களுக்குத்) தொழிலைச் செய்யுந் தன்மை என்னும் ஒரே இயல்பைக் கொள்ளின் எக்காலத்தும் அந்த உள் பொருள்கள் நசிக்கின்றமையால் ஒரேகணத்தில் எல்லாக் காரியங்களையும் செய்தல் வேண்டும். வேண்டவே, காரியங்களனைத்தும் ஒரே காலத்தில் உண்டாதல் என்னும் குற்றம் நிகழும். காரியத்தை உண்டு பண்ணுதல் என்னும் இயல்பு அப்பொழுதும் இருக்கின்றமையால் முறையே காரியங்களின் தோற்றமும் இல்லையாகும். அன்றியும், இன்னதொழில் இன்னகாலத்தில் நிகழ்கின்றதென நியமமும் இல்லையாகும். அதாவது இரண்டாவது கணத்திலும் முதற்கணத்திலுள்ள இயல்பே இருக்குமாயின், இரண்டாவது கணத்திலும் முதற்கணத்திற்போலவே காரியத்தை உண்டுபண்ணுதல் வேண்டும். முதற்கணத்தில் செய்யவேண்டுவனவற்றை இரண்டாவது கணத்தில் செய்தல் வேண்டும். இரண்டாவது கணத்தில் செய்ய

வேண்டுவனவற்றை முதற்கணத்தில் செய்தல் வேண்டும். இவ்வாறு நிலையின்மை என்னும் குற்றம் நிகழ்கின்றமையால், ஒரேவிதமான இயல்புடைய பொருளுக்கு ஒரே சமயத்தில் காரியங்களை உண்டுபண்ணுதலும் முறையே உண்டுபண்ணுதலும் பொருந்தாமையாலும், வேறுவிதமாய் உண்டுபண்ணுதல் முடியாமையாலும், காரியத்தைச் செய்யுந்தன்மை என்னும் இயல்பு உள்பொருள்களுக்குப் பொருந்தாதெனக்கொண்டு உள் பொருளுக்கு எதிரியாயும் கணமாத்திரத்தில் நாசமடைவனவாயும் உள்ள அபாவப்பொருள்களில் (கணிகப் பொருள்களில்) முடிவடைகின்றது. ஆகவே, உள் பொருள்கள் கணிகப்பொருள்களாய்ச் சித்தித்தன.

இவ்வாறு உள்பொருள்களைக் கணிகப் பொருள்களாய்க் கொள்ளின், முற்கணத்திலுள்ள உள்பொருள் முற்கணத்தில் காரியத்தைச் செய்துவிட்டு நசிக்கின்றது. பிற்கணத்திலுள்ள உள் பொருள் பிற்கணத்தில் காரியத்தைச் செய்கின்றது. இவ்வாறு முறையே அனுபவிக்கப்படுகின்ற காரியத்தைச் செய்தல் என்னும் அர்த்தக் கிரியைக்கு ஒருவிதமான குற்றமுமில்லையாகும். ஆகையால் அர்த்தக்கிரியா கருத்திருத்தன்மையே ஆன்மாவிற்கு நாசம் உண்டென்பதற்குப் பிரமாணமாகும். ஆதலால் ஆன்மா நாசமுடையது என்பது சித்தித்தது. (இது பூர்வ பக்கம்).

அவ்வாறு கூறுதல் பொருந்தாது. அறிபவனுன ஆன்மா நிலைத்தபொருளாகவே அறியப்படுகின்றமையால் என்க. அன்றியும் ஆன்மாவைக் கணிகப்பொருளாய்க்கொண்டால் அது எந்தக் கணத்தில் தோன்றி எந்தக்கணத்தில் நசிக்கின்றது; ஒரேகணத்தில் தோற்றமும் நாசமும் எவ்வாறு நிகழும் என்பது முதலிய கண ஆராய்ச்சி பொருத்தமடையாதாகையாலும், ஆன்மாவை நிலைத்தபொருளாகக் கொள்ளல்வேண்டும்.

ஆனல், நிலைத்த பொருள் என்னும் மயக்க அறிவால் கண விசாரம் நிகழ்கின்றதென்னில், அது பொருந்தாது; தன்னிடத்திலேயே தனக்கு மயக்கம் உண்டாகாது ஆகையால் என்க. ஆகவே, ஆன்மாவை நிலைத்தபொருளாகக் கொள்ளவில்லையாயின்

கண விசாரம் பொருந்தாமையால், ஒரே பொருளாய் இருக்க வேண்டும் என்னும் அனுமானப் பிரமாணமானது, நித்தப்பொருளுக்கு நாசம் உண்டென்பதற்குப் பிரமாணமாகக் கூறப்பட்ட காரியத்தை நிகழ்த்துதல் என்பதற்கு விரோதமாய் இருக்கின்றது.

ஆயின், நிலைத்த பொருளுக்குத் தொழிலைச் செய்யுந்தன்மை என்னும் அர்த்தக் கிரியை பொருந்துகின்றதில்லை என்பதற்குச் சமாதானம் என்னை எனில், அவ்வாறு கூறுவது பொருந்தாது; எதனாலெனில், நிலைத்த பொருளுக்குக் காரியத்தைச்செய்யுந்தன்மை என்னும் இயல்பு ஒன்றாயினும் அது சிறந்த துணைகளின் சன்னிதானத்தினின்றே காரியத்தைத் தோற்றுவிக்கின்றது. துணைக்கருவிகள் இல்லாதவிடத்து அதற்குக் காரியத்தைச்செய்யுந்தன்மை என்னும் இயல்பு இருந்தும் காரியத்தைத் தோற்றுவிக்கின்றதில்லை. ஆகையால் முறையே காரியங்களைச் செய்கின்றது என்பதற்கு ஒரு குற்றமும் இல்லை யாதலால் என்க.

ஆனால், முளைக்குக் காரணமான இயல்பினையுடைய கடலை என்னும் வித்தானது, பூமி முதலிய துணைகளின் சன்னிதானத்தில் தனக்குச் சாமர்த்தியம் இருப்பினும் இல்லையாயினும் (காய்ப் பருவமாயிருப்பினும்) முளையைத் தோற்றுவிக்கின்றது. வித்து, சாமர்த்தியம் உடையதாய் இருப்பினும், இல்லையாயிருப்பினும் (காய்ப் பருவமாயிருப்பினும்) துணையானது முளையைத்தோற்றுவிக்கும் சாமர்த்தியமுடையதாயிருந்தால் அந்தத் துணையின் சன்னிதானத்திலும் முளையைத் தோற்றுவிக்கின்றது. (துணையின் சன்னிதானத்தாலும் துணையின் சன்னிதானத்துடன் கூடிய சாமர்த்தியத்தாலும் வித்தானது முளையைச் தோற்றுவிக்குமெனக் கூறியவாறாம்.) துணையின் சன்னிதானத்தில் காரியத்தைத் தோற்றுவிக்குந்தன்மை என்னும் ஒரே இயல்பினையுடையதாய் இருத்தலால் என்க. துணையின் சன்னிதானத்திலும் வித்திற்குச் சாமர்த்தியமின்மையிருக்கின்றது; இந்த வித்து ஒரேவிதமான இயல்பினையுடையதாய் இருத்தலால், வித்துக்குச் சாமர்த்தியமில்லையாயினும், துணையினிடமிருந்து சாமர்த்தியத்தை அடை

கின்றது எனில், முன்னர் சாமர்த்தியம் இல்லாமல் பின்னர் அடைகின்றது என்ருகி, இயல்பின் வேற்றுமையால் பொருளுக்கும் வேற்றுமை நிகழ்ந்து பொருள் ஒன்றென்பது சித்திக்காது. இவ்வாறு கூறும் பூர்வ பக்கத்துக்குச் சமாதானம் வருமாறு.

சாமர்த்தியம் இருப்பினும் துணையின் சன்னிதானத்திற்ருன் காரியத்தைத் தோற்றுவிக்கின்றது. துணையின்றித் தோற்றுவிப்பதில்லை. அவ்வாறு செய்வதே அதற்கு இயல்பா யிருத்தலால் என்க. சாமர்த்தியம் இருப்பின் துணைகளை ஏன் விரும்பவேண்டும் எனில், துணைகளைக்கொண்டே காரியத்தைத் தோற்றுவித்தல் இயல்பென்று கூறப்பட்டிருத்தலால் விரும்புகின்றதென்க. உள் பொருள் தனது காரணங்களாலாவது (துணைகளாலாவது) இயல்பினுலாவது ஒரேவிதமான இயல்புடையதாகவேயிருக்கின்றது. அது தனக்குச் சாமர்த்தியம் இருப்பினும் துணையைக்கொண்டே காரியத்தைச் செய்கின்றது. துணையின்றிக் காரியத்தைச் செய்கிறதில்லை. இதற்குத் துணையிருப்பின் (மண்) காரியத்தைச் செய்கின்றது என்னும் உடன்பாட்டு உட நிகழ்ச்சியும், துணை இல்லையாயின் (மண்) காரியத்தைச் செய்கிறதில்லை என்னும் எதிர்மறை உட நிகழ்ச்சியுமே பிரமாணங்களாய் இருக்கின்றன. உள் பொருள்களின் இயல்புகளைப்பற்றி ஏன் இவ்வாறு இருக்கவேண்டுமென்று கேட்கக்கூடாது. தீ ஏன் சுடுகின்றது தண்ணீர் ஏன் சுடவில்லை என்று இயல்பை மறுத்துக்கேள்வி கேட்பது பொருத்தமற்றது.

துணையின் சன்னிதி இல்லையாயின் காரியம் உண்டாகாமையால், காரியத்தை உண்டுபண்ணுந்தன்மை ரூபமான இயல்பினும் வேருன இயல்பே கொள்ளப்படுகின்றதென்று கூறுவையாயின், அப்பொழுதும் துணையின் சன்னிதானத்தில் காரியத்தைச் செய்யுந்தன்மை என்னும் ஒரே இயல்பினையுடையதாகவே இருக்கின்றது. அந்த இயல்பே துணையின் சன்னிதானத்திலும் இருக்கின்றது. ஆகையால், இயல்பில் வேற்றுமைகிடையாது. உள் பொருளானது, மூன்று காலத்திலும் இவ்விதமான இயல்பில் நின்றும் நழுவுகின்றதில்லை. காரியம் உண்டாகாமை

துணையின் சன்னிதி இல்லாமையால் ஆனது. துணையின் சன்னிதி உண்மை அஃதின்மை என்னும் இவைதான் வேற்றுமையடைகின்றனவேயன்றி உள்பொருளுக்கு வேற்றுமைகிடையாது. சன்னிதி உண்மை சன்னிதி இன்மை என்னும் இவை துணைக் கருவியினிடம் இருக்குமாயின், அவ்விரண்டும் மாறுபட்ட இயல் பினையுடையனவாயிருத்தலின், அவை துணைக்கருவிக்கு வேற்றுமையைச் செய்கின்றன என்பையாயின், அவ்வாறன்று. சன்னிதி உண்மை சன்னிதி இன்மை என்னும் விரோதமானது துணைக்கு வேற்றுமையைச் செய்கிறதில்லை. வித்தின் துணையாகிய பூமியினிடத்து சன்னிதி என்பது இயல்பாயிருத்தலால் என்க. அந்தத்துணைக்கும் பிறிதொரு துணையின் சன்னிதியில் காரியம் நிகழ்கின்றது. (பூமிக்கு நீரின் சன்னிதியில் காரியம் நிகழுமென்றபடியாம்.) ஆகையால், துணைக்கு வேற்றுமையிருப்பதாகக் கொண்டு காரியத்தைத் தோற்றுவிப்பதில் நியமம் இன்மையிருக்குமென்பது கூடாது.

உள் பொருள்களின் விசித்திரத்தன்மையானது இயல்பில் நியமம் உடையதாகையால் பூமி முதலிய துணைக்கருவிகளுக்கும் வித்துமுதலிய காரணங்களின் சன்னிதானத்தில் காரியத்தைத் தோற்றுவித்தல் என்னும் இயல்பானது, வித்தின் இயல்புக்கு ஒப்பாயுள்ளது. துணையின் சன்னிதானத்தில் காரியத்தைத் தோற்றுவித்தல் என்னும் இயல்பு எல்லாவற்றிற்கும் இருக்கின்றமையால் ஒவ்வொன்றின் சன்னிதானத்தை ஒவ்வொன்றும் விரும்புகின்றன. ஆகையால், காரியங்களைத் தோற்றுவிக்கும் காரகங்கள் அனைத்தும் துணைக்கருவிகளென்னும் சொல்லால் கூறத்தகுந்தனவேயன்றி ஒவ்வொன்று தான் துணைக்கருவி என்று கூறமுடியாது. அத்தகைய துணைக்கருவிகளின் இயல்பில் வேற்றுமைகிடையாது. எல்லாவற்றிற்கும் காரியத்தைத் தோற்றுவிக்கக் கூடிய சாமர்த்தியம் இருப்பினும் காரியங்களில் பலவாந்தன்மை கிடையாது. ஒவ்வொரு துணையின் சன்னிதானத்தில் ஒரேவிதமான காரியத்தைத் தோற்றுவித்தலே இயல்பாயிருத்தலால் என்க. (பூமி நீர் வித்து என்னுமிவை மூன்று என்னும் ஒரே காரியத்தைத் தோற்றுவிக்கும் என்றபடியாம்.) அனேகவிதங்க

ளான காரியங்களை முறையே தோற்றுவித்தலும் கூடும். அனேக விதங்களான துணைகளின் சன்னிதானத்தில் அனேக காரியங்களைத் தோற்றுவித்தல் என்னும் இயல்பு இருத்தலால் என்க. (பூமியானது நீரோடு கூடித்தட்பத்தையும், தீயொடு கூடிச்சூட்டையும், இவ்வாறே பிறவற்றோடு கூடி ஏனையவற்றையும் தோற்றுவிக்குமென்றபடியாம்.) அதுகொண்டும் இயல்பில் வேற்றுமை கிடையாது. எதுபோலுமெனில், அறுத்தல், சமைத்தல், உண்ணுதல் முதலிய அனேக தொழில்களுக்குக் கருத்தாவான சைத்திரன் ஒருவனுக்கே, அந்தந்தத் தொழில்களுக்குத் துணைக்கருவிகளான அரிவாள் முதலியவற்றின் சன்னிதானத்தில், அறுத்தல் முதலிய அந்தந்தக் காரியங்களைத் தோற்றுவித்தல் இயல்பாயிருக்கின்றமையால், அந்தத்தொழில்களில் வேற்றுமையிருந்தும் இயல்பில் வேற்றுமை இன்றி அந்தத்தொழில்கள் முறையாய் நிகழ்கின்றவாறுபோலுமென்க.

அன்றியும் ஒரே தீபமானது திரிகளை எரித்தல் எண்ணெயைக் குறையச் செய்தல் பிரகாசம் செய்தல் முதலிய அனேக தொழில்களைச் செய்கின்ற ஒரே இயல்புடையதாக உங்களால் கொள்ளப்பட்டுத் தொழில் வேறுபாட்டால் இயல்பில் வேறுபாடு கொள்ளப்படாதவாறுபோலும் ஒரே பொருளுக்கு அனேக தொழில்களை உண்டுபண்ணுதல் விரோதமில்லாமையால் இவ்விடத்திலும் அதுபோலவே கொள்ளத்தக்கது. எக்காலத்தும் நிலைத்திருப்பதான உள் பொருளுக்கும், அந்த அந்தத் துணைக்கருவிகளின் சன்னிதானத்தில் அனேக விதங்களான அந்தந்தக் காரியங்களைச செய்தல் என்னும் இயல்பு நீங்காமையால் துணைக்கருவிகளின் சன்னிதானம் முறையே நிகழுவதுபற்றி முறையே காரியங்களைத் தோற்றுவித்தல் பொருந்துகின்றது. ஆகையால், நிலைத்த பொருளில் அர்த்தக்கிரியா கருத்திருத்தன்மை இருப்பது பற்றிக் குற்றமில்லை. நிலையற்ற உள் பொருள்களிற்றான் அர்த்தக்கிரியாகருத்திருத்தன்மை இருப்பதுபற்றிக் குற்றமிருக்கின்றது. கணிகங்களான உள் பொருள்களுக்கு அர்த்தக்கிரியை பொருந்தாமை எவ்வாறென்பது நம்மால் ஆகமவிவேகம் என்னும் நூலில் விரிவாய் விசாரிக்கப்பட்டிருக்கின்றது. அவ்விடத்தில்

கண்டுகொள்க. குற்றமில்லாமையால் பிரத்தியட்சத்தால் சித்தித்த உள் பொருள்களின் நித்தத்தன்மை ஒன்றாலும் மறுக்கப்படாத தேயாம். எவற்றிற்கு நாசமடையும் என்பதில் ஏதுவானது பிர மாணத்தால் சித்தித்திருக்கின்றதோ அவற்றிற்கு நாசமுண்டு. எவற்றிற்குப் பிரமாணத்தால் ஏது சித்திக்கவில்லையோ அவை நாசமடையா. ஆகையால் ஆன்மாவிற்கு அர்த்தக்கிரியாகருத் திருத்தன்மை இருப்பினும் நாசமடையும் என்பதில் ஏது இன்மை யால் நாசமின்மை சித்தித்தது.

இவ்வாறு கூறியவாற்றால் ஆன்மாவானது அந்தந்த விடயங் களின் சன்னிதானங்களில் அந்தந்த விடயங்களை அறிதலென் னும் ஒரே விதமான இயல்பினையுடையதாயிருத்தலால் கட அறி விற்கு முன் கடத்தை அறியும் இயல்பு இல்லாமைபற்றி ஆன்மா விற்கு அறியுந்தன்மையிலும் குற்றம் இருப்பதாகக் கூறப்பட்ட குற்றமும் நீக்கப்பட்டது.

ஆகையால் அறிவு ரூபமான ஆன்மா நாசமற்றதாகையாலும் அறியப்படும் பொருள் இருத்தலாலும், முத்தியில் ஆன்மாவுக் கும் அறியப்படும் பொருளுக்கும் நாசங்கிடையா. அன்றி, ஆன்மா சர்வஞ்ஞனகவே இருக்கின்றானென்பது பொருத்தமாயிருக் கின்றது. மறைத்தலைச் செய்யும் இயல்பினையுடைய மலம், கன்மம், மாயை எனப் பெயர்கொண்ட அஞ்ஞானங்கள் முத்திக் காலத்தில் நீங்குகின்றன. ஆகையால் ஆன்மா மறைப்பின்றி அறிபவன் ரூபனுயிருக்கின்றான். இவ்வாறே "சித்தானது (ஆன்மா வானது) சோதிப் பிரகாச ரூபமாயிருக்கின்றது. பாசங்கள் இயல்பாயும் * ஆகந்துகங்களாயுமிருக்கின்றன. இவற்றின் நாசத் தில் ஆன்ம சோதியானது எல்லாப் பொருள்களையும் அறிந்து கொண்டு அழிவற்று இருக்கின்றது" என்று பெரியோர்களும் கூறியிருக்கின்றனர். (௪௬)

(அ—கை) இவ்வாறு முத்தியில் எல்லாப் பொருள்களுக்கும் நாசத்தைக்கூறும் மதத்தை மறுத்துவிட்டு, இனி, முத்தியில்

* ஆகந்துகம்—இடையில் வந்து கூடியது.

ஆன்மாவுக்குக் கருத்திருத் தன்மையும் ஞானமும் இல்லை என்னும் மதத்தை மறுக்கின்றார்.

(௪எ) முத்தியில் ஞானக்கிரியா நாசம், எல்லா ஆகமங்களோடும் முரண் படுதலால் கொள்ளுதல் கூடாது. சத்துப் பொருளான ஈசுவரனிடத்தில் இவற்றை நித்தியமாகக் கண்டிருத்தலால் யுத்தியினாலும் இந்தப்பக்கம் விலக்கப்படுகின்றது என்பதாம்.*

(உரை) "அறிபவனுடைய அறிவுக்கும் நினைப்பவனுடைய நினைவுக்கும் நாசம் கிடையா" என்ற வேதாகமங்களால் முத்தியில் ஞானக்கிரியைகள் இல்லை என்னும் பக்கம் விலக்கப்பட்டது. எல்லா ஆகமங்களோடும் மாறுபடும் பொருளைக் கொள்ளுதல் பொருத்தமற்றது. இவ்வாறே, "சாத்திர சம்மதமில்லாத ஒருவனுடைய கொள்கையானது தன்னால் கற்பிக்கப் பெற்றதற்கு ஒப்பாகும்" என்று பெரியோர்களும் கூறியிருக்கின்றனர். இனி ஞானக்கிரியைகள் இருப்பினும் அவற்றை நிர்மலர்கள் அறிகின்றார்கள் இல்லை. ஆகையால், யுத்தியால் முத்தியில் அவை இல்லை எனக் கொள்ளப்படுகின்றதென்பார்க்கு "சத்துப்பொருளான ஈசுவரனிடத்தில்" என்றற் றொடக்கத்தால் விடைகூறுகின்றார். எல்லாப் பிரமாணங்களாலும் சித்தித்திருக்கின்றமை பற்றிச் சத்துப் பொருளான பரமசிவனிடத்தில் ஞானக்கிரியைகளை நித்யமாகக் கண்டிருத்தலால், கூறப்பட்ட யுத்தியால் (அனுமானத்தால்) இந்தப்பக்கம் மறுக்கப்படுகின்றது. இதன் கருத்தாவது:— பொருள்களைச் சுருக்கிக்கூறுகின்ற வாதியான நையாயிகர் ஈசுவரன் என்னும் பொருளுக்குத் திரவியத்திலேயே அதனுள்ளும் ஆன்மதிரவியத்திலேயே அடக்கங் கூறல்வேண்டும்; வேறு பொருளில் கூற முடியாது. ஆன்மாவல்லாத ஏனைய பொருள்கள் ஈசுவரப் பொருளினும் மிக வேற்றுமையுடன் கூடி இருத்தலாலென்க. ஈசுவரப் பொருளை ஆன்மதிரவியத்தில் அடங்கியதாகக் கொள்ளவில்லையாயின், அது வேறு திரவியமாகவோ அல்லது வேறு பதார்த்தமாகவோ ஆகவேண்டும். ஆயின், பதார்த்தங்கள் ஆறு என்றும், திரவியங்கள் ஒன்பது என்றும் கொண்டது பொருந்தாது.

ஈசுவரப் பொருளுக்கு ஆன்ம திரவியத்தில் அடக்கங்கொள்வோம். அதனால் என்னை என்பையாயின், கூறுகின்றோம்- வாதத்திற்குப் பற்றுக்கோடான முத்தான்மாக்கள் சர்வஞ்ஞத் தன்மை, சர்வ கருத்திருத் தன்மை உடையர்; ஆன்மத் தன்மையும், தர்மா தர்மங்களின் இன்மையும் இருக்கின்றமையால்; ஈசுவரன் போலும் என்னும் அநுமானத்தினாலும் ஞானக் கிரியா நாசபக்கமானது விலக்கப்பட்டது. தர்மாதர்மம் இன்மையானது சர்வஞ்ஞத்தன்மை சர்வ கருத்திருத்தன்மையுடன் ஈசுவரனிடத்தில் உடனிகழ்ச்சி பெற்றிருக்கின்றமையால் அந்தத் தர்மா தர்மம் இன்மை முத்தான்மா வினிடத்தும் இருப்பது பற்றி முத்தான்மாக்களும் சர்வஞ்ஞத்தன்மை, சர்வ கருத்திருத் தன்மை உடையவர்களாய், ஈசுவர சமானர்களாய் ஆகின்றனர். ஆகையால், முத்தியில் ஞானக்கிரியைகளுக்கு நாசத்தைக் கொள்ளுதல் பொருத்தமற்றது. (௪௭)

(அ—கை) இனி அவ்வியாகிருதம் முதலிய விகாரமுடைய பொருள்களினிடத்து ஒடுக்கமே முத்தி எனக்கூறுகின்ற பாஞ்சராத்திரர் முதலியோர்களுடைய மதங்களை மறுக்கின்றார்.

(௪௮) முதற் காரணங்களில் ஒடுக்க மடைந்த ஆன்மாக்களுக்கு மீண்டும் திரும்புதலானது உண்டாகின்றது. எதனாலெனில், காரணத்தின் அதிகாரத்தில் ஒடுக்கத்தை அடைந்தவர்கள் மீண்டும் திரும்புகின்றவர்களாய் இருக்கின்றனர் ஆகையால் என்பதாம்.

(உரை) சீவான்மாக்கள், காரியப்பொருள்களாய் இருத்தலால், காரியப் பொருளாய் இல்லாததாயும் மஹா விபூதி என்னும் பெயர் கொண்டதாயுமிருக்கும் பரம காரணப் பொருளில் கடம் முதலிய வற்றிற்கு மண்ணிற்போல ஒடுக்கமே மோக்ஷமென்பது இருக்கட்டும். ஆயினும், அந்த ஆன்மாக்களுக்குப் பிரளயத்திற்குப் பின்னர் சிருட்டியின் ஆரம்பத்தில் மீண்டும் சம்சாரத்தைப் பற்றுதல் உண்டாகும். இதற்குக் காரணத்தை "எதனாலெனில்" என்றற்றொடக்கத்தாற் கூறுகின்றார். காரணத்தின் அதிகாரமாவது மீண்டும் காரிய ரூபமாய் மாறத் தகுந்த

உரிமை உடைமையாகும்; காரணமானது பரிணமம் என்னுந் தரு மத்துடன் கூடியிருத்தல் பற்றிக் காரியரூபமாய் ஆரம்பிக்கப்படு கின்ற தாகையால் என்க. அந்தக்காரணத்தின் அதிகாரத்தில் (பரிணமிக்கக் கூடிய பாகத்தில்) ஒடுங்கிய ஆன்மாக்கள் மீண்டும் சிருட்டிக் காலத்தில் திரும்புகின்றனர். ஆகவே, அதனிடத்து ஆன்மாக்களுக்கு ஒடுக்கத்தைக் கூறும் வாதிகள் முத்திக்காக முயற்சிப்பது வீணாகும். இஃதிருக்கட்டும்.

பிரளய காலத்தில் காரணப் பொருளில் பெத்தான்மாக்கள், முத்தான்மாக்களாகிய எல்லா ஆன்மாக்களுமே ஒடுக்க மடைந் திருக்கின்றனர். ஆயினும், ஒவ்வொரு சிருட்டி தோறும் அவித் தை முதலிய வற்றின் வாசனையுடன் கூடிய பெத்த ரூபத்து டனே பெத்தன் திரும்புகின்றான். முத்தன் திரும்புகின்று னில்லை. அவனிடத்துத் திரும்புதற்குக் காரணமான அவித்தை முதலியன இன்மையால் எனில், அது பொருந்தாது. அந்த ஒடுக்க நிலையில், பெத்தான்மா, முத்தான்மா என்னும் வேற்று மை இல்லாமையால் என்க. இவ்வாறு வேற்றுமையற்ற நிலையே காரணத்தன்மையாகும். ஒடுங்கியிருக்குங் காலத்தும், பெத்தன் முத்தன் என்னும் வேற்றுமை இருக்கின்றது எனில், அந்த வேற்றுமையானது *பிரிவின்மை ரூபச் சேர்க்கையை முன்னிட்டு நிகழ்கின்ற தாகையால், உன்னால் கொள்ளப்படும் பிரகிருதிக்கும் காரணமாய்ப் பிறிதொரு பிரகிருதி அனுமானத்தால் நிச்சயிக்கப் படுகின்றது. ஆகையால், உன்னால் கூறப்படும் காரணப்பொருள் பரம காரணமாக ஆகின்றதில்லை. அந்தப்பிரகிருதியினும் இவ்வா றான வினு விடைகள் நிகழவே அதனினும் வேறான பிரகிருதி ஒன்றைக் கொள்ளல் வேண்டும். இவ்வாறு கொள்ளவே, வரம் பின்றி ஓடல் என்னும் குற்றம் நிகழுமாகையால், வேற்றுமை யற்றிருத்தலே காரணத்தன்மையாகும்.

அந்தக் காரணப்பொருளானது பிரிப்பின்றி இருத்தலால்,

---

* பிரிப்பில்லாத காரணத்தை முதன்மையாகக்கொண்டு என்பது கருத்து. கடம் முதலிய பிரிவுகள் பிரிப்பில்லாத மண்ணை முதன் மையாகக் கொண்டு நிகழ்கின்றவாறு போலும்.

முன்னரும் அவ்வாறே பரிணாமம் இல்லாமல் இருக்கின்றமை பற்றி, சீவான்மாக்களுக்கு ஒடுக்கம் இருப்பினும், அந்தக் காரணப் பொருள் அநிகத் தன்மையை யடைவதில்லை. ஆகவே, சீவான்மாக்கள் அதிலிருந்து தோன்றுவனவல்ல. ஆனால், காரணத்திலிருந்து முன்னர்த் தோன்றி அர்த்தக்கிரியைகளைச் செய்கின்ற சீவான்மா காரணப் பொருளில் அறியப்படாத வடிவமுடைய வனாயிருக்கின்றான் எனில், அப்பொழுது நாசமடைந்தவனாகவே ஆகின்றான். ஆகையால் உங்களால் கூறப்படும் முத்தியில் (மீளப்பிறத்தலே யன்றி) ஆன்ம நாசம் என்னும் பிறிதொரு குற்றமும் நிகழும். இவ்விடயத்தையே பின்னர் "எவர்களுக்கு முத்தியில் ஆன்ம நாசம் நிகழுகின்றதோ, அவர்கள் மூடர்களுள் மிகச்சிறந்தவர்கள்" என்பதனால் கூறப்போகின்றார்.

அவ்வாறாயின், உம்மால் கூறப்பட்ட குற்றம் ஒன்றும் காரணத்தில் ஒடுக்கம் என்னும் இதில் நிகழ்கின்றதில்லை. சாத்திரப் பிரமாணத்தால் எங்களால் இவ்வாறுகொள்ளப்பட்டிருக்கின்றது. ஆகையால், இவ்விதமான முதற் காரணத்தில் ஒடுக்கத்தை எவரால் தடுக்கமுடியும் என்பார்க்கு "ஒடுக்கத்தை அடைந்தவர்கள் மீண்டும் திரும்புகின்றனர்" என்பதனால் விடை கூறுகின்றார். நீ கூறுகின்ற கூற்றுக்குப் பிரமாணம் கிடையாது. மயக்கத்தால் இவ்வாறு கூறப்படுகின்றது. அறிவுரூபமான ஒரு முதற் காரணத்திலிருந்து அறிவு அறியாமை ரூபமாய் ஒன்றுக்கொன்று மாறுபாடான காரியங்கள் எவ்வாறு தோன்றும். உள்பொருள் இல் பொருள்களுக்கு ஒரே முதற் காரணம் பொருந்தாதவாறு போல், ஒன்றுக்கொன்று மாறுபாடான பொருள்களுக்கு ஒரே முதற் காரணம் பொருந்துகின்றதில்லை.

அன்றியும், காரணத்தின் விகாரங்களான காரியங்கள் அறிவு அறிவின்மை என்னும் இவற்றால் தொடரப்பட்டிருக்குமாயின், அவற்றின் காரணமும் அறிவு, அறிவின்மை ரூபமாய் இருத்தல் வேண்டும். தாயாருக்கு மலடித்தன்மையை நிலைக்கச் செய்ய முடியாதவாறுபோல், அறிவு ரூபமாயும், அறியாமை ரூபமாயும் உள்ள காரணப் பொருளை நிலைக்கச்செய்யப் பிரமனாலும் முடி

யாது. ஆனால், காரணப் பொருளில் ஒருபாகம் அறிவு ரூபம், மற்றொரு பாகம் அறியாமை ரூபம் என்று கூறுவோ மெனில், அவ்வாறு கூறின், காரணப்பொருளும் அவயத்துடன் கூடிய தாகும் ஆகையால், அந்தக்காரணப் பொருளுக்குக் கடம் முத லியவற்றிற்குப்போல் காரியத் தன்மை நிகழும். நிகழவே, அதற் கும் ஒரு காரணம் வேண்டப்பட்டு முன்னர்க் கூறியவாறுபோல் வரம்பின்றி ஓடல் என்னும் குற்றம் நிகழும் என்க.

அன்றியும், சீவான்மாக்கள் காரியப்பொருள்கள் ஆகை யால் அவற்றிற்குக் காரணமாகப் பரப்பிரகிருதி சித்தித்த தென் னில், அது பொருந்தாது. சீவான்மாக்கள் அறிவுடைப்பொருள் கள் ஆகையால், அவர்களிடம் காரியத்தன்மையே கிடையா தென்க.

எது, எதனால் தொடரப்பட்டிருக்கின்றதோ, அது, அதனு டைய காரியமாய் இருத்தல் வேண்டும். (கடம், மண்ணால் தொடரப்பட்டு மண்ணின் காரியமாய் இருத்தல் போலும்) ஆகவே, (காரணத்தினுடைய) அறிவின் தொடர்ச்சி ஆன்மா விற்கு இருப்பது பற்றி ஆன்மாவை அதன் காரியமாய்க் கொள் ளல் வேண்டுமென்று கூறி இருக்கின்றோம் எனில், அதுவும் பொருத்தமற்றது. ஆன்மாக்களிடத்துத் தொடர்ச்சி என்பதே சம்பவிக்கின்றதில்லை ஆகையால் என்க,

அறிவுக்கு விடயமான செயப்படுபொருளில் அறிபவனு டைய தொடர்ச்சியானது பொருந்தும். ஆன்மாவோ அறிபவன் ரூபமாய் இருக்கின்றது. ஆகையால் தானே தனக்கு விடயமா கின்றதில்லை; தன்னிடத்தில் தனக்குத் தொழில் நிகழாதாகை யால் என்க. ஆன்மாவோ அறிபவன் ரூபமாய் பிரத்தியக் வஸ் துவாய் (உள்ளே இருக்கும் பொருளாய்) எக்காலத்தும் விளங்கு கின்றதென்று முன்னர்க் கூறப்பட்டிருக்கின்றது. இஃது இருக் கட்டும்.

அறியப்படும் பொருளின் தொடர்ச்சி அறியப்படும் பொரு ளினிடத்துக் காணப்படும். (மண்ணின் தொடர்ச்சி கடத்திற்

காணப்படுமாறு போலும்) அறியும் பொருளான ஆன்மாவின் தொடர்ச்சியானது, அறிபவன் ரூபமாய் ஆன்மா விளங்குங்காலத் துக்காணப் படல்வேண்டும். அந்தத்தொடர்ச்சி அனேக ஆன் மாக்களின் விளக்கத்தை விடயமாய்க்கொண்டதாகும். ஒரு ஆன்மாவின் இயல்பை அறிகின்ற அறிவில், பிறிதொரு ஆன்மா வை அறியும் அறிவு நிகழாது. பிற ஆன்மாக்கள் அவற்றினும் வேறான கடம் முதலியன போல் பிற பொருளாயிருத்தலால் என்க. சொயம் பிரகாசங்களான ஆன்மாக்களுக்கு ஒன்றுட னொன்று சங்கிரமித்தலில்லை. (சேருதலில்லை என்றபடி) சேரு தல் உண்டென்று கொண்டால் ஆன்மாக்களுக்கு எக்காலத்தும் சர்வஞ்ஞத்தன்மை இருத்தல் வேண்டும். (ஒவ்வொரு ஆன் மாக்களும் எல்லா ஆன்மாக்களுடனும் சேருமென்றாகி, அவற் றை அறியும் சர்வஞ்ஞத்தன்மை இருக்கவேண்டும் என்றபடி) ஒவ்வொரு ஆன்மாவும் தனித் தனியே சொயம்பிரகாசமாய் இருத்தலால் எந்த ஆன்மாவுக்கு எந்த ஆன்மாவினிடத்துத் தொடர்ச்சி நிகழும்? (நிகழாதென்றபடி)

இவ்வாறாயின், சர்வஞ்ஞனான ஈசுவரனுக்கு எல்லா ஆன் மாக்களும் அறியப்படும் பொருளாக இருக்கின்றமையால், ஈசுவர னுடைய தொடர்ச்சி ஆன்மாக்களிடத்து இருக்கின்றது எனில், அது பொருந்தாது; சர்வஞ்ஞனான ஈசுவர இலக்கணத்துடன் பிறட்சி நிகழ்கின்றமையால் என்க, ஈசுவரன் பிற ஆன்மாக்களோடு வேற்றுமையின்றி அவற்றை அறிபவன் ரூபனாய்ப் பிரகாசிக்கின் றான். (ஆன்மாக்களோடு கலந்து நின்று அவற்றை அறிகின்றான் என்றபடி.) ஆகையால், வேறாயறியப்படாத ஆன்மாக்களிடத்து ஈசுவரனுடைய தொடர்ச்சி நிகழாதென்று கூறப்பட்டிருக்கின் றது. ஈசுவரனிடத்துச் சர்வஞ்ஞத் தன்மையிருத்தலால் விபரீத மான வேறொரு அறிவு (இது இது என்று சுட்டி அறியும் அறிவு) நிகழ்கின்றதில்லை. ஆகையால், சர்வஞ்ஞனான ஈசுவரன், பிற ஆன் மாக்களோடு தொடரப்படாத சொரூபமுடையவனாய், மயக்க மற்ற அறிவால் அறியப்படுகின்றவாறு போல், ஆன்மாக்களும் ஒன்றோடொன்று வேற்றுமையுடையனவாய், தொடர்ச்சிக்கு

விடயமாகாமல் அந்த ஈசுவரனால் அறியப்படுகின்றன. ஆகையால் ஒரு விதமான குற்றமும் இல்லை என்க.

இதுபற்றியே ஆன்மா அநுமானத்திற்கு விடயமான * அநுமேயமாய் இருக்கின்றதென்று கூறுதலும் பொருந்தாது. அநுமானஞ்செய்யும் அநுமாதாவும், அநுமானத்திற்கு விடயமான அநுமேயமும் வேறாகையால், யாதாவது ஒரு ஆன்மா பிற ஆன்மாவை தன்னிலும் வேறு பொருளாய், தன்னோடு வேற்றுமை உடையதாகத்தான் அநுமானஞ்செய்தல் வேண்டும். ஆகையால் ஆன்மா (சொரூபத்தால் வேற்றுமையில்லாமை பற்றி) அநுமானத்திற்கு விடயமென்று கூறுதல் பொருத்தமற்றதாகுமென்க.

ஆன்மாவுக்குத் தொடர்ச்சி இல்லையாயின், சத்தை (உள்பொருளாயிருக்குந்தன்மை) என்னுந்தருமத்தால் ஆன்மா தொடரப்படாமையால், அது அசத்துப்பொருளாதல் வேண்டும்; சத்தை என்னுந் தருமத்தால் தொடரப்படாத குதிரைக் கொம்பு போலும் என்று கூறுகின்றோம் எனில், அவ்வாறன்று. ஆன்மாக்களிடத்திலிருக்கும் சத்துத்தன்மை, சத்தை என்னுந் தருமத்தின் தொடர்ச்சியால் நிகழ்ந்ததில்லை. அன்றி, சொரூபமாகவே சத்தா இருக்கின்றமையால், சத்துத்தன்மை இருக்கின்றது; சத்தைபோலும், பரமகாரணப்பொருள் போலும் என்க. பரமகாரணப் பொருளுக்கும் சத்தை என்னுந் தருமத்தின் தொடர்ச்சியால் சத்துத்தன்மை உங்களால் கொள்ளத்தக்கதில்லை; காரியத் தன்மை நிகழும் ஆகையால் என்க. அன்றி, சொரூபமே சத்தை என்று கொள்ளல் வேண்டும். கொள்ளவே, குதிரைக் கொம்புக்குச் சமானமென்று கூறுவது பொருத்தமற்றது.

ஆனால், சத்தை என்னுந்தருமத்திற்கு ஆன்மாக்களிடத்துத் தொடர்ச்சி கொள்ளவில்லையாயின், ஆன்மா சத்து என்னும் ஒரு சொல்லால் எல்லா ஆன்மாக்களின் விளக்கமும், அந்த ஆன்மாக்களனைத்தும் ஆன்மாவென்னும் ஒரு சொல்லை அடைதலும் எவ்வாறு பொருந்துமெனில், யுத்தியில் சமர்த்தனான உனக்கு சத்

* அநுமேயம்—அநுமானத்தால் அறியப்படும் பொருள்.

தின் தொடர்ச்சியை ஆன்மாவுக்குக் கொள்வதில் அகங்காரம் என்னே? அனேக பொருள்களில் ஒருவிதமான சொல்லின் பிரவிருத்திக்கு ஒரு பொருளின் தொடர்ச்சியானது காரணமில்லை; மாமுதலிய சொற்களுக்கு அனேக ரூபமான பொருள்களிலும் பிரவிருத்தி காணப்பட்டிருக்கின்றமையால் என்க. (மாவென்னும் ஒரு சொல், மா, பலா, புளி முதலிய பல பொருள்களில் பிரவிருத்திக்கும் என்றபடி.) பாசகன் (பாகஞ் செய்கின்றவன்) என்னுஞ் சொல்லுக்கு யோகபலத்தால் (காரணத்தால்) பிரவிருத்தி காணப்பட்டிருக்கின்றது. (பாகஞ் செய்யுங் காரணம் பற்றி பாகஞ் செய்கின்றவன் எனப்படுகின்றான் என்றபடி.) அது போலவே ஆன்மா சத்தாயிருக்கும் காரணம்பற்றி சத்துப் பொருளென்பது சம்பவிக்கின்றமையால் குற்றமில்லை என்க.

வேறு வழியாயும் சமாதானங் கூறுகின்றோம். ஒன்றன் றொடர்ச்சியால் ஒரு சொல்லுக்குப் பல பொருள்களில் பிரவிருத்தி இல்லையாயினும், ஒப்புமையைக் காரணமாகக்கொண்டு ஒரு சொல்லுக்கு அனேக பொருள்களில் பிரவிருத்தி இருக்கின்றது. கடம் என்னும் ஒரு சொல்லுக்கு அனேக கடப்பொருள்களில் பிரவிருத்தி இருப்பதுபோல் கடம் என்னுஞ் சொல்லுக்குப் பொருளான கடத்திலிருக்கும் அவயவப்பகுப்புப்போல் ஏனைய கடங்களிலும் அவயவப்பகுப்பு இருக்கின்றமையால், அவை அனைத்திலும் கடம் என்னும் ஒரு சொல் பிரவிருத்திக்கின்றது. ஆனால், கடம் என்னும் சொல் கடத்தன்மை என்னும் சாதியின் தொடர்ச்சி பற்றி எல்லாக் கடங்களிலும் பிரவிருத்திக்கின்றதென்னில், அப்பொழுது கடங்கள் கடத்தன்மையிலிருந்து தோன்றி இருக்கவேண்டும். அவை மண்ணிலிருந்துதான் தோன்றுகின்றன. ஆகையால் ஒப்புமை என்பது வேறு. தொடர்ச்சி என்பது வேறு. ஒப்புமை என்பதே சாமான்னியம் (ஜாதி) என்னுஞ் சொல்லால் இவ்விடத்தில் கூறப்படுகின்றது. அந்தச் சாதியே, இதுவும் கடம் இதுவும் கடம் என்று ஒரு சொல்லால் பலவற்றைக் கூறுதற்குக் காரணமாயிருக்கின்றது. அந்தக்கட நிச்சயமும் கடத்தின் அவயவத்தில் நிகழ்கின்றதில்லை. கடத்தின் அவயவமான கழுத்திலாவது வளைவு முதலிய இடங்

களிலாவது கடம் என்னும் அறிவு உண்டாகிறதில்லை ஆகையால் என்க. அதுபோலவே, மண்ணின் காரியமான கப்பரையிலும் (இரப்போர் கையிலுள்ள பாத்திரத்திலும்) ஒப்புமை இன்மையால் கடம் என்னும் அறிவு நிகழ்கின்றதில்லை. ஒப்புமையுடைய எந்தப்பொருளில் ஒவ்வொரு அவயவந்தோறும் தனது(காரணத்தின்)சொரூபத்திற்குத் தொடர்ச்சி யிருக்கின்றதோ, அந்தக் காரணப்பொருளுக்கு அந்தக் காரியப்பொருளில் தொடர்ச்சி என்று கூறப்படுகின்றது. அந்தத் தொடர்ச்சிதான் அனேக பொருள்களுக்குக் காரணம் ஒன்று என்று கொள்வதற்குக் காரணமாயிருக்கின்றது.

இவ்வாறே உலகத்தில் ஒன்றுடன் ஒன்று ஒப்புமையில்லாத கடம், சராவம், (கடாரம்) கப்பரை முதலிய காரியங்களிலும், அவற்றின் அவயவங்களான கழுத்து முதலியவற்றிலும், மண்ணின் தொடர்ச்சி இருப்பதுபற்றி அந்தக் கட முதலியவற்றிற்கு மண்ணின் காரியத்தன்மை உடநிகழ்ச்சியாய்ச் சித்தித்திருக்கின்றது. ஆகையால் தொடர்ச்சியும் ஒப்புமையும் வெவ்வேறாகும். (அஃதாவது, காரணத்தின் சொரூபம் காரியம் அனைத்திலும் இருப்பது தொடர்ச்சி என்றும், காரியங்கள் பலவற்றுள்ளும் ஒவ்வொன்றும் பலவாகுமாகையால் பலவான ஒரு காரியத்தில் இருப்பது ஒப்புமை என்றும் கூறியபடியாம்.)

இவ்விடத்திற் கூறியவாறு ஆன்மாவினிடத்துத் தொடர்ச்சி இல்லையாயினும், ஒப்புமை பற்றியே ஆன்மாவென்னும் ஒரே விதமான சொல் எல்லா ஆன்மாக்களிடத்தும் பிரவிருத்தித்திருக்கின்றது ஆகையால், ஒருவிதமான குற்றமுமில்லை. இது பற்றியே விருத்தி காரரும், "சிவனும் ஆன்மாக்களும் சமமான சாதியை உடையவர்கள், அந்தச் சாதியானது சேதனங்களுக்குள்ள ஒப்புமையே ஆகும்" என்று கூறி இருக்கின்றனர். (அஃதாவது சித்தென்னும் சாதியால் சிவனும் ஆன்மாவும் ஒப்புமை உடையர் என்றவாறும்.)

ஆனால், அறியப்படும் பொருளாய் இல்லாத ஆன்மாவினிடத்து ஒப்புமையை எவ்வாறு அறியமுடியும் எனில், அஃது

உண்மையே. ஆயினும், ஆன்மாக்களிடத்து ஆன்மா என்னும் சொல்லுக்குப் பொருளாயிருக்குந்தன்மைக்கு ஆன்மாவுடன் வேற்றுமை இல்லாதிருப்பதுபோல் அதிக வேற்றுமை இல்லாமை பற்றி வியவகாரத்துக்காக உபசாரமாய் ஒப்புமையைக்கொள்கின்றேம். உண்மையில் கொள்ளவில்லை என்க. வேதங்களிலும் இஃதன்று இஃதன்று என்று ஆன்மாவை அறியத்தக்கதாகக்கூறி இருக்கின்றது. ஆகையால், * ஒப்புமையைக்கூறியது உபசாரம் பற்றிக் குற்றமற்றதாகும் என்க.

இவ்வாறு சேதனமாயும் முதற்காரணமாயும் பரமகாரணத்தை ஒத்துக்கொண்டாலும் அதனிடத்தில் ஒடுக்கமே முத்தி என்பதைக் குறித்து மீண்டும் திரும்புதல் நிகழ்கின்றதென்னும் குற்றம் கூறப்பட்டது.

இவ்வாறே முன்னர்க்கூறப்பட்ட பிராணன் அகங்காரம் முதலியவற்றில் ஒடுக்கத்தைக்கூறும் தௌட்டிகர் முதலிய வாதிகளும் மறுக்கப்பட்டனர். மீண்டும் திரும்புதல் எனனும் குற்றம் நிகழ்கின்றமையால் என்க. (சஅ)

(அ—கை) இனி, பரமான்மாவிடத்து ஒடுக்கம் முத்தி என்னும் மதத்தை மறுக்கின்றார்.

(சகூ) வேதாந்தத்தில் பரமான்மாவிற்கு முதற்காரணமாயிருத்தல் உண்டென்பது பிரசித்தமாயிருக்கின்றது. முதற்காரணத்தில் ஒடுக்கமடைத்தவனுக்கு முன்போல் திரும்புதல் நிச்சயமாய் நிகழ்கின்றது என்பதாம்.

(உரை) பரமான்மா எல்லா உலகத்திற்கும் முதற்காரணமாய் இருக்கின்றான் என்பது வேதாந்தங்களில் பிரசித்தமாய் இருக்கின்றது. அந்த முதற்காரணத்தில் ஒடுக்கத்தை அடைந்தவர்களுக்கும், அந்த முதற்காரணத்தில் நின்று முன்போல் திரும்புதல் நிச்சயமாய் நிகழ்கின்றது. ஆனல், வேதாந்தமதத்தில் முன்னர்க் கூறியவாறு பேதரூபமான எல்லா உலகங்களும் அவித்தையால், (அஞ்ஞானத்தால்) தோன்றுகின்றமைபற்றி அசத்தி

* ஒப்புமை—இஃதெனச் சுட்டப்படுவது.

யமாய் இருக்கின்றன. அதுபற்றி, உலகங்களுக்குக் காரியத் தன்மை இல்லை ஆகையால், அவற்றிற்கு முதற்காரணமாகப் பரமான்மாவைக் கொண்டது குற்றமாகுமென்று எவ்வாறு கூற முடியும் எனில், கூறுகின்றோம்.

அசத்தியத் தன்மையாவதுயாது? சத்தியத்தின் சொரூபமாவது யாது? என ஆராயுமிடத்து, அறிவு ரூபமாய் இருக்கும் தன்மையே சத்தியத்திற்கு இலக்கணம். அந்த இலக்கணமின்மையால் கடம் முதலியவற்றிற்கு அசத்தியத்தன்மை இருக்கின்றது. கடம் முதலியவை அறியப்படும் பொருள்களாய் இருக்கின்றனவன்றி அறிவு ரூபங்களாய் இல்லாமையால் என்க. இவ்வாறே பெரியோர்களும் "எதற்குப் பிறபொருளால் அறியப்படுதலில்லையோ" என்பதனால் கூறியிருக்கின்றனர். பெரியோர்கள், சத்துப்பொருள் அசத்துப்பொருள்களுக்கு வேற்றுமை மாத்திரத்தால் நிர்ணயம் செய்தல் தக்கது; வேற்றுமை சம்பவிக்கின்றமையால், அசத்துத்தன்மைக்குக் காரணம் சத்துத்தன்மைக்கு விரோதம் என்று கூறல்வேண்டும்; வித்துவான்களுக்கு அனுபவசித்தமான எல்லா உள் பொருள்களிலுமுள்ள சத்துத்தன்மையை விரோதமின்றி அசத்தென்று விலக்குவது தகுதியற்றதாகையால் என்க. இஃதிருக்கட்டும்.

பரம் பொருளால் அறியப்படுவன அனைத்தும் பரமாணுரூபங்களென்றாவது, தூல ரூபங்களென்றாவது நிச்சயிக்கமுடியாமையால்; அவை உண்மைப் பொருள்கள் ஆகா. கனவுபோல் அஞ்ஞான ரூபங்களாக இருக்கின்றன. அஞ்ஞானத்திற்குச் சொரூபமாவது தன்னை இத்தன்மைத்தென்று நிரூபணம் செய்யமுடியாமையேயாம். தன்னை நிரூபணம் செய்யுந்தகைமையே ஞானத்தின் சொரூபம். ஆகையால் அறிவுரூபமான பொருளுக்கு அறிவென்னும் ஒரே இயல்பு உடைமையால் சத்துத்தன்மை தானாகவே சித்தித்திருக்கின்றமைபற்றி அசத்துத் தன்மைக்குக் காரணமான சத்தின் விரோதமில்லை. இவ்விடத்தில் ஆராயத்தக்கது ஒன்று. அஃதாவது புருடனுக்குப்பிரதிபையை (புதிய

புதிதாகத் தோன்றும் அறிவை) உண்டுபண்ணுவது பிரமாணங்களின் விசேடமே. அந்தப் பிரமாணமானது, அவித்தை என்னும் அபஸ்மாரத்தால் (காக்காய் வலியால்) வரையப்பட்டு இருத்தல் பற்றி, பிரதிபையில் குறை நிகழ்ந்து உள் பொருள்களின் இயல்பைநிரூபணம் செய்வதில் சாமர்த்திய மின்மையுடன் கூடியிருக்குமாயின், உள்பொருள்களை அசத்தென்று சொல்வதற்கு அப்பொருள்கள் செய்த குற்றம் என்னை? கட்டையைக் கட்டை என்று அறியாமலிருப்பது கட்டையின் குற்றமன்று. அன்றி, புருடனுடைய குற்றமாய் இருக்கின்றது. உள்பொருள்களை நிச்சயிக்கமுடியவில்லையாயின், அப்பொருள்களினிடத்து ஐயம் நிகழும். இன்னபொருள் என்று நிச்சயிப்பதற்குச்சாதகமான பிரமாணமும்,பாதகமான பிரமாணமும் இல்லாமையால் ஐயந்தான் நியாயமாய் நிகழவேண்டும். அசத்தென்னும் நிச்சயம் நிகழாது. ஆகையால், உள்பொருளின் இயல்பை ஆராய்ப்புகுந்து அசத்தின் ஆராய்ச்சி செய்யப்பட்டதாயிற்று. ஆகவே, இடையர், பாலர், பெண்கள், விருத்தர் முதலிய அனைவருக்கும் ஐயந்தான் இருக்கின்றதே யன்றி அசத்தென்னும் நிச்சயம் இல்லை என்று சித்தாந்தம் செய்யப்பட்டிருக்கின்றது.

ஆனால், உள்பொருள்களினிடத்து ஆராய்ச்சி செய்யத்தகாமை இருக்கின்றதே எனில், ஞானகாண்டத்தில் முன்னரே உள்பொருள்கள் ஆராயப் பட்டிருக்கின்றமையால் அதுகொண்டு அவற்றிற்கு அசத்தியத்தன்மை கிடையா. ஆனால், நிச்சயமான பொருளை அறிவிப்பதிலும் வேதங்களுக்குப் பிராமாண்யம் இருத்தலால், பிரமம் ஒன்றே சத்தியம்; பேதமனைத்தும் அசத்தியம் என்ற சுருதிகளால் சத்தென்றும் அசத்தென்றும் நிர்ணயம் இருப்பதாகக் கூறப்பட்டிருக்கின்றதெனில், அது பொருந்தாது. பிரமாணங்களாக இருக்கின்றமைபற்றி, சுருதிவாக்கியங்கள் சத்தியங்களாக இருத்தலால் பிரமம் ஒன்றே சத்தியம் என்ற அத்வைதம் முரண்படுகின்றது.அத்துவைதமானது பிரமாணம் பிரமேயம் என்னும் இவற்றின் உண்மையைக்காரணமாக உடையதாயிருத்தலால் என்க.

ஆனால், சுருதி வாக்கியங்களையும் அசத்தியமாகவே கொள்கின்றோமெனில், அப்பொழுது அந்தச் சுருதிவாக்கியங்களுக்குப் பிரமாணத்தன்மை இல்லையாகும். ஆகவே, பிரமத்திற்குச் சத்தியத்தன்மை சித்திப்பதிலும் பேதங்களுக்கு அசத்தியத்தன்மை சித்திப்பதிலும் சுருதிவாக்கியங்களினும் வேறான பிரமாணம் கூறல்வேண்டும். மலடி மகன் என்ற அறிவுபோல் பிரமாணம் அசத்தியமாயிருப்பதில்லை ஆகையால், இவ்வாறு வேறுபிரமாணத்திலும் வினு விடைகள் நிகழும். நிகழவே, அநவத்தை (வரம்பின்றி ஓடல்) என்னும் குற்றம் நிகழுகின்றமையால் சத்தியமான பிரமத்திற்கு அத்துவைதம் சித்திப்பதில்லை. உண்மையாகவேபேதங்கள் சத்தியமானமையால் அவை அத்துவைத இயல்பு உடையன என்பதில் எவருக்கு எவ்விடத்திற் பிரமாணங்களிருக்கின்றன. பிரமாணம், பிரமேயங்களின் நிர்ணயமானது துவைதத்தைக் காரணமாய்க் கொண்டிருத்தலாலெனக. இஃது உண்மையே.

ஆயினும், பாமார்த்தத்தில் பிரமாணம், பிரமேயம் என்பன அவித்தையால் கற்பிக்கப்பட்டு அசத்தியமாய் இருக்கின்றன எனில், மிகநன்றாய் இருக்கின்றது. அதுவே ஆராயத்தக்கது. பிரமாணங்கள் அசத்தியங்களென்னும் உன்னுடைய இந்த நிச்சயமும் அசத்தியமாகும். உன்னால் அறியப்பட்டன அனைத்தும் அசத்தியமே. இரண்டு சந்திரன் என்னும் அறிவுபோலுமெனக. இவ்வாறாகவே, பரப்பிரமமும் அசத்தியமே ஆகும். ஆகவே, பொருளின்மை ரூபமான சூனியமே வேதத்திற்குப் பொருள் என்று புத்திமானான உன்னால் கொள்ளப்பட்டதாகின்றது. சுருதிவாக்கியங்கள் அவித்தியா ரூபங்களாக இருந்தும் வித்தைக்கு உபாயங்களாய் இருக்கின்றன எனில், இது சாமர்த்தியமில்லாத வைதிகர்களை ஏமாற்றக்கூடியகூற்று. பிரமாணங்கள் அசத்தியங்களாயின் எல்லாம் மனோராச்சியத்திற்கு நிகராகும். பிரமாணங்கள் சத்தியங்களாயின் துவைதபக்கமே பிரகாசிக்கின்றது. அபேதங்கொள்ளின் எல்லாம் பிரம்மரூபங்களானமையால் எவருக்கு எவர் என்ன செய்யமுடியும்? பிம்பமான பரமான்மாவுக்கு அவித்தை

யால் மயக்கம் சம்பவிக்கின்றதில்லை. மயக்கமான சொப்பன அறிவு எல்லாவற்றையும் மயக்கமாய் ஆலம்பிக்கின்றது: தன்னிடத்தில் மயக்கம் என்பதில்லை. ஆலம்பமாவது வெளியிலுள்ள பொருள் மாறுதலாய்த் தோன்றி மயக்கத்திற்கு விடயமாயிருத்தலைச்செய்வது: அறிவென்னும் ஒரே இயல்புடைய பொருள், தான் எவ்வாறு விளங்குகின்றதோ அவ்வாறாகவே இருக்கின்றது. சுயம்பிரகாசமான பொருளுக்கு மயக்க இயல்புகிடையாது. மயக்க இயல்பு இருப்பின் சுயம் பிரகாசம் ஆகின்றதில்லை. ஆகையால், தன்னை அறிவதில் மயக்கம் நிகழ்கின்றதில்லை என்க.

ஆன்ம வேற்றுமையானது பிற ஆன்மாக்களை அனுமானம் செய்கின்றமையாலும், சுயம் பிரகாசத்தாலும் சித்தித்ததாய் உண்மையாகவே இருக்கின்றது. சுருதியும் "பிரகாசிக்கின்ற அவனைத்தொடர்ந்தே எல்லாம் பிரகாசிக்கின்றன. அவனுடைய பிரகாசத்தால் எல்லாம் பிரகாசிக்கின்றன." என்று கூறுகின்றது.

ஆனால், பேதமானது ஒன்று பிறிதொன்றின் இன்மையின் நிச்சயத்தை விரும்புகின்றமையாலும், பிரத்தியக்ஷமானது உள்பொருள்களைவிடயமாகக் கொண்டிருத்தலாலும் பேதம், பிரத்தியக்ஷமாதல் எவ்வாறு கூடும். பெரியோர்களும் "பிரத்தியக்ஷம் விதிக்குமேயன்றி விலக்காதென்று கூறுகின்றன" ரெனக் கூறி இருக்கின்றனரெனில், அது பொருந்தாது. பேதமானது ஒன்று பிறிதொன்றின் இன்மையின் நிச்சயத்தை விரும்புகின்றதில்லை. அன்றி, பேதம் சித்தித்தாற்றான் ஒன்றினிடத்துப் பிறிதொன்றின் இன்மை அறிவு நிகழ்கின்றது. பேதமின்றி எல்லாம் ஒன்றாயிருக்குமாயின், எதற்கு எதனிடத்தில் இன்மை கூறமுடியும். எல்லாவற்றிலும் எல்லாம் இருக்குமாயின் கடம் வேண்டுபவன் படத்தைக்கண்டு ஏன் சும்மா இருத்தல் வேண்டும்: சத்துத்தன்மை என்பது எவ்விடத்திலும் மாறாதிருப்பதுபற்றி பிரமாணம் அப்பிரமாணமென்ற பிரிவும் சம்பவிக்கின்றதில்லை. ஆகையால், எல்லாம்தங்களிலும் சத்தியமாகவும், பிரத்தியக்ஷமாகவும் சித்தித்த பேதத்திற்கு சொல்மாத்திரத்தால் அசத்தியத்தன்மையை எவ்வாறு சாதிக்க முடியும்?

இனி, பேதம் சத்தியமாயிருக்கட்டும், இருப்பினும் இந்தப் பிரபஞ்சம் பிரமத்தை முதற்காரணமாக உடையது என்னும் சுருதியால் பிரமம் முதற்காரணமென்று கொள்கின்றோம் எனில், இதனைக்குறித்துத்தான் இவ்விடத்தில் விருத்திகாரரால் குற்றம் கூறப்பட்டிருக்கின்றது. அந்தக்குற்றத்தையே முதற் காரணத்தில் ஒடுக்கம் அடைந்தவனுக்கு முன் போல் திரும்புதல் நிச்சயமாய் நிகழ்கின்றது என்பதனால் கூறுகின்றார். (௪௯)

(அ—கை) பிரமத்திற்கு ஆனந்தம், சொரூபம் என்று சுருதியில் கேட்கப்படுகின்றமையால், ஆனந்தவடிவத்தோடு திரும்புதல் நிகழாது. தூலவடிவத்திற்குத் திரும்புதல் இருப்பினும் பரமான்மாவில் ஒடுக்கமடைந்த சூக்குமவடிவங்களுக்குத் திரும்புதல் உண்டென்பது பொருத்தமற்றதென்பார்க்குக் கூறுகின்றார்.

(௫௦) ஹே பண்டிதர்களே! அந்தப்பரப்பிரமத்தில் உண்மையில் விஞ்ஞானமாத்திரமான ஆனந்தம் என்பது இல்லை. நூல் முதலிய முதற்காரணம் இவ்வாறு காணப்படவில்லை ஆகையால் என்பதாம்.

(உரை) ஹே வித்துவான்களே! (முதற்காரணமாகக்கூறும்) அந்தப்பரப்பிரமத்தினிடத்தில் விஞ்ஞானமானது உண்மையில்லை. ஆடை முதலியவற்றிற்கு முதற்காரணங்களான நூல் முதலியவற்றிற்குப் போல் முதற்காரணத்தன்மை இருத்தலால்என்க. (௫௦)

(அ—கை) பிரமத்தை விஞ்ஞான மாத்திரமாகக் கூறுகின்ற சுருதிகளின் கருத்தென்னை என்பார்க்குக் கூறுகின்றார்.

(௫௧) புவனத்தன்மைக்கு உட்பட்டதாயும், அதுபற்றிப் புவனத்தில் இருக்கின்றதாயும் உள்ளபரப்பிரமத்திற்கு விஞ்ஞானரூபமாயிருக்குந்தன்மை உபசாரமாய்க் கூறப்பட்டிருக்கின்றது. புவனத்தில் வசித்துக்கொண்டு போகத்தை அநுபவித்துக் கொண்டிருக்கும் ஆன்மாக்களுக்கு விஞ்ஞானம் முக்கியமான சொரூபமாய் இருக்கின்றது என்பதாம்.

(உரை) போகத்தை அளிப்பதின் பொருட்டுப்புவன ரூபமாய்ப்பரிணமித்திருக்கும் பரப்பிரமத்திற்கு விஞ்ஞானம் சம்பவிக்காவிடினும், புவனத்திலிருந்து அனுபவித்துக்கொண்டு இருக்கும் ஆன்மாக்களுடையவிஞ்ஞானச்சேர்க்கை இருப்பதுபற்றி உபசாரமாய்ப்பரப்பிரமம் விஞ்ஞானரூபமென்று கூறப்பட்டதாகச்சுருதிகளுக்குப் பொருள் கொள்ளத்தகுந்தது. எதுபோலுமெனின், கட்டில்கள் கதறுகின்றன என்றவிடத்து, சடரூபங்களான கட்டில்களில் கதறுதல் நிகழாமையால், கட்டிலில் வீற்றிருக்கும் ஜனங்கள் கதறுகின்றனர் என்னும் பொருளில் உபசாரமாய்க் கட்டில்கள் கதறுகின்றன என்று கூறுவது போலுமென்க. புவனத்தில் வசிக்கின்ற போகிகளான ஆன்மாக்களுக்கு விஞ்ஞானம் முக்கியமாய் இருக்கின்றது. பிரமத்திற்கு விஞ்ஞானம் முக்கியமாய் இல்லை. (ருக)

(அ—கை) ஆனல், அவ்விதமான புவனங்களை அடைதலே எங்களுக்கு மோக்ஷமாகும் என்பார்க்குக் கூறுகின்றார்.

(ருஉ) புவனத்திற்கு நாசம் காணப்பட்டிருத்தலால், அந்தப்புவனம் நாசமடையுமிடத்து அதனை அனுபவிக்கின்றவர்களுக்கும் நாசம் நிகழுமாகையால் அவ்விதமான மோக்ஷம் நிலையற்றது என்பதாம்.

(உரை) புவன நாசத்தால் புவனத்திலிருந்து போகங்களை அனுபவிக்கும் போக்தாக்களுடைய நாசமும்அறியப்பட்டிருத்தலால் புவனத்தை அடைதலாகிய அந்த மோக்ஷமும் நிலையற்றதென்க. (ருஉ)

(அ—கை) இவ்வாறுபரமான்மாவினிடத்து ஒடுக்கம் மோக்ஷம் என்னும் பக்கத்தை மறுத்து, இனி, கைவல்யம் மோக்ஷம் என்னும் (சாங்கியர்) பக்கத்தை மறுக்கின்றார்.

(ருங) குணதத்துவத்திற்கு மேல் அனுபவிக்கத்தகுந்த கன்மங்களுக்கு உபலப்தியின்மையால் நாசம் இல்லாமைபற்றிச் சாங்கியர்கள் கூறும் கைவல்யம் பொருத்தமற்றது என்பதாம்.

(உரை) சாங்கியர்களுடைய முத்தியில், கன்மநாசத்தால் போக்திருத்தன்மையின் நிவிருத்தி ரூபமான யாதொரு கைவல்யம் கூறப்படுகின்றதோ, அதுவும் பொருத்தமற்றது. அது பொருத்தமற்றதென்பதனை "நாசம்இல்லாமைபற்றி" என்பதனுற் கூறுகின்றார். குணதத்துவத்திற்குமேல் அனுபவிக்கத் தகுந்த கன்மங்களுக்கு நாசமில்லாமைபற்றி என்று அந்நுவயம் செய்து கொள்ளல் வேண்டும். ஆனுல் குணதத்துவமீறுனதத்துவத்தை விடயமாகக் கொண்ட கன்மங்களுக்குப் போக்தாவாயிருக்குந்தன்மை சாங்கியர்களுக்குக்கிடையாது. ஆயினும், குணதத்துவத்திற்கு மேல் சாங்கியர்களால் அறியப்படாத அராகம், வித்தை முதலிய தத்துவங்களைவிடயமாகக் கொண்ட கன்மங்கள் நாசமடையாமையால், அவற்றிற்குப் போக்தாவாயிருக்குந்தன்மை அவர்களுக்கு நீங்கவில்லை. அராக முதலிய தத்துவங்களில் அவர்களுடைய கன்மங்களுக்கு நாசம் இல்லாமைக்குக் காரணத்தை "உபலப்தி இன்மையால்" என்பதனுற் கூறுகின்றார். உபலப்தியாவது:— போகம். இவ்வாறே "புருடனுக்குச் சுகதுக்க முதலியவற்றின் அறிவே போகமென" பெரியோர்களும் கூறுகின்றனர். போகமின்மை அநுபலப்தியாகும். ஆகையால் முறையே மேல்மேலுள்ள தத்துவங்களைவிடயமாகக் கொண்ட கன்மங்கள் அனுபவிக்கத்தக்கவை ஆகும். சாங்கியர்களால் அந்தக்கன்மங்கள் அனுபவிக்கப்படாமையால் அவை நசிக்கவில்லை.

ஆனுல், "ஹே அர்ச்சுன! ஞானுக்கினியானது எல்லாக் கன்மங்களையும் சாம்பலாகச் செய்கின்றது" என்று கீதையிற் காணப்படுதலால், சாங்கிய ஞானத்தால் கன்மங்கள் நாசமடையவில்லை என்று எவ்வாறு கூறப்படுகின்றதெனில், சாங்கிய ஞானமானது, குணம் புருடன் என்னும் இவற்றின் வேற்றுமையை அறியும் அறிவைமாத்திரம் பயனுக உடையது. அந்தக்குணதத்துவத்திற்கு மேலுள்ளதத்துவங்களைவிடயமாகக் கொண்ட கன்மங்கள் நாசமடைவதற்குச் சம்பந்தமில்லை. ஆனுல், குணங்களுடைய தொழிற்பாடு இல்லாமைபற்றிப் புத்தி முதலிய கரணங்களும் தொழிற்படாமலிருக்கின்றமையால் குணதத்துவத்திற்கு மேல் கரணங்களின் தொழிற்பாடில்லாமல் போகம் எவ்வாறு நிகழும்

எனில், இந்தக் கேள்வி பொருந்தாது. ஆன்மாவினுடைய கரணங்களின் தொழிற்பாட்டுக்குக் குணத்தின் தொழிற்பாடு காரணமன்று. அன்றி, புண்ணிய பாவக்கலந்த கன்மங்களே காரணமாகும். இவ்வாறு "சரீரங்கள் விடயங்கள், கரணங்களாகிய இவை அனைத்தும்கன்மத்தால் தோன்றுகின்றன" என்றுவேறு நூல்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. கூறப்பட்ட கன்மங்கள் குணதத்துவத்தை நீக்கிய ஆன்மாக்களுக்கு இருக்கின்றன. அதனால், கரணங்களின் தொழிற்பாடு இருக்கின்றது. ஆகையால் போக்திருத்தன்மை இல்லை என்பது ஆசங்கை மாத்திரமேயன்றி உண்மையில் போக்திருத்தன்மை இருக்கின்றது. ஆகவே, கேவலத்தன்மை பொருத்தமற்றது. ஆனால் சாங்கிய அறிவால் நிவிருத்தியடைந்தது எதுவெனில், குணத்தத்துவம் வரையுள்ள போகத்துக்குப் போக்தாவாய் இருக்கும் போக்திருத்தன்மைதான் நிவிருத்தியடைந்திருக்கின்றது. வேறொன்றும் நிவிருத்தியடையவில்லை என்க. (ருங)

(அ—கை.) இனி, சாங்கியர்களுள் சிலருடைய மதத்தை அனுசரித்து "எல்லாக் கன்மங்களுக்கும் போகத்தால் நாசம் நிகழும்" என்னும் ஆசங்கையை எடுத்துக்கூறி அதற்கு விடை கூறுகின்றார்.

(ருச) எல்லாக் கன்மங்களும் ஒரு பிறவியைத்தான் செய்கின்றனவெனில், அவ்வாறன்று. முதற்காரணத்தில் ஒடுக்கமடைகின்றதாகக் கேட்கப்படுகின்றமையால். வேதத்திலும் இந்திரத்தன்மை முதலியவற்றைப் பயனாகக்கொண்ட கன்மங்கள் வெவ்வேறு பிறவியை உண்டுபண்ணுகின்றனவென்று கூறப்பட்டிருக்கின்றது என்பதாம்.

(உரை) இவ்வுலகத்தில் பிறந்து இறக்கும் நடுவில் செய்யப்பட்ட முக்கியமாயும் அமுக்கியமாயும் உள்ள புண்ணிய பாவக்கூட்டங்களனைத்தும் மரணகாலத்து வெளிப்பட்டு விளங்கி, ஒரே காலத்தில் விருத்தியடைந்து ஒரு பிறவியைத்தான் செய்கின்றன. மறுபிறவியில் பயன்தருவதற்காகக் கன்மம் எஞ்சியிருந்து பிறி

தொரு பிறவியை எதிர்பார்க்கின்றதில்லை. எதனாலெனில், கன்மம் அனைத்தும் கிரியை ரூபமாய் இருக்கின்றமையால் என்க. இவ்வாறு (பயனைத்தருவதற்காக எஞ்சியிருக்கும்) பிராரத்த கன்மம் என்பது கிடையாதென்று சில வாதிகள் ஒரே பிறவியில் கன்மங்களின் நாசத்தைக் கூறுகின்றனர்.

இப்பொழுது அடைந்த பிறவியினால் முற்பிறவியிலுள்ள கன்மம் அனைத்திற்கும் நாசம் உண்டென்பது அநுமானத்தால் நிச்சயிக்கப்படுகின்றது; இந்தப் பிறவியில் புதிதாய் நிகழ்ந்த கன்மம் ஞானத்தால் நசிக்கின்றது; ஆகையால் கன்மம் இல்லாமைபற்றி குணதத்துவத்திற்கு மேல் அனுபவிப்பதற்காகக் கன்மம் இருக்கின்றதென்பது கூடாது என்பார்க்கு, "அவ்வாறன்று" என்பதனால் குணதத்துவத்திற்கு மேலும் கன்மம் இருப்பதுபற்றி அது பொருந்தாதென்று கூறுகின்றார். இப்பொழுது அடைந்த பிறவியினால் முன்னுள்ள கன்மம் அனைத்திற்கும் நாசம் உண்டென்ற நியமம் கிடையாது. வேறு பிறவிகளை உண்டு பண்ணுகின்ற கன்மங்களும் இருக்கின்றன. இதனை, "முதற்காரணத்தில் ஒடுக்கம் அடைந்த" என்பதனாற் கூறுகினார். முதற்காரணத்தில் ஒடுக்கமடைந்த கன்மங்கள் வாசனாரூபமாயிருக்கின்றதாகக் கேட்கப்படுகின்றன. ஆகையால் முதற்காரணத்தில் கன்மம் அனைத்தும் வாசனாரூபமாயிருக்கின்றன. பின்னர் அவை பரிபாகத்தை அடைந்து மீண்டும் போகத்தின் பொருட்டுத் தொழிற்படுகின்றன. இந்த யுத்தியினால் மாத்திரம் கன்மம் உண்டென்பதில்லை. வேதத்திலும் கன்மம் உண்டென்பது கேட்கப்படுகின்றது. இதனை இந்திரத்தன்மை முதலிய என்பதனாற் கூறுகின்றார். ஸ்வாராஜ்யத்தில் (இந்திரத்தன்மையில்) ஆசைகொண்டவன் வாஜபேயம் என்னும் யாகத்தைச் செய்யவேண்டும் என்று, ஸ்வாராஜ்யம் என்னும் இந்திரத்தன்மையைப் பயனாகவுடைய கன்மமும், முதலிய என்பதனால் கொள்ளத்தக்க சுவர்க்கத்தைப் பயனாக உடைய கன்மமும், வேதத்தால் விலக்கப்பட்டதாயும் நரகத்தைப் பயனாக உடையதாயும் உள்ள பிராமணக் கொலை முதலிய கன்மமும் உண்டென்பது வேதத்தில் கேட்கப்படுகின்றது. அவ்வாறான கன்மங்கள் வேறு

வேறான பிறவியை உண்டுபண்ணுகின்றன. ஒன்றுக்கொன்று மாறுபாடான பயன்களைத் தருகின்ற கன்மங்கள் ஒரே காலத்தில் பிறவியை உண்டுபண்ணமாட்டா. அனுபவமின்றிக் கன்மங்களோ நசிக்கமாட்டா. ஆகையால் நிச்சயமாக மறு பிறவியில் பயனைத் தருதற்பொருட்டுக் கன்மங்கள் எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனவென்று கொள்ளல்வேண்டும். கொள்ளவே, ஒரே பிறவியில் கன்மங்களின் அனுபவத்தைக் கூறும்வாதம் பொருத்தமற்றது. இவ்வாறே பெரியோர்களும், "ஒரே காலத்தில் கன்மங்கள் நசிக்குமாயின் ஒரு கன்மமும் நிலையாக இருப்பதில்லை; சாத்திரத்தில் கூறப்பட்ட கன்மம் அனைத்தும் அனுபவிக்கப்பட்டு நசிக்கின்றன" என்று கூறியிருக்கின்றனர்.

இதுவரையும் கூறியவாற்றால் செய்யப்பட்ட காரியத்தை உடைய பிராரத்த கன்மமே சம்பவிக்கிறதில்லையெனக் கூறப்பட்டதாகின்றதே எனில், (வாசனைதான் பலனைத்தருகின்றதேயன்றிக் கன்மம் பலனைத் தருகின்றதாகப் பெறப்படவில்லையே என்பது கருத்து) எவன் இவ்வாறு மாறுபடக் கூறுகின்றான்? (கூறவில்லை என்றபடி) அன்றி, தனது பயனைச் செய்கின்ற தர்மாதர்மரூபமான புருடகன்மங்களைத்தானும் * பிரகிருதிக்கு ‡ சமஸ்காரத்தை மாத்திரம் செய்யத்தக்கது. இவ்வாறே உலகத்தில் புருடனுடைய உழுதல் முதலிய தொழில்கள் பூமிக்குச் சமஸ்காரத்தைச் செய்கின்றனவாகக் காணப்பட்டிருக்கின்றன. கன்மம் புருடனால் செய்யப்பட்டதே ஆகும். இந்தச் சமஸ்காரமோ தன்னுடைய பரிபாகத்தைத் துணையாகக்கொண்டு சில விடத்துத் தனக்குத் தடையாயுள்ள தீவிரமான கன்மபலனை அனுபவிக்கவேண்டின் அந்த அனுபவத்தின் முடிவினுலும், சிலவிடத்துச் சிறந்த புவனங்களில் பலனை அனுபவிக்கவேண்டின் அந்த

---

* பிரகிருதி என்பது இவ்விடத்தில் தர்மாதர்மங்களென்னும் குணங்களுக்கு இருப்பிடமான புத்தியைக் குறித்தது.

‡ சமஸ்காரமென்பது இவ்விடத்தில் வாசனையைக் குறித்தது. மாத்திர சப்தத்தால் பயனைச் செய்யாதென்பது குறிப்பிடப்பட்டது. கன்மத்தைச்செய்த புருடனுக்கே பயனைச் செய்யும் என்றபடியாம்.

அனுபவத்தின் முடிவினாலும், ஒன்றுக்கொன்று மாறுபாடான பயன் ரூபமான கன்மங்களின் துணையைத் துணையாகக்கொண்டாவது, அல்லது தனியாகவாவது, யாதாவதொரு பிறவியில் ஒரு சமயத்தில் புதையலைப்போல் புருடனுக்குப் பயனைக் கொடுக்கும் * ஆகையால் கன்மங்களின் பரிபாகத்திலுள்ள வேற்றுமையானது சிற்றறிவுடையவர்களால் நிச்சயிக்கமுடியாததாகும். ஆகவே, மறு பிறவியில் பயனைத்தரும் கன்மம் இருக்கின்றமைபற்றி சாங்கிய முத்தர்களின் கேவலத்தன்மை குணதத்துவத்தோடு கூடினதாய் நம்மால் கூறப்பட்ட கேவலத்தன்மையே ஆகும். (௫௪)

(அ—கை.) உங்கள் சைவாகமங்களிலும் ஆன்மாவுக்குக் கேவலமாய் இருக்குந்தன்மை கேட்கப்படுகின்றது. அஃது எவ்வாறு என்பார்க்குக் கூறுகின்றார்.

(௫௫) அங்குட்ட மாத்திர புவனத்தில் பசுவுக்கு விஞ்ஞானம், யோகம், சந்நியாசம், போகம் என்னும் இவற்றுள் ஒன்றாலுண்டான கன்ம நாசத்தால் கேவலமாய் இருக்குந்தன்மை நிகழ்கின்றது என்பதாம்.

(உரை) அங்குட்ட மாத்திரம் என்னும் பெயர்கொண்ட வாசத்தானமான கலாதத்துவ புவனத்தில் மாயை புருடன் என்னும் இவற்றின் விவேகத்தை விடயமாகக்கொண்ட விஞ்ஞானத்தினாலாவது, பிரத்தியாகாரம் முதலிய எட்டு அங்கங்களால் உபகரிக்கப்பட்ட சித்தஜயம் என்னும் யோகத்தினாலாவது, மாயா புருட விவேகத்தின் பயனாகிய சந்நியாசத்தினாலாவது, எல்லாம் ஈசுவரனைச் சார்ந்ததென்று கருதி ஈசுவரன் பொருட்டு அர்ப்ப

* வாசனையானது தீவிர கன்மமென்னும் பாவத்தின் பலனையும் புண்ணியத்தின் பலனையும் அநுபவிக்கவேண்டாத சமயத்தில், மாறுபட்ட புண்ணியபாவ பலன்களை, புண்ணியபாவங்களைத்தரும் முயற்சியைத் துணையாகக் கொண்டு மண்ணுலகத்திலும், அவ்விரண்டின் பலனைத் தனித்து அநுபவிக்கவேண்டின் முயற்சியைத் துணையாகக் கொள்ளாது வாசனை மாத்திரத்தால் நரகத்திலும் சுவர்க்கத்திலும், முன்னறிவிப்பின்றிக் கிடைக்கும் புதையலைப்போல் பலனைத்தருமெனக் கூறியவாறும்.

ணம்செய்யப்பட்ட எல்லாக் கன்மங்களுக்கும் அவற்றின் பயனை விடயமாகக்கொண்ட அநுபவத்தினாலாவது எல்லாக் கன்மங்களும் நசிக்கவே, போக் திருத்தன்மையின் முடிவைக் காரணமாகக்கொண்டு கைவல்யம் நிகழ்கின்றது. அது அங்குட்ட மாத்திர புவனத்திலேதான் நிகழ்வது; உன்னுடைய முத்தியில் நிகழ்வதுபோல் அன்று. (ருரு)

(அ—கை) ஆனல், அந்த கைவல்யமே எங்களுடைய மோக்ஷமாகும் என்பார்க்குக் கூறுகின்றார்.

(ருசு) முதற்காரணத்தில் ஒடுக்கம் என்னும் முத்திக்கு ஞானக்கிரியா குணங்கள் நாசமடைதல் பற்றி முத்தியின் பயன் ஆன்ம நாசமாக ஆகின்றது என்பதாம்.

(உரை) அங்குட்ட மாத்திரபுவனத்தில் முத்தியாகக் கொள்ளப்பட்ட அந்தக் கைவல்யமும் ஆன்மாவுக்கு மலம் இருத்தலாலும், மலமாத்திரம் உடைய விஞ்ஞானகல நிலையைப்போல் சர்வஞ்ஞத்தன்மையும் சர்வ கருத்திருத்தன்மையும் இல்லாமையாலும் முத்தியாகாது. முதற்காரணமான பிரகிருதியில் ஒடுக்கம் என்னும் உங்கள் மோக்ஷம் ஆன்மநாசமாகவே ஆகின்றது. (ருசு)

(அ—கை) இவ்வாறு சாங்கிய பக்கத்தைக் குற்றமுடையதாகச் செய்துவிட்டு நூலை முடிப்பதின் பொருட்டு எல்லா வாதிகளையும் குறித்துக் கூறுகின்றார்.

(ருஎ) எவர்களுக்குத் தன்னுடைய ஆன்மாவும் நாசமடைகின்றதோ அவர்கள் மூடர்களுள் மிகச் சிறந்தவர்களாகின்றனர். ஏகாசங்கிராந்திவாதிகள் அறிஞர்களுள் பண்டிதர்களாக எண்ணுகின்றவர்களாயிருக்கின்றனர் என்பதாம்.

(உரை) இவ்வாறு வாதிக்கின்ற எல்லா வாதிகளும் மூடர்களுள் முதன்மையாயுள்ளவர்கள். ஆகையால் சிரேயசை விரும்புகின்றவர்களால் ஒதுக்கத்தகுந்தவராகின்றனர். எவர்களுக்குச் சிரேயசு இல்லாத ஆன்ம நாசத்திலாவது, அதற்குச்

சமமானதிலாவது, இது மிகச் சிரேயசு என்னும் நிச்சயம் நிகழ்கின்றதோ அவர்களுடைய அந்த மோக்ஷம் புருஷார்த்தமற்றது என்பது கருத்து. அஃதாவது—அறிவு, அறியப்படும்பொருள், அறிபவன் என்னும் இவை இல்லாமையால் எல்லாவாதிகளுடைய மோக்ஷமும் ஆன்ம நாசத்திற்கு ஒப்பாயிருக்கின்றது. அறிவின் தோற்றம் பரமோக்ஷமாகையால் என்க. ஆனால் சங்கிராந்தி வாதிகள் கூறும் முத்தியில் ஆன்மநாசம் இல்லை என்பார்க்கு அறிஞர்களுள் பண்டிதர்களாக எண்ணுகின்றவர்களாயிருக்கின்றனர் என்பதனால் விடை கூறுகின்றார்.

சிகை என்பதற்கு சத்தி என்பது பொருள். முத்தியில் சத்திக்குச் சங்கிராந்தியைக் கூறுகின்றவர் பண்டிதால்லாதவர்களே யாவர். இது முத்தியாகாதென்பது மேலே கூறப்பட்டிருக்கின்றது. அஃதாவது * பரமசிவனே அவ்விடத்திலும் எல்லாவற்றையும் செய்கின்றார் அறிகின்றார் என்ற விடத்தில் என்க. (௫௭)

(அ—கை) அவ்வாறாயின், எல்லா மோக்ஷ சாத்திரங்களும் மேலே கூறப்பட்டவாறு மறுக்கப்படுதலாலும், ஒன்றோடொன்று மாறுபடுதலாலும் அவற்றிற்குப் பிராமாணியம் இல்லையோ என்பார்க்கு உண்டென்று கூறுகின்றார்.

(௫அ) அன்னியர்களுக்கு ஆகம் முதலான மேலான தத்துவங்கள் கூறப்படாமையால் பொருளில் குறைந்திருக்கும் தன்மையிருக்கின்றது. ஆகையால் அன்னியமதங்களை அறிந்தவர் மாயையைக் கடவாமைபற்றி உலகங்களிலே இருக்கின்றனர் என்பதாம்.

(உரை) எல்லாப் பிரமாணங்களும் எல்லாவற்றையும் விடயமாகக்கொள்ள வேண்டுமென்பதில்லை. சில விடயங்களை விளக்குகின்ற பிரத்தியக்ஷ முதலியவைபோல் ஏனைய நூல்களும் பிராமாணியங்களே ஆகும். அவற்றிற்குச் சில விடயங்களை அறிவிக்குந் தன்மை உண்டென்பது எவ்வாறென்பார்க்கு,

* சலோக எண் ௨௬.

"அராகதத்துவம் முதலிய மேலான தத்துவங் கூறப்படாமை யால்" என்பதனால் விடை கூறுகின்றார். அராகதத்துவம் முதலிய எல்லாத் தத்துவக் கூட்டங்களையும் கூறாமையால் அவர்களுக்குச் சில விடயங்களை அறியுந்தன்மையே இருக்கின்றது. இவ் வாறாயின், ஏனைய ஆகமங்களால் அடையப்படுவது யாது என் பார்க்கு, "ஆகையால் மாயையைக் கடவாமை பற்றி" என்பதனால் விடை கூறுகின்றார். அராகதத்துவம் முதலிய மேலான தத்து வங்கள் ஒன் அவர்களால் அறியப்படாமையால் மாயாதத்து வத்திற்குக் கீழே அறிவையுடைய அன்னியமதத்தைச் சார்ந்த முத்தர்கள் தத்துவங்களிலுள்ள புவனக்கூட்டங்களில் ஒடுக்க மடைந்திருக்கின்றனர். எவரெவருக்கு எந்த எந்தத் தத்துவ புவனத்தில் ஒடுக்கம் என்னும் விடயத்தை ஆகமப் பிராமாணியம் என்னும் நூலில் நாம் விரிவாய்க் கூறியிருக்கின்றோம். (ரு அ)

(அ—கை) ஞான காண்டத்திலுள்ள விடயங்களை முடித் துக்காட்டுகின்றார்.

(ருகூ) இவ்வாறு வாதிகளால் கூறப்பட்ட பயன்களனைத் தும் அவற்றின் சாதனங்களில் மாணாக்கர்களுக்குப் பிரவிருத்தி உண்டாகாமை என்னும் பயனைக் கருதிச் சுருக்கமாய் நம்மால் கூறப்பட்டன என்பதாம்.

(உரை) எல்லா வாதிகளுக்கும் நிச்சயங்களாயுள்ள முத்தி ரூபங்களான பயன்களனைத்தும் சுருக்கமாய்க் கூறப்பட்டன. அவையனைத்தும் எதன் பொருட்டு மறுக்கப்பட்டனவெனில், முத்திப் பயன்களுக்குச் சாதனமான சாத்திரங்களை நிச்சயம் செய்யாமல் தாழ்ந்த பயனில் பிரவிருத்திக்கின்றனர் ; சிரேயசை (மேலான முத்தியை) விரும்புகின்றவர்கள் * அயோகவியவச் சேதத்தால் இவ்விடத்திற்றான் (சித்தாந்த சாத்திரத்திற்றான்) பிரவிருத்திக்கத்தக்கது ; சிறந்த மோக்ஷம் இதனாற்றான் அடை யப்படுகின்றதாகையால் என்க. (ருகூ)

---

* அயோகவியவச்சேதம்—இயைபின்மை நீக்குதல். அது சம்பந்தம் உண்மை எனப்படும்.

(அ—கை) வியாக்கியானம் செய்தவர் இந்த வியாக்கியா னம் தன்னால் செய்யப்பட்டதென்பதைப் பற்றிக் கூறுகின்றார்.

(சூ0) பிற ஆகமங்கள் அனைத்தினும் கூறப்பட்ட மோக்ஷங் களை மறுக்கின்ற இக்தக் காரிகைகள் மிக நுணுகி அறியத்தக்க விடயங்களை உடையனவாய் இருத்தலால் சிற்றறிவினை உடைய வர்களால் பிரவேசிக்க முடியாமலிருக்கின்றமைபற்றி நாராயண கண்டரின் புதல்வரான பட்டராமகண்டர், நிக்ஷைமுறையாய் இரௌரவ விருத்தியை இயற்றியவருடைய கருத்துக்கேற்ப இக் தக் காரிகைகளுக்கு வியாக்கியானத்தை விரிவாகச் செய்தனர். (சூ0)

பரமோக்ஷ நிராசகாரிகை மூலமும்

விருத்தியுரையும்

முற்றுப்பெற்றன.

அஷ்டப்பிரகரணம் முற்றுப்பெற்றது.

சிவபெருமான் திருவடி வாழ்க.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧ | ௧௮ | அலகரித்து | அலங்கரித்து |
| ௪ | ௫ | முதற்காரணமாயும் | முதற்காரணங்களாயும் |
| ௫ | ௧௦ | மூன்று இரத்தினங்களுக்கும் | கலை முதலியவற்றிற்கும் |
| ௬ | ௨௬ | அறியப்படாததாயும் | அறியப்படாதனவாயும் |
| ௯ | ௧௫ | பின | பின் |
| ,, | ௨௯ | சிவதீக்ஷைக்கு | சிவதீக்ஷை முதலியவற்றிற்கு |
| ,, | ௨௮ | செய்பத்தருக்கது | செய்யவேண்டும் |
| ௧௦ | ௯ | அவனையறியும் | அவனை உள்ளபடி யறியும் |
| ௧௧ | ௧௪ | அந்தச் | அந்தந்தச் |
| ,, | ௨௪ | கர்த்துரு | கர்த்திரு |
| ௧௨ | ௨ | அந்தச் | அந்தந்தச் |
| ௧௫ | ௨ | அந்த | (அன்றியும்) அந்த |
| ,, | ௨௩ | துக்கங்களையும் | ஏதுக்களையும் |
| ,, | ௨௮ | தருக்கதென்பது | தருக்கன வென்பது |
| ௧௪ | ௧௭ | நிருபணம் | நிரூபணம் |
| ௧௬ | ௨௦ | சயேவஷ்டை | சியேவஷ்டை |
| ௧௭ | ௨௦ | குணத்தால் | முன்னவர் முறையே தால் |
| ௨௨ | ௨௪ | பொருளையும் | பயனையும் |
| ,, | ௨௮ | பொருளும் | பயனும் |
| ௨௪ | ௧௨ | அது | அது அசேதனமாகையால் |
| ௨௩ | ௨௨ | சவிகற்க | சவிகற்ப |
| ௨௮ | ௧௭ | விகாரமுடையதென | விகார முடையனவென |
|  | ௨௮ | காணப்படுகின்றன | காணப்படுகின்றனர் |
| ௨௯ | ௫ | நிகழாதென | நிகழாவென |
| ௩௩ | ௨௨ | ஏற்றத்தாழ்வான | ஏற்றத்தாழ்வுகளான |
| ௩௫ | ௧௦ | சேர்க்கைபால் | சேர்க்கையால் உண்டான |
| ௩௬ | ௫ | குற்ற | குற்றம் |
|  | ௮ | சவிகற்பஞானத்திற்கு முன் நிருவிகற்ப | நிருவிகற்ப ஞானத்திற்கு பின் சவிகற்ப |
| ௩௮ | ௨௯ | தருக்கதாயும் | தருக்கதாயும் பொருளையறிவிக்கின்றதாயும் |
| ௩௯ | ௧௫ | வைகரிக்குக் | வைகரிக்கும் |
| ௪௦ | ௨௨ | யாதொரு | இந்தச் |
| ௪௩ | ௧௮ | அறிவென்றும் | அறிவென்னும் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪௪ | ௪ | சவிகற்ப அறிவுகளும் | அறிவுகளும் |
| ,, | ௨௫ | யுடையதா | யுடையனவா |
| ௪௫ | ௧௫ | கால | காலாகல |
| ௪௬ | ௫௧ | கிழக்கு | பிரமாண்டத்திற்குவெளியில் |
| ௪௭ | ௧௭ | லீசன் | லீசம் |
| ௪௮ | ௭ | தீர்கக | தீர்க்க |
| ௫௧ | ௧௯ | சன் | சம் |
| ௫௨ | ௫ | மகோடம் | மாகோடம் |
| | ௨௭ | கன்னங்கனி | அண்ணத்தி |
| ௫௪ | ௮ | மகேசுவரன் | மகேசுவரம |
| ௫௫ | ௨ | பீட | பீடாய |
| | ௬ | சாஸ் | சாசு |
| ௫௭ | ௧௨ | சன்னதி | சன்னிதி |
| | ௨௨ | வேறுன | வேறுவேறுன |
| ௬௦ | ௨ | இந்த | ஆகவே, இந்த |
| ௬௨ | ௧௫ | மாயும் | மாயும் உள்ள |
| | ௧௪ | சிற்கனமாயும் | சிற்கனமாய் |
| ௬௫ | ௧௧ | பரமசிவனை | ஆகையால் பரமசிவனை |
| | ௨௦ | கராண | காரண |
| ௬௬ | ௧௪ | சாத்திரத்தால் | சாத்திரங்களால் |
| ௭௧ | ௨௧ | உண்டு | பரம்பரையாக உண்டு. |
| ௭௫ | ௧௭ | யிருக்கின்றதென | யிருக்கின்றன வென |
| ௯௦ | ௧௮ | இந்த | (ஆகவே) இந்த |
| ௯௨ | ௧௨ | தல்லை | தில்லை |
| ,, | ௧௪ | அறிவற்ற | அழிவற்ற |
| ௯௬ | ௭ | தருந்தது | தருந்தன |
| ,, | ௧௭ | தென்பது | வென்பது |
| ௯௮ | ௨௨ | றுக்கியப் | விரோதஞ் சம்பவிப்பது பற்றி முக்கியப் |
| ௯௯ | ௧௫ | அத்துவித | ஆன்மாக்களுக்கு அத்துவித |
| ௧௦௦ | ௨ | பிரதி | பிரத்தி |
| ௧௦௨ | ௨௨ | மிருக்கும். | மிருக்கும் |
| ௧௦௪ | ௧௨ | தோன்றுகின்றனவோ | தோற்ற முண்டா கின்றன வோ |
| ௧௦௮ | ௨௬ | சம்சாரவத்தை | சம்சார அவத்தை |
| ௧௧௦ | ௨௮ | கருத்தாதன்மை | கருத்தாதன்மை |
| ௧௧௧ | ௯ | அறிகிறதில்லை | அறியவில்லை |
| ௧௧௫ | ௧௪ | அது | அதற்கு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ககச | ௯ | கடம் | காரியமான கடம் |
| கக௫ | உ௬ | விளங்குகின்ருர் | எப்பொழுதும் விளங்குகின்ருர் |
| கக௬ | க௩ | விந்துவை | விந்து |
| ககஎ | உ0 | சாந்தீ | சாந்தி |
| ககஅ | ௬ | காரியத்தை | எந்தக்காரியத்தை |
| கஉ௬ | ௫ | சுரோதசுடன் | சுரோத சொரூபமான முகத்துடன் |
| ,, | ,, | பிரபு | சாந்தராயும் பிரபு |
| க௩0 | உக | ஆன்மாவைப்போல் | ஆன்மாவிற்குப்போல் |
| க௩உ | எ | விரியாய் | விரிவாய் |
| க௩ச | கக | அந்தக் | எல்லாக்கன்மங்களினும் விஞ்ஞான கேவலத் தன்மைக்குக் காரணமாயிருத்தலாலும், அந்தக் |
| ,, | க௬ | தீபிகையில் | தீபிகை முதலிய வற்றில் |
| | கஎ | அவ்விடத்துக் | அவ்விடங்களிற் |
| கச0 | ௩ | யற்ற | யில்லாத |
| ,, | உஅ | யற்ற | யில்லாத |
| கசக | ௫ | முதலியோரையுங் | முதலியோரைக் |
| கசச | ௬ | ளுழில் | ளுழில். |
| | உஉ | செய்கின்றது | செய்கின்றன |
| கச௫ | கஅ | ரூப | வெண்மைரூப |
| கச௬ | உ௬ | மறுப்பு | மறுப்பை |
| கசஅ | கஅ | முடைய | முடையது |
| க௫க | ௩ | குணங்களினின்றும் | குணங்களின் |
| ,, | அ, க0, கக, க௩ | சத்தம் | அவ்வாறே சத்தம் |
| க௫௩ | உ௬ | கிரியைகள் | இந்திரியங்கள் |
| க௫ச | கக | நிகழ்கிறதில்லை | நிகழுமாறில்லை |
| க௫௫ | உஎ | காரியங்களை | காரியங்களுக்கு |
| ,, | உ௬ | அதுபோல இவ்விடத்தும் | ஆகையால் |
| க௫௬ | ௫ | அகங்காரத்தின் பிரயத்தினம் | அகங்காரத்தின் ளுழினியபிரயத்தனம் |
| க௫அ | கஅ | படுகிறதில்லை | படுவனவல்ல |
| ,, | உக | சங்கல்ப | சங்கற்ப |
| ,, | உ௫ | சங்கல்ப | சங்கற்ப |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கசுo | ரு | உள்ளிருக்கும் | பிறிதொரு |
| | உகூ | காணப் | கேட்கப் . |
| கசுக | உ | இந்தக் | இது |
| | கஎ | அகங்கார | அதற்குக் காரணமாக அகங் கார |
| கசுங | உ | ஆதலால் | ஆதலால் விஷய நியமமிருப் பது பற்றி |
| | கஉ | தனக்கு | தமக்கு |
| கசுச | அ | கங்களில் | ங்களில் |
| கசுரு | உச | எது | வது |
| ,, | உஎ | காரணத்தால் | காரணத்தா லென்க. ஆகை யால் |
| கசுசு | கஉ | தன்மாத்திரை | பிரகாச மற்றதாயும் தாமதமா யும் உள்ளதன்மாத்திரை |
| ,, | உo | இந்தக் | இது |
| ,, | உரு | விடத்து | ளிடத்து |
| கசுஎ | ககூ | பொருளா | பயனையுடையனவா |
| | உகூ | சாதனமா | சாதனங்களா |
| கசுஅ | அ | அறியும் | அறிபவன் |
| கசுகூ | கூ | கின்றதென்பை | கின்றனவென்பை. |
| | உகூ | யத்திற்கும் | யத்தால் |
| கஎo | கச | குணத்தத்துவ | புத்திதத்துவ |
| கஎக | எ | ரூபமும் | ரூபங்களும் |
| ,, | கஎ | துடன் | தால் |
| கஎரு | உகூ | இராச | இராசச |
| கஎகூ | உரு | அறிவிக்கும் | அறிபவன் |
| கஅக | ககூ | பொருந்தா | யுத்திக்குப்பொருந்தா |
| | உக | ர்காரண | ப்பிரமாண |
| கஅஉ | கஎ | மாதலின் | மாதலாலும் |
| கஅரு | உஅ | பிரகிருதிக்குக் | பிரகிருதிக்குத்தான் |
| கஅஎ | எ | பாசங்கள் சடம் | பிரதானம் சடமாதலால் |
| ,, | அ | கின்றமையால் | கின்றது |
| ,, | ககூ | விகாரத் | விகாரித் |
| கஅஅ | ரு | மலத்தன்மை | மலத்தோடு கூடியிருக்குந் தன்மை |
| | கூ | அராகத்தன்மை | அராகத்தோடு கூடியிருக்குந் தன்மை |
| | அ | மலத்தன்மையுடன் | மலத்துடன் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | ௧௭<br>௨௭ | விகாரத் | விகாரித் |
| ௧௮௧ | ௨௧ | பரிணமத் | பரிணமித் |
| " | ௩௧ | பரிணமத்தன்மை | பரிணமத்தை |
| ௧௯௦ | ௨௨ | கன்மத்துடன் | கன்மத்திற்குப் |
| " | ௨௪ | கன்மத்தை | கன்மத்திற்கு |
| • | ௨௫ | உடைத்தாகாத | இல்லாத |
| ௧௯௨ | ௨௭ | சம்பந்திப்பது | சம்பந்தித்திருப்பது |
| ௧௯௪ | ௨௪ | கடமுதலியன | கட முதலிய வற்றிற்குப் |
| ௧௯௬ | ௧௪ | இந்த | அந்த ரூபத்திலும் இந்த |
| " | ௧௮ | தாயும் | வையாயும் |
| " | " | யடைந்ததாயு | யடைந்தவையாயு |
| ௧௯௯ | ௨௬ | அதனுடைய | அவனுடைய |
| ௨௦௪ | ௧௫ | மறைப்பின்றி | மறைப்பின்மையால் |
| ௨௦௯ | ௩௦ | பொருநாதென் | பொருந்தாவென் |
| ௨௦௭ | ௨௫ | அந்த | ஆன்மாக்கட்கு அந்த |
| ௨௧௦ | ௧௭ | திலிலுள்ள | திலுள்ள |
| ௨௧௧ | ௪ | மாயையினுடைய | மாயையினின்றும் |
| " | ௧ | சுத்தமா | சுத்தமாயை |
| ௨௧௨ | ௧௧ | கொண்டெ | கொண்டே |
| ௨௧௩ | ௧௪ | மூர்த்தி | மூத்தி |
| ௨௧௫ | ௧௫ | மானகரண | கரண |
| ௨௧௬ | ௩ | தன்மைக் | தன்மை |
| " | ௨௮ | தனது | தமது |
| ௨௧௭ | ௪ | இன்றி | இவாறே இன்றி |
| ௨௧௮ | ௧௦ | அஞ்ஞான | அஞ்ஞானி |
| " | ௧௧ | பொருந்தாமைக் | பொருந்தாமை |
| ௨௨௦ | ௮ | அந்தச்சத்தி | அந்த ஞானக்கிரியா சத்தி |
| " | ௧௨<br>௧௮ | நீக்குதற்கு முடியாதவனுக | நீக்க வேண்டாதவனுக |
| ௨௨௨ | ௬ | யமையாதது | யமையாதனவா |
| ௨௨௬ | ௨௨ | மோக்ஷமோ | மோக்ஷத்தையோ |
| ௨௩௦ | ௧௧ | பொருளினறிவு | வேறுபொருளினறிவு |
| ௨௩௧ | ௬ | டை | டை |
| ௨௩௨ | ௧௩ | வற்றிருப்பது | வற்றிலிருப்பது |
| ௨௩௩ | ௨ | அறியப் | தோற்றப் |
| " | ௨௦ | தோற்று | தோன்று |
| ௨௩௫ | ௫ | சொரூபமாதலால் | சொரூபக் காரண மாதலால் |

